# சிலம்போ சிலம்பு

முனைவர் சுந்தர சண்முகனார்



'சிலம்பு உள கொள்மின்'

வானதி பதிப்பகம்

# சிலம்போ சிலம்பு!

## தித்திக்கும் திறனாய்வு


ஆசிரியர்:

ஆராய்ச்சி அறிஞர்

**முனைவர் சுந்தர சண்முகனார்**

தமிழ் – அகராதித் துறைப் பேராசிரியர் (ஓய்வு)

தமிழ்ப் பேரவைச் செம்மல்

மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

புதுச்சேரி – 11.





வானதி பதிப்பகம்

13. தீனதயாளு தெரு

தி. நகர், சென்னை-17.

# பதிப்புரை

நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தின் சுவையை, முனைவர் சுந்தர சண்முகனார் அவர்கள் நீண்ட நாட்கள் செய்த ஆராய்ச்சியின் விளைவாக இந்நூல் வடிவில் தமிழ் அறிந்த மக்களுக்கு வழங்கியுள்ளார்கள்.

சிலப்பதிகார ஆசிரியராகிய இளங்கோவடிகளின் காப்பியச் சுவையையும் கவித் திறத்தையும் பொருத்தமான பாத்திரப் படைப்புகளையும் விருவிருப்பான கதை ஓட்டத்தையும் இந்நூலின் மூலம் சிறப்பாகக் காண முடிகிறது.

முத்தமிழ்க் காப்பியமான சிலப்பதிகாரத்திற்குச் சிறந்ததொரு திறனாய்வு நூல், ஒரு புதுப் படைப்பிலக்கியம் போலவே படைக்கப்பட்டுள்ளது.

உரைநடை வடிவில் நூல் அமைந்துள்ளதால் எல்லோரும் இதனைப் படித்துணரலாம். சிலப்பதிகாரச் செய்யுள் பகுதிகளுடன் அங்கங்கே மேற்கோள் காட்டிக் காப்பியத்தின் சாரத்தைப் பேராசிரியர் சுந்தர சண்முகனார் அவர்கள் இனிய எளிய நகைச்சுவையும் கலந்த தமிழில் மக்களுக்கு எடுத்து இயம்பியுள்ளார்கள்.

சிலப்பதிகாரத்திற்குக் கிடைத்துள்ள சிறந்த இந்த ஆய்வு நூலைப் படிப்பவர்கள் சிலப்பதிகாரம் முழுவதையும் படித்துச் சுவைக்க வேண்டுமென்ற ஆவல் கொள்வார்கள் என்பது உறுதி.

காப்பியத்தில் உள்ள செம்பொருளை, ஆசிரியர் சுந்தர சண்முகனார், 'மூவேந்தர் காப்பியம்' முதல் 'சில சிக்கல்

தீர்வுகள்' வரையிலான முப்பத்தொரு தலைப்புகள் இட்டுச் சுவைபெற விளக்கியுள்ளார்.

ஆசிரியர் தம் கருத்துக்கு அரணாகப் பல நூல்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் காட்டியிருப்பதன்றி, உலகியல் அனுபவ நிகழ்ச்சிகள் பலவும் தந்து தம் கருத்துகளை நிறுவிச் சாதனை படைத்துள்ளார்.

இந்நூலை அளித்துள்ள முனைவர் சுந்தர சண்முகனார் தமிழ் மக்களின் போற்றுதலுக்கும் பாராட்டுக்கும் உரியவ ராவார்.

தமிழ் மக்கள் இந்நூலைப் பெரிதும் வரவேற்பார்கள் என்ற நம்பிக்கையில் வானதி பதிப்பகத்தின் மூலம் வெளியிட் டுள்ளேன். ஏற்று மகிழுங்கள்.

**வானதி ஏ. திருநாவுக்கரசு**

# பொருளடக்கம்

# புகுவாயில்

## சிலப்பதிகாரம்

கழகக் காலத்தை அடுத்தவரும் சமண சமயப் பற்று உடையவருமாகிய இளங்கோவடிகள், மதுரைக் கூல வாணிகன் சாத்தனார் வாயிலாகக் கேட்டறிந்த கண்ணகியின் வரலாற்றில் கண்ணகியின் சிலம்பு முதன்மை பெற்றிருப்பதால் சிலம்பு தொடர்பான சிலப்பதிகாரம் என்னும் பெயரிட்டு நூல் இயற்றினார். இரும்பு+பாதை=இருப்புப் பாதை, கரும்பு+வில்=கருப்புவில் என்பனபோல, சிலம்பு+அதிகாரம் = சிலப்பதிகாரம் என்றாயிற்று. அதிகரிப்பது அதிகாரம். அதிகரித்தல் என்பது, தொடர்ந்து வளர்தல் — விருத்தியடைதல் எனப் பொருள்படும். அதிகாரம் என்னும் சொல்லுக்கு 'நூல்' என்னும் பொருள் பிங்கல நிகண்டில் கூறப்பட்டுள்ளது. எனவே, சிலம்பு தொடர்பான நூல் சிலப்பதிகாரம் எனப் பெயர் சூட்டப் பெற்றது. இது, சிலம்பு எனச் சுருக்கமாகவும் பெயர் வழங்கப் பெறும்.

இந்நூல் தமிழில் உள்ள ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகும். இவற்றுள், தமிழ்நாட்டில் நடந்த வரலாறு பற்றியவை சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இரட்டைக் காப்பியங்களே. இவ்விரண்டனுள் சிலப்பதிகாரம் முதன்மை உடையது. சேரன்செங்குட்டுவன் கண்ணகிக்குக் கல் கோயிலைக் கட்டினான் — இளவல் இளங்கோ இந்தச் சொல் கோயிலைக் கட்டினார்.

## சிலம்போ சிலம்பு

"நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்" என்று சுப்பிரமணிய பாரதியாரால் பாராட்டப் பெற்ற இந்நூல் ஒலி நயமும் உணர்ச்சியைப் பெருக்கும் ஆற்றலும் உடையது.

பெண்மைப் புரட்சியாகிய இந்நூல், இன்பியலாகத் தொடங்கப் பெற்றிருப்பினும் இறுதியில் துன்பியலாகவே முடிக்கப்பெற்றுள்ளது. இருப்பினும், வாழ்த்துக் காதை போன்ற பகுதிகளால் இளங்கோ அடிகள் ஓரளவு செயற்கையான மங்கல முடிவு தந்துள்ளார்.

ஆசிரியர் கூற்றாக வரும் இடங்கள் சில அரிய நடையில் இருப்பினும், கதை மாந்தர்களின் கூற்றாக வரும் இடங்கள் அவர்கட்கு ஏற்ற நடையில் நடைபோடுகின்றன. நாடகக் காப்பியம் ஆயிற்றே - நடையின் சுவைக்குச் சொல்லவா வேண்டும்!

பல காலங்களில் நடைபெற்ற பல்வேறு கதைச் செய்திகள் சூழ்நிலைக்கு ஏற்ப இடம் பெற்றிருப்பதால், பொய்க் கற்பனைகள் கொண்டது சிலம்பு எனச் சொல்லத் தோன்றினாலும், எத்தனையோ வேறு காப்பியங்களை நோக்க, சிலம்பில் பொய்க் கற்பனைகள் குறைவே. முற்றிலும் கற்பனை கலவாது காப்பியம் எழுதுவது அரிது. அவ்வாறு எழுதின் அது காப்பியமாகாது - வரலாற்று நூலாகும்; ஆனால் இது காப்பியம்.

குடிமக்கள் காப்பியமாகத் திகழும் சிலம்பில் இலக்கிய நயத்திற்குக் குறைவே இல்லை. கலைகள் பற்றித் தனி நூல் எழுதுதல் வேண்டும்.

**நூல்வடிவம்**

முன்னமேயே சிலப்பதிகாரம் பற்றிப் பல திறனாய்வு நூல்களும் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. காலம் கடந்து இப்போது இந்நூலை யான் எழுதியது ஏன்? பல ஆண்டுகட்கு முன், யான் தமிழ் எம்.ஏ. தேர்வுக்குப் படித்த போது, இரண்டு குறிப்புச் சுவடிகள் (Note Books) நிறையக் குறிப்பெடுத்து வைத்தேன். இடையில் பல ஆண்டுகள் மூளைக்கட்டிப் பிணியால் யான் படுக்கையில் கிடந்ததாலும், இந்தக் குறிப்புச் சுவடிகள் கண்ணுக்குத் தெரியாத இடத்தில் மறைந்து கிடந்ததாலும், குறிப்புகட்கு நூல் வடிவம் தர இயலவில்லை. அண்மையில் வேறொன்றைத் தேடும் முயற்சியின்போது, பரண்மேல் இருந்த தாள் கட்டு ஒன்றி லிருந்து இக் குறிப்புச் சுவடிகள் தற்செயலாகக் கிடைத்தன. இந்தக் குறிப்புகளை ஓரளவு சுருக்கியும் புதிய கருத்துகள் சில சேர்த்தும் இந்நூல் வடிவைப் படைத்தேன். குறிப்பு களை வீணாக்கக் கூடாதல்லவா?

தமிழ் வித்துவான், தமிழ் எம்.ஏ. ஆகிய தேர்வுகட்குப் படித்த போதினும், கல்லூரியில் பாடம் நடத்திய போதினும், இப்போதே, சிலப்பதிகாரத்தை ஓரளவாவது முறையாகப் படித்ததான உளநிறைவு ஏற்பட்டுள்ளது. சிலப்பதிகாரம் கடக்க அரிதாகிய பெருங்கடல். அதிலிருந்து சில முத்துகளே இந்நூலில் அறிமுகம் செய்யப் பெற்றுள்ளன. பக்கக் கட்டுப்பாடும் நினைவிருக்கிறது.

**திறனாய்வு**

என் திறனாய்வுக் கருத்துகள் சில, வேறு சிலருடையன வற்றோடு மாறுபட்டிருக்கலாம். யான் தமிழ் எம்.ஏ. தேர்வில் விருப்பப் பாடமாக இலக்கியத் திறனாய்வை

எடுத்துக் கொண்டேன். திறனாய்வு பற்றித் தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ள சில நூல்களைப் படித்துள்ளேன். இதுதான் திறனாய்வு – இவ்வாறு செய்வதுதான் திறனாய்வு என எவரும் வரையறுத்துக் கூறுவதற்கில்லை. ஒவ்வொருவரின் கோட்பாட்டிலும் வேறுபாடு இருக்கலாம். எனவே, எனது திறனாய்வும் ஏதோ ஒருவாறு இருக்கலாம்.

தித்திக்கும் திறனாய்வு எனச் சுருக்கமாகப் பெயர் தரப்பட்டுள்ளது. இதனைத் தித்திக்கச் செய்யும் திறனாய்வு என விரித்துக் கொள்ள வேண்டுகிறேன். அதாவது, சிலப்பதிகாரத்தைத் தித்திக்கச் செய்யும் திறனாய்வு என்பது இதன் கருத்தாகும். சிலப்பதிகாரத்தைத் தித்திக்கச் செய்ய, எனக்குத் தெரிந்த அளவு — என்னால் இயன்ற அளவு முயன்றிருக்கிறேன் — அவ்வளவுதான்.

மற்றும் இளங்கோ சிலப்பதிகாரத்தைத் தித்திக்கும்படிச் செய்திருக்கும் திறனை ஆய்வு செய்தல் என்றும் இதற்குப் பொருள் கொள்ளலாம்.

என் கருத்துகட்கு அரணாக, இலக்கிய மேற்கோள்களும் உலக வழக்குத் தொடர்களும் செய்திகளும் ஓரளவு தந்துள்ளேன். நகைச்சுவைக்காகச் சில தொடர்களும் செய்திகளும் தந்துள்ளேன். அவற்றைக் கொச்சையாக எண்ணாதிருக்க வேண்டுகிறேன். இடையிடையே மாற்றுச் சுவை வேண்டுமல்லவா?

**கூறியது கூறல்**

பலரோடு – பலவற்றோடு தொடர்புடைய ஒரு கருத்தே, அவரவரைப் பற்றியும் – அவையவை பற்றியும் கூறியுள்ள பகுதிகளில் திரும்பத் திரும்ப வரலாம். "கூறியது கூறினும் குற்றம் இல்லை – வேறொரு பொருளை விளைக்குமாயின்" என்னும் கோட்பாட்டின்படி, இத்தகைய கூறியது கூறலை அன்புகூர்ந்து பொறுத்தருள வேண்டுகிறேன். மூளைக் கட்டிப் பிணி தொடர்பான தொல்லையோடு எழுபதாம் அகவையைக் கடந்துவிட்ட அடியேன் இயன்றதைச் செய்துள்ளேன். ஏற்றருள்க.

இந்நூலை நன்முறையில் அழகாக வெளியிட்ட புத்தக வித்தகர் மதிப்புமிகு ஏ. திருநாவுக்கரசு அவர்கட்கு மிக்க நன்றி செலுத்துகிறேன். சபாநாயகர் அச்சகத்தாருக்கும் நன்றி. வணக்கம்.

புதுச்சேரி-11
15–9–1992

**சுந்தர சண்முகன்**

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 12 | 20 | பாடியுள்ளார் | பாடியுள்ளனர் |
| 12 | 23 | தொன்குலமே | தொல்குலமே |
| 13 | 16 | மூன்றெரிந்த | மூன்றெறிந்த |
| 15 | 5 | வாண் கோட்டால் | வான் கோட்டால் |
| 15 | 8 | பணந்தோடு | பனந்தோடு |
| 17 | 11 | மன்ன நல்லது | மன்ன ரல்லது |
| 18 | 10 | ஒன்றித் | ஒன்றித் |
| 28 | 10 | மணிமேகலை கேல் | மணிமேகலை மேல் |
| 31 | 26 | இருமுறை-இயப்பினின் | இறுமுறை-இயல்பினின் |
| 34 | 16 | கோவலன் கண்ணகியுடன் | கோவலனும் கண்ணகியும் |
| 35 | 24 | சிவவரன் | சினவரன் |
| 37 | 8 | பேர்ற்றினர் | போற்றினார் |
| 42 | 23 | ஓடித்தாளாம் | ஒடித்தாளாம் |
| 44 | 5 | மாலையை | மாலையைத் |
| 44 | 5 | பின்னர் | பின்னரீத் |
| 44 | 17 | சொண்டதாகவும் | கொண்டதாகவும் |
| 52 | 3 | செய்திருப்யின் | செய்திருப்பின் |
| 57 | 6 | வல்விணை | வல்வினை |
| 64 | 7 | அமைத்து | அமைத்துப் |
| 76 | 17 | புறப்பெபருள் | புறப்பொருள் |
| 80 | 14 | காட்டும்போலும்"(3) | காட்டும்போலும்"(12) |
| 83 | | அவுணரும் முசுகுந்தனும் கடலாடு காதை | அவுணரும் முசுகுந்தனும் (கடலாடு காதை) |

| | | | |
|---|---|---|---|
| 85 | 4 | இந்திரன் மகனும் | இந்திரன் மகனும் அவளும் |
| 86 | 4 | மாமாலை | மாமலை |
| 86 | 31 | அளகில் | அலகில் |
| 88 | 9 | விளிம்பில் | விளிவில் |
| 96 | 11 | எட்டு கோல் | எட்டுக்கோல் |
| 98 | 9 | பொருமுக எழினி | பொருமுக எழினிப் |
| 98 | 12 | ஒருமுக எழினி | ஒருமுக எழினிப் |
| 109 | 28 | கெடிா | கொடி |
| 111 | 8 | அடுக்கத்துப் | அடுக்கத்து |
| 115 | 4 | வணங்கி | வணங்கிச் |
| 118 | 5 | வைத்து | வைத்துப் |
| 118 | 7 | வைத்து | வைத்துக் |
| 118 | 14 | திருமணமும் | திருமணம் |
| 118 | 30 | வைத்து | வைத்துத் |
| 120 | 29 | கடைப்ப | கடைப்படு |
| 127 | 26 | என்று | என்றும் |
| 131 | 24 | வரழத்தினாளாம் | வாழ்த்தினாளாம் |
| 137 | 21 | கதையின் | காதையின் |
| 145 | 27 | காத்திருந்த தார்களாம் | காத்திருந்தார்களாம் |
| 151 | 13 | பாண்டியர் | வையை பாண்டியர் |
| 168 | 12 | புனிறு நீர் | புனிறு தீர் |
| 168 | 13 | கரவிரி | காவிரி |
| 171 | 22 | காவலற் | காதலற் |
| 174 | 2 | கொண்மன | கொண்மென |
| 184 | 9 | பசுத்துணிப் | பசுந்துணிப் |

378 - 19 [illegible]

(குறிப்பு: இந்நூல் அச்சானபோது கண் அறுவை மருத்துவம் செய்து கொண்டிருந்ததால் சில அச்சுப் பிழைகள் ஏமாற்றி விட்டன. பொறுத்தருள்க, அருள்கூர்ந்து பிழைதிருத்திப் படிக்கவும்)

# 1. மூவேந்தர் காப்பியம்

மன்னராட்சி நடைபெற்ற பண்டைக் காலத்தில் மன்னர்கள் ஒருவரோ டொருவர் போரிட்டுக் கொண்டனர். குடியரசாட்சி புரியும் இருபதாம் நூற்றாண்டிலும் போருக்குக் குறைவில்லை. நாட்டுத் தலைவர்களின் தூண்டுதலால் நாடுகள் ஒன்றோ டொன்று போரிடுகின்றன. போரூக்கம் என்னும் இயல்பூக்கம் எல்லாருக்கும் உண்டெனினும் அதை அமைதி (Sublimation) செய்து திசை திருப்பி வெல்வதற்கு உரிய பொறுப்பு பெரும்பாலும் அரசுத் தலைவர்களிடம் இருப்பதாகத் தோன்றவில்லை.

குறிப்பாகத் தமிழகத்தை எடுத்துக் கொள்ளினும் பண்டைக் காலத்தில் சோழர், பாண்டியர், சேரர் என்னும் முடியுடை மூவேந்தர்களும் அவர்களைச் சார்ந்த அல்லது சாராத சிற்றரசர்களும் குறுநில மன்னர்களும் இடைவிடாது தொடர்ந்து ஒருவரோ டொருவர் போரிட்டுக் கொண்டனர். வரலாறு என்னும் தலைப்பில் உலகில் எழுதப்பட்டுள்ள நூல்களைப் படிக்கின், பெரும்பாலும் போர்களைப் பற்றிய செய்திகளே இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

பண்டு தமிழகத்தில் ஔவையார் போன்ற புலவர்கள் சிலர் வேந்தர்களிடையே தூது சென்று அமைதி காக்கப் பாடுபட்டதாகத் தெரிகிறது. புலவர்கள் சிலர் தம்மை ஆதரித்த மன்னர்களைப் போற்றிப் புகழ்ந்த பாடல்களைக் காண்கிறோம். சேர - பாண்டிய - சோழர் ஆகிய முடியுடை மூவேந்தர்களையும் ஒத்த நோக்கில் காணும் உயரிய ஒருமைப்பாட்டுப் புலவர் ஒருவர் இருந்தார் எனில், அவர் சிலப்பதிகாரம் பாடிய இளங்கோவடிகளே என்று கூறலாம்,

அடிகள் தமது நூலை, (சோழர்க்கு உரிய) புகார்க் காண்டம், (பாண்டியர்க்கு உரிய) மதுரைக் காண்டம், (சேரர்க்கு உரிய) வஞ்சிக் காண்டம் என முப் பெருங் காண்டங்களாகப் பகுத்து அமைத்துள்ளமையால், அவரது நூலாகிய சிலப்பதிகாரம் 'மூவேந்தர் காப்பியம்' என்னும் பெருமை யுடைத்து. இதற்கு இன்னும் சான்றுகள் பல உள.

## வேனில் காதை

வேனில் காதையில் இளவேனில் காலம் வந்தது பற்றி ஆசிரியர் கூறுகிறார். வடக்கே திருவேங்கடமும் தெற்கே குமரியும் எல்லையாக உள்ள தமிழகத்தில், மதுரை, உறந்தை, வஞ்சி, புகார் ஆகிய இடங்களில் அரசு செய்கின்ற மன்மதனின் துணை யாகிய இளவேனில் வந்தது என்று பாடியுள்ளார்:

**"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்**
**தமிழ்வரம் பறுத்த தண் புனல் நன்னாட்டு**
**மாட மதுரையும் பீடார் உறந்தையும்**
**கலிகெழு வஞ்சியும் ஒலிபுனல் புகாரும்**
**அரைசு வீற்றிருந்த உரைசால் சிறப்பின்**
**மன்னன் மாரன் மகிழ் துணை யாகிய**
**இன்னிள வேனில் வந்தனன்"** (1—7)

என்பது பாடல் பகுதி. இளவேனில் காலம் வந்தது என்று சொல்ல வந்த இடத்தில், மூவேந்தர்களின் தலைநகர்களைப் பற்றிக் குறிப்பிட வேண்டிய தேவையே இல்லை. அப்படி யிருந்தும், பாண்டியர்க்கு உரிய மதுரையையும், சோழர்க்கு உரிய உறந்தையையும் புகாரையும், சேரர்க்கு உரிய வஞ்சி யையும் குறிப்பிட்டுள்ளார். அதாவது, தமது ஒருமைப் பாட்டு உணர்ச்சியை வெளிப்படுத்தற்கு இந்த இடத்தை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டுள்ளார் ஆசிரியர்.

நெடியோன் = திருமால். தொடியோள் = தொடி யணிந்த குமரி. கடல் என்னும் பொருள் உடைய 'பௌவம்' என்பது, கிழக்கு எல்லை மேற்கு எல்லைகள் போல் தெற்கு எல்லையும் கடலே என்பதை அறிவிக்கிறது. குமரிக் கோடு கொடுங்கடல் கொண்டதை, இந்த இடத்திலே உரை யாசிரியர் அடியார்க்கு நல்லார் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

**யாப்பமைதி**

இளங்கோவின் யாப்பமைதி ஒன்று இங்கே கவனிக்கத் தக்கது. முதல் சீருக்குச் சிறப்பாக மூன்றாம் சீரிலே அல்லது நான்காம் சீரிலே மோனை யமைப்பார் - அவ்வாறு மோனை யமைக்காவிடின் எதுகை அமைத்து விடுவார். மேலே தந்துள்ள பாடல் பகுதியை நோக்கின் இது புலனாகும். நெடியோன் - தொடியோள் - எதுகை. தமிழ் - தண் - மோனை. மாட - பீடார் - எதுகை. கலி - ஒலி - எதுகை. அரைசு - உரைசால் - எதுகை. மன்னன் - மகிழ் - மோனை. இவ்வாறே மற்ற இடங்களிலும் கண்டு கொள்ளலாம்.

**நடுகல் காதை**

கண்ணகி மூவேந்தர் வாயிலாக மூன்று படிப்பினைகளை அளித்தாளாம். அரசர் செங்கோல் வழுவாது ஆண்டால் தான் பெண்களின் கற்பு சிறக்கும் என்பதைச் சோழன் வாயிலாக அறிவித்தாளம். செங்கோல் வழுவினால் நேரிய மன்னர்கள் உயிர் வாழமாட்டார்கள் என்பதைப் பாண்டியன் வாயிலாகத் தெரிவித்தாளாம். மன்னர்கள் தாம் சொன்ன சூளுரையை முடித்தாலன்றிச் சினம் நீங்கார் - முடித்தே தீர்வார் என்பதை, வடவரை வென்ற சேரன் செங்குட்டுவன் வாயிலாகப் புலப்படுத்தினாளாம். பாடல்:

**''அருந்திறல் அரசர் முறை செயின் அல்லது**
**பெரும் பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாதெனப்**

பண்டையோர் உரைத்த தண்டமிழ் நல்லுரை
பார்தொழு தேற்றும் பத்தினி யாதலின்
ஆர்புனை சென்னி அரசர்க்கு அளித்து,
செங்கோல் வளைய உயிர் வாழாமை
தென்புலம் காவல் மன்னவற்கு அளித்து,
வஞ்சினம் வாய்த்தபின் அல்லதை யாவதும்
வெஞ்சினம் விளியார் வேந்தர் என்பதை
வடதிசை மருங்கின் மன்னவர் அறியக்
குடதிசை வாழும் கொற்றவற்கு அளித்து'' (207-217)

*என்பது பாடல் பகுதி. ஆர் புனை சென்னி அரசர் = ஆத்தி மாலை சூடிய சோழர். தென்புலம் காவல் மன்னன் = தமிழ் நாட்டின் தென் பகுதியாகிய பாண்டிய நாட்டைக் காக்கும் பாண்டிய மன்னன். குடதிசை வாழும் கொற்றவன் = தமிழ் நாட்டின் மேற்குப் பகுதியை ஆளும் சேரன்செங்குட்டுவன். இந்த இடத்திலும் முப்பெரு வேந்தர்களையும் இணைத்துக் காட்டியுள்ளார் அடிகள்.*

## வாழ்த்துக் காதை

### வாழ்த்து

*வாழ்த்துக் காதையில் மகளிர் மாறி மாறி மூவேந்தரைப் பற்றிப் பாடியுள்ளனர். 'வாழ்த்து' என்னும் தலைப்பில்,*

''வாழியரோ வாழி வருபுனல் நீர் வையை
சூழு மதுரையார் கோமான்தன் தொல்குலமே'' (13)

''வாழியரோ வாழி வருபுனல் நீர்த் தண்பொருநை
சூழ்தரும் வஞ்சியார் கோமான் தன் தொல் குலமே'' (14)

''காவிரி நாடனைப் பாடுதும் பாடுதும்
பூவிரி கூந்தல் புகார்'' (15)

என மதுரையார் கோமானும் வஞ்சியார் கோமானும் காவிரி நாடனும் வாழ்த்தப்பெற்றுள்ளனர். அவர்தம் நாட்டு நீர் வளமும் சிறப்பிக்கப் பெற்றுள்ளன. நீர் வந்து கொண்டே யுளதாம் (வருபுனல்) காவிரி நாடன் = சோழன்.

**அம்மானை வரி**

பெண்டிர் மூவர் கூடிக் காய் போட்டுப் பாடியாடும் ஒரு வகை ஆட்டம் அம்மானையாகும். முதலில் ஒருத்தி ஒரு வினா எழுப்புவாள். அதற்கு அடுத்தவள் விடை யிறுப்பாள். மூன்றாமவள் கருத்தை முடித்து வைப்பாள். வாழ்த்துப் பாக்களை அடுத்து, சோழனைப் பற்றிப்பாடும் அம்மானைப் பாடல்கள் நான்கு உள்ளன. அவற்றுள், மாதிரிக்காக முதல் பாடலை மட்டும் காண்போம்.

> **''வீங்குநீர் வேலி உலகாண்டு விண்ணவர்கோன்**
> **ஓங்கரணம் காத்த உரவோன்யார் அம்மானை?**
> **ஓங்கரணம் காத்த உரவோன் உயர் விசும்பில்**
> **தூங்கெயில் மூன்றெறிந்த சோழன் காண் அம்மானை**
> **சோழன் புகார் நகரம் பாடேலோர் அம்மானை''** (16)

பெண்டிர் மூவரும் தமது பாடல்வரியின் இறுதியில் அம்மானை - அம்மானை எனக் கூறி யாடுவர். இவ்வாறு இன்னும் மூன்று பாடல்கள் உள்ளன. அடுத்துப் பாண்டியனிடம் செல்லலாம்.

**கந்துகவரி**

கந்துகம் = பந்து. வரி = பாட்டு. பந்தாடிக்கொண்டு பாடும் பாட்டு இது. இந்தப் பகுதியில் நான்கு - நான்கு வரிகள் கொண்ட மூன்று பாடல்கள் உள்ளன. ஒரு பாட்டில் உள்ள மூன்றாவது - நான்காவது அடிகளே மூன்று பாடல்களிலும் மூன்றாவது - நான்காவது அடிகளாக உள்ளன.. பாடல்:

"தென்னன் வாழ்கவாழ்க என்று சென்றுபந் தடித்துமே
தேவரார மார்பன் வாழ்க என்றுபந் தடித்துமே" (21)

என்பன மூன்று பாடல்களின் இறுதியிலும் வருவனவாகும்.

**ஊசல் வரி**

சோழனுக்கு அம்மானை வரி யாயிற்று; பாண்டியனுக்குக் கந்துகவரி யாயிற்று. மூன்றாவதாகச் சேரனுக்கு ஊசல் வரிப் பாட்டுகள் மூன்று பாடப்பட்டுள்ளன. ஊசல்—ஊஞ்சல். மூன்று பாடல்களின் இறுதி அடிகள் மட்டும் வருமாறு:

"கொடுவில் பொறி பாடி ஆடாமோ ஊசல்" (23)

"கடம்பெறிந்த வாபாடி ஆடாமோ ஊசல்" (24)

"விறல்வில் பொறிபாடி ஆடாமோ ஊசல்" (25)

சேரனின் வில் இலச்சினையும் கடம்பு எறிந்த வெற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன. வாழ்த்துக் காதையில் இறுதியாக மூவர்க்கும் ஒவ்வொன்று வீதம் வள்ளைப் பாட்டுகள் பாடப்பட்டுள்ளன. உரலில் ஒரு பொருளை இட்டு உலக்கையால் குற்றிக் கொண்டே ஒரு தலைவனைக் குறித்துப் பாடும் பாட்டு வள்ளைப் பாட்டாகும். அவை வருக:

**வள்ளைப் பாட்டு**

"தீங்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்
பூங்காஞ்சி நீழல் அவைப்பார் புகார் மகளிர்
ஆழிக் கொடித் திண்தேர்ச் செம்பியன் வம்பலர்தார்ப்
பாழித் தடவரைத்தோள் பாடலே பாடல்
பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்" (26)

"பாடல்சால் முத்தம் பவழ உலக்கையான்
மாட மதுரை மகளிர் குறுவரே

வானவர்கோன் ஆரம்வாங்கியதோள் பஞ்சவன்தன்
மீனக் கொடிபாடும் பாடலே பாடல்''
வேப்பந்தார் நெஞ்சுணக்கும் பாடலே பாடல்'' (27)

''சந்துஉரல் பெய்து தகைசால் அணிமுத்தம்
வஞ்சி மகளிர் குறுவரே வாண்கோட்டால்
கடந்தடுதார்ச் சேரன் கடம்பெறிந்த வார்த்தை
படர்ந்த நிலம்போர்த்த பாடலே பாடல்
பணந்தோடு உளங்கவரும் பாடலே பாடல்'' (28)

*இவை விளையாட்டுப் பாடல்களாகும். கரும்பாகிய உலக்கையாலும், பவழ உலக்கையாலும், யானைக் கோட்டு (தந்தத்து) உலக்கையாலும் குற்றுவார்களாம். உரல் சந்தன மரத்தால் ஆனதாம். சுவைத்தற்கு உரிய இலக்கியம் அல்லவா இது! மாணிக்கவாசகரின் திருவாசகத்திலும் 'திருப்பொற்சுண்ணம்' என்னும் பகுதி ஒன்றுள்ளது. அதிலுள்ள இருபது பாடல்களின் இறுதியிலும் ''பொற் சுண்ணம் இடித்து நாமே'' என்னும் தொடர் இருக்கும்.*

*இந்த வாழ்த்துக் காதையை நோக்குங்கால், மூவேந்தரின் சிறப்பைப் புகழ்ந்து கூறுவதற்கே இந்தக் காதையை இளங்கோ வடிகள் பயன்படுத்திக் கொண்டாரோ என்று வியக்கத் தோன்றுகிறது.*

## ஆய்ச்சியர் குரவை

*இமய மலையில் பாண்டியர்க்கு உரிய மீன் இலச்சினை யும் சோழரின் புலி இலச்சினையும் சேரர்க்கு உரித்தான வில் இலச்சினையும் பொறிக்கப்பட்ட செய்தி ஆய்ச்சியர் குரவைப் பகுதியின் தொடக்கத்திலேயே அறிவிக்கப் பட்டுள்ளது.*

''கயல் எழுதிய இமய நெற்றியின்
அயல் எழுதிய புலியும் வில்லும்...'' (1, 2)

*என்பது பாடல் பகுதி.*

## கட்டுரை காதை

மதுரையின் நகர்த் தெய்வ மாகிய மதுராபதி கண்ணகிக்குக் கூறுவதாக உள்ளது கட்டுரை காதை. இதிலும் மூவேந்தரின் சிறப்புகள் மொழியப்பட்டுள்ளன.

### சேரர்

பெருஞ் சோற்று உதியன் சேரலாதன் பாரதப் போரில் படை மறவர்க்கு உணவு அளித்த செய்தி, பல்யானைச் செல்கெழு குட்டுவன் மறையவனாம் பாலைக் கௌதம னார்க்குச் செய்த உதவி, நெடுஞ் சேரலாதன் கடம்பு எறிந்த வென்றி, இமய மலையில் வில் பொறித்த வெற்றி ஆகிய சேரர் புகழ் சிறப்பிக்கப் பெற்றுள்ளது. பாடல்:

**"பெருஞ்சோறு பயந்த திருந்துவேல் தடக்கை**
**திருநிலை பெற்ற பெருநாள் இருக்கை"** (55, 56)

**"குலவுவேல் சேரன் கொடைத் திறம் கேட்டு"** (62)

**"வண்டமிழ் மறையோற்கு வானுறை கொடுத்த**
**திண்டிறல் நெடுவேல் சேரலன்"** (63, 64)

**"கடல் கடம்பு எறிந்த காவலன் வாழி**
**விடர்ச்சிலை பொறித்த வேந்தன் வாழி**
**பூந்தண் பொருநைப் பொறையன் வாழி**
**மாந்தரஞ் சேரல் மன்னவன் வாழ்க".** (81 - 84)

என்பன பாடல் பகுதிகள். அடுத்துச் சோழர் பற்றியன:—

### சோழர்

புறாவுக்காக நிறைத் தட்டில் ஏறித் தசை அரிந்து தந்த சிபி, கன்றைக் கொன்ற தன் மகனைக் கொன்று ஆவுக்கு முறை வழங்கிய மனுநீதி சோழன் - ஆகிய சோழரின் பெருமை குறிக்கப்பட்டுள்ளது. பாடல்:

**'புறவு நிறை புக்கோன், கறவை முறை செய்தோன்**
**பூம்புனல் பழனப் புகார்நகர் வேந்தன்''** (58 – 59)

என்பது பாடல் பகுதி. அடுத்துப் பாண்டியர் பற்றியன:

**பாண்டியர்**

பாண்டியன் நெடுஞ்செழியனது ஆட்சியில், மறை ஒலி தவிர, ஆராய்ச்சி மணியின் ஒலி கேட்டதில்லையாம்; அவன் செங்கோல் முறை யறிந்த கொற்றவனாம்; குடிபழி தூற்றும் கொடியன் அல்லனாம்:

**''மறைநா ஓசை அல்லது யாவதும்**
**மணிநா ஓசை கேட்டலும் இலனே**
**அடிதொழு திறைஞ்சா மன்னரல்லது**
**குடிபழி தூற்றும் கோலனும் அல்லன்''** (31 – 34)

என்பது பாடல் பகுதி.

**கட்டுரை**

கட்டுரை காதையின் இறுதியிலுள்ள 'கட்டுரை' என்னும் பகுதியில் பாண்டியனின் சிறப்பு பெரிதும் பேசப்பட்டுள்ளது. பாண்டியர்குலம் அறமும் மறமும் ஆற்றலும் உடையது. மதுரை மூதூர் பண்பு மேம்பட்டது. விழாக்களும், குடி வளமும், கூழ் (உணவு) வளமும், வையைப் பேராறு தரும் செழிப்பும், பொய்யாத வானம் பொழியும் நீர் வளமும், வரிக் கூத்தாட்டும், குரவைக் கூத்தாட்டும் மற்றும் பிற வளங்களும் உடையது. செங்கோல் தவறினமைக்காகத் தேவியுடன் அரசு கட்டில் துறந்து வீழ்ந்து இறந்து வளைந்த கோலை நிமிர்த்திய பாண்டியன் நெடுஞ்செழியனைப் பெற்றது. பாடல்:

**''முடிகெழு வேந்தர் மூவ ருள்ளும்**
**படை விளங்கு தடக்கைப் பாண்டியர் குலத்தோர்**
**அறனும் மறனும் ஆற்றலும் அவர்தம்**

பழவிறல் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவு மலி சிறப்பும் விண்ணவர் வரவும்
ஒடியா இன்பத் தவருடை நாட்டுக்
குடியும் கூழின் பெருக்கமும் அவர்தம்
வையைப் பேரியாறு வளஞ் சுரந் தூட்டலும்
பொய்யா வானம் புதுப் பெயல் பொழிதலும்
ஆரபடி சாத்துவதி என்றிரு விருத்தியும்
நேரத் தோன்றும் வரியும் குரவையும்
என்றிவை அனைத்தும் பிறபொருள் வைப்பொடு
ஒன்றித் தோன்றும் தனிக்கோள் நிலைமையும்
வட ஆரியர் படை கடந்து
தென் தமிழ் நாடு ஒருங்கு காணப்
புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்
அரைசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்
நெடுஞ் செழியன்......" (1 - 18)

*என்பது பாடல் பகுதி.*

*இவ்வாறாக, இளங்கோஅடிகள், முடியுடை மூவேந்தர்களையும் ஒத்த நோக்கில் கண்டு சிறப்பித்துக் கூறியிருப்பதன் வாயிலாக, தமது சிலப்பதிகாரத்தை 'மூவேந்தர் காப்பியம்' என மொழியும்படிச் செய்துள்ளார். இந்த ஒற்றுமை நோக்கு இன்றைய உலகில் இடம் பெறுமாயின், இப்போது துன்ப உலகமாக இருப்பது இன்ப உலகமாக மாறும்.*

**குடிமக்கள் காப்பியம்**

*இந்தக் காப்பியம் மூவேந்தர்களையும் சிறப்பித்திருப்பதால் மூவேந்தர் காப்பியம் எனக் கூறப்படினும், காப்பியக் கதைத் தலைவனும் தலைவியு மாகிய கோவலனும் கண்ணகியும் குடிமக்கள் ஆதலின் இதனைக் குடிமக்கள் காப்பியம் எனவும் விதந்து கூறலாம்.*

# 2. இயல் இசை நாடகப் பொருள் தொடர்நிலைச் செய்யுள்

சிலப்பதிகாரத்தில் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்க் கூறுகளும் இருப்பதாலும், பொருள் (கதைப் பொருள்) தொடர்ந்து அமைந்திருப்பதாலும், இந்நூல் இயல் இசை நாடகப் பொருள் தொடர்நிலைச் செய்யுள் என்று சிறப்பிக்கப்படுகிறது.

நாடகம் என்றாலே கதைத் தொடர்புடையது என்பதும், அதிலே நடிப்போடு இயலும் இசையும் கலந்திருக்கும் என்பதும் பெறப்படும். தமிழை, இயல்-இசை-நாடகம் என்னும் கூறுகள் உடைமையால் முத்தமிழ் என்பர். நாடகத்தில் இந்த முக்கூறும் இருப்பதால் சுருக்கமாக நாடகம் ஒன்றையேகூட முத்தமிழ் எனலாம். ஆயினும், சிலப்பதிகாரத்தில் இந்த முக்கூறுகளும் இருக்கும் பகுதிகளை ஒவ்வொன்றாகக் காணலாம்:

## இயல்

இயல் என்பது, இசையும் நடிப்பும் இல்லாமல் கருத்து சொல்லும் பகுதி. சிலம்பில் உள்ள ஆசிரியம்-கலி-வெண்பா ஆகியவை இயல் கூறுகள். மற்றும், கதையமைப்பு, கவுந்தி-சாரணர்-மாடலன் முதலியோர் கூறும் அறிவுரைகள் - அறவுரைகள், பல்வேறு சுவை நிலைகள், அரசநீதி, பத்தினி வழிபாடு, மூன்று உண்மைகளை நிலைநாட்டல், நீதி நிலை நாட்டல், பல புனைவுகள் (வருணனைகள்), நாடு-நகர்-அரசுச் செய்திகள், பல படிப்பினைகள் - முதலியன இயல்

பகுதிகளாம். தொல்காப்பியர் கூறியுள்ள ‘உரையொடு புணர்ந்த பழமை’ யாகிய தொன்மை என்பதற்கு நச்சினார்க் கினியர் சிலப்பதிகாரத்தை எடுத்துக்காட்டாகத் தந்துள்ளார்.

## இசை

அரங்கேற்று காதையில், இசை யாசிரியன், தண்ணுமை குழல் யாழ் ஆசிரியர்கள் ஆகியோரின் இயல்புகள் கூறப் பட்டுள்ளன. வேனில் காதையில் நிலாமுற்றத்தில் மாதவி இசைத்தலும், கானல் வரிப் பாடல்களும், புறஞ்சேரி யிறுத்த காதையில் கோவலன் பாணர்களுடன் பாடியதும், புணர்ந்த மகளிரின் இசையும், வேட்டுவவரி ஆய்ச்சியர் குரவை குன்றக் குரவை ஆகிய இசைப் பாடல்களும், நடுகல் காதையில், படை மறவர்கட்குச் செங்குட்டுவன் இசை விருந்து அளித்ததும், வாழ்த்துக் காதையில், பெண்டிர் மூவர் முறையே சோழனைப் புகழ்ந்து அம்மானை வரியும் - பாண்டியனைப் புகழ்ந்து கந்துக வரியும் - சேரனைப் புகழ்ந்து ஊசல் வரியும் - மூவேந்தர்களையும் சேர்த்துப் புகழ்ந்து வள்ளைப் பாட்டும் பாடியுள்ளமையும், இன்ன பிறவும் இசைப் பகுதிகளாகும்.

## நாடகம்

இயலும் இசையும் அமைந்திருத்தலே நாடக உறுப்பு தானே.

இந்தக் காப்பியக் கதை தெருக் கூத்தாகவும், மேடை நாடகமாகவும், திரை ஓவிய நாடகமாகவும் நடிக்கப் படுகிறது.

அரங்கேற்று காதையில் அரங்க அமைப்பு விளக்கப் பெற்றுள்ளது. நாடகத்திற்கு வேண்டிய கதை மாந்தர்கள்

பொருத்தமாக உள்ளனர். தலைவன் (Hero) கோவலன். தலைவி (Heroine) கண்ணகி. கண்ணகிக்குக் கெடுமகள் (வில்லி) மாதவி. கோவலனுக்குக் கெடுமகன் (வில்லன்) பொற்கொல்லன்.

திருமணம், காதல், பிரிவு, துயரம், மறம், துணிவு, உடன்போக்கு, பரத்தைமை, கவுந்தி துணை, மாதரி அடைக்கலம், பொய்க்குற்றம் சாட்டப்படல், கொலை, கண்ணகியின் மற எழுச்சி, மதுரை எரிதல், பாண்டியனும் தேவியும் இறத்தல், கண்ணகி வழிபாடு, சிலர் துறவு பூணுதல், சிலர் இறத்தல், சேரனின் போர் - இவையெல்லாம் நாடகத்திற்கு ஒத்துவரும் காட்சிக் கூறுகளாகும்.

மற்றும், பின் வருவதை முன்னரே அறிவிக்கும் முன்னோட்ட நிமித்தங்கள் இருப்பது நாடகச் சுவையாகும். இது இப்போது 'Direction' எனப் புகழப்படுகிறது.

கொலைகாரப் பாண்டியனது நேர்மையையும் ஆட்சிச் சிறப்பையும் முன்னாலே புகழ்ந்திருப்பது ஒரு நல்ல கட்டம்.

பல பகுதிகள் மாறி மாறி உரையாடும்படி அமைந்திருப்பது, சொன்ன அடியையே திரும்பத் திரும்பச் சொல்லுதல்,

இடையிடையே உரையிடையிட்ட பாட்டுகளும் கட்டுரைகளும் அமைந்திருத்தல் - ஆகியவை நாடகக் கூறுகள்.

கடலாடு காதையில், கொடு கொட்டி, பாண்டரங்கம், அல்லியத் தொகுதி, மல், துடி, குடை, குடம், பேடு, மரக்கால், பாவை, கடையம் என்னும் பதினோர் ஆடல்கள் அறிவிக்கப்பட்டுள்ளன.

வேனில் காதையில், கண் கூடு வரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள் வரி என்னும் எட்டு நடிப்புக் கூறுகள் சொல்லப் பட்டுள்ளன.

ஐந்திணைக் கூறுகளுள் மருதக் கூறு இந்திர விழவூர் எடுத்த காதையிலும், நெய்தல் கூறு கானல்வரிக் காதையிலும், பாலைக்கூறு வேட்டுவவரிக் காதையிலும், முல்லைக்கூறு ஆய்ச்சியர் குரவைக் காதையிலும், குறிஞ்சிக் கூறு குன்றக் குரவைக் காதையிலும் இடம்பெற்றுள்ளன.

**நாடகக் களம்**

The Art of play Writing என்னும் ஆங்கில நூலை யான் நாற்பது ஆண்டுகட்கு முன்பு படித்தேன். படித்த போது, இதன் படியே சிலப்பதிகாரம் அமைந்திருக்கிறதே - ஒருவேளை, சிலப்பதிகாரத்தைப் பார்த்துத்தான் யாராவது இந்த இலக்கணத்தை வகுத்திருப்பார்களா? என்று ஐயப்படும்படியாகவும் இருந்தது. இது நிற்க-

சேக்சுபியரின் (Shakespeare) நாடகங்களில் ஐந்து களங்கள் (Acts) இருக்கும். அந்த வகையில் சிலப்பதி காரத்தைப் பின் வருமாறு ஐந்து கட்டங்களாகப் பகுக்கலாம்.

1. **தொடக்கம்:** திருமணம் (மங்கல வாழ்த்துப் பாடல்) முதல் கானல் வரி வரையும் தொடக்கம் ஆகும்.

2. **வளர்ச்சி:** கானல் வரியிலிருந்து அடைக்கலக் காதைவரை வளர்ச்சியாகும். (வளர்ச்சியிலேயே ஒரு திருப்பம் என்றும் கூறலாம்).

3. **உச்ச கட்டம்** (climax): கொலைக்களக் காதை. இது 30 காதைகளுள் 16-ஆம் காதையாகும்.

4. **திருப்பம்:** கண்ணகியின் மாற்றமும் மதுரை அழிவும் தொடங்கிக் கண்ணகி சேரநாடு செல்லும் வரை திருப்பமாகும்..

5. **முடிவு:** தேவர்களும் கோவலனும் மேலேயிருந்து வந்து கண்ணகியை மேலுக்கு அழைத்துச் செல்லுதல் முதல் கண்ணகி வழிபாடு - வாழ்த்து - வரந்தரு காதை வரை முடிவாகும்.

இவற்றையே சுருக்கினால், (1) தொடக்கம் - புகார்க் காண்டம், (2) நடு - மதுரைக் காண்டம், (3) முடிவு - வஞ்சிக்காண்டம் என்னும் மூன்றுக்குள் அடக்கலாம்.

சுருங்கக்கூறின், காப்பியம் இன்பியலில் (comedy) தொடங்கித் துன்பியலில் (Tragedy) முடிந்தது எனலாம். துன்பியல் முடிவு வஞ்சிக் காண்டத்திற்குத் திறப்பு விழா செய்தது.

**கூறியது கூறல்**

சொன்னதையே திரும்பச் சொன்னால் 'கூறியது கூறல்' என்னும் குற்றமாகும் என்பர். "கூறியது கூறினும் குற்றம் இல்லை வேறொரு பொருளை விளைக்கு மாயின்"- என்னும் நூற்பா கூறியது கூறலுக்கு மாற்றாகும். மன எழுச்சிகள் தோன்றும்போது அழுத்தம் திருத்தம் ஏற்படவும் கருத்தை வலியுறுத்தவும் கூறியதை மீண்டும், கூறுதல் ஒரு வகை நாடகக்கூறு என்னும் கருத்தை 'The Art of Play Writing' என்னும் நூலில் படித்த நினைவு இருக்கிறது. இந்தக் கூறு சிலப்பதிகாரத்தில் உள்ளது.

கானல் வரியில் இது இடம் பெற்றிருப்பது வேறொரு தலைப்பில் கூறப்பட்டுள்ளது. இனி, கண்ணகி இதைக் கையாண்டிருப்பதைக் காணலாம்.

*கணவன் கொலையுண்டான் என்பதை யறிந்த கண்ணகி கூறியனவாக ஊர்சூழ்வரிக் கதையில் பின்வருமாறு உள்ளது.*

**"காதல் கணவனைக் காண்பனே ஈதொன்று**
**காதல் கணவனைக் கண்டால் அவன் வாயில்**
**தீதறு நல்லுரை கேட்பனே ஈதொன்று**
**தீதறு நல்லுரை கேளாது ஒழிவனெல்**
**நோதக்க செய்தனன் தென்னன் இதுவொன்று"**

(19:10-14)

**"பெண்டிரும் உண்டுகொல் பெண்டிரும் உண்டுகொல்**
**கொண்ட கொழுநர் உறு குறை தாங்குறூஉம்**
**பெண்டிரும் உண்டுகொல் பெண்டிரும் உண்டுகொல்**
**சான்றோரும் உண்டுகொல் சான்றோரும் உண்டுகொல்**
**ஈன்ற குழவி எடுத்து வளர்க்குறூஉம்**
**சான்றோரும் உண்டுகொல் சான்றோரும் உண்டுகொல்**
**தெய்வமும் உண்டுகொல் தெய்வமும் உண்டுகொல்**
**வைவாளில் தப்பிய மன்னவன் கூடலில்**
**தெய்வமும் உண்டுகொல் தெய்வமும் உண்டுகொல்"**

(51 - 59)

**"நின்றாள் நினைந்தாள் நெடுங்கயற்கண் நீர்சோர**
**நின்றாள் நினைந்தாள் நெடுங்கயற்கண் நீர்துடையா"**

(73 – 74)

*வழக்குரை காதையில், பாண்டியனது அரண்மனை வாயில் காவலனை நோக்கிக் கண்ணகி கூறியது:*

**"வாயிலோயே வாயி லோயே**
**அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து**
**இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே**
**இணையரிச் சிலம்பொன்று ஏந்திய கையள்**
**கணவனை இழந்தாள் கடையகத் தாள் என்று**
**அறிவிப் பாயே அறிவிப் பாயே"** (20:24–29)

*வாயில் காவலன் பாண்டியனிடம் சென்று கூறியது:*

**"பொற்றொழில் சிலம்பு ஒன்று ஏந்திய கையள்**
**கணவனை இழந்தாள் கடையகத்தாளே**
**கணவனை இழந்தாள் கடையகத்தாளே, என"**

(20: 42 - 44)

*இவ்வாறு கூறியது கூறல் நாடகத்திற்கு ஒருவகை ஒலிநயச் சுவை பயக்கிறது. இவை யெல்லாம் நாடகக் கூறுகள் ஆகும். சொல்நயம் பொருள்நயம்போல ஒலி நயமும் நாடகத்திற்கு வேண்டும் அல்லவா? மற்றும், நாடகம் பார்ப்பவர்கள் நாடகக் கதைப் பகுதிகளை நடிகர்களின் வாயிலாகவே அறிந்துகொள்வது போல், இயற்கைக் காட்சிப் புனைவுகள் நீங்கலாக, மற்ற கதைப் பகுதிகள், சிலம்பில் பெரும்பாலும் கதை மாந்தர்களின் பேச்சைக் கொண்டே அறியும்படி அமைக்கப்பட்டுள்ளன.*

*மேலும் ஒன்று:- இந்தக் கால நாடகங்களில்—திரை ஓவியங்களில், முன்னால் நடந்த நிகழ்ச்சிகளுள் சில, நாடகத்தின் இடையிலோ - முடிவிலோ அறிவிக்கப் படுதல் போன்ற அமைப்பு சிலம்பிலும் உள்ளது. ஓர் எடுத்துக்காட்டு: கோவலன் இளமையில் ஆற்றிய கொடைச் செயல், இரக்கச் செயல், துணிவுச் செயல் முதலியன, பதினைந்தாவது காதையாகிய அடைக்கலக் காதையில் சாவதற்கு முன் மாடலன் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளன. இவை யெல்லாம் சிறந்த நாடகக் கூறுகளாகும்.*

*எனவே, இயல் இசை நாடகப் பொருள் தொடர் நிலைச் செய்யுள் காப்பியம் என்னும் மணி மகுடம் சிலப்பதிகாரத்திற்குச் சூட்டப்பட்டிருப்பது நனிசாலும்.*

# 3. இரட்டைக் காப்பியங்கள்

ஏதேனும் ஒரு வகையில் ஒற்றுமை உடைய - அல்லது- தொடர்புடைய இரண்டை இரட்டை என்பது மரபு. இரட்டைப் பிள்ளைகள், இரட்டைப் புலவர்கள், இரட்டை மாட்டு வண்டி, இரட்டை நகரங்கள் (ஐதராபாத்- செகந்தராபாத்) முதலியன இதற்கு எடுத்துக் காட்டு களாகும்.

இவ்வாறு தமிழ்நூல்களுள் 'இரட்டைக் காப்பியங்கள்' என்றால், அப்பெயர், சிலப்பதிகாரம் - மணிமேகலை ஆகிய இரண்டு காப்பியங்களைக் குறிக்கும். கோவலன் - கண்ணகி ஆகியோரைப் பற்றியது சிலப்பதிகாரம். கோவலன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட மாதவிக்கும் கோவலனுக்கும் மகளாகிய மணிமேகலை என்பவளைப் பற்றியது மணிமேகலை. முன்னதை இயற்றியவர் இளங்கோ வடிகள். பின்னதை இயற்றியவர் மதுரைக் கூல வாணிகன் சாத்தனார். இனி இரண்டிற்கும் உரிய தொடர்புகளைக் காணலாம்.

கோவலன், கண்ணகி, சித்திராபதி, வயந்த மாலை, மாதவி, மணிமேகலை ஆகிய கதை மாந்தர்கள் இரண்டிலும் இடம் பெற்றுள்ளனர்.

ஒன்று மகள் கதை; மற்றொன்று பெற்றோர் கதை. மாதவியின் மகளாகிய மணிமேகலைக்குக் கண்ணகியும் பெற்றோளாக (தாயாக) மாதவியால் குறிப்பிடப் பட்டுள்ளாள். இது ஒருவகை உயர்ந்த பண்பாடு.

மணிமேகலை - ஊர் அலர் உரைத்தகாதையில் சித்திரா பதியால் அனுப்பப்பட்ட வயந்த மாலையிடம் மாதவி இவ்வாறு சொன்னதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது:

**"காவலன் பேரூர் கனையெரி மூட்டிய**
**மாபெரும் பத்தினி மகள் மணிமேகலை"** (2: 54, 55)

என்பது பாடல் பகுதி. இராமாயணத்தில், இராமன் தாய் கைகேயி - கைகேயியின் மகன் இராமன் என்றும், பரதன் தாய் கோசலை - கோசலையின் மைந்தன் பரதன் என்றும் உயரிய பண்பின் அடிப்படையில் கூறும் உறவுமுறை போன்றது இது. எனவே, இரண்டையும் ஒரு குடும்பக் காப்பியம் எனலாம்.

மலைவளம் காணவந்த சேரன் செங்குட்டுவனுடன் வந்த இளங்கோவைச் சாத்தனார் கண்டு, கோவலன் கொலையுண்டதும் பாண்டியனும் தேவியும் இறந்தமையும் ஊர் எரிவும் கூறி, பின்னர்க் கண்ணகிமுன் மதுராபதித் தெய்வம் தோன்றி அவளது பழம் பிறப்புச் சாப வரலாற்றையும், பதினான்காம் நாள் கோவலனைக் காண்பாள் என்பதையும் கூறியதை யான் அறிந்துள்ளேன் எனக் கூறினார். செங்குட்டுவனிடமும் இச்செய்தி கூறப் பட்டது.

உடனே இளங்கோ, சிலப்பதிகாரம் என்னும் பெயரால் ஒரு காப்பியம் நாம் இயற்றுவோம் என்றார். மூவேந் தர்க்கும் பொதுவாகிய அப்படியொரு நூலை இளங்கோ அடிகளே இயற்றுமாறு சாத்தனார் கூற அடிகள் சிலப்பதி காரம் இயற்றினார். சாத்தனாரும் மணிமேகலைக் காப்பியத்தை இயற்றினார்.

சிலப்பதிகாரப் பதிகத்தின் இறுதியில் உள்ள,

**"உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள்**
**உரைசால் அடிகள் அருள, மதுரைக்**
**கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்"** (87-89)

என்னும் பகுதியும், மணிமேகலைப் பதிகத்தின் இறுதியில் உள்ள

**“இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப**
**வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்**
**மாவண் தமிழ்த் திறம் மணிமேகலை துறவு**
**ஆறைம் பாட்டினுள் அறிய வைத்தனென்”** (95 - 98)

என்னும் பகுதியும் ஈண்டு குறிப்பிடத் தக்கன.

சிலப்பதிகாரத்தின் இறுதியில் ‘நூல் கட்டுரை’ என்னும் தலைப்புடைய பாடலின் இறுதியில் உள்ள

**“மணிமேகலைமேல் உரைப்பொருள் முற்றிய**
**சிலப்பதிகாரம் முற்றும்”** (17 - 18)

என்னும் பகுதி மிகவும் குறிப்பிடத்தக்கது. மணிமேகலை என்னும் தொடர்நிலைச் செய்யுளோடு கூட்டி உரைக்கப் படும் பொருள் முடிந்த சிலப்பதிகாரக் காப்பியம் முற்றுதல் உற்றது-என்பது இதன் பொருள்.

இதனால், இளங்கோவும் சாத்தனாரும் பேசிக் கொண்டு இரட்டைக் காப்பியங்களை ஒருவர்க் கொருவர் அறிவித்துக் கொண்டு இயற்றினர் என உய்த்துணரலாம்.

மற்றும், இரண்டு காப்பியங்களிலும் பல செய்திகள் ஒத்துள்ளன. அவை:-

இரண்டிலும் முப்பது கதைகள் உள்ளன. இரண்டிலுமே ஒவ்வொரு காதையின் முடிவிலும் ‘என்’ என்னும் ஈற்றுச் சொல் உள்ளது.

பாசறைபோல் பல்வேறு பறவைகள் வீற்றிருத்தல்-யானை முன் பறையறைதல்-பூதச் சதுக்கம்-முசு குந்தன் நிலை-தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன் நிலை-சமண் புத்தச்சார்பு-பல மதங்கள் பற்றிய விவரம்-

ஞாயிறாகிய கணவனை இழத்தல்-காலைக் காட்சி-அந்தி மாலைக் காட்சி-ஞாயிறு திங்கள் புனைவு-கடற்கரை-சோலைக் காட்சிகள்-நாடு நகர அரசர் சிறப்புகள்-மணிமேகலை துறவால் நன்மணி கடலில் வீழ்ந்தாற்போல் வருந்துதல்-கற்புடைய மகளிர் தெய்வம் தொழாமை-முதலிய செய்திகள் இரண்டு காப்பியங்களிலும் இடம் பெற்றுள்ளன. விரிப்பின் பெருகும்.

இவ்வளவு ஒற்றுமைத் தொடர்புகள் இருப்பினும், இளங்கோ அடிகள் சமண சமயச்சார்புடையவர் போலவும், சாத்தனார் புத்த சமயச் சார்பினராகவும் தோன்றுதல் வியப்பாயிருக்கலாம். இக்காலத்தில், தந்தையும் மகனும் வெவ்வேறு அரசியல் கட்சியினராகவும், தமையனும் தம்பியும் வெவ்வேறு கட்சியினராகவும். நெருங்கிய நண்பர்களும் உறவினர்களும் ஒருவர்க் கொருவர் வெவ்வேறு கட்சியினராகவும் இருப்பினும், பல நிகழ்ச்சிகளில் இணைந்து செயல்படுகின்றனர் அன்றோ? அவ்வாறே இளங்கோவையும் சாத்தனாரையும் கருதல் வேண்டும்.

இளங்கோ சாத்தனாரை, 'தண்தமிழ் ஆசான் சாத்தன்', 'நன்னூல் புலவன் சாத்தன்' என்று புகழ்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

# 4. தெய்வப் பொதுவுடைமை

உலகில் பொருளியலில் பொதுவுடைமை பேசப் படுகிறது. இன்னும் எது-எதிலே பொதுவுடைமைப் பேசப் படலாம். ஆனால், தெய்வக் (சமயக்) கொள்கையில் பொது வுடைமை பேசுவது-மேற்கொள்வது ஒரு பெரிய புரட்சியே யாகும். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' (2104) என்று திருமூலர் சொன்னார். எல்லா ஆறுகளும் கடலில் கலப்பது போல, எல்லாச் சமயக் கொள்கைகளும் ஒரே கடவுள் கொள்கையில் சென்று முடிகின்றன வாதலின், சமயப் பூசல் வேண்டா என்று சிலர் கரடியாய்க் கத்து கின்றனர். ஆனால், இக்கொள்கையில் வெற்றி கிடைத்ததா?

உலகில் பின்பற்றப்படும் பெரிய மதங்களுள் ஒவ் வொன்றிலும் சில அல்லது பல பிரிவுகள் இருப்பது வியப் பிற்கும் வேதனைக்கும் உரியதாகும். ஒரு மதத்துக் கடவுள் திருமேனி தெருவில் ஊர்வலம் வரும்போது, மற்றொரு மதத்தினர் தம் வீட்டுத் தெருக் கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொள்ளும் நடைமுறை உண்மையை — செய்தியை நோக்குங்கால், இது குறித்து மேலும் கூறுவதற்கு என்ன இருக்கிறது?

இந்த அடிப்படையுடன் இளங்கோ அடிகளின் சிலப்பதிகாரத்திற்கு வருவோம். இளங்கோ அடிகளைப் பெரிய பொது வுடைமையாளர் எனலாம். நூலை மூவேந்தர்க்கும் பொதுவான காப்பியமாக அமைத்தது போலவே, எல்லாத் தெய்வங்கட்கும் பொதுக் காப்பிய மாகவும் அமைத்துள்ளார் எனலாம். மன்னர் மரபில்

தோன்றினும், துறவு மேற்கொண்டோர்க்கு இஃதல்லவோ பெரிய தகுதி (இலக்கணம்) ஆகும். இனி, தெய்வத் தொடர்பாக அவர் கூறியுள்ள செய்திகளைக் காதை வாரியாகக் காணலாம்.

**பதிகம்**

மதுரையில், முடியில் கொன்றை மாலையணிந்த சிவன் எழுந்தருளியுள்ள வெள்ளியம்பலம் குறிப்பிடப்பட்டுள்ளது.

**''கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில்**
**வெள்ளியம் பலத்து நள்ளிருள் கிடந்தேன்''** (40-41)

என்பது பாடல் பகுதி. சிவனுக்கு உரிய அம்பலங்கள் ஐந்து எனக் கூறுவர். அவை: பொன்னம்பலம், வெள்ளியம்பலம், இரத்தின அம்பலம், தாமிர அம்பலம், ஓவிய (சித்திர) அம்பலம் என்பன. சிதம்பரம் - பொன்னம்பலம். மதுரை - வெள்ளியம்பலம். திருவாலங்காடு - இரத்தின அம்பலம். திருநெல்வேலி - தாமிர அம்பலம். நெல்லை மாவட்டத்துக் குற்றாலம் - ஓவிய அம்பலம் ஆகும். இவ்வைந்தனுள் ஒன்றாகிய மதுரை வெள்ளியம்பலம் பதிகத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

**மனையறம் படுத்த காதை**

கோவலன் கண்ணகியின் நலம் பாராட்டுகிறான். ஆறு முகங்களுடைய முருகன் தன் வேலை நீள வாட்டத்தில் இரண்டாகப் பிளந்து நின் இரண்டு கண்களாகத் தந் துள்ளான் - என்கிறான். பெண்டிரின் கண்கட்கு வேலை உவிக்கும் மரபுப்படி இந்தக் கற்பனையுள்ளது:

**''அறுமுக ஒருவன்ஓர் பெறுமுறை இன்றியும்**
**இருமுறை காணும் இயல்பினின் அன்றே**
**அஞ்சுடர் நெடுவேல் ஒன்றுநின் முகத்துச்**
**செங்கடை மழைக்கண் இரண்டா ஈத்தது''** (49-52)

என்பது பாடல் பகுதி. பதுமையார் என்ற பெண்ணின் கண்கள் முருகனின் இரண்டு வேல் பகுதிபோல் இருந்தது என்னும் கருத்து சீவக சிந்தாமணி - பதுமையார் இலம்பகத்திலும் உள்ளது:

**"ஒக்கிய முருகன் வைவேல் ஓரிரண்டனைய கண்ணாள்"**
(126)

என்பது பாடல் பகுதி. இவ்வாறாக, மனையறம் படுத்த காதையில் முருகன் இடம் பெற்றுள்ளான்.

## இந்திர விழவு ஊர் எடுத்த காதை

காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரனுக்குத் திருவிழா நடைபெற்றது. அப்போது, சிவன் முதலிய கடவுளர் கோயில்களிலும் சிறப்புப் பூசனைகள் செய்யப் பெற்றனவாம்:

**"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்**
**அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்**
**வால்வளை மேனி வாலியோன் கோயிலும்**
**நீல மேனி நெடியோன் கோயிலும்**
**மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்**
... ... ... ... ... ... ... ... ... ...
**வேறுவேறு கடவுளர் சாறுசிறந்து ஒருபால்"**
(169-173-78)

பிறவா யாக்கைப் பெரியோன் எனச் சிவனை இளங்கா இனம் தெரிந்து கூறியிருப்பது பொருத்தமா யுள்ளது. சிவன் மக்களின் உடம்புடன் பல திருவிளையாடல்கள் புரிந்துள்ளார் என நூல்கள் கூறுகின்றன. ஆனால், மற்வர் போல் எந்தப் பெற்றோர்க்கும் பிறக்க வில்லை; திடீரன மக்கள் உருக் கொண்டு வந்து ஆடல்கள் செய்துள்ளார் என்றே - நூல்கள் கூறியுள்ளன.

தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களுள் 'பிள்ளைத் தமிழ்' என்பதும் ஒன்று. கடவுளரையா,

பெரியோர்களையோ, வள்ளல்களையோ சிறு பிள்ளையாகக் கொண்டு அவர்கள் மேல் பத்துப் பருவங்கள் அமைத்து, ஒரு பருவத்துக்குப் பத்துப் பாக்கள் வீதம் மொத்தம் நூறு பாடல்கள் தமிழில் பாடும் நூலுக்குப் பிள்ளைத் தமிழ் என்பது பெயராம். பல கடவுளர்க்குப் பிள்ளைத் தமிழ் பாடப் பெற்றுள்ளது. சிவனுக்கு மட்டும் பிள்ளைத் தமிழ் நூல் இல்லை. சிவன் பிள்ளையாகப் பிறக்காததனால் அவர் மேல் யாரும் பிள்ளைத் தமிழ் பாடவில்லை. இந்த மரபை ஒட்டிச் சிவனைப் "பிறவா யாக்கைப் பெரியோன்" என்று இளங்கோ குறிப்பிட்டுள்ளார்.

அறு முகச் செவ்வேள் = முருகன். வெண் சங்கு போன்ற வெண்மேனி உடைய கடவுள் பல . தேவன். நீல மேனி நெடியோன் = திருமால். மாலை வெண் குடை மன்னவன் இந்திரன்.

இந்திரனை மட்டும் 'மன்னவன்' என்று கூறியிருப்பது தொல்காப்பிய மரபை ஒட்டிய தாகும். தொல்காப்பியர் அகத்திணையியலில், முல்லை - குறிஞ்சி - மருதம் - நெய்தல் என்னும் நிலங்கட்கு உரிய தெய்வங்களைப் பின்வருமாறு கூறியுள்ளார்:

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன்மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"** (5)

என்பது நூற்பா. முதலது முல்லை – திருமால். அடுத்தது குறிஞ்சி - முருகன். மூன்றாவது மருதம் - இந்திரன். நான்காவது நெய்தல் - வருணன்.

இந்திரனை மட்டும் வேந்தன் என்று கூறியது ஏன்? இந்திரன் என்னும் வட மொழிச் சொல்லுக்கு வேந்தன் (மன்னன்) தலைவன் என்று பொருள் கொள்வர். எடுத்துக் காட்டுகள்:- நரேந்திரன் = மக்கள் தலைவன். சுரேந்திரன் = தேவர் தலைவன். இராசேந்திரன் = மன்னர் மன்னன் - மன்னர்களின் தலைவன். கஜேந்திரன் = யானைகளின் தலைவன் - இன்ன பிற.

தேவர் உலகம் என ஒன்று இருப்பதாகவும், அங்கே தேவர்கள் எனப்படுபவர் பலர் இருப்பதாகவும், அவர்களின் தலைவன் இந்திரன் என்பதாகவும், அதனால் அவன் தேவேந்திரன் எனப்படுவதாகவும் கூறுவர். எனவேதான், தொல்காப்பியர் வேந்தன் என்று கூறியுள்ள மரபை ஒட்டி இளங்கோ மன்னவன் என்று கூறியுள்ளார்.

## நாடு காண் காதை

### மணிவண்ணன் கோட்டம்

மாதவியைப் பிரிந்து வந்த கோவலனும் கண்ணகியுடன் வைகறை யாமத்தில் யாரும் அறியாமல் புகாரை விட்டுப் பிரிந்து செல்லலாயினர். அப்போது, வழியில் உள்ள, பாம்புப் படுக்கையில் அறிதுயில் கொள்ளும் நீலமணி நிறத்தனாகிய திருமாலின் கோயிலை வலஞ்செய்து சென்றார்களாம்.

> **"அணிகிளர் அரவின் அறிதுயில் அமர்ந்த**
> **மணி வண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து"**
> (9, 10)

என்பது பாடல் பகுதி.

### புத்த விகாரம்

போதி (அரச) மரத்தடிப் புத்த தேவனின் அருள் மொழியை வானத்தில் திரியும் சாரணர் வந்து ஓதுகின்ற -

இந்திரனால் அமைக்கப்பட்ட புத்தப் பள்ளிகள் ஏழைப் போற்றிச் சென்றனராம் கோவலனும் கண்ணகியும்.

**"பணைஐந் தோங்கிய பாசிலைப் போதி**
**அணிதிகழ் நீழல் அறவோன் திருமொழி**
**அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்**
**இந்திர விகாரம் ஏழுடன் போகி"** (11-14)

என்பது பாடல் பகுதி.

**அருகன் மேடை**

சமண அடியார்களாகிய சாவகர்கள் அமைத்த அருகன் சிலாதலத்தைக் (கல்பீட மேடையைக்) கோவலனும் கண்ணகியும் சுற்றிவந்து வணங்கினராம்.

**"உலக நோன்பிகள் ஒருங்குடன் இட்ட**
**இலகொளிச் சிலாதலம் தொழுது வலங்கொண்டு"**
(24-25)

என்பது பாடல் பகுதி.

**அருகன் பெயர்கள்**

கோவலனும் கண்ணகியும் வழியில் கவுந்தி அடிகள் என்னும் சமணப் பெண் துறவியுடன் சேர்ந்து கொண்டனர். வழியில் சமணச் சாரணர்கள் சமணக் கடவுளாகிய அருகனைப் பின்வரும் பெயரால் குறிப்பிட்டுப் போற்றினர்.

**"அறிவன் அறவோன் அறிவு வரம் பிகந்தோன்**
**செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்**
**தரும முதல்வன் தலைவன் தருமன்**
**பொருளன் புனிதன் புராணன் புலவன்**
**சிவவரன் தேவன் சிவகதி நாயகன்**
**பரமன் குணவதன் பரத்தில் ஒளியோன்**
**தத்துவன் சாதுவன் சாரணன் காரணன்**

**சித்தன் பெரியவன் செம்மல் திகழொளி**
**இறைவன் குரவன் இயல் குணன் எங்கோன்**
**குறைவில் புகழோன் குணப்பெருங் கோமான்**
**சங்கரன் ஈசன் சயம்பு சதுமுகன்**
**அங்கம் பயந்தோன் அருகன் அருள் முனி**
**பண்ணவன் எண்குணன் பரத்தில் பரம்பொருள்**
**விண்ணவன் வேத முதல்வன்...''** (176-189)

*சைனக் கடவுளாகிய அருகனுக்கு இவ்வளவு பெயர்கள் வழங்கப்பட்டுள்ளன. இவற்றுள், பகவன், இறைவன், எண்குணன் என்னும் பெயர்கள் திருக்குறள்-கடவுள் வாழ்த்துப் பகுதியிலும் உள்ளன. மற்றும், பரமன், சங்கரன் ஈசன், சதுமுகன் (நான் முகன்) என்னும் பெயர்கள் முறையே சிவனையும் பிரமனையும் குறிக்கும் பெயர் களாகும். சைனமதம் இந்து மதத்திலிருந்து பிரிந்ததாதலின், அங்கும் சிவன், திருமால், பிரமன் உண்டு. நன்னூல் என்னும் இலக்கணநூல் இயற்றிய சமணராகிய பவணந்தி முனிவர், நன்னூலின் எழுத்ததிகாரத் தொடக்கத்தில்,*

**''பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த**
**நான் முகன் தொழுது நன்கு இயம்புவன் எழுத்தே''**

*எனப் பாடியுள்ள காப்புச் செய்யுளில் நான்முகனைக் குறிப்பிட்டுள்ளார். அடுத்த சொல்லதிகாரத்தின் தொடக் கத்தில்,*

**''முச்சகம் நிழற்றும் முழுமதி முக்குடை**
**அச்சுதன் அடிதொழுது அறைகுவன் சொல்லே''**

*எனப் பாடிய காப்புச்செய்யுளில் அச்சுதனைக் (திருமாலைக்) குறிப்பிட்டுள்ளார். நன்னூலில் பொருளதிகாரம் இல்லை. பவணந்தியார் பொருளதிகாரமும் இயற்றினார்-அது கிடைக் காமல் போய்விட்டது என்று கூறுபவரும் உளர். ஒருவேளை பவணந்தியார் பொருளதிகாரம் இயற்றியது உண்மையா*

யிருப்பின், அதன் தொடக்கத்தில் சிவனைக் குறிப்பிட்டிருக் கலாம்.

இப்பெயர்கட் கிடையே 'சிவகதி நாயகன்' என்னும் பெயர் ஒன்றும் உள்ளது. சிவகதி என்பது வீடுபேறு. சைனர்களும் வீடு பேற்றைச் சிவகதி என வழங்குவது எண்ணத்தக்கது.

இதன் பின்னர்க் கவுந்தியடிகளும் அருகன் பெயர்களைக் கூறிப்போற்றினர். அவர் குறிப்பிட்ட பெயர்களாவன:-

"ஒரு மூன்று அவித்தோன், காமனை வென்றோன், ஐவரை வென்றோன், அருளறம் பூண்டோன், அருகர் அறவன், அறிவோன், மலர்மிசை நடந்தோன், இறுதியில் இன்பத்து இறை என்பன. இவற்றுள் ஒன்றாய 'மலர்மிசை நடந்தோன்' என்னும் பெயர், திருக்குறள் கடவுள் வாழ்த்துப் பகுதியில் உள்ள 'மலர்மிசை ஏகினான்' என்னும் பெயரை நினைவுறுத்துகிறது.

சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பகவன், இறைவன், எண் குணன், மலர்மிசை நடந்தோன், ஐவரை வென்றோன், (பொறிவாயில் ஐந்தவித்தான்), அறவன் (அறவாழி) என்னும் பெயர்களைக் கொண்டு, திருவள்ளு வரைச் சமணர் என்று கூறுவாரும் உளர். இஃது இருக் கட்டும். நாம் திருவள்ளுவரை எல்லாச் சமயத்திற்கும் எல்லா மதங்கட்கும் பொதுவானவர் என்றே கூறுவோ மாக! திருக்குறளைப் பொதுமறை என்றே எண்ணி ஓது வோமாக!

## காடு காண் காதை

### அருக வணக்கம்

இந்தப் பகுதியின் தொடக்கத்தில், அசோக மரத்தின் கீழ் அமர்ந்த அருக தேவனைத் தொழுத செய்தி கூறப் பட்டுள்ளது.

**"கோதைதாழ் பிண்டிக் கொழுநிழல் இருந்த**
**ஆதியின் தோற்றத்து அறிவனை வணங்கி"** (3,4)

**திருமாலின் திருவோலக்கம்**

*கோவலன், கண்ணகி, கவுந்தி ஆகிய மூவரும் உறையூரைக் கடந்து சென்று ஓர் இளமரக் காவில் தங்கி யிருந்தபோது மாங்காடு என்னும் ஊர் மறையவன் ஒருவன் ஆங்கு வந்தான். அவனை நோக்கி, நீ யார்? எங்கிருந்து வந்தாய்? என்றெல்லாம் கோவலன் வினவினான். மறையவன் பதில் இறுக்கிறான்:*

*என் ஊர் மாங்காடு - மறையவன் நான். காவிரி நடு அரங்கத்தில் அறிதுயில் கொள்ளும் அரங்கனை வணங்கி னேன். மற்றும், திருவேங்கட மலையில், கருமுகில் மின்னலோடு வானவில் ஏந்தி இருந்தாற் போன்று, பொன்னாடையும் மணியாரமும் கொண்ட கரிய திருமால், இருபக்கக் கைகளிலும் ஆழியும் (சக்கரமும்) வெண் சங்கும் ஏந்தினால் போல், மாலையில் ஒரு பக்கல் ஞாயிறும் மறு பக்கல் வெண் திங்களும் விளங்க வீற்றிருந்த திருக் கோலத் தையும் கண்டு வணங்கி வந்தேன்-என்று கூறினான். பாடல்:*

**"விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்**
**திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்**
**வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்**
**ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை**
**விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி**
**இருமருங்கு ஓங்கிய இடைநிலத் தானத்து**
**மின்னுக் கொடிஉடுத்து விளங்குவில் பூண்டு**
**நன்னிற மேகம் நின்றது போலப்**
**பகையணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்**
**தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி**
**நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு**

**பொலம்பூ ஆடையின் பொலிந்து தோன்றிய**
**செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்**
**என்கண் காட்டுஎன்று என்உளம் கவற்ற**
**வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேன்''** (39-53)

*என்பது பாடல் பகுதி. திருவேங்கடத்துத் திருமாலைப் பற்றி இளங்கோ அடிகள் கூறியுள்ள பகுதியை நோக்குங்கால், இன்னோ ரன்ன செய்தியைக் கொண்ட வேறு இலக்கியப் பகுதிகளும் நினைவிற்கு வருகின்றன. 'இலக்கிய ஒப்புமை காண்டல்' என்னும் முறையில் அவற்றையும் காண்போமே:*

*சாத்தனார் மணிமேகலை நூலில் மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதையில் இப்படி ஒரு கற்பனை செய்துள்ளார்; புகார் என்னும் மங்கை, மாலையில் ஒரு பக்கல் வெண்தோடும் மற்றொரு பக்கல் பொன் தோடும் அணிந்திருந்தாற் போன்று, கீழ்பால் திங்களும் மேல்பால் ஞாயிறும் விளங்கின - என்று கூறியுள்ளார்.*

**''புலவரை இறந்த புகார்எனும் பூங்கொடி**
**குணதிசை மருங்கில் நாள்முதிர் மதியமும்**
**குடதிசை மருங்கில் சென்றுவீழ் கதிரும்**
**வெள்ளி வெண் தோட்டோடு பொன்தோடாக...''**

*என்பது பாடல் பகுதி. பரிபாடல் என்னும் நூலிலும் திருமாலைப் பற்றி இப்படி ஒரு செய்தி கூறப்பட்டுள்ளது. திருமாலின் ஒரு கையில் ஞாயிறு மண்டிலம் போல் ஆழியும் (சக்கரமும்), மற்றொரு கையில் வெண் திங்கள் மண்டிலம் போல் வெண் சங்கும் உள்ளனவாம்.*

**''பருவம் வாய்த்தலின் இருவிசும்பு அணிந்த**
**இருவேறு மண்டிலத் திலக்கம்போல**
**நேமியும் வளையும் ஏந்திய கையால்...''** (13-7-9)

*என்பது பாடல் பகுதி. திருவரங்கத்திலும் திருவேங்கடத்திலும் திருமாலைக் கண்டு வணங்கவேண்டுமென மாங்காட்டு*

மறையவனின் கண்கள் அவன் மனத்தை உறுத்தினவாம் - என்னும் பொருளில் உள்ள "என் கண் காட்டு என்று உளம் கவற்ற வந்தேன்" என்னும் பகுதி சுவைக்கற்பாலது.

மாங்காட்டு மறையவன் மேலும் வழியில் குறிப்பிட்ட ஒரு மலையைச் சுட்டிக் கூறுகின்றான். ஓங்கி உயர்ந்த அம் மலைப் பகுதியில் உள்ள நெடியோனாகிய திருமாலை வணங்கி, உள்ளத்தில் அவன் திருவடிகளைப் பதித்து, அம் மலையை மூன்று முறை சுற்றி வந்து தொழ வேண்டுமாம்.

**"ஓங்குயர் மலையத்து உயர்ந்தோன் தொழுது**
**சிந்தையில் அவன்தன் சேவடி வைத்து**
**வந்தனை மும்முறை மலைவலஞ் செய்தால்..."**
(105-107)

என்பது பாடல் பகுதி. திருமால் உயர்ந்தோன் எனக் குறிக்கப்பட் டுள்ளார். உலகை அளக்க நெடுவிக்கிரம வடிவம் எடுத்ததால், திருமாலை நெடியோன் என்றும் உயர்ந்தோன் என்றும் கூறுதல் மரபு. கோயிலையோ - மலையையோ மற்றும் இன்னோரன்ன பிறவற்றையோ மூன்று முறை சுற்றும் மக்களின் வழக்கம் இங்கே சுட்டப்பட்டுள்ளது.

**கொற்றவை**

கோவலன் முதலிய மூவரும் வழி கடந்து கொற்றவை கோட்டம் ஒன்றை அடைந்தனராம்; கொற்றவை நெற்றிக் கண் உடையவளாம்; விண்ணோர் வணங்கும் பெண் தெய்வமாம். வான நாட்டாளாம்; ஐயை எனப்படுபவளாம்.

**"விழிநுதல் குமரி விண்ணோர் பாவை**
**மையறு சிறப்பின் வான நாடி**
**ஐயைதன் கோட்டம் அடைந்தனர் ஆங்கென்"**
(214-216)

## வேட்டுவ வரி

வேட்டுவ வரிப் பகுதியில், கொற்றவைக்கு வழங்கும் பல்வேறு பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை:

**"மதியின் வெண்தோடு சூடும் சென்னி**
**நுதல் கிழித்து விழித்த இமையா நாட்டத்துப்**
**பவள வாய்ச்சி தவளவாள் நகைச்சி**
**நஞ்சுண்டு கறுத்த கண்டி வெஞ்சினத்து**
**அரவுநாண் பூட்டி நெடுமலை வளைத்தோள்**
**துளை எயிற்று உரகக் கச்சுடை முலைச்சி**
**வளையுடைக் கையில் சூலம் ஏந்தி**
**கரியின் உரிவை போர்த்து அணங்காகிய**
**அரியின் உரிவை மேகலை யாட்டி**
**சிலம்பும் கழலும் புலம்பும் சீறடி**
**வலம்படு கொற்றத்து வாய்வாள் கொற்றவை**
**இரண்டுவே றுருவில் திரண்டதோள் அவுணன்**
**தலைமிசை நின்ற தையல் பலர் தொழும்**
**அமரி குமரி கவுரி சமரி**
**சூலி நீலி மாலவற்கு இளங்கிளை**
**ஐயை செய்யவள் வெய்யவாள் தடக்கைப்**
**பாய்கலைப் பாவை பைந்தொடிப் பாவை**
**ஆய்கலைப் பாவை அருங்கலப் பாவை"** (54-71)

என்னும் பெயர்கள் இப்பகுதியில் வழங்கப்பட்டுள்ளன. இவற்றுள், மதிசூடும் சென்னி, நுதல் நாட்டத்து (நெற்றிக் கண்) நஞ்சுண்ட கண்டி (நீலகண்டன்), நெடுமலை வளைத்தோள் (மேருமலையைச் சிவன் வில்லாக வளைத்தான்), சூலம் ஏந்தி (சிவன்), கரியின் உரிவை போர்த்து (சிவன் யானைத்தோல் போர்த்தமை), அரியின் உரிவை (சிவனுக்குப் புலித்தோல் ஆடை), என்னும் பெயர்களை நோக்குங்கால், சிவனின் தேவியாகிய சிவையைக் (உமா

தேவியைக்) கொற்றவையாக கூறப்பட்டிருக்கும் குறிப்பு தோன்றுகிறது. இளங்கோ அடிகள் இவ்வளவு பெயர்களை யும் நினைவில் வைத்துத் தந்திருப்பது வியப்பு.

**கொன்றையும் துளவமும்**

கொன்றை மலரும் துளசியும் இணையத் தொடுத்த மாலையணிந்து அரக்கர் அழிய அமரரைக் காத்துக் குமரிக் கோலத்துடன் கொற்றவை வென்றிக் கூத்தாடினாளாம்.

**"கொன்றையும் துளவமும் குழுமத் தொடுத்த**
**துன்று மலர்ப் பிணையல் தோள்மேல் இட்டாங்கு**
**அசுரர் வாட அமரர்க்கு ஆடிய**
**குமரிக் கோலத்துக் கூத்துள் படுமே"**

(10-ஆம் பாடல்)

இங்கே, சிவனுக்கு உரிய கொன்றை மலரும் திருமாலுக்கு உரிய துளசியும் இணையத் தொடுத்த மாலை அணிந்ததாகக் கூறியதன் வாயிலாக, சைவ-வைணவ வேறுபாடு அற்ற பொது நோக்கைக் காணலாம். "அரியும் சிவனும் ஒண்ணு (ஒன்று) – அறியாதவர் வாயில் மண்ணு" என்னும் மக்களின் பழமொழி இங்கே பளிச்சிடுவதைக் காணலாம்.

மற்றும் வேட்டுவ வரியின் இறுதியிலும் இத்தகைய கருத்து இடம்பெற்றுள்ளது. யாரும் உண்ணாத நஞ்சைக் கொற்றவை உண்டு தேவர்க்கு அருள் புரிந்தாளாம்; மேலும், தன் மாமனாகிய கம்சனது சூழ்ச்சியால் ஏற்பட்ட மருதமரங்களை ஒடித்தாளாம்; மாமன் அனுப்பிய உருளும் வண்டியை உதைத்து அழித்தாளாம்.

**"உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்"** (22-1)

**"மருதின் நடந்து நின் மாமன் செய் வஞ்ச**
**உருளும் சகடம் உதைத்தருள் செய்குவாய்"** (22:3,4)

நஞ்சுண்டவர் சிவன், இச்செயல் கொற்றவைக்கு ஏற்றிச் சொல்லப்பட்டுள்ளது. மருத மரங்களை ஒடித்ததும் உருளும் சகடத்தை உதைத்ததும், திருமாலின் தெய்வப் பிறவியாகிய (அவதாரமாகிய) கண்ணனின் செயலாகும். இச்செயல்களும் கொற்றவைமேல் ஏற்றப்பட்டுள்ளன. ஈண்டும், சைவவைணவ வேறுபாடற்ற பொது நோக்கைக் காணலாம். 'இலக்கிய ஒப்புமை காண்டல்' என்னும் முறையில், பிற இலக்கியக் கூற்றுகள் சில இவண் காண்பாம்.

**கம்ப இராமாயணம்**

ஒருவரே இருவராயுள்ள சிவனும் திருமாலும் வில் வைத்திருந்தனராம். யார் வில் வலியது என்பதைக் காண நான்முகன் இருவர்க்கும் போர் மூட்டினாராம். இச்செய்தி பாலகாண்டம் - பரசு ராமப்படலத்தில் உள்ளது.

> **"யாரினும் உயர்ந்த மூலத்து**
> **ஒருவராம் இருவர் தம்மை**
> **மூரிவெஞ் சிலைமேல் இட்டு**
> **மொய்யமர் மூட்டிவிட்டான்"** (28)

என்பது பாடல் பகுதி. மற்றும் பூதத்தாழ்வார் பாடிய இயற்பா – மூன்றாம் திருவந்தாதியில் உள்ள – (திவ்யப் பிரபந்தம்)

> **"அரன், நாரணன் நாமம்; ஆள் விடை, புள் ஊர்தி;**
> **உரைநூல் மறை உறையும் கோயில் - வரை நீர்**
> **கருமம் அழிப்பு, அளிப்பு; கையது வேல், நேமி;**
> **உருவம் எரி, கார்மேனி ஒன்று"** (5)

> **"பொன் திகழும் மேனிப் புரி சடையம் புண்ணியனும்**
> **நின்றுலகம் தாய நெடுமாலும் - என்றும்**
> **இருவர் அங்கத்தால் திரிவரேலும் ஒருவன்**
> **ஒருவன் அங்கத்து என்றும் உளன்"** (98)

என்னும் பாடல்களும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலன.

## கால் கோள் காதை

### முடியிலும் தோளிலும்

சேரன் செங்குட்டுவன் வட நாடு நோக்கிப் படையெடுத்துச் சென்றபோது, சிவன் கோயிலில் அளித்த திருவடி மாலையைத் தன் முடியில் சூடிக் கொண்டானாம். பின்னர்த் திருமால் கோயிலில் அளித்த மாலையைத் தோளில் அணிந்து கொண்டானாம்.

**"ஆடக, மாடத்து அறிதுயில் அமர்ந்தோன்**
**சேடங் கொண்டு சிலர்நின்று ஏத்தத்**
**தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்**
**வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்**
**ஆங்கது வாங்கி அணிமணிப் புயத்துத்**
**தாங்கின னாகித் தகைமையின் செல்வுழி"** (62-67)

சிவன் கோயிலும் திருமால் கோயிலும் இருந்ததாகவும் முதலில் சிவன் கோயில் அளித்ததை முடியில் சூடியதால் பின்னர்த் திருமால் கோயிலில் அளித்ததைச் செங்குட்டுவன் தோளில் அணிந்து கொண்டதாகவும் கூறப்பட்டிருப்பதி லிருந்து, செங்குட்டுவனுக்குச் சமய வேற்றுமை இல்லை என்பது புலனாகும்.

இந்நூலின் வேட்டுவ வரியில் கொற்றவையின் புகழும் ஆய்ச்சியர் குரவையில் திருமாலின் சிறப்பும், குன்றக் குரவையில் முருகன் பெருமையும் விளக்கப்பட்டுள்ளன.

இவ்வாறாகச் சிலப்பதிகாரம் எல்லாத் தெய்வங்களும் வீற்றிருக்கும் பொதுவான சொல் கோயிலாகத் திகழ்கிறது.

### உறவினர் மதங்கள்

கோவலனும் கண்ணகியும் இறந்ததும், மாதவியும் மணிமேகலையும் புத்த மதத்தைத் தழுவினர். இருவரின்

தந்தைமார்களுள் கோவலன் தந்தையாகிய மாசாத்துவான் புத்தமதத்தில் சேர்ந்தார்; கண்ணகியின் தந்தை மாநாய்கன் சமண மதத்தில் சேர்ந்தார். எனவே, மதங்கள் உறவைக் கெடுக்கவில்லை என்பது போதரும். இக்காலத்திலும், உறவினர்களுக்குள் ஒரு குடும்பத்தார் சைவராகவும் மற்றொரு குடும்பத்தினர் வைணவராகவும் இருப்பதைக் காணலாம்.

இளங்கோ அடிகள் எதிலும் அகப்பட்டுக் கொள்ளாமல் மிகவும் விழிப்பாய் வேலை செய்திருக்கிறார். மணிமேகலை எழுதிய சாத்தனார் பச்சையாக - வெளிப்படையாகப் புத்தம் பரப்பியுள்ளார். இளங்கோ எந்த மதத்திற்கு முதன்மை கொடுத்துள்ளார் எனில், சமணத்திற்கே எனப் பதில் இறுக்கலாம். சாரணர் வாயிலாகவும் கவுந்தி வாயிலாகவும் சமணம் பரப்பியுள்ளார். எனவே, அவரைத் தனிப்பட்ட முறையில், சமணச் சார்புடையவர் என்று கூறுகின்றனர். அவருடைய தமையன் சேரன் செங்குட்டுவனோ சைவச் சார்புடையவனாகப் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள் ளான். இருப்பினும் எல்லா மதங்கட்கும் இடம் கொடுத் துள்ளான்.

சாத்தனார் தனிப்பட்டவராதலின் வெளிப்படையாகப் புத்தம் பரப்பினார். இளங்கோ மன்னர் குடும்பத்தினர் - ஆட்சியில் உள்ள செங்குட்டுவனின் இளவல் - எனவே, இவர், மதப் பொதுவுடைமையையே மக்களிடையே வைத்துச் சென்றுள்ளார்.

# 5. காப்பியக் கட்டுக்கோப்பு

இன்னின்னவை அமைந்திருப்பது காப்பியமாகும். இவ்வாறிருப்பது சிறு காப்பியம் - அவ்வாறு இருப்பது பெருங்காப்பியம் - என்றெல்லாம் வரையறைகளும் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகக் கூறலாம். எவரும் எந்த வரையறையையும் கட்டாயப்படுத்த இயலாது. இன்றியமையாத பெரும்பாலான அமைப்புகள் இருப்பின் சரிதான். இந்த அடிப்படையுடன், சிலப்பதிகாரத்தில் உள்ள காப்பியக் கட்டுக்கோப்புக் கூறுகள் சில காண்பாம்:-

வாழ்த்து:- திங்களைப் போற்றுதும், ஞாயிறு போற்றுதும், மாமழை போற்றுதும், பூம்புகார் போற்றுதும் - என்பனவற்றைக் கடவுள் வாழ்த்து - வணக்கம்போல் கொள்ளலாம். மங்கலமாகத் தொடங்கும் இந்தப் பகுதிக்கு 'மங்கல வாழ்த்துப் பாடல்' என்னும் பெயர் சூட்டப்பெற்றுள்ளது.

வருபொருள் உரைத்தல்:- அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றம், உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்துதல் கிடைப்பது, ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் - என்பன வருபொருள் உரைத்தலாம். பதிகத்தில் பின்னால் வரப் போகிற முப்பது காதைகளையும் குறிப்பிட்டிருப்பதும் அதுவேயாம்.

நால் பொருள்: அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் இடம் பெற்றிருத்தல். கவுந்தி, மாடலன், சாரணர் முதலியோர் கூறியன அறம். கோவலன் பொருள் தேட முயலுதல், பாண்டியனது அரசியல், சேரர்களின் போர்

வெற்றி முதலியன பொருள் ஆகும். கண்ணகியும் கோவலனும் இன்புற்றது, மாதவியும்] கோவலனும் களிப்பாட்டயர்ந்தது. ஊர் மக்கள் இன்பமாகப் பொழுது கழித்தது முதலியன இன்பமாகும். கண்ணகியும் கோவலனும் மேலுலகு செல்லுதல், சேரன் வேள்வி இயற்றுதல், கண்ணகிக் கோட்ட வழிபாடு முதலியன வீட்டின்பாற் படும்.

நிகரில் தலைவன் - தலைவி:- பெருங்குடியில் பிறந்த கோவலனும் கண்ணகியும் நிகரில்லாத காப்பியத் தலைவர் களாவர்.

மலை, கடல், நாடு, நகர் புனைவுகள்: இமயத்தில் கல் எடுத்தல், குன்றக் குரவை முதலியவை மலைப் பகுதியாம்.

புகார் மக்கள் கடலில் குளித்த கடலாடு காதை கடல் பற்றியது. சோழ நாட்டுப் புனைவும் பாண்டிய நாட்டுப் புனைவும், மதுரைப் புனைவும், சேரர் புனைவும் நாடு - நகரப் புனைவுகளாம் (வருணனைகளாம்).

பருவம்: வேனில் வந்தது - வேனில் காதை - பெரும் பொழுது. அந்தி மாலைச் சிறப்புச் செய் காதை - சிறு பொழுது.

இரு சுடர்த் தோற்றம். திங்கள்: மாலையாகிய குறும்பை ஓட்டித் திங்கள் மீளர சாளுதல். ஞாயிறு: ஊர் காண் காதையில் பறவைகள் ஒலிக்கத் தாமரை மலர ஞாயிறு தோன்றுதல் - மதுரையைத் துயில் எழுப்பல். இந்திர விழவூர் எடுத்த காதையில் - நிலமகளின் இருளாகிய போர்வையைக் கதிராகிய கையால் நீக்கி ஞாயிறு தோன்றும் மலையில் (உதய கிரியில்) தோன்றிமை முதலியன.

மற்றும், வேங்கடத்தில் மாலையில், கிழக்குப் பக்கம் திங்களும், மேற்குப் பக்கம் ஞாயிறும் தோற்றமளித்தல்.

மணம்: கண்ணகி கோவலன் மணம். முடிசூடல்: ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன் மறைந்த பின், அவன் இளவல் வெற்றிவேல் செழியன் முடிசூடிக் கொண்டமை.

பொழில் நுகர்தல்: கானல் வரி - புகார் மாந்தர்கள் பொழுது போக்கியது. புனல் விளையாடல்: இந்திர விழாவின்போது புனலாடியது - கடலாடு காதைப் புன லாட்டம்.

மதுக்களி = புகார் மக்கள் களித்தமை. பிள்ளை பெறல்: கோவலனுக்கும் மாதவிக்கும் மணிமேகலை பிறந்தமை. மாலதியின் மனங்குளிரப் பாசண்டச் சாத்தன் குழந்தையாய்த் தோன்றல். மணிமேகலைக்குப் பெயரிடு விழா.

புலவியில் புலத்தலும் கலவியில் கலத்தலும்: கோவலன் மாதவி, பாண்டியன் அவன் மனைவி, புகார் மாந்தர் ஆகியோர் புலவியில் புலந்து கலவியில் கலந்தமை.

மந்திரம்: செங்குட்டுவன் சூழ்வு (மந்திராலோசனை) செய்தமை. தூது: மாதவி வயந்த மாலையையும் கோசிகனையும் கோவலனிடம் தூது அனுப்பியமை.

செலவு - இகல்வென்றி: செங்குட்டுவன் வடபுலம் நோக்கிப் படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றமை. காப்பிய உட்பிரிவு: முப்பது காதைகள் அமைத்திருப்பது.

**மெய்ப்பாட்டுச் சுவை:** தொல்காப்பியத்தில் கூறப் பட்டுள்ள நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் மெய்ப்பாட்டுச் சுவைகள் சிலம்புக் காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன.

**நகை:** கணவனைப் பிரிந்த கண்ணகி மாமன் மாமியை மகிழ்விக்கப் பொய்ச் சிரிப்பு சிரித்தாள். மாதவியிடமிருந்து

கணவன் வந்தபோது சிரித்தபடி அவனை வரவேற்றாள். சாலினி தன்னைப் பாராட்டியபோது கண்ணகி கூச்சப்பட்டுப் புன்னகை புரிந்தாள். மற்றும், - கோவலனும் கண்ணகியும் புகாரைவிட்டு ஒரு காவதத் தொலைவு கடந்ததுமே, கால் நோகப் பெருமூச்செறிந்து, கோவலனை நோக்கி, மதுரை மூதூர் எது - இன்னும் எவ்வளவு தொலைவில் உள்ளது என்று மெல்லப் பல் தெரியச் சிரித்தபடிக் கேட்டாளாம் கண்ணகி. அண்மையில்தான் மதுரை உள்ளது என்று கோவலன் கூறிச் சிரித்தானாம். எள்ளல், இளமை, பேதைமை, மடன் என்னும் நான்கின் காரணமாக நகை தோன்றும் எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார். மேற்கூறிய நகைகளைக் கண்ணகியின் பேதைமை காரணமாக வெளிப் பட்டவை என்று கூறலாம்.

சேரன் செங்குட்டுவனுக்கு அஞ்சி, வடபுல மன்னர்கள் சிலர் பல்வேறு மாறு கோலம் கொண்டு தப்பித்து ஓடிய செய்தி வேறு தலைப்பில் கூறப்பட்டுள்ளது. அந்தப் பகுதி மிக்க நகைச்சுவை தருவதாகும். இது எள்ளல் காரணமாக எழுந்தது எனலாம்.

**அழுகை**: கண்ணகி மாலதி முதலியோரின் அழுகை.

**இளிவரல்** (இழிவு): கோவலனையும் கண்ணகியையும் எள்ளி நகையாடிய பரத்தனும் பரத்தையும் நரிகளாக்கப் பட்டு வருந்தியது.

**மருட்கை** (வியப்பு): சாரணர் வான்வழி வருதல், கவுந்தி பரத்தையர்களை நரியாகச் சபித்தல், கண்ணகி இடப்பக்க முலையைத் திருகி எறிந்து மதுரையை எரித்தல், முன் பிறவியும், மறு பிறவியும் அறிதல் - முதலியன.

**அச்சம்**: யானை கிழ அந்தணனைத் துதிக்கையால் பற்றினபோது தோன்றிய அச்சம். மாதரி முதலியோர்

தீய நிமித்தம் கண்டபோது அஞ்சினமை. அரசால் கொலைக் குற்றம் சாட்டப்பட்ட கோவலனது அச்சம் - முதலியன.

**பெருமிதம்** (வீரம்): கோவலன் யானையை அடக்கினமை. கோவலன் கருணை மறவனாகவும், இல்லோர் செம்மலாகவும் விளங்கினமை. கோவலன், மாதவி ஆகியோர் யாழ் வாசிக்கும் கலைத்திறன் உடைமை. மாதவியின் ஆடல் பாடல் கலைத்திறன். செங்குட்டுவனின் வடபுல வெற்றி - முதலியன.

**வெகுளி**: கண்ணகியின் சினத்தால் பாண்டியனும், தேவியும், மதுரையும் அழிந்தமை. செங்குட்டுவன் சினத்தால் கனக விசயர் கல் சுமந்தமை. வெற்றிவேல் செழியன் பொற் கொல்லனுக்கு இறப்பு ஒறுப்பு கொடுத்தமை - முதலியன.

**உவகை**: கோவலனும் கண்ணகியும் மனையறம் புரிந்தமை. கோவலன் செல்வச் செழிப்பால் மாதவியை அடைந்து இன்பம் துய்த்தமை. மக்கள் கடலாடியும் பொழிலில் பொழுது போக்கியும் மகிழ்ச்சியாய் விளங்கினமை- முதலாயின.

மற்றும், மூவேந்தர் இடம் பெற்றிருத்தல், பல சமயக் கோட்பாடுகள் - பல கடவுள் கோயில்கள் - பல மன்றங்கள் - பல இயற்கைக் காட்சிகள் - வாணிகம் - பல ஆடல் பாடல் நிகழ்ச்சிகள் - வேட்டுவ வரி - ஆய்ச்சியர் குரவை - குன்றக் குரவை - முதலியன இடம் பெற்றிருத்தல் - முதலிய பல்லாற்றானும், சிலப்பதிகாரம் கட்டுக்கோப்புடைய ஒரு பெருங் காப்பியம் என்னும் பெரும் பெயருக்கு மிகவும் தக்கது என்பது ஒருதலை.

# 6. ஊழ் வினை

**ஊழின் வலிமை**

சிலப்பதிகாரம் ஊழ்வினையின் துணை கொண்டே நடைபோடுகிறது. ஊழ்வினையில் நம் நாட்டு மக்களுள் பெரும்பாலார்க்கு மிக்க நம்பிக்கை உள்ளது. இந்து, சமணம், பௌத்தம் ஆகிய மதங்கள் ஊழ்வினையை வலியுறுத்துகின்றன. திருவள்ளுவர் திருக்குறளில் 'ஊழ்' என்னும் தலைப்பு இட்டுப் பத்துப் பாடல்களில் ஊழ்வினை நம்பிக்கையை ஊட்டியுள்ளார் எனலாம். மக்கள், என்ன சூழ்ந்து - எவ்வளவு சூழ்ந்து ஒரு செயல் புரிய முயன்றாலும் ஊழ்வினையின் படியே நடக்கும்; ஊழினும் வலிமை யுடையது ஒன்றும் இல்லை என்னும் கருத்தில் பாடியுள்ள

**''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினும் தான்முந் துறும்''** (380)

என்னும் ஒரு குறளே போதுமே! மற்றும், சோர்வு இன்றி ஊக்கத்துடன் விடாது தொடர்ந்து செயலாற்றுபவர்கள் ஊழையும் அப்பால் தள்ளி வென்றுவிடுவர் என்னும் கருத்துடைய

**''ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்**
**தாழாது உஞற்று பவர்''** (620)

என்னும் குறளையும் வள்ளுவர் பாடியுள்ளார். 'ஊழையும்' என்பதில் உள்ள 'உம்' உயர்வு சிறப்பு உம்மையாகும். வெல்ல முடியாத ஊழையுங்கூட வெல்வர் என்பதிலிருந்து, ஊழ் வெல்ல முடியாதது என்பது பெறப்படுகின்றது.

**ஊழ் - விளக்கம்**

ஊழ் என்பதுதான் என்ன? முன் பிறவியில் நல்லன செய்திருப்பின் இப்பிறவியில் நல்லன நடக்கும்; முன் பிறவியில் தீயன செய்திருப்பின் இப்பிறப்பில் தீயனவே நேரும். இதே போல, இப்பிறப்பில் நல்லன புரியின் அடுத்த பிறப்பில் நல்லனவே நடைபெறும்; இப்பிறப்பில் தீயன செய்யின் அடுத்த பிறவியில் தீயனவே நேரும் - என்பது தான் ஊழின் விளக்கம்.

**ஊழின் கண்டு பிடிப்பு**

முற்பிறவியில் நல்லனவோ - தீயனவோ செய்தது எவ்வாறு இப்பிறப்பில் தெரியும்? இது போலவே அடுத்த பிறப்பில் நல்லனவோ - தீயனவோ நடக்கப் போவது இப்பிறவியிலேயே எவ்வாறு தெரியும்?

முன்னோர்கள் எண்ணிப் பார்த்திருக்கிறார்கள் - இப்பிறவியில் நல்லன செய்பவன் துன்புறுகிறான் - தீயன செய்பவன் இன்புறுகிறான் - இதற்குக் காரணம் என்ன?- என்று பல நாட்கள் - பல்லாண்டுகள் எண்ணிப் பார்த்திருக்கிறார்கள். அதற்குச் சரியான - பொருத்தமான விடை கிடைக்கவில்லை. எனவே, வேறு வழியில்லாமல் ஒரு முடிவுக்கு வரலாயினர். அதாவது:- இப்பிறவியில் நல்லது பெறுபவன் முற்பிறப்பில் நல்லது செய்திருக்கலாம்; இப்பிறவியில் தீயது பெறுபவன் முற்பிறவியில் தீயது செய்திருக்கலாம். இதேபோல, இப்பிறவியில் நல்லது பெறுபவன் தீயவனாய்த் தீயது செய்தால் அடுத்த பிறவியில் தீயது பெறுவான்; இப்பிறவியில் தீயது பெறுபவன் நல்லவனாய் நல்லது செய்யின் அடுத்த பிறவியில் நல்லது பெறுவான் - என உய்த்துணர்வாக - ஊகமா - உத்தேசமாக ஒரு முடிவுக்கு வந்தனர். இத்தகைய சூழ்நிலைகட்கு 'ஊழ்' என்ற 'மகுடமும்' சூட்டிவிட்டனர்.

## திருவள்ளுவரின் திணறல்

திருவள்ளுவரே ஓரிடத்தில் திணறியுள்ளார். பொறாமை கொண்ட தீய நெஞ்சுடையவனுடைய வளர்ச்சியும், பொறாமையற்ற நல்ல நெஞ்சத்தவனின் கேடும் இயற்கைக்கு மாறாயிருத்தலின், இந்தச் சூழ்நிலை எண்ணி ஆராயப்பட வேண்டிய ஒன்றாகும் - என்னும் கருத்தமைந்த

**"அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்**
**கேடும் நினைக்கப்படும்"** (169)

என்னும் குறளை இயற்றியுள்ளார். முன்னோர்கள் இந்த அடிப்படையிலேயே, 'ஊழ்' என்னும் இல்லாத ஒன்றை - பொருந்தாத ஒன்றைப் புதிதாய்க் கண்டுபிடித்து வழி வழியாக மக்களின் தலையில் சுமத்திவிட்டுப் போய் விட்டனர்.

## பொருத்தமான தீர்வு

ஒரு பிறவியிலேயே முன்னால் நல்லது செய்தவன் பின்னால் நல்லது பெறுவான்; முன்னால் தீயது செய்தவன் அப்பிறவியிலேயே பின்னால் தீயது பெறுவான். இவ்வாறு ஒரு பிறவிக்குள்ளேயே முன்னால் செய்யப்பெறும் நல்லன - கெட்டனவற்றிற்கு 'ஊழ் வினை' என்னும் பெயர் பொருந்துவதாகும். இந்தக் கருத்தை ஒளவைப் பாட்டியும் "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்" எனக் கொன்றை வேந்தனில் (74) கூறியுள்ளார். திருவள்ளுவரும், முற்பகலில் பிறர்க்குத் துன்பம் செய்யின், பிற்பகலில் தங்கட்குத் துன்பங்கள் யாரும் செய்யாமலேயே தாமாகவே வந்து சேரும் - என்னும் கருத்தில்,

**"பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்"**

என்று ஒரு குறள் பாடியுள்ளார். ஒரு பிறவியிலேயே முற்பகுதி - பிற்பகுதி என்னாமல், ஒரு பகலிலேயே (ஒரு நாளிலேயே) முற்பகல் - பிற்பகல் என்று தொடர்புறுத்தியுள்ளார். இந்தச் சூழ்நிலையை உண்மையான - மிகப் பெரிய ஊழாகச் சொல்லலாம்.

இவ்வாறாக, ஒரு பிறவியிலேயே முற்பகுதி - பிற்பகுதி, ஒரு பகலிலேயே முற்பகல் - பிற்பகல் என்பன பொருத்தமான ஒருவகைத் தீர்வாகும்.

இதற்கு மற்றொருவகைத் தீர்வும் சொல்லலாம்: நல்லவர்க்கு நல்லதோ-கெட்டதோ, தீயவர்க்குத் தீயதோ - நல்லதோ நடப்பது, இயற்கையாக - தற்செயலாக - யாரும் எதிர்பார்க்காத விதத்தில் நடப்பது ஒரு தீர்வாகும். போக்கு வரவு வண்டியில் அகப்பட்டு இறத்தல், புயல், வெள்ளம், நில நடுக்கம், எரிமலை, போர், கொலை முதலியவற்றால் உடைமையையோ - உயிரையோ இழத்தல் போன்றவை, இயற்கையாக - தற் செயலாக நடக்கும் தீமைகளாகும். பிள்ளையில்லாதவரின் சொத்து கிடைத்தல், குலுக்கல் (இலாட்டரி) சீட்டு போன்றவற்றால் திடீர்ப் பணக்காரர் ஆதல் போன்றவை இயற்கையாக - தற்செயலாகக் கிடைக்கும் நன்மைகளாகும். இவற்றோடு ஊழ்வினை என ஒன்றைக் கொண்டுவந்து, மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சிபோடுவது போல் தொடர் புறுத்துவது பொருந்தாத தாகும். இந்த அடிப்படையுடன் சிலப்பதிகாரத்திற்குச் செல்வாம்.

சிலம்பில் பல இடங்களில் ஊழ்வினை வலியுறுத்தப்பட்டுள்ளது. முன்பிறவித் தொடர்புக் கதையும் காட்டப்பட்டுள்ளது. இருப்பினும், இவற்றை அறிவியல் ஆய்வு முறையில் நோக்கின், முற்பகல் செய்தது பிற்பகலில் விளைந்ததாகவும், ஒரு பிறவியிலேயே முன்பாதியில் செய்தது

பின்பாதியில் விளைந்ததாகவும், இயற்கையாக - தற் செயலாக நடந்ததாகவும் தெரியவரும். இனி நூலுள் புகுந்து ஒவ்வொன்றாகக் காணலாம்.

## பதிகம்

பதிகத்திலேயே ஊழ் வினைக் குறிப்பு உள்ளது. கோவலனுக்கு இருந்த ஊழ்வினையால் பாண்டியன் ஆராயாது கொல்லச் செய்தானம்:

**"வினைவிளை காலம் ஆதலின் யாவதும்**
**சினையலர் வேம்பன் தேரானாகி..."** (27-28)

என்பது பாடல் பகுதி. அரசியலில் தவறு இழைத்தோர்க்கு அறமே எமனாகும் - பத்தினியைப் பெரியோரும் ஏத்துவர் - ஊழ்வினை விடாது வந்து ஊட்டும் - என்னும் மூன்று செய்திகள் சிலப்பதிகாரத்தால் தெரியவருமாம்.

**"அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாவதூஉம்**
**உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்**
**ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்..."**
(55, 56, 57)

என்பது பாடல் பகுதி.

## கானல் வரி

கானலில் மாதவி யாழ் மீட்டிப் பாடியது வஞ்சகப் பொருள் உடையது என ஐயுற்ற கோவலன், தனது ஊழ்வினையும் சேர்ந்து கொள்ள, முழுமதிபோன்ற முகமுடைய மாதவியைப் பிரிந்தான். பாடல்:

**"யாழிசைமேல் வைத்துத்தன் ஊழ்வினை**
**வந்து உருத்த தாகலின்**
**உவவுற்ற திங்கள் முகத்தாளைக்**
**கவவுக்கை ஞெகிழ்ந்தனனால்"** (52 : 4, 5)

என்பது பாடல் பகுதி.

## கனாத் திறம் உரைத்த காதை

கண்ணகி முன் பிறவியில் தன் கணவன் தொடர்பான ஒரு நோன்பு இயற்றுவதில் பிழை செய்து விட்டதாகத் தேவந்தி என்னும் பார்ப்பனத் தோழி கண்ணகியிடம் கூறினாளாம். பாடல்:

**"கைத்தாயும் அல்லை கணவற்கு ஒருநோன்பு**
**பொய்த்தாய் பழம்பிறப்பில் போய்க் கெடுக..."** (55,56)

மற்றும், பழைய ஊழ்வினை கூட்டியதால், ஞாயிறு தோன்றுவதற்கு முன்பே, வைகறையில் கோவலன் கண்ணகியுடன் புகாரை விட்டுப் போக எண்ணினான்.

**மூதை, வினை கடைக்கூட்ட வியங்கொண்டான் கங்குல்**
**கனை சுடர் கால் சீயாமுன்**

என்பது, இறுதி வெண்பாவின் இறுதிப் பகுதி.

## நாடு காண் காதை

கோவலனும் கண்ணகியும் ஊழ்வினை செலுத்தியதால் மதுரை நோக்கிப் புறப்பட்டனராம்.

**"ஊழ்வினை கடைஇ உள்ளம் துரப்ப"** (4)

என்பது பாடல் பகுதி.

கோவலனும் கண்ணகியும் வழியில் ஒரு சோலையில் தங்கியிருக்கையில், ஒரு சாரணர் வந்து தோன்றினர். கோவலனும் கண்ணகியும் கவுந்தியுடன் சேர்ந்து, எங்கள் பழைய வினை கெட்டொழிக என வேண்டிச் சாரணரைத் தொழுதனராம்:

**"தருமம் சாற்றும் சாரணர் தோன்றப்**
**பண்டைத் தொல்வினை பாறுக என்றே**
**கண்டறி கவுந்தியொடு காலுற வீழ்ந்தோர்"** (163-165)

என்பது பாடல் பகுதி.

சாரணர் ஒருவர் கவுந்தியடிகளிடம் பின்வருமாறு கூறினார். உருத்து வந்த ஊழ்வினை ஒழிக என எவர் முயலினும் ஒழியாது. விதைத்த விதை முளைத்து முதிர்ந்து பயன் அளிப்பது போல், ஊழ்வினை பயன் அளித்தே தீரும்.

**"கழிபெருஞ் சிறப்பின் கவுந்தி காணாய்**
**ஒழிகென ஒழியாது ஊட்டும் வல்வினை**
**இட்ட வித்தின் எதிர்ந்து வந்துஎய்தி**
**ஒட்டுங் காலை ஒழிக்கவும் ஒண்ணா"** (170-173)

என்பது பாடல் பகுதி. நல்லூழுக்கு உரியவையல்லாத பொருள்களை வருந்திக் காத்தாலும் வளராவாம்; ஊழின் படி தமக்கு உரிய பொருள்களை வெளியில் கொண்டுபோய்க் கொட்டினும் போகாவாம் - என்னும் கருத்து செறிந்த

**"பரியினும் ஆகாவாம் பாலல்ல; உய்த்துச்**
**சொரியினும் போகா தம"** (376)

என்னும் குறளும், மழை பெய்யாது வறண்டபோது பெய் என்றால் பெய்யாது - மழை நிரம்பப் பெய்யுங்கால் நிறுத்து என்றால் நிறுத்தாது - அதுபோல், ஊழ்வினையும் தீவினை செய்யுங்கால் அதை நீக்கவும் முடியாது - நல்லது செய்யின் அதனை விலக்கவும் முடியாது என்னும் கருத்து அமைந்த -

**"உறற்பால நீக்கல் உறுவார்க்கும் ஆகா**
**பெறற்பா லனையவும் அன்னவாம் மாரி**
**வறப்பின் தருவாரும் இல்லை; அதனைச்**
**சிறப்பின் தணிப்பாரும் இல்"** (104)

என்னும் நாலடியார்ப் பாடலும் ஈண்டு ஒப்புநோக்கத் தக்கன.

**ஊர் காண் காதை**

கவுந்தி கோவலனுக்குக் கூறுகிறார்: பெரியோரின் அறிவுரைகளை அறிவற்றவர்கள் ஏற்று ஒழுகாமல், தீவினை

வந்து உருத்தும் போழ்து அறியாமை காரணமாகத் துன்புறுவர். பாடல்:

**"யாப்பறை மாக்கள் இயல்பிற் கொள்ளார்
தீதுடை வெவ்வினை உருத்த காலைப்
பேதைமை கந்தாப் பெரும்பே துறுவர்"** (30-32)

(யாப்பு அறை = அறிவு அற்ற. கந்து = காரணம்)

மேலும் கவுந்தி கூறுகிறார்: சூதாட்டத்தால் நலிவுற்ற நளன், தன் மனைவியை நடுக்காட்டில் நள்ளிரவில் விட்டுச் சென்றது ஊழ்வினையால் அல்லவா? பாடல்:

**"அடவிக் கானகத்து ஆயிழை தன்னை
இடையிருள் யாமத்து இட்டு நீக்கியது
வல்வினை யன்றோ?"** (54-56)

மதுரையின் புறஞ்சேரியிலே, கவுந்தி, கோவலன், மாதவி ஆகிய மூவரும் தங்கியிருந்தபோது மாடலன் என்னும் மறையவன் ஆங்கு வந்தான். அவன் கோவலனை நோக்கிப் புகழ்மொழி கூறி, கோவலா! யான் அறிந்துள்ள வரையும் நீ இப்பிறப்பில் நல்ல அறச் செயல்கள் புரிந் துள்ளாய். இப்போது இந்தக் கண்ணகியோடு ஈங்கு வந்து அல்லல் உழப்பதற்குக் காரணம், முன் பிறவியில் செய்த வினையாய் இருக்கலாம்-என்று அறிவித்தான்.

**"இம்மைச் செய்தன யானறி நல்வினை
உம்மைப் பயன்கொல் ஒருதனி உழந்துஇத்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது"** (91-93)

என்பது பாடல் பகுதி.

## கொலைக் களக் காதை

கோவலன் சிலம்பு விற்கக் கடைத்தெருவுக்குப் புறப் படு முன், கண்ணகியுடன் உருக்கமாக உரையாடுகின்றான்:

கண்ணகியே! நாம் இவ்வாறு துன்புறுவதற்குக் காரணம் யாராவது செய்த மாயமா யிருக்கலாமோ அல்லது நமது பழைய வலிமையுடைய ஊழ்வினையா யிருக்கலாமோ! யான் உள்ளம் கலங்குகிறேன்-ஒன்றும் புரியவில்லை-என்று கூறினான்.

**"மாயங் கொல்லோ வல்வினை கொல்லோ**
**யான்உளம் கலங்கி யாவதும் அறியேன்"** (61, 62)

என்பது பாடல் பகுதி.

பொற்கொல்லன் பாண்டிய மன்னனிடம் சென்று, சிலம்பு திருடிய கள்வன் அகப்பட்டுக் கொண்டான் என்று கூற, கோவலனுக்கும் பாண்டியனுக்கும் பழைய தீய ஊழ் வினை விளைவுதரும் காலமாயிருந்ததால், அந்தக் கள்வனைக் கொல்லுக என்று கூறினான். அவ்வாறே, பழைய தீய ஊழ்வினையாகிய வலையிலே சிக்கிக்கொண் டிருந்த கோவலன் கொல்லப்பட்டான் பாடல்:

**"வினைவிளை கால மாதலின் யாவதும்**
**சினையலர் வேம்பன் தேரா னாகி"** (148, 149)

**"தீவினை முதிர்வலைச் சென்றுபட் டிருந்த**
**கோவலன் தன்னைக் குறுகின னாகி"** (156, 157)

என்பது பாடல் பகுதி.

கோவலன், பழைய தீய ஊழ்வினை உருத்தியதால் பாண்டியனது செங்கோல் வளைந்து கொடுங்கோல் ஆக, வெட்டப்பட்டுக் கீழே விழுந்தான்.

**"காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன்**
**கோவலன் பண்டை ஊழ்வினை உருத்தென்"**(216, 217)

கொலைக் களக் காதையின் இறுதியில் பின்வரும் வெண்பா உள்ளது.

**"நண்ணும் இருவினையும் நண்ணுமின்கள் நல்லறமே**
**கண்ணகிதன் கேள்வன் காரணத்தால் மண்ணில்**
**வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை**
**விளைவாகி வந்த வினை"**

*பாண்டியனுக்குப் பழைய தீய ஊழ்வினை இருந்ததால் கோவலன் காரணமாகச் செங்கோல் வளைந்தது. எனவே, உலகமக்களே! நல்வினை-தீவினை என்னும் இருவினையும் நம்மை வந்து சேரும்; ஆதலின் எப்போதுமே நல்ல அறச் செயல்களையே செய்யுங்கள்-என்று உலகுக்கு ஆசிரியர் கூறும் அறிவுரையாக இப்பாடல் அமைந்துள்ளது.*

**கட்டுரை காதை**

*மதுரையின் காவல் தெய்வமாகிய மதுராபதி கண்ணகியை நோக்கி, பழைய ஊழ்வினை வந்து பயன் அளிக்கத் தொடங்கிவிடின், ஒழுங்கற்றவர்கள் எவ்வளவு தவம் இப்போது செய்யினும் ஊழைவெல்ல முடியாது.*

**"உம்மை வினைவந்து உருத்த காலைச்**
**செம்மை யிலோர்க்குச் செய்தவம் உதவாது"** (171, 172)

**குன்றக் குரவை**

*மதுரையும் பாண்டியனும் அழிந்தபின், கண்ணகி நெடுவேள் குன்றம் அடைந்தாள். குன்றத்து மக்கள் கண்ணகியை நோக்கி யாரென்று வினவக் கண்ணகி கூறினாள்: பழைய தீய வலிய ஊழ் வினை வந்து உருத்த தால், மதுரையும் பாண்டியனும் அழிய, கணவனை இழந்த கொடு வினையேன் யான் என்று கூறினாள்:*

**"மணமதுரையோடு அரசு கேடுற**
**வல்வினை வந்து உருத்தகாலைக்**
**கணவனை அங்கு இழந்து போந்த**
**கடுவினையேன் யான் என்றாள்"** (5, 6)

**நீர்ப் படைக் காதை**

கனக விசயர் தலையில் கல்லேற்றி வந்த மன்னன் சேரன் செங்குட்டுவனிடம் மறையவன் மாடலன் கோவலன் வரலாறு கூறினான்: புகார்க் கடற்கரையிலே, பழைய தீய ஊழ்வினை வந்து உருத்ததால், மாதவி பாடிய வரிப் பாடலில் மாற்றுப் பொருள் கண்ட கோவலன் அவளை விட்டுப் பிரிந்து கண்ணகியிடம் வந்து சேர்ந்தான் என்று கூறினான். பாடல்:

**"மாதவி மடந்தை வரிநவில் பாணியொடு**
**ஊடல் காலத்து ஊழ்வினை உருத்தெழக்**
**கூடாது பிரிந்து குலக்கொடி தன்னுடன்**
**மாட மூதூர் மதுரை புக்கு .."** (58-61)

**நடுகல் காதை**

செங்குட்டுவனிடம் அறவேள்வி செய்யுமாறு மாடலன் தூண்டிய போது, பின் வரும் கருத்தைக் கூறினான். முன் செய்த ஊழ் வினையின் வழிப்படி உயிர் இயங்கும் என்பது மெய்யாளர் மொழிந்த மேலான கருத்தாகும் - என்றான். பாடல்:

**"செய்வினை வழித்தாய் உயிர்செலும் என்பது**
**பொய்யில் காட்சியோர் பொருளுரை"** (167, 168)

ஈண்டு இது, புறநானூற்றில் உள்ள

**"நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்**
**முறைவழிப் படூஉம் என்பது திறவோர்**
**காட்சியின் தெளிந்தனம்"** (192:9-11)

என்னும் பாடல் பகுதியோடு ஒப்பிட்டு நோக்கத் தக்கது.

**வரம் தரு காதை**

மாலதி என்பாள் மாற்றாள் குழந்தைக்குப் பால் சுரந்து ஊட்டினாளாம். பழைய தீய ஊழ் வினை உருத்த

தால் எமன் குழந்தையின் உயிரைக் கொண்டு சென்றானாம்.

**"மாலதி என்பாள் மாற்றாள் குழவியைப்**
**பால்சுரந் தூட்டப் பழவினை உருத்துக்**
**கூற்றுயிர் கொள்ளக் குழவிக்கு இரங்கி"** (74-76)

இவ்வாறு ஊழ் வினை சிலப்பதிகாரத்தில் ஒரு (சுமார்) இருபது இடங்கட்கு மேல் குறிப்பிடப் பட்டுள்ளது. கட்டுரை காதையில், மதுரையின் காவல் தெய்வமாகிய மதுராபதி கண்ணகியிடம், கோவலனது முன் பிறப்பு வரலாறு கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது. அதாவது:—

கலிங்க நாட்டில் உள்ள சிங்கபுரம் என்னும் பகுதியில் வசு என்பவனும், கபிலபுரம் என்னும் பகுதியில் குமரன் என்பவனும் அரசாண்டு கொண்டிருந்தனர். இவர்கள் பகை கொண்டு ஒருவரை ஒருவர் தோற்கடிக்க முயன்றனர். இரு பகுதிக்கும் இடையே ஆறு காத எல்லைக்குள் யாரும் இயங்குவது இல்லை. இந்நிலையில், சங்கமன் என்னும் பன்மணி நகை வாணிகன் தன் மனைவி நீலி என்பவளோடு, கபிலபுரத்திலிருந்து கள்ளத் தனமாகச் சிங்கபுரம் சென்று நகை மணி வணிகம் புரிந்து கொண்டிருந்தான். அப்போது, சிங்கபுரத்து மன்னனின் பணியாளனாகிய பரதன் என்பவன், சங்கமன் பகைவனது ஒற்றன் எனத் தங்கள் மன்னனிடம் பொய்யாகக் காட்டிக் கொடுத்துக் கொல்லச் செய்து விட்டான். இறந்து போன சங்கமனின் மனைவியாகிய நீலி என்பாள் பெரிதும் வருந்திப் பதினான்காம் நாள் ஒரு மலை மீது ஏறி நின்று, என் கணவன் கொல்லப்பட்டதற்குக் காரணமாக இருந்தவன், அடுத்த பிறவியில் பொய்க் குற்றம் சாட்டப்பட்டுக் கொலை செய்யப் படுவானாக. அவன் மனைவி யான் அடைந்துள்ள நிலையை அடைவாளாக எனக் கெடுமொழி (சாபம்) இட்டு இறந்து போனாள். அந்தப் பரதன் என்பவனே கோவலனாகப் பிறந்தான்;

நீலியின் கெடு மொழிப்படியே பொய்க் குற்றம் சுமத்தப் பட்டுக் கொல்லப் பட்டான். அவன் மனைவி கண்ணகி பதினான்காம் நாள் ஒரு மலை உச்சியில் வாணாளை முடித்துக் கொண்டாள் என்பது அனைவரும் அறிந்த செய்தி.

இந்தக் கதை ஊழ்வினையையும் அதன் வலிமையையும் நம்பச் செய்யும் கட்டுக் கதை என்றே தோன்றுகிறது.

**சிலம்பிசைப் பாட்டரங்கம்**

ஊழ்வினை வந்து உருத்து ஊட்டியதால்தான், உரை சால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தல் கிடைத்தது. தமிழகத்தில் இருந்த கண்ணகி கோயில்கள் துரோபதை கோயிலாகவும் வேறு அம்மன் கோயிலாகவும் மாற்றப் படினும், பழைய வழக்கப்படி, அம்மன் கோயில்களில் பூசாரிகள் இரண்டு கைகளிலும் சிலம்புகளைப் பிடித்துக் கொண்டு அவற்றை ஒலிக்கச் செய்தபடியே பாடல்கள் பாடிக் கதைப் பாட்டரங்கம் நடத்துகின்றனர். இப்படி ஒரு கலை தமிழகத்தில் வளர்ந்திருப்பது கண்ணகியின் சிலம்பு தொடர்பினாலே யாகும். ஊழ்வினை உருத்து வந்து ஊட்டியதின் பயனோ இது!

# 7. கனா

சிலப்பதிகாரத்தில் 'கனாத்திறம் உரைத்த காதை' என்னும் பெயரில் ஒரு காதை உள்ளது. கானாக்களைப் பற்றிப் பல விதமான கருத்துகள் பலரால் அறிவிக்கப் பட்டுள்ளன. கனா நூல் எனப் பெயரிட்டு, அந்தாதித் தொடையாய் முப்பது கட்டளைக் கலித்துறைச் செய்யுட்கள் அமைத்துப் பொன்னவன் என்பவர் ஒரு நூல் எழுதியுள்ளார். கனா பற்றிக் கூறப்படும் சில கருத்துகள் வருமாறு:-

மக்கள் உறங்கும்போது உடல் படுக்கையில் கிடக்க, உயிர் பிரிந்து சென்று பல செயல்களில் ஈடுபட்டு மீண்டும் வந்து உடம்பில் கூடுகிறது.

மக்களின் எண்ணங்கள் அல்லது விருப்பங்களே உறங்கும்போது கனவாக மலர்கின்றன.

ஐம்புலன்களாலும் இதற்குமுன் பட்டறிந்த நிகழ்ச்சி களே - நுகர்வுகளே கனவில் பல மாறுதல் களுடன் தோன்றுகின்றன.

நல்ல கனாவாயின் பின் நல்லது நடக்கும்; கெட்ட தாயின் பின் கெட்டதே நிகழும்.

**வைகறையில் கண்ட கனா அவ்வாறே பலிக்கும்**

சீவகசிந்தாமணி 219

கனவுக்கும் பின் நனவில் (பகலில்) நடக்கும் நிகழ்ச்சி கட்கும் தொடர்பே இல்லை.

பின்னால் பகலில் நடக்கப்போவதை முன்னமேயே உறக்கத்தில் அறிவிக்கும் ஒருவகைக் குறிப்பே கனவு என்பது.

கனவுகள் மக்களின் விருப்பு - வெறுப்புகளைக் குறிக்கின்றன என்பது பிளேட்டோ போன்றோரின் கருத்து.

உறங்கும்போது சில உள் உறுப்புகள் வேலை செய்து தூண்டுவதால் கனவுகள் ஏற்படுகின்றன — என்பது அரிஸ்ட்டாட்டில் (Aristatle) போன்றோரின் கருத்தாகும்.

இவ்வாறு பல்வேறு கருத்துகள் பலரால் சொல்லப் படினும், ஒவ்வொருவரும் தாம் கண்ட கனாக்களின் துணை கொண்டு-அதாவது தமது சொந்தப் பட்டறிவைக் கொண்டு எந்தக் கருத்து சரியானது என்று உய்த்துணரலாம்.

இந்த அடிப்படையுடன் சிலப்பதிகாரத்திற்கு வருவோம். முப்பெருங் கனவு நிகழ்ச்சிகள் மூன்று காதைகளில் கூறப்பட்டுள்ளன. அவற்றை முறையே ஒவ்வொன்றாய்க் காண்பாம்:

## 1. கனாத் திறம் உரைத்த காதை

புகாரில் இருந்தபோது கனா கண்ட கண்ணகி அதனைத் தேவந்தி என்னும் தன் பார்ப்பனத் தோழியிடம் பின் வருமாறு கூறுகிறாள்:

யான் கண்ட கனவால் என் நெஞ்சம் ஏதோ ஐயுறுகின்றது. என் கணவர் என் கை பற்றி எங்கோ அழைத்துச் சென்றார். இறுதியில் ஒரு பெரிய நகரத்தை அடைந்தோம். அங்கே யாரோ எங்கள் மேல் பொய்க் குற்றம் சுமத்திப் பொய்யுரை யொன்றை இடுதேளிட்டுக் கூறினர். அதனால் என் கணவர் கோவலனுக்குத் தீங்கு நேரிட்டது என்று பலர் சொல்லக் கேட்டேன். அது பொறாமல், அவ்வூர் அரசன் முன் சென்று வழக்குரைத்தேன். அதனால்,

அவ்வரசர்க்கும் அவ்வூருக்கும் தீங்கு நேர்ந்தது. அந்தத் தீங்கு மிகவும் கொடிய தாதலின் மேலும் அதைப் பற்றி நின்னிடம் கூற மனம் வரவில்லை. பின்னர் யானும் என் கணவரும் உயர்ந்த நிலை அடைந்தோம். அதைக் கூறின் நகைப்பிற்கு இடமாகும் - என உரைத்தாள். இது கண்ணகி கண்ட கனா ஆகும். இனிப் பாடல் பகுதி வருமாறு:-

**"கடுக்கும் என்னெஞ்சம் கனவினால் என்கை**
**பிடித்தனன் போயோர் பெரும்பதியுள் பட்டோம்**
**பட்ட பதியில் படாததொரு வார்த்தை**
**இட்டனர் ஊரார் இடுதேளிட்டு என்றன்மேல்**
**கோவலற் குற்றதோர் தீங்கென் றதுகேட்டுக்**
**காவலன் முன்னேயான் கட்டுரைத்தேன் காவலனோடு**
**ஊர்க்குற்ற தீங்குமொன் றுண்டால் உரையாடேன்**
**தீக்குற்றம் போலும் செறிதொடீஇ தீக்குற்றம்**
**உற்றேனோ டுற்ற உறுவனோடு யானுற்ற**
**நற்றிறம் கேட்கின் நகையாகும் .."** (45-54)

என்பது பாடல் பகுதி.

இடுதேள் இடுதல் என்றால், ஒருவர் மேல் தேளை இடுவது போன்ற கொடுமையைச் சுமத்தலாகும். சிலர், மெழுகினாலாவது வேறு ஏதாவ தொன்றினாலாவது செய்யப்பட்ட பொய்த்தேளை ஒருவர்மேல் போட்டு அஞ்சச்செய்வதும் உண்டு. இங்கே இடுதேள் என்பது, தேள் போல் தீமை தரும் கொடும் பழி என்பதைக் குறிக்கும்.

உலகியலில், ஒருவர் கெட்ட கனா காணின் அதை வெளியிட நாணுவதோ - அஞ்சுவதோ உண்டு. பிறர்க்குக் கேடு நேர்ந்ததாகக் கண்ட கனவைக் கூறுவதற்குப் பெரும்பாலும் மக்கள் ஒருப்படார்.

இங்கே கனாவினால் உய்த்துணரப் படுவன: இடுதேள் இடுதல்போல் கோவலன் மீது திருட்டுக் குற்றம் சுமத்துவ

தாகும். தீக் கனா என்பது, பாண்டியனும் அவன் தேவியும் ஊரும் அழிய இருப்பதாகும். இதைச் சொல்லக் கண்ணகிக்கு உள்ளம் ஒருப்பட வில்லை.

"நற்றிறம் கேட்கின் நகையாகும்" என்பதில் உள்ள கருத்து, இறுதியில் கோவலனும் கண்ணகியும் தேவர்களால் வரவேற்கப்பெற்று மேலுலகம் செல்லுதலாகும். இது கிடைத்தற்கு அரிய பேறு ஆதலின், தங்கட்கு இது கிடைத்ததாகக் கூறின், ஓகோ, இவர்கட்கு இவ்வளவு பேரவாவா என்று சிலர் எள்ளி நகையாடக் கூடும் - என்று கண்ணகி எண்ணினாள் - என்பது கருத்து.

கோவலன் கொல்லப்பட்ட பின்பு, மா துயர் எய்திய கண்ணகி, முன்பு தான் கண்ட இந்தக் கனவை நினைத்துப் பார்த்தாளாம் - அதாவது, அந்தக் கனவின்படி நடந்துள்ளதாக எண்ணினாளாம். பாடல்:

**"தீவேந்தன் தனைக்கண்டு இத்திறம் கேட்பல்**
**யான் என்றாள்**
**என்றாள் எழுந்தாள் இடர் உற்ற தீக் கனா**
**நின்றாள் நினைந்தாள் நெடுங் கயற்கண் நீர் சோர**
**நின்றாள் நினைந்தாள்"** (ஊர்சூழ் வரி: 71-74)

என்பது பாடல் பகுதி.

இந்தக் கனாவைக் கண்ணகி உண்மையில் கண்டிருப்பாளா? கண்ணகி இக்கனா கண்டதாகக் காப்பியச் சுவைக்காக - ஒரு முன்னோட்டமாக ஆசிரியர் இளங்கோ அடிகள் எழுதியுள்ள கற்பனையா இது? இரண்டாவது உண்மையா யிருக்கலாம். சொல்லி வைத்தாற்போல் இவ்வளவையும் தவறாமல் முன்கூட்டிக் கனவில் காண இயலுமா என்ன?

அடுத்து இரண்டாவது கனா நிகழ்ச்சியைக் காண்பாம்:

## 2. அடைக்கலக் காதை

கோவலன் மதுரை நகரைச் சுற்றிப் பார்த்து விட்டுப் புறஞ்சேரியில் தங்கியிருந்தபோது, ஆங்கு வந்து பழகிய மாடலன் என்னும் மறையவனிடம் கோவலன் தான் கண்ட கனவைக் கூறுகிறான்.

யான், ஒரு குறுமகனால், வேந்தன் நகரில், கண்ணகி நடுங்கு துயர் எய்த, கூறை (உடை) கொள்ளப்பட்டுப் பன்றிமேல் ஊர்ந்ததாகவும், மற்றும் யான் கண்ணகியோடு துறவியர் பெற்றி எய்திய தாகவும், காமன் செயலற்று ஏங்க மணிமேகலையை மாதவி அறவோன்முன் அளித்ததாகவும் நனவுபோலக் கனவு கண்டேன் - என்று கோவலன் விவரித்தான்.

இந்தக் கனவும், மதுரையில் கோவலனுக்கு நடக்க இருக்கும் கொடுமையையும், அதன்பின் அவனும் கண்ணகியும் மேலுலகம் செல்ல இருப்பதையும், மகள் மணிமேகலை துறவு கொள்ளப் போவதையும் முன்கூட்டி அறிவிப்பதாகும். பாடல்:

**"கோவலன் கூறுமோர் குறுமகன் தன்னால்**
**காவல் வேந்தன் கடிநகர் தன்னில்**
**நாறைங் கூந்தல் நடுங்குதுயர் எய்தக்**
**கூறைகோட் பட்டுக் கோட்டுமா ஊரவும்**
**அணித்தகு புரிகுழல் ஆயிழை தன்னொடும்**
**பிணிப்பு அறுத்தோர்தம் பெற்றி எய்தவும்**
**மாமலர் வாளி வறுநிலத்து எறிந்து**
**காமக் கடவுள் கையற்று ஏங்க**
**அணிதிகழ் போதி அறவோன் தன்முன்**
**மணிமே கலையை மாதவி அளிப்பவும்**
**நனவு போல நள்ளிருள் யாமத்துக்**
**கனவு கண்டேன் கடிது ஈங்குறும்...."** (95-106)

குறு மகன் = பொற் கொல்லன். கடி நகர் = மதுரை. நாறு ஐங் கூந்தல் = கூந்தலை உடைய கண்ணகி. கோட்டு மா = பன்றி. ஆயிழையோடு பிணிப்பு அறுத்தோர் தம் பெற்றி எய்துதல் = பற்றற்ற துறவியர் அடையும் மேலுலகத்தைக் கண்ணகியோடு அடைதல். காமக் கடவுள் கையற்று ஏங்கல் = மணிமேகலையை வைத்துக் காம வேட்டையாட முடியாததால் மன்மதன் செயல் அறுதல். போதி அறவோன் = புத்தன்.

உலகியலில் முன்பு நடந்ததாகக் கூறப்படும் ஒரு செய்தி இங்கே நினைவு செய்யப்பட் டுள்ளது. அதாவது: மாபெருங்குற்றம் செய்தவனை, மொட்டை அடித்து முகத்தில் கரும்புள்ளியும் செம்புள்ளியும் குத்திப் போதுமான உடையின்றிக் கழுதைமேல் ஏற்றி ஊர் சுற்றிவரச் செய்வது பண்டைய பழக்கமாம். அது இங்கே குறிப்பிடப்பட் டுள்ளது. கழுதைக்குப் பதிலாக ஈண்டு பன்றி குறிப்பிடப்பட் டுள்ளது. இந்த நிகழ்ச்சி, கோவலன் கொடுமைக்கு உள்ளாகப் போகிறான் என்பதைக் குறிக்கும். இதனால் கண்ணகி துயர் எய்தப் போகிறாள். மாதவி தன் மகள் மணிமேகலையைத் துறவு கொள்ளச் செய்யப் போகிறாள்.

இவ்வாறு கனவைச் சொல்லிவந்த கோவலன் இறுதியில் 'கடிது ஈங்கு உறும்' என்று கூறியுள்ளான். அதாவது, இது மதுரையிலே விரைவில் நடைபெறுமாம். கனவு காணின் அதன்படி நடைபெறும் என்ற நம்பிக்கையினை அடிப்படை யாகக் கொண்டது இது. கோவலன் ஓரளவாவது இதனோடு தொடர்புடைய கனவு ஏதாவது கண்டிருக்கலாம். அல்லது, இஃதும், காப்பிய முன்னோட்டச் சுவைக்காக அடிகளால் செய்யப் பெற்ற கற்பனையாகவும் இருக்கலாம்.

## 3. வழக்குரை காதை

பாண்டியன் மனைவியாகிய கோப்பெருந்தேவி, கோவலன் கொலையுண்ட முதல்நாள் இரவு தான் கண்ட தீய கனவை முதலில் தோழியிடம் கூறுகிறாள்: தோழீ! மன்னனின் செங்கோலும் வெண்குடையும் நிலத்தில் வீழ்ந்தன. ஆராய்ச்சி மணி அடிக்கப்பட்டது. எட்டு திசைகளும் அதிர்ந்தன. கதிரவனை இருள் விழுங்கிற்று. இரவிலே வான வில் தோன்றியது. பகலில் விண்மீன்கள் விழுந்தன. இவ்வாறு கனாக் கண்டேன். இக்கனவை அரசர்க்கு அறிவிப்பேன் - என்றாள். பாடல்;

**"ஆங்குக் ........................................**
**குடையொடு கோல்வீழ, நின்று நடுங்கும்**
**கடைமணி இன்குரல் காண்பென் காண்எல்லா!**
**திசையிரு நான்கும் அதிர்ந்திடும் அன்றிக்**
**கதிரை இருள்விழுங்கக் காண்பென்காண் எல்லா!**
**விடுங்கொடி வில்இர, வெம்பகல் வீழும்**
**கடுங்கதிர் மீன்இவை காண்பென்காண் எல்லா!"** (1-7)

இது பாடல் பகுதி. எல்லா=தோழீ. கடை மணி=குறை சொல்லி முறையிட வருவோர் அடிக்க வாயிலில் கட்டித் தொங்கும் ஆராய்ச்சி மணி. இர=இரவு. வில் கொடி விடும்=இந்திர வில் எனப்படும் வானவில் வண்ணக் கொடி போல் தோன்றல். 'காண்பென் காண் எல்லா' எனத் திரும்பத் திரும்ப மும்முறை சொல்லியிருப்பது ஒருவகை இலக்கிய - காப்பியச் சுவையாகும்.

தோழியிடம் இவ்வாறு தெரிவித்த தன் கனவைத் தேவி பாண்டியனிடமும் கூறினாள்:

**"செங் கோலும் வெண் குடையும்**
**செறி நிலத்து மறிந்து வீழ்தரும்,**
**நங் கோன்றன் கொற்ற வாயில்**
**மணி நடுங்க நடுங்கும் உள்ளம்,**

**இரவு வில்லிடும், பகல்மீன் விழும்,**
**இரு நான்கு திசையும் அதிர்ந்திடும்**
**வருவ தோர் துன்பம் உண்டு**
**மன்னவர்க் கியாம் உரைத்து மென** '' (9-12)

என்பது பாடல் பகுதி. ஒரே செய்தி பாடலில் இருமுறை கூறப்பட்டுள்ளது. ஒன்று தோழி அறிவதற்காக - மற்றொன்று, மன்னன் முதல் மற்றவரும் அறிவதற்காகும்.

செங்கோலும் வெண்குடையும் படுக்கையாய் விழவில்லையாம் - தலைகீழாய் மறிந்து வீழ்ந்தனவாம். வாயிலில் ஆராய்ச்சி மணி கட்டப்பட்டிருக்கிறதே தவிர, மன்னனின் ஆட்சியில் ஒரு குறையும் இல்லாததால் இது வரையும் யாராலும் அடிக்கப்படா திருந்த மணியின் ஒலி, கனவில் அடிக்கப்பட்டுக் கேட்கப்பட்டதாம். உள்ளம் நடுங்கும்படி மணி நடுங்கிற்றாம். மணி அசைந்து ஒலி எழுப்பியது என்னாமல், நடுங்கியதாகக் கூறப்பட்டிருப்பது பொருள் பொதிந்த தாகும்.

'இரவு வில் இடும்' என்பதை இக்காலத்தார்க்கு விளக்குவது எளிது. பகலில்தான் வானவில் தோன்றுவது வழக்கம். அன்று கனவில் இரவில் வானவில் தெரிந்ததாம். முற்பகலில் கீழ்த்திசையில் ஞாயிறு காய்ந்து கொண் டிருக்கும் போது அதற்கு நேர் எதிரில் மேற்கே மழை பெய்யின், ஞாயிற்றின் ஒளி மழையை ஊடுருவி அப்பால் செல்ல ஒளிச் சிதறல் ஏற்பட்டு அதற்கும் மேற்கே பல வண்ண வடிவிலே வில் போன்று வளைந்த ஓர் அமைப்பு தெரியும். பிற்பகலில் மேற்குத் திசையில் ஞாயிறு தெரியும்போது அதற்கு நேர் எதிரில் கிழக்கே மழை பெய்யின், ஞாயிற்றின் ஒளி மழையை ஊடுருவி அப்பால் செல்ல ஒளிச் சிதறல் ஏற்பட்டு அதற்கும் கிழக்கே பல வண்ண வடிவிலே வில் போன்று வளைந்த ஓர் அமைப்பு தெரியும். இதையே வானவில் என்கின்றனர்.

எனவே, மேற்சொன்னபடி பகலிலேதான் வானவில் தோன்றும் – என்பது புலனாகிறது. இரவில் மழை பெய்யினும் ஞாயிற்று ஒளி இன்மையால் வானவில் தோன்ற வாய்ப்பு இல்லை. எனவேதான், இரவில் வானவில் தோன்றியதாகக் கண்ட கனவு ஏதோ துன்பம் தரும் அறிகுறியாகும் என்று கருதப்பட்டிருக்கிறது.

மன்னன் இறப்பதற்கு முன் காணும் கெட்ட கனவு, பின்னர் மன்னன் இறப்பதற்கு அறிகுறியாக இருந்தமை வேறு இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளது. இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் முறையில் அவற்றுள் சில காண்பாம். முதலில் கம்ப இராமாயணம் வருக:

திரிசடை தான் கண்ட கெட்ட கனாக்களைச் சீதையிடம் கூறுகிறாள். அன்னாய் கேள்! இராவணனின் தலையில் எண்ணெய் பிசுபிசுக்க, கழுதை-பேய் பூட்டிய தேரின்மேல் சிவப்பு உடை உடுத்து எமன் இருக்கும் தென்புலம் அடைந்தான். இராவணனின் மக்களும் சுற்றமும் மற்றவர் களும் தென்புலம் சென்றனர் – திரும்பவில்லை. இராவணன் வளர்த்த வேள்வித் தீ அணைந்து விட்டது. அவ்விடத்தில் கறையான் கூட்டம் மிக்கிருந்தது. தூண்டா மணி விளக்கு தூண்டாமலேயே திடீரெனப் பேரொளி வீசிற்று. இராவணனது அரண்மனை இடியால் பிளவுபட்டது.

இன்னும் கேள்! ஆண்யானைகளே யன்றிப் பெண் யானைகளும் மதம் பிடித்தன. கொட்டப்படாமலேயே முரசு தானாக முழங்கிற்று. முகில் கூட்டம் இல்லாமலேயே வானம் வெடிபட இடித்தது. விண்மீன்கள் உதிர்ந்தன. பகல் இல்லாத இரவில் ஞாயிறு ஒளி வீசுவது போல் தோன்றியது. ஆடவர் சூடிய கற்பக மாலைகள் புலால் நாற்றம் வீசின. தோரணங்கள் அறுந்தன. யானைகளின் மருப்புகள் ஒடிந்தன. (பூரண) நிறை குடத்து நீர் கள்ளைப்

போல் பொங்கிற்று. திங்களைப் பிளந்து கொண்டு விண் மீன்கள் எழுந்தன. வானம் குருதி மழை பொழிந்தது. தண்டம், ஆழி (சக்கரம்), வாள், வில் என்னும் படைக் கலங்கள் ஒன்றோடொன்று போர் புரிந்து கொண்டன.

மங்கையரின் தாலிகள், கையில் வாங்குபவர் இல்லாம லேயே தாமாக அறுந்து மார்பகத்தில் விழுந்தன. மயன் மகளாகிய (இராவணனின் மனைவி) மண்டோதரியின் கூந்தல் சரிந்தது. இரண்டு சீயங்கள் (சிங்கங்கள்) மலையி லிருந்து புலிக் கூட்டத்தை உடன் அழைத்துக்கொண்டு வந்து யானைகள் வாழும் காட்டிற்குள் புகுந்து யானைகளை வளைத்து நெருக்கிக் கொன்றன. வனத்தில் இருந்த மயில் ஒன்று வனம் விட்டு அப்பால் சென்றது. (இரண்டு சீயங்கள் = இராம இலக்குமணர்கள், மலைப் புலிகள் = வானரப் படை கள். யானைகள் = அரக்கர்கள், யானைக்காடு = இலங்கை, மயில் = சீதை)

மேலும் கேள்! ஆயிரம் விளக்குகளின் ஒளியையுடைய ஒரு திரு விளக்கினைத் திருமகள் (இலக்குமி) ஏந்திக் கொண்டு இராவணன் வீட்டிலிருந்து வீடணன் வீட்டிற்குச் சென்றாள். (இராவணன் அழிய, வீடணன் ஆட்சிக்கு வருவான் என்பது குறிப்பு).

இது கம்ப இராமாயணக் கதை. சுந்தர காண்டம் - காட்சிப் படலத்தில் (40 - 53) இதைக் காணலாம். சீவக சிந்தாமணி நூலிலும் இத்தகைய குறிப்பு உள்ளது.

சீவகனைக் கருக்கொண்டிருந்த தாய் தான் கண்ட தீய கனவினைத் தன் கணவன் சச்சந்த மன்னனிடம் கூற, சச்சந்தன் தான் சாகக் கூடும் என்பதை முன்கூட்டி அறிந்து, மயில் பொறியில் அமர்ந்து பறந்து அரண்மனையை விட்டுத் தப்பித்துச் செல்ல முன்கூட்டியே மனைவியைப் பழக்கினா

னாம். கனவின்படியே, சச்சந்த மன்னன், அமைச்சன் கட்டியங்காரனால் கொல்லப்பட்டான்.

சேக்சுபியர் (Shakespeare) எழுதியுள்ள 'ஜூலியஸ் சீசர்'. (Julius caesar) என்னும் நாடகத்திலும் இன்னதோர் செய்தி இடம் பெற்றுள்ளது. மன்னன் சீசர், ஒரு நாள் இரவு, சூழ்நிலை தக்கதா யின்மையின், தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். அவன் மனைவி 'கால்பர்னியா' (Calpurnia) என்னும் அரசி அப்போது ஒரு தீய கனவு கண்டு அலண்டு போய்க் கத்தினாள். அரசியின் கனவை அறிந்த சீசர் இந்தக் கனவைப் பற்றிய நிலைமையை துறவியர் வாயிலாக அறியலான போது, அவன் வெளியில் போகாமல் இருப்பது நல்லது என்ற அறிவுரை கிடைத்தது. அரசி, மன்னன் அரண்மனையை விட்டு மறுநாள் வெளியே போகவே கூடாது என மிகவும் கண்டிப்பாய் வற்புறுத்தி மண்டியிட்டு வேண்டிக் கொண்டாள். மன்னர்க்கு உடல் நலம் இன்மையின் அவர் பேரவைக்கு வர முடியவில்லை என்று அறிவிக்குமாறு ஆண்டனி (Antony) என்பவனிடம் சொல்லி அனுப்பினாள். இவ்வளவு செய்தும், மிகவும் துணிச்சலுடைய சீசர் பேரவைக்குச் சென்றான் - கொல்லவும் பட்டான். இது ஒரு முன்னோட்டக் கனவாகும்.

அமெரிக்கக் குடியரசின் தலைவராயிருந்த 'ஆபிரகாம் லிங்கன்' (Abraham Lincoln) தாம் கொலை செய்யப்படப் போவதை முன் கூட்டி ஒரு கனவின் வாயிலாக அறிந்திருந் தாராம்; அதைத் தம் நாள் குறிப்புச் சுவடியில் (டைரியில்) குறித்தும் வைத்திருந்தாராம். இஃதும் ஒரு முன்னோட்டம்.

சோழன் குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைக் கோவூர் கிழார் பாடியதாக உள்ள புறநானூற்றுப் பாடல் ஒன்றில் இத்தகைய கனவுக் கருத்து ஒன்று சுவையாகச் சொல்லப் பட்டுள்ளது. சோழனின் பகைவர்கள், கெட்ட

கனவு கண்டு, பின்னால் தமக்கு வரவிருக்கும் துன்பங்களை எண்ணி, இறந்துவிடுவோமோ என்ற அச்சத்தால், தம் குழந்தைகட்கு முன்கூட்டியே முத்தம் கொடுத்துக் கொஞ்சி ஆவல் தீர்கிறார்களாம். தாம் கண்ட தீக் கனவைத் தம் மனைவியர் அஞ்சுவர் எனக் கருதி அவர்கட்குத் தெரிவிக்காமல் மறைக்கிறார்களாம். அத்தகைய கனவு நிகழ்ச்சிகள் பின்வருமாறு:-

எட்டுத் திசைகளிலும் எரி கொள்ளிகள் வீழ்ந்தன. வற்றல் மரங்கள் பற்றி எரிகின்றன. ஞாயிறு பலவிடங்களிலும் தோன்றுகிறது. தீய பறவைகள் தீக்குரல் எழுப்புகின்றன. பற்கள் யாரும் கொட்டாமலேயே தரையில் கொட்டுகின்றன. தலை மயிரில் எண்ணெய் வார்க்கப்படுகிறது. பன்றி மேல் ஊர்கின்றனர். ஆடை களையப்படுகின்றனர். படைக் கலங்கள் வைக்கப்பட்டுள்ள கட்டிலுடன் கவிழ்ந்து கீழே விழுகின்றன - இவை கனவில் கண்டவை. இச்செய்தி, "காலனும் காலம் பார்க்கும்" என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடலில் (41) இடம் பெற்றுள்ளது.

இதுகாறும் கூறப்பட்டுள்ள செய்திகளால், தீய கனாக்கள் காணின் தீமை நிகழும் என்ற நம்பிக்கை ஒன்று மக்களிடையே இருந்தது. (இருக்கின்றது) என்பது புலனாகும். சாவை முன் கூட்டி அறிவிக்கும் தீய கனவு நிகழ்ச்சிகள் எத்தகையன என்பதும் புலனாகும்.

சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ள மூன்று கனவுகளும் பின்னால் இறப்பு நேரும் என்னும் குறிப்பு உணர்த்துவனவாய் உள்ளன. இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் முறையில் இங்கே எடுத்துக் காட்டப்பட்டுள்ள செய்திகளும் சிலப்பதிகாரச் செய்திகளோடு ஒத்துள்ளமையை அறியலாம். (பாடல்களை அவ்வந்நூலில் கண்டு கொள்ளலாம். ஈண்டு தரின் பக்கங்கள் பெருகிவிடும்),

# 8. நிமித்தம்

நிமித்தம் என்பது சகுனம். பின்னால் நிகழ உள்ள நன்மையையோ அல்லது தீமையையோ முன் கூட்டிக் குறிப்பால் அறிவிக்கும் குறி (அறிகுறி) நிமித்தம் எனப்படும். இந்த அறிகுறிகளை அறிந்து விளக்குபவனுக்கு நிமித்திகன் (சகுனி) என்ற பெயர் வழங்கப்படுகிறது. அரசவையில் நிமித்திகன் ஒருவன் இருப்பதுண்டு. நிமித்தம் என்னும் பொருளில் 'சொகினம்' என்னும் சொல் புறப்பொருள் வெண்பா மாலையில் உள்ளது.

**''ஆடமைத் தோளி விரிச்சியும் சொகினமும்**
**வேறு படஅஞ்சி விதிப்புற் றன்று''** (264 - **கொளு)**

என்பது பாடல். 310 ஆம் கொளுவின் பழைய உரையிலும் இது ஆளப்பட்டுள்ளது.

''உயர்ந்த மூங்கிலன்ன தோளினாள், சொகின விகற்பத்தாலே வடித்த வேலினையுடைய தலைவன் வாரா தொழிய அதற்கு அழிந்தது'' — என்பது உரைப்பகுதி.

தொல்காப்பியம், பதிற்றுப் பத்து, புறப்பொருள் வெண்பாமாலை முதலிய நூல்களில் 'உன்னம்' என்னும் பெயரும் இதற்கு வழங்கப்பட்டுள்ளது. பாடல்கள்:

**''உடல்வேந் தடுக்கிய உன்ன நிலையும்''**
(தொல்—பொருள் - புறம் — 5:8)

**''தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்**
**புன்கால் உன்னம் சாய ...''**
(பதிற்றுப்பத்து — 40:16, 17)

உன்னமரம் தழைத்தால் நல்ல சகுனமாம்; சாய்ந்தால் தீய சகுனமாம். சாய்ந்தாலும் மன்னன் அஞ்சவில்லையாம்.

**"பொன்னின் அன்ன பூவின் சிறியிலைப்**
**புன்கால் உன்னத்துப் பகைவன் எங்கோ"**

(பதிற்றுப்பத்து—61:5, 6)

பொன் போன்ற பூவையும் சிறிய இலையையும் உடைய உன்னமரம் தீய சகுனம் காட்டினும், பகைபோல் அதற்கு எதிராகப் போர்மேல் மன்னன் செல்வானாம்.

**"துன்னரும் சிறப்பின் தொடுகழல் மன்னனை**
**உன்னம் சேர்த்தி உறுபுகழ் மலிந்தன்று"** (கொளு)

**"துன்னருந் தானைத் தொடுகழலான் துப்பெதிர்ந்து**
**முன்னர் வணங்கார் முரண்முருங்க - மன்னரும்**
**ஈடெலாம் தாங்கி இகலவிந்தார் நீயும்நின்**
**கோடெலாம் உன்னம் குழை"**

(பு. பொ. வெ. மாலை — உன்ன நிலை-243)

உன்ன மரமே! பகைவர் அழிந்தனர்; நம் மன்னன் வென்று விட்டான்; எனவே, நீ இன்னும் நன்றாகத் தழைக் கலாம் — என்று கூறுவதாக உள்ளது இப்பாடல். உன்ன மரம் சகுனத்திற்கு உரிய பொருளா யிருப்பதால் சகுனம் என்னும் பொருளில் உன்னம் வழங்கப்படுவ துண்டு.

காரி (கரிக் குருவி) கத்தினும் தீய நிமித்தமாம். பகைவரின் இடத்தில் காரி கத்தியதாம். அதனால் தம் மன்னனுக்கு வெற்றி கிடைக்கும் என்னும் பொருளில் புறப் பொருள் வெண்பா மாலையில் ஒரு பாடல் உள்ளது.

**"வெட்சி மலைய விரவார் மணிநிரைக்**
**கட்சியுள் காரி கலுழ்ம்"** (3:3, 4)

என்பது பாடல் பகுதி. சீவகசிந்தாமணி முதலிய நூல் களிலும் இக்கருத்து உள்ளது. பழைய பறவைகள் போகப்

புதிய பறவைகள் வரினும் தீய நிமித்தமாகும் என்னும் ஒரு செய்தி புறநானூற்றில் புகலப்பட்டுள்ளது.

தற்செயலாகக் காதில் விழும் சொற்களில் மங்கலம் உள்ளமை - இல்லாமையைக் கொண்டும் நன்மை தீமைகள் கணிக்கப்படுவதுண்டாம். இதற்கு விரிச்சி, வாய்ப்புள் என்னும் பெயர்கள் உள்ளன. பாக்கத்தில் (சிற்றூர்ப்பக்கம்) சென்று வாய்ச் சொல் கேட்பதற்குப் 'பாக்கத்து விரிச்சி' என்னும் பெயர் தொல் - பொருள் - புறத்திணையியலில் (58) கூறப்பட்டுள்ளது. விரிச்சி, வாய்ப்புள் என்னும் பெயர்கள் புறப்பொருள் வெண்பா மாலையில் கூறப் பட்டுள்ளன.

மற்றும் பூனை, நரி போன்றவை சில குறுக்கே போகக் கூடாதாம். "நரி வலம்போனால் என்ன-இடம் போனால் என்ன - மேலே விழுந்து பிடுங்காமல் இருந்தால் போதும்' என்னும் முது மொழியும் ஈண்டு எண்ணத் தக்கது. மற்றும் ஒற்றைப் பார்ப்பான், கைம்பெண் போன்ற சிலர் எதிரே வரினும் தீய நிமித்தமாகும் என நம்புபவர்கள் உளர் - இது சரியன்று.

இவற்றைப் பற்றியெல்லாம் நன்கு அறிந்த இளங்கோ அடிகள் தம் நூலிலும் நிமித்தங்கள் சிலவற்றை அறிமுகப் படுத்தியுள்ளார். அவை வருமாறு:-

### இந்திர விழவு ஊர் எடுத்த காதை

புகாரில் இந்திர விழா நடைபெற்ற நாளில் கண்ணகி யின் கண் இடப் புறம் - அதாவது இடக்கண் துடித்ததாம்; மாதவியின் கண் வலப்புறம் - அதாவது வலக்கண் துடித்த தாம். பெண்கட்கு இடப்புறத்து உறுப்புகள் துடித்தால் நன்மையும் வலப்பக்கத்து உறுப்புகள் துடித்தால் தீமையும் உண்டாகும் என்பது ஒருவகை நிமித்தம். இதற்கு நேர்

மாறாக, ஆண்கட்கு வலப்பக்கம் துடித்தால் நன்மையும் இடப்பக்கம் துடித்தால் தீமையும் உண்டாகுமாம்.

கண்ணகிக்கு இடப்புறம் துடித்ததால் வரவிருக்கும் நன்மையாவது, இன்னும் அண்மையில் கோவலன் மாதவியை விட்டுப் பிரிந்து கண்ணகியிடம் வரப்போகிறான் என்பதாம். மாதவிக்கு வலம் துடித்ததால் அறியப்படுவது, அண்மையில் கோவலன் மாதவியை விட்டுப் பிரியப் போகிறான் என்பது. பாடல்:

**"கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்**
**உண்ணிறை கரந்தகத்து ஒளித்துநீர் உகுத்தன**
**எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன**
**விண்ணவர் கோமான் விழவுநாள் அகத்தென்"**

(237-40)

என்பது பாடல் பகுதி. கண்ணகி கண் இடத்திலும் மாதவி கண் வலத்தினும் துடித்தன என நிரல் நிறையாகப் பொருள் கொள்ளல் வேண்டும். எண்ணுமுறை = நிரல்நிறை. Respectively - என்பதற்குத் தமிழ் எண்ணுமுறை.

### நாடு காண் காதை

சனி என்னும் கரிய கோள் (கிரகம்) புகைந்து பகை வீடுகளில் சென்று மாறுபட்டிருப்பினும், தோன்றக் கூடாத தூமகேது என்னும் ஒருவகை விண்மீன் தோன்றினும், கிழக்கே தோன்ற வேண்டிய வெள்ளி தெற்கே தோன்றினும் நாட்டிற்குக் கேடாம். இப்பேர்ப்பட்ட நிலையிலும் காவிரியில் தவறாது தண்ணீர் வரும். (இந்தக் காலத்தில்).

**"கலியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்**
**விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்"** (102, 103)

இவ்வாறு நிகழ்வதும் தீய நிமித்தமாம்.

## வேட்டுவ வரி

பகைவரின் ஆனிரையைக் கவர்ந்துவர மறவன் ஒருவன் வெட்சி மலர்சூடிப் புறப்பட்டான். கொற்றவையின் நோக்கும் அவனுக்குக் கிடைத்தது. இதனால், பகைவர் ஊரில் காரி (கரிக் குருவி) குரல் எழுப்பிப் பகைவர்க்கு நேர விருக்கும் கேட்டினை அறிவித்ததாம். பாடல்:

**"உட்குடைச் சீறூர் ஒருமகன் ஆனிரை**
**கொள்ள உற்ற காலை**
**வெட்சி மலர் புனைய வெள்வாள்**
**உழத்தியும் வேண்டும் போலும்**
**வெட்சி மலர் புனைய வெள்வாள்**
**உழத்தியும் வேண்டின் வேற்றூர்க்**
**கட்சியுள் காரி கடிய குரலிசைத்துக்**
**காட்டும் போலும்"** (8) (புவு)

காரி (கரிக்குருவி) போன்ற கூவக் கூடாத பறவைகள் கூவுவதும் தீய நிமித்தமாம்.

## கொலைக் களக் காதை

வெளியே செல்லுங்கால் மாடு முட்ட வரினும் அது தீய நிமித்தமாம். கோவலன், கண்ணகியிடமிருந்து ஒரு சிலம்பைப் பெற்றுக் கொண்டு, கடைத்தெருவில் போய் விற்பதற்காக மாதிரி வீட்டிலிருந்து புறப்பட்டு வெளியில் செல்லலானான். அப்போது ஒரு காளைமாடு அவனை முட்ட முயன்றது. எப்படியோ தப்பித்துக் கொண்டான். இவ்வாறு மாடு மறித்து முட்ட வந்தது தீய சகுனம் என்பதை அவன் அறியவில்லை. அதை அறியும் குலத்தினன் அல்லன் அவன். எனவே, வீட்டிற்குத் திரும்பி வராமல் தொடர்ந்து கடைத்தெருவிற்குச் சென்று, கொலைக் குற்றம் சாட்டப்பட்டுக் கொல்லப்பட்டான். பாடல்:

**"பல்லான் கோவலர் இல்லம் நீங்கி**
**வல்லா நடையின் மறுகில் செல்வோன்**
**இமில்ஏறு எதிர்ந்தது இழுக்கென அறியான்**
**தன்குலம் அறியும் தகுதியன் றாதலின் ."** (98-101)

என்பது பாடல் பகுதி. கவலையோடு தளர்ந்த நடையுடன் தெருவில் சென்றான் என்பது, 'வல்லா நடையின் மறுகில் செல்வோன்' என்னும் தொடரின் உருக்கமான கருத்தாகும்.

உலகியலில் சிலர், ஒரு வேலையின் நிமித்தம் வெளியில் புறப்பட்டுச் செல்லுங்கால், எதிரில் தீய குறிகள் தென்படின் வீட்டிற்குத் திரும்பி வந்துவிடுவதுண்டு. ஆனால் கோவலனது தலையெழுத்து வேறுவிதமா யிருந்தது. என் செய்வது!

திருடர்கள் திருடச் செல்லும்போது நிமித்தம் பார்ப்பார் களாம். பெறுதற்கரிய பெரும் பொருள் எளிதில் கைக்குக் கிடைக்கும்போல் தோன்றினும், புறப்படும்போது நிமித்தம் தீயதா யிருப்பின் திருடச் செல்ல மாட்டார்கள் என்னும் செய்தி கொலைக் களக் காதையில் கூறப்பட்டுள்ளது.

**"நிமித்தம் வாய்த்திடின் அல்லது யாவதும்**
**புகற்கிலர் அரும்பொருள் வந்துகைப் புகினும்"**(178-179)

என்பது பாடல் பகுதி. திருடர்களும் சகுனம் பார்ப்பார்களா என வியக்கத் தோன்றலாம். மற்றவரினும் திருடர்களே கட்டாயம் சகுனம் பார்க்க வேண்டும். ஏனெனில், திருடர் கட்கு அந்தக் காலத்தில் சாவு ஒறுப்பு (மரண தண்டனை) கொடுக்கப்பட்டதால், தாங்கள் அகப்பட்டுக் கொள்ளாமல் வெற்றியுடன் திரும்பி வரவேண்டும் என்பதற்காக அவர்கள் கட்டாயம் சகுனம் பார்ப்பார்களாம்.

## ஆய்ச்சியர் குரவை

ஆயர்பாடியில் பல தீய நிமித்தங்கள் நடைபெற்றதாக இடைக்குல மடந்தை மாதரி தன் மகள் ஐயையோடு கலந்து உரையாடுகிறாள். அந்தத் தீய நிமித்தங்களாவன:

குடத்தில் உள்ள பால் புரை குத்தியும் தயிராகத் தோய வில்லை. எருதின் கண்களிலிருந்து நீர் சொரிந்தது. காய்ச்சினால் வெண்ணெய் உருக வில்லை. ஆட்டுக் குட்டிகள் துள்ளி ஓடி யாடி விளையாடவில்லை. ஆனிரைகள் நடுங்கி அழுவதுபோல் அரற்றின. அவற்றின் கழுத்து மணிகள் அறுந்து கீழே விழுந்தன. பாடல்: உரைப்பாட்டு மடை:

**1. குடப்பால் உறையா; குவியிமில் ஏற்றின்**
**மடக்கண் நீர்சோரும்; வருவதொன் றுண்டு.**

**2. உறிநறு வெண்ணெய் உருகா உருகும்**
**மறிதெறித் தாடா வருவதொன் றுண்டு.**

# 9. புராணக் கதைகள்

இக்காலத்து அறிவியலார் நம்ப முடியாத புராணக் கதைகள் பல பண்டைய இலக்கியங்கள் பலவற்றில் இடம் பெற்றுள்ளன. இந்த வரிசையில் சிலப்பதிகாரத்திற்கும் பங்கு உண்டு. சில புராணக் கதைகளை இதிலிருந்து காணலாம்:

**அவுணரும் முசுகுந்தனும் (கடலாடு காதை)**

அவுணர்கள் முசுகுந்த மன்னனுக்குத் தொல்லை தந்தனர். ஒரு பூதம் தொல்லையினின்றும் அவனைக் காத்ததாம்:

> **''கடுவிசை அவுணர் கணங்கொண்டு ஈண்டிக்**
> **கொடுவரி ஊக்கத்துக் கோநகர் காத்த**
> **தொடுகழல் மன்னற்குத் தொளைந்தன ராகி**
> **நெஞ்சிருள் கூர நிகர்த்து மேலிட்ட**
> **வஞ்சம் பெயர்த்த மா பெரும் பூதம்**
> **திருந்துவேல் அண்ணற்குத் தேவன் ஏவ**
> **இருந்து பலியுண்ணும் இடனும்...''** (7-13)

என்பது பாடல் பகுதி. சுருக்கமாகக் கூறப்பட்டுள்ள இப்பகுதியில் ஒரு பெரிய கதை மறைந்துள்ளது. அதாவது: அமிழ்தத்தைக் கலுழன் கவர்ந்து சென்று விட்டான். இந்திரன் புகார் நகரைத் தான் காப்பதாக ஒப்புக் கொண்ட முசுகுந்த மன்னனிடம் ஒப்படைத்து அவனுக்குத் துணையாக ஒரு பூதத்தை அமர்த்தி விட்டுப் போனான். அவுணர்கள் மன்னனோடு போரிட்டுத் தோற்றனர். பின்னர், அவுணர்கள் இருள் உண்டாகச் செய்யும் ஓர் கணை தொடுத்து எல்லா

இடங்களையும் இருள் மயமாக்கினர். பூதம் தம் ஆற்றலால் இருளைப் போக்கி முசுகுந்தனுக்குத் துணை புரிந்தது. பின்னர் வந்த இந்திரன் அந்தப் பூதத்தை முசுகுந்தனுக்கு மெய்க்காவலாக இருக்கப் பணித்தான். அதன்படி அது புகாரில் இருப்பதாயிற்று.

இந்தக் கதையை, சிலப்பதிகாரத்தின் பழைய உரை ஆசிரியராகிய அடியார்க்கு நல்லார் எடுத்துக் கூறி இதற்குச் சான்றாக மேற்கோள் பாடல் ஒன்றும் தம் உரையில் தந்துள்ளார். அது வருக:

**"முன்னாள் இந்திரன்...**
**காவல் அழித்துச் சேவல் கொண் டெழுந்த**
**வேட்கை அமுதம் மீட்க எழுவோன்**
**இந்நகர் காப்போர் யாரென நினைதலும்,**
**நேரியன் எழுந்து நீவரு காறும்**
**தார்கெழு மார்ப தாங்கல்என் கடனென,**
**உவந்தனன் கேட்டுப் புகழ்ந்த இப்பூதம்**
**நின்வழி யாகென நிறீஇப் பெயர்வுழிக்**
**கடுவிசை அவுணர் கணம் கொண்டு ஈண்டிப்**
**பொருது போர் தொலைந்தன ராகிப் பெரிதழிந்து**
**ஆழ்ந்த நெஞ்சின் சூழ்ந்தனர் நினைத்து**
**வஞ்ச மற்றிது வஞ்சத் தல்லது**
**வேறல் அரிதெனத் தேறினர் தேறி**
**வளைத்துத் தொடுத்த வல்வா யம்பின்**
**அயின் முகங் கான்ற ஆரிருள் வெயிலோன்**
**இருகணும் புதையப் பாய்தலின் ஒருகணும்**
**நெஞ்சங் காணா நிற்ப நின்ற**
**வஞ்சம் பெயர்த்த மாபெரும் பூதம்**

என்பது 'முகவரி' தெரியாத அந்தப் பாடலாகும். சேவல் = கலுழன். நேரியன் = மன்னன் முசுகுந்தன். இப்பாடலில் ஈற்றில் உள்ள "வஞ்சம் பெயர்த்த மாபெரும் பூதம்"

என்னும் அடி, சிலப்பதிகாரத்திலும் (11 ஆம் அடி) அப்படியே இருப்பது எண்ணத் தக்கது.

மற்றொரு கதை வருக: இந்திரன் ஏவ உருப்பசி நடம் ஆடினாள். இந்திரன் மகனும் அப்போது ஒருவரை ஒருவர் நோக்கிக் காதல் குறிப்பு கொண்டதால், ஆடல் பாடல் எல்லாம் கெட்டு விட, உருப்பசியை அகத்திய முனிவர் கெடுமொழி (சாபம்) இட்டு மண்ணுலகில் பிறக்குமாறு செய்தாராம்.

**"நாரதன் வீணை நயந்தெரி பாடலும்**
**தோரிய மடந்தை வாரம் பாடலும்**
**ஆயிரம் கண்ணோன் செவியகம் நிறைய**
**நாடகம் உருப்பசி நல்கா ளாகி**
**மங்கலம் இழப்ப வீணை மண்மிசைத்**
**தங்குக இவளெனச் சாபம் பெற்ற..."** (18-23)

என்பது பாடல் பகுதி. இதில் சுட்டப்பட்டுள்ள முழுக் கதையாவது:

இந்திரனது அவைக்கு அகத்திய முனிவர் வந்தார். பாடலுடன் ஆடும்படி இந்திரன் உருப்பசியைப் பணித்தான். ஆடும் போது உருப்பசியும் இந்திரன் மகன் சயந்தனும் காதல் உணர்வுடன் நோக்கிக் கொண்டனர். அதனால் ஆடலும் பாடலும் முறை தவறின. அதனால், நாரதன் பகை நரம்பு பட வீணை மீட்டினான். இவற்றைப் பொறுக்க முடியாத அகத்தியர் சினம் கொண்டு, நாரதன் வீணை மண்ணிலே மணையாய்க் கிடக்கவும், உருப்பசி மண்ணுலகில் பிறக்கவும், சயந்தன் பூவுலகில் மூங்கிலாய்த் தோன்றவும் வைவு (சாபம்) இட்டனர். பின்னர் அவர்கள் வேண்டிக் கொண்டதன் பேரில் வைவு நீக்கல் (சாப விமோசனம்) செய்தார் - என்பது கதை.

*அடியார்க்கு நல்லார் இந்தக் கதையைக் குறிப்பிட்டு இதற்கு மேற்கோள் சான்றாக ஒரு பாடலையும் தந்துள்ளார். அப்பாடல் வருக:-*

"வயந்த மாமர்லை நயந்த முனிவரன்
எய்திய அவையின் இமையோர் வணங்க,
இருந்த இந்திரன் திருந்திழை உருப்பசி
ஆடல் நிகழ்க பாடலோடு ஈங்கென,
ஒவியச் சேனன் மேவினன் எழுந்து
கோலமும் கோப்பும் நூலொடு புணர்ந்த
இசையும் நடமும் இசையத் திருத்திக்
கரந்து வரல் எழினியொடு புகுந்தவன் பாடலில்
பொருமுக எழினியில் புறந்திகழ் தோற்றம்
யாவரும் விழையும் பாவனை யாகலின்
நயந்த காதல் சயந்தன் முகத்தின்
நோக்கெதிர் நோக்கிய பூக் கமழ் கோதை
நாடிய வேட்கையின் ஆடல் நெகிழப்
பாடல் முதலிய பல்வகைக் கருவிகள்
எல்லாம் நெகிழ்தலின் ஒல்லா முனிவரன்
ஒருதலை இன்றி இருவர் நெஞ்சினும்
காமக் குறிப்பு கண்டனன் வெகுண்டு
சுந்தர மணிமுடி இந்திரன் மகனை
மாணா விறலோய் வேணு ஆகென
இட்ட சாபம் பட்ட சயந்தன்
சாப விடையருள் தவத்தாய் நீயென
மேவினன் பணிந்து மேதக உரைப்ப
ஒடிய சாபத்து உருப்பசி தலைக் கட்டும்
காலைக் கழையும் நீயே யாகி
மலையமால் வரையின் வந்து கண்ணுற்றுத்
தலையரங் கேறிச் சார்தி என்றவன்
கலக நாரதன் கைக்கொள் வீணை
அரங்கில் அம்பண மாகெனச் சபித்துத்

**தந்திரி உவப்பத் தந்திரி நாரில்**
**பண்ணிய வீணை மண்ணிசைப் பாடி**
**ஈண்டு வருகெனப் பூண்ட சாபம்**
**இட்டஅக் குறுமுனி ஆங்கே**
**விட்டனன் என்ப வேந்தவை அகத்தென்**

என்பது பாடல். நேரிசை ஆசிரியப் பாவாகிய இந்தப் பாடலும், சிலப்பதிகாரக் காதைகள்போல் 'என்' என்னும் ஈற்றில் முடிந்திருப்பது எண்ணத் தக்கது.

மற்றும், சிலம்பில் அறிமுகப் படுத்தப் பட்டுள்ள புராணக் கதைகள் சிலவற்றின் குறிப்புகள் வருமாறு:-

தேவர் வேண்டியதால் சிவன் திரிபுரம் எரித்தது. கண்ணன் கம்சனையும் வாணாசுரனையும் வென்றது. முருகன் சூரனை வென்றது. கொற்றவை அவுணரை வென்றது. காமன் பேடிக் கூத்து ஆடியது. மாலதி மாற்றாள் மகவை இழத்தல் - பேய் பறித்தல் பாசண்டைச் சாத்தன் குழவியாய் வந்து தேவந்தியை மணத்தல். பாண்டியன் கடல் சுவற வேல்விட்டது. இந்திரன் முடிமேல் வளை எறிந்தது. பாண்டியன் முகிலைத் தடுத்துத் தளையிட்டது. நளன் மனைவியைப் பிரிந்து காடு ஏகியது. இராமன் மனைவியைப் பிரிந்து காடு போந்தது. இந்திரன் மலைச் சிறகை அரிந்தது.

கண்ணன் குருந்து ஒடித்தது; கன்று குணிலாக் கனி உகுத்தது; நப்பின்னையை மணந்தது; கடல் கடைந்தது; மண் உண்டது; வெண்ணெய் உண்டது: அடியால் உலகு அளந்தது; பாண்டவர்க்காகத் தூது போனது.

முருகன் கிரவுஞ்ச மலை பிளந்தது; கடல் பிளந்து சூரனைக் கொன்றது - முதலிய புராணக் கதைகள் பல கூறப்பட்டுள்ளன.

# 10. அழுகை (அவலச்) சுவை

தொல்காப்பியர் மெய்ப்பாட் டியலில் எட்டுவகை மெய்ப்பாடுகள் கூறியுள்ளார். அவற்றுள் அழுகையும் ஒன்று. அவலம் எனினும் அழுகை எனினும் ஒன்றே. அழுகை என்னும் மெய்ப்பாட்டுச் சுவை, இளிவு (இழிவு), இழவு, அசைவு, வறுமை என்னும் நான்கின் காரணமாகப் பிறக்கும் என்று கூறியுள்ளார்:

> **"இளிவே இழவே அசைவே வறுமை யென**
> **விளிவில் கொள்கை அழுகை நான்கே"** (5)

என்பது நூற்பா. இழவு அதாவது இழப்பு காரணமாக வரும் அழுகைச் சுவையை மட்டும் இங்கே எடுத்துக் கொள்ளலாம். சுவை என்பது இன்பத்தைக் குறிப்பது மட்டுமன்று; பல காரணங்களால் ஏற்படும் பலவகை உணர்ச்சிகளும் சுவை என்பதில் அடங்கும். சிலப்பதிகாரத்தில் அழுகைச் சுவைக்குக் குறைவே இல்லை.

நல வாழ்வு இழப்பு, இன்றியமையாப் பொருள் இழப்பு, உயிர் இழப்பு முதலிய பேரிழப்புகள் இழவில் அடங்கும். கண்ணகி முதலில் வாழ்விழந்தாள். இறுதியில் கணவனை இழந்தாள். பின்னர்க் கண்ணகியும் உயிர் நீத்தாள். இது தொடர்பாகப் பாண்டியன் நெடுஞ்செழியனும் கோப்பெருந்தேவியும் மாண்டனர். கோவலன் தந்தையும் கண்ணகியின் தந்தையும் இல்லற வாழ்வை இழந்து துறவு பூண்டனர். இருவரின் தாயர்களும் மக்கள் இழந்த துயர் பொறாது செத்தனர். கண்ணகிக்கு வழித்துணையாய் வந்த கவுந்தியடிகள் உண்ணா நோன்பு கொண்டும் அடைக்கலம் அளித்த மாதரி தீக்குளித்தும்

மடிந்தனர். மாதவியும் மணிமேகலையும் சிற்றின்பம் இழந்து துறவு பூண்டனர். மதுரை எரி யுண்ணப்பட்டது பேரிழப்பாகும்.

இந்த இழப்புகளுக்குள் கண்ணகி பொய்க்குற்றம் சாட்டப்பட்டுக் கோவலன் இறந்த இழப்பு சிலம்பில் பேரிடம் பெற்றுள்ளது. ஆயர் பாடியில் தீய நிமித்தங்கள் தோன்றின. கோவலன் சாவு கண்ணகிக்கு உணர்த்தப் பட்டது. சாவினும், கள்வன் என்று பொய்க்குற்றம் சாட்டப்பட்டது அவளை மிகவும் வருத்தியது.

துன்பமாலை என்னும் காதையில், கண்ணகியின் துயரம் ஓவியப் படுத்தப்பட் டுள்ளது. அவளது அழுகை (அவல) உரைகள் உள்ளத்தை உருக்கும்.

காதலனைக் காணேன் - ஊதுலையின் உள்ளம் உருகும். அன்பனைக் காண்கிலேன் - வஞ்சமோ - மயங்கும் என் நெஞ்சு. மன்னன் தவறிழைப்ப, யான் அவலம் கொண்டு அழிவதோ? காய் கதிர்ச் செல்வனே! என் கணவன் கள்வனோ? என்றெல்லாம் கூறிப் புலம்பி அரற்றினாள்.

கணவனது உயிரற்ற உடலை நோக்கிக் கதறுகிறாள். நறுமேனி பொடியாடிக் கிடப்பதோ? மணிமார்பம் தரை மூழ்கிக் கிடப்பதோ என்று கூறிக் கணவன் உடலைக் கட்டித் தழுவிக் கொண்டாள். இந்த ஊரில் பெண்டிரும் உண்டுகொல் - சான்றோரும் உண்டுகொல் - தெய்வமும் உண்டுகொல் என்று வினவி விம்முகிறாள்.

பாண்டியனிடம் வழக்குரைக்கச் சென்று, வாயில் காவலனை நோக்கி, ''வாயிலோயே - அறிவறை போகிய பொறியறு, நெஞ்சத்து இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே!'' என வாயில் காவலனோடு சேர்த்துப் பாண்டியனைச் சாடுகிறாள். பாண்டியன் முன்சென்று,

'தேரா மன்னா செப்புவ துடையேன்' என்று கூறிப் பாண்டியனைத் திடுக்கிடச் செய்கிறாள். நற்றிறம் படராக் கொற்கை வேந்தே என்று கூறிக் கொதிக்கிறாள். நீர்வார் கண்ணை யார் நீ என்று பாண்டியன் வினவ, தன் நாடு, ஊர், குடி, பெயர் முதலியவற்றின் பெருமையைப் பேசுகிறாள்.

புகாரில் இருந்த ஏழு பத்தினிகளின் வரலாறுகளைப் புகழ்ந்து கூறி, அப்பதியில் பிறந்த யானும் ஒரு பத்தினியே யாமாகில், விடேன், அரசோடு மதுரை யையும் ஒழிப்பேன் என்று வஞ்சினம் கூறுகிறாள். தன் இடக் கொங்கையைத் திருகி எடுத்து நகர்மீது எறிந்து எரியச் செய்யலானாள்.

இறுதியில் கீழ்த்திசை வாயில் கணவனோடு வந்தேன்; மேல்திசை வாயிலில் கணவனின்றிச் செல்கிறேன் என்று கூறிச் சேரநாட்டுப் பகுதியை அடைந்து வாழ்வை முடித்துக் கொண்டு துறக்கம் புகுகிறாள்:

> **''கீழ்த் திசை வாயில் கணவனொடு புகுந்தேன்**
> **மேல் திசை வாயில் வறியேன் பெயர்கென**
> **இரவும் பகலும் மயங்கினள் கையற்று''** (23:182-184)

என்னும் பகுதி மிகவும் உருக்கமானது.

# 11. காப்பியத்தில் கலைகள்

கலைகள் அறுபத்து நான்கு என்பர். இது ஒரு வகை வரையறை. ஆனால், காலந்தோறும் புதுப் புதுக்கலைகள் பூக்கலாம். ஒவ்வொரு கலைக்கென்றும் தனித்தனி நூல்கள் உண்டு. தனி நூல்களிலே கூறப்பட்டுள்ள தன்றி, வேறு நூல்களில் இடையிடையே கலைகள் இடம் பெற்றிருப்பதும் உண்டு. இவ்வகையில், இயல் இசை நாடகப் பொருள் தொடர்நிலைச் செய்யுள் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில் சில கலைகள் பெரிய அளவில் இடம்பெற்றிருப்பதில் வியப்பில்லை. இந்நூலில், இயல் கலையினும் இசைக் கலைக்கும் கூத்துக் (நாடகக்) கலைக்கும் மிக்க இடம் உண்டு.

அரங்கேற்று காதையில், பல்வேறு ஆசிரியர்களின் இலக்கணம், அரங்கின் இயல்பு முதலியவை கூறப்பட்டு உள்ளன. இனி அவற்றைக் காண்பாம்:

### 1. மாதவியின் ஆடல் பயிற்சி

அகத்தியரின் சாபத்தால் இந்திரன் உலகத்திலிருந்து வந்த உருப்பசியோ என எண்ணும்படி மாதவி திகழ்ந்தாள்; கூத்து, பாட்டு, அழகு ஆகிய மூன்றிலும் குறையாதவள். ஐந்தாம் அகவையில் தண்டியம் பிடித்து ஏழாண்டு பயிற்சி பெற்றபின் பன்னிரண்டாம் வயதில் சோழ மன்னனின் அவையில் அரங்கேற்றம் செய்யப் பெற்றாள்.

### 2. ஆடலாசிரியன் இயல்பு

1. ஆடலாசிரியன், வசைக் கூத்து - புகழ்க் கூத்து, வேத்தியல் - பொதுவியல், தமிழ்க் கூத்து - ஆரியக் கூத்து

என மாறுபட்ட இரண்டிரண்டாக வரும் அகக்கூத்து இலக்கணமும் புற நாடகமும் அறிந்திருத்தல்.

2. பாட்டு உறுப்பு பதினான்குடன் ஆடலைப் பொருத்தல்.

3. அல்லியம் முதலிய பதினொரு கூத்து வகை அறிதல்.

4. அக நாடகங்கட்கு உரிய இருப்பத்தெட்டு உருக்களை அறிதல்.

5. புறநாடக உறுப்பாகிய தேவபாணி முதலியன அறிதல்.

6. கூத்து விகற்பங்கட்கு உரிய வாச்சியக் கூறுகளை அறிந்திருத்தல்.

7. பாடல், தாளம், தூக்கு ஆகியவற்றிற்கு ஏற்ப, அகக் கூத்தும் புறக்கூத்தும் நிகழ்த்து மிடத்து, ஒற்றைக் கையும் இரட்டைக் கையும் காட்டும் நுட்பம் அறிதல்.

8. அகக்கூத்தில், ஒற்றைக் கைத்தொழில் இரட்டையில் புகாமலும், இரட்டைக் கைத்தொழில் ஒற்றையில் புகாமலும் விலக்கல்.

9. புறக்கூத்தில் ஆடல் நிகழும்போது அவிநயம் நிகழாமலும் அவிநயம் நிகழுங்கால் ஆடல் நிகழாமலும் விலக்கல்.

10. குரவைக் கூத்துக்கு உரிய கால்களும் வரிக் கூத்துக்கு உரிய கால்களும் விரவாமல் காத்தல்- முதலியவை ஆடல் ஆசிரியனுக்கு இருக்கவேண்டிய இயல்புகளாம்.

### 3. இசையாசிரியன் இயல்பு

1. யாழிசையும் குழலிசையும் வண்ணக் கூறுபாடுகளும் தாளக் கூறுபாடுகளும் மிடற்றுப் பாடலும் தண்ணுமை நிலையும் பதினோராடல் கூத்துகளும் அறிந்திருத்தலோடு அவற்றில் வல்லமையும் பெற்றிருத்தல் வேண்டும்.

2. இயற்றிய உருக்களை இசைகொள்ளும்படியும் சுவை (இரசம்) கொள்ளும்படியும் புணர்த்துப் பாடவேண்டும்.

3. செந்துறை, வெண்டுறை ஆகிய இருவகைப் பாடலுக்கும் உரிய இயக்கம் நான்கும் அறிந்து, இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் ஆகியவற்றிற்கு ஏற்ப இசை கடைப்பிடித்து, இசை வேறுபாடுகளைக் குற்றமற அறிந்திருத்தல் வேண்டும்.

4. இயல் புலவன் (பாடல் எழுதிய ஆசிரியன்) நினைத்த கருத்து, ஆடல் ஆசிரியன் அறிவிக்கும் அவிநயம், இவற்றிற்கு ஏற்ற பாட்டு ஆகியவற்றை உணர்ந்து பாடல் வேண்டும் - முதலியன இசையாசிரியனுக்கு இருக்கவேண்டிய இயல்புகளாம்.

### 4. இயல் கவிஞன் இயல்பு

1. நான்கு எல்லைக்கு உட்பட்ட தமிழ்நாடு அறியும்படி முத்தமிழிலும் வல்லமை பெற்றிருத்தல் வேண்டும்.

2. வேத்தியல், பொதுவியல் என்னும் இருநாடக நூல் அறிவு பெற்றிருத்தல்.

3. பதினொரு பண் நீர்மை அறிந்து தாளம் பொருந்தப் பாடல் இயற்றுதல்.

4. வசையற்ற மொழிகளால் பாடல் இயற்றுதல் - முதலியன பாட்டு இயற்றுவோனுக்கு உரிய இயல்புகளாம்.

### 5. தண்ணுமைக்காரன் இயல்பு

1. எல்லா ஆடல்களும் பண்ணல் முதலிய பாடல் வகைகளும் அறிதல்.

2. 16991 ஆதி இசைகளை அறிந்திருத்தல்.

3. வடவெழுத்து நீங்கி வந்த எழுத்துக்களாலே இசைத்துச் சேர்க்கப்பட்ட வாக்கியக் கூறுகளும் மூவகைத் தமிழும் அறிதல்.

4. பண், தாளம், தூக்கு இவற்றின் விகற்பம் அறிதல்- இவற்றின் குற்ற நற்றங்களும் அறிதல்.

5. இயற் சொல் முதலிய நான்கு சொல்லாட்சிகளை அறிதல்.

6. உரு நெகிழாதபடி நிறுத்தல்.

7. நிற்குமானம் நிறுத்திக் கழியுமானம் கழிக்க வல்லவனாதல்.

8. யாழ், குழல், மிடறு ஆகியவற்றின் இசைக்கு இயைய வாசித்தல்.

9. மற்ற கருவிகளின் குறையை நிரப்புதல்-மிகையை அடக்குதல்.

10. கைத் தொழில் அழகு பெறச் செய்து காட்டல் - முதலியன தண்ணுமை (மத்தளம் - மிருதங்கம்) வாசிப் பவனுக்கு இருக்க வேண்டிய இயல்புகளாகும்.

## 6. குழல் ஆசிரியன் இயல்பு

1. சித்திரப் புணர்ப்பும் வஞ்சனைப் புணர்ப்பும் அறிதல்.

2. பாடலாசிரியனைப் போல் ஒத்த அறிவுடைமை.

3. ஊதும் துளைகளில் சுட்டு விரல் முதலாக விட்டுப் பிடிப்பது ஆரோகணம் - சிறு விரல் முதலாக விட்டுப் பிடிப்பது அவரோகணம் - இவற்றை அறிந்து ஒழுகல்.

4. 103 பண்ணீர்மையும் 14 கோவையும் அறிதல்.

5. முழவு, தண்ணுமை, யாழ், மிடறு (வாய்ப்பாட்டு)- இவற்றின் இசைக்கு ஏற்ப ஒத்திசைத்தல்.

6. முதல் நடை, வாரம், கூடை, திரள் என்னும் இயக்கம் நான்கனுள் முதல் நடை தாழ்ந்த நடையாதலாலும் திரள் முருக்கு நடை யாதலாலும் அவற்றை விட்டு, சொல்

ஒழுங்கும் இசை ஒழுங்கும் உடைய வாரப் பாடலை அளவறிந்து நிறுத்த வல்லவனாதல்.

7. எழுத்துகள் சிதையாமல், எழுத்தை எழுத்தாக இலக்கணப்படிக் குற்றமின்றி இசைத்துக் காட்டல்-முதலியன குழலாசிரியன் இயல்புகளாம்.

## 7. யாழ் ஆசிரியன் இயல்பு

1. பதினான்கு கோவை பொலிந்து பாடல் இயல்புக்கு ஒத்திருத்தல்.

2. ஏழு பாலையினையும் இணை நரம்பாகத் தொடுத்து நிறுத்தல்.

3. பன்னிரு முறை திரித்துப் பன்னிரு பாலை பிறப்பித்தல்.

4 பெண்டிர்க்கு உரிய தானமாகிய பதினாறு கோவையிலே பொருந்தக் கூட்டல்.

5. எல்லாப் பாலைகளையும் ஒழுங்குறப் பிறப்பித்தல்.

6. வலிவு - மெலிவு - சமன் எனப்படும் தான நிலை அறிதல்.

7. நரம்படைவு கெடாமல் பண் நீர்மை குன்றாமல் புணர்க்க வல்லவனாதல்.

8. புணர்ப்பிற்கு அமைந்த எழுத்துகளால் இசை செய்தல் - முதலியன யாழ் ஆசிரியன் இயல்புகளாம்.

## 8. அரங்கின் இயல்பு

**I நிலம்:**

1. நிலக் குற்றம் நீங்கிய இடத்தில் அரங்கு அமைத்தல்.

2. தெய்வத் தானம், பள்ளி, அந்தணர் இருக்கை, கூவம், குளம், கா ஆகியவற்றை அண்மையில் உடைத்தாதல்.

3. குழி - பள்ளம் படுகுழியின்மை - திண்ணியதாதல்.

4. மண் இனிய மணமும் சுவையும் உடையதாதல்.

5. எலும்பு, உமி, பரல், உவர்ப்பு, ஈளை, பொடி - இவைகள் இல்லாதிருத்தல்.

6. ஊர் நடுவே - தேரோடும் தெருவிலே இருத்தல் - முதலியன, அரங்கம் அமைக்க வேண்டிய இடத்திற்கு இருக்க வேண்டிய இயல்புகளாம்.

**II அரங்க மேடை:**

அரங்க மேடை பின் வருமாறு இருத்தல் வேண்டும். நல்லிலக்கண ஆடவனது பெரு விரலால் 24 கொண்ட அளவுக் கோலால் அளந்த ஏழு கோல் அகலம் - எட்டு கோல் நீளம் - ஒரு கோல் உயரம் உடையதாய் அரங்க மேடை இருத்தல் வேண்டும். போக வர இரண்டு வாயில்கள் இருத்தல் வேண்டும். அளவுக் கோல், பொதிய மலை போன்ற தெய்வ மலையிலிருந்து வெட்டி வந்த மூங்கிலா யிருக்க வேண்டும். கணுவுக்குக் கணு ஒரு சாண் இடைவெளி உள்ளதாயும் இருக்கவேண்டும். அத்தகைய கோலால் அளந்தமைக்க வேண்டும்.

**III அரங்க அமைப்பு:**

1. மக்கள் வழிபட நால்வகைக் குலப் பூதங்களின் ஓவியங்கள் தீட்டி வைத்திருத்தல்.

2. தூணின் நிழல் விழாவாறு விளக்குகள் அமைத்தல்.

3. இடத் தூணிலையிலே உருவு திரையாக ஒருமுக எழினி அமைத்தல்.

4. இரு வலத் தூணிலை யிடத்து உருவு திரையாக பொரு முக எழினி அமைத்தல்.

5. மேலே கூட்டுத் திரையாகக் கரந்துவரல் எழினி அமைத்தல்.

6. வேலைப்பாடு மிக்க ஓவியம் எழுதிய மேற்கட்டி அமைத்தல்.

7. திங்கள் - வியாழன் - செவ்வாய் ஆகிய நாட்களில் முறையே வெண்மை - பொன்மை - செம்மை நிற முத்து மாலைகள் சரியும் தூக்கும் தாமமுமாகத் தொங்கி அசைய விடுதல் - ஆகியவை அரங்கத்தில் செய்யப்பட்டிருக்க வேண்டிய அமைப்புகளாகும்.

## 9. தலைக்கோல் இயல்பு

1. பகையை வென்று கொண்டு வந்த குடைக் காம்பு தலைக்கோலாதல் வேண்டும்.

2. கோலின் கணுக்களில் ஒன்பான் மணிகளும், இடையிலே சாம்பூநதப் பொன் தகடும் பதித்து வைத்திருத்தல்.

3. மன்னனின் அரண்மனையில் தலைக்கோல் வைப்பதற்கென்று தனி இருப்பிடம் அமைத்தல்.

4. தலைக்கோலைச் சயந்தனாக எண்ணி மறைவழி வழிபடல்.

5. நல்ல நாளிலே, தெய்வ ஆற்று நீரைப் பொற் குடத்தில் கொணர்ந்து தலைக்கோலை நீராட்டல்.

6. மாலை அணிதல் முதலிய அணிகள் செய்தல்.

7. யானை வர, முரசு முழங்க, அரசனும் ஐம்பெருங் குழுவும் உடன் இயங்க, தேரும் யானையும் கொண்டு வந்து, தேரில் நிற்கும் பாடகன் கையில் தலைக்கோலைத் தந்து, தேரினை நகர்வலம் வரச் செய்தல்.

8. அரங்கம் அடைந்ததும் தலைக்கோலை எதிர் முகமாக வைக்க வேண்டும்.

9. பின்னரே நடம் ஆடல் தொடங்க வேண்டும். இவையெல்லாம் தலைக்கோல் தொடர்பான நிகழ்ச்சிகளாகும்.

## 10. ஆடும் இயல்பு

1. ஆடல் நிகழ்வதற்கு முன் அரசர், அமைச்சர் முதலியோர் அவரவர் இடத்தில் அமர வேண்டும்.

2. ஆடும் இடம் மூன்று கோல் - ஆட்டுவார்க்கு ஒரு கோல் - பாடுநர்க்கு ஒரு கோல் - அந்தரம் ஒரு கோல் - குயிலுவர் நிலையிடம் ஒரு கோல் - ஆக, ஒவ்வொன்றுக்கும் இந்த அளவு இடம் இருக்கவேண்டும்.

3. மாதவி வலக்காலை முதலில் வைத்து அரங்கம் ஏறினாள்; வலப்பக்கத் தூணிடத்தே பொருமுக எழினிப் பக்கம் சேர்ந்தாள்.

4. தோரிய மடந்தையர் இடத்தூண் அயலே ஒருமுக எழினிப்பக்கம் சேர்ந்தனர்.

5. இவர்கள் தீமை நீங்கி நன்மை உண்டாகுக எனத் தெய்வத்தை வேண்டிப் பாடல் வேண்டும் - ஓரொற்று வாரம், ஈரொற்று வாரம் ஆகிய இரண்டும் பாடலாம்.

6. பாடல் இறுதியில் எல்லா இசைக்கருவிகளும் இசைக்கப்படல் வேண்டும்.

7. குழல்வழி யாழும், யாழ்வழி மிடறும் (வாய்ப் பாட்டும்) தண்ணுமையும், தண்ணுமைவழி குட முழாவும் செயல்பட வேண்டும். இடக்கை என்னும் கருவி முழவோடு ஒன்ற வேண்டும்.

8. பருந்தும் நிழலும்போல் இசைக் கருவிகள் ஒன்றுக்கு ஒன்று ஒத்து இசைக்கவேண்டும். மற்றும் கருவிகளும் பாடலும் ஆடலும் ஒத்து இருக்கவேண்டும்.

9. இந்த அமைப்புகளுடன், மாதவி, பதினொரு பற்றாலே நாடக நூல் வழுவாது ஆடினாள்.

10. பாலைப் பண் அளவு கோடாதவாறு, உருவுக்கு ஏற்பச் சொற்படுத்தியும் இசைப்படுத்தியும் பாட்டும் கொட்டும் கூத்தும் ஒன்ற மாதவி ஆடல் செய்தாள்:

11. முதல் நடையிலும் வாரத்திலும் தேசிக் கூத்தெல்லாம் ஆடினாள்;

12. மேற்கொண்டு வைசாக நிலையும் ஆடி முடித்தாள்;

13. பொற்கொடி போன்ற தோற்றத்துடன் நூல் முறை வழுவாமல், அவிநயம் - பாவம் தோன்ற, விலக் குறுப்பு பதினாலின் வழுவாமல் ஆடினாள்;

14. இவ்வாறு வெற்றிபெற ஆடியபின் தலைக்கோல் பட்டம் பெற்றாள்; அரங்கேற்றம் செய்யப்பட்டவளானாள். ஆயிரத்தெட்டுக் கழஞ்சுப் பொன் பெறுமானமுள்ள பச்சைமாலையை மன்னனிட மிருந்து பரிசாகப் பெற்றாள்.

மேற்கூறியவற்றால், ஆடும் இயல்பு அறியப் பெற்றது.

இதுகாறும் மேலே அரங்கேற்று காதையில் அறிவிக்கப் பட்டுள்ள ஆடல் பாடல் கலைகள் தொடர்பான நிகழ்ச்சிகளுள் சிலவற்றைச் சுருக்கமாகப் பார்த்தோம். இவற்றை விரிப்பின் மிகவும் பெருகும். இனி மற்ற காதை களில் இடம்பெற்றுள்ள செய்திகள் சிலவற்றையும் மிகவும் சுருங்கக் காண்பாம்:

கானல் வரி: மாதவி யாழை ஆய்வு செய்தாள்; செவி யால் ஓர்ந்து பார்த்தாள்; இசை மீட்டிப் பார்த்தாள்; பின்னர்க் கோவலனிடம் தந்தாள். கோவலன் யாழ் வாசித்த பின் மாதவி வாசித்தாள்.

வேனில் காதை: கோவலன் பிரிந்த பின், மாதவி நிலா முற்றத்தில் வாயால் மேற்செம்பாலைப் பண் பாடினாள் - அது மயங்கிற்று. பின் சகோட யாழ் கொண்டு அக நிலை மருதம், புற நிலை மருதம், அருகியல் மருதம், பெருகியல் மருதம் ஆகிய பண்களைப் பாடினாள் - இசை மயங்கிற்று.

புறஞ்சேரி இறுத்த காதை: கோவலன் பாணர்களுடன் யாழ் வாசித்தான். கோவலன் செங்கோட்டு யாழ்

வாசித்தல் மிகவும் சிறப்பானது. அதாவது - நாற் பெரும் பண்ணிற்கும் முதலாகிய நால் வகை யாழினுள்ளும் செங்கோட்டு யாழிலே அறுவகை உறுப்பினுள் தந்திரிகரம், திவு என்னும் இரண்டையும் உறுதி பெறக் கட்டி வாசித்தான்.

ஊர் காண் காதை: 'எண்ணெண் கலையோர் இரு பெரு வீதி (323 ஆம் அடி) - அதாவது ($8 \times 8 = 64$) அறுபத்து நான்கு கலைகளில் வல்லவர்களின் தெருக்கள் மதுரையில் இருந்ததாம். ஒன்பான் மணிகள் தொடர்பான கலை வல்லுநர் இருந்தனராம்.

கட்டுரை காதை: வான நூல் கலையறிவு அன்றிருந்தது. மதுரையை எரி யுண்ணுதற்கு முன்பே, ஆடித் திங்கள் - தேய் பிறைப் பருவத்தில் காத்திகை மீனும் அட்டமி திதியும் கூடிய ஒரு வெள்ளிக் கிழமையில் மதுரை எரியுண்ணப்படும் - அரசும் கேடுறும் - என்பது அறிவிக்கப்பட் டிருந்ததாம்.

**"ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்து**
**அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று**
**வெள்ளி வாரத்து ஒள்ளெரி யுண்ண"** (23:133-135)

என்பது பாடல் பகுதி. இப்பகுதி வான நூல் கலை.

நீர்ப் படைக் காதை: கணிக் (சோதிடக்) கலை யறிவு:- சேரன் செங்குட்டுவன் ஒரு நாள் கங்கைக் கரையில் மாலை வேளையில் விண்ணில் பிறை தோன்றியதைக் கண்டான். உடனே கணியன் (சோதிடன்), வஞ்சி நீங்கி முப்பத்திரண்டு திங்கள் ஆகிறது எனக் கூறினானாம். வான நூல் கலை யோடு கணி நூல் கலை ஒற்றுமை உடையது.

நடுகல் காதை: சேரன் செங்குட்டுவன், போரில் வெற்றி வாகை சூடி வந்த மறவர்கட்கு, அகவல் மகளிரால் யாழிசை விருந்து அளித்தானாம். அதாவது:- வளைந்த தண்டினையும் இசை பொருந்தும் நரம்பினையும் பத்தரையும் உடைய

சீறியாழை எடுத்தணைத்து, குரல் குரலாக வரும் செம் பாலைப் பண்ணுடன், துத்தம் குரலாய படுமலைப் பாலை யும் அவ்வழியே செவ்வழிப் பாலை முதலியனவும் அழகிய இனிய குறிஞ்சிப் பண்ணும் ஆகியவற்றை அகவல் (பாடும்) மகளிர் பாடியது விருந்தாக இனித்ததாம். இது செவி விருந்து.

சேரன் செங்குட்டுவன் தன் மனைவி வேண்மாளுடன் அரண்மனை நிலா முற்றத்தில் வீற்றிருந்த பொழுது, ஆடலில் வல்ல கூத்தச் சாக்கையன் என்பவன், கொட்டிச் சேதம் (கொடு கொட்டி) என்னும் கூத்தை ஆடி மகிழ்வித் தானாம். இந்தக் கூத்து சிவனால் ஆடப் பட்டதாம். சிவன் ஆடியதில் உள்ள சிறப்பாவது: சிவன் தன் இடப் பாகத்தே உமாதேவியை வைத்துக் கொண்டே ஆடினானாம். அங்ஙனம் ஆடியபோது, உமாதேவியின் காலணியும், தோளணியும் நடுங்க (அசைய) வில்லை - மேகலை ஒலி செய்யவில்லை - முலைகள் அசையவில்லை - காதணி குலுங்க வில்லை - கூந்தல் அவிழவில்லை - இத்தகைய திறமையுடன் சிவன் ஆடிய கூத்தை இங்கே சாக்கையன் ஆடினான்.

இதுகாறும் கூறப்பட்டுள்ள கலைகளைப் பற்றி ஆழ்ந்து எண்ணுங்கால் தலை சுற்றுகிறது. எந்தக் கலையிலும் திறமையில்லாத நிலையை நினைக்குங்கால் அச்சமும் நாணமும் போட்டி போடுகின்றன. இந்தக் கலை நுட்பங் களைப் புரிந்து கொள்வதே அரிதாயிருக்கையில் இவற்றில் திறமைக்கு இடமேது? இத்தகு கலை வல்லுநர்கள் சிலர் இன்றும் உள்ளனர். அவர்கள் போதிய அளவு சிறப்படையச் செய்ய வேண்டும். வயிற்றுப் பிழைப்பை மட்டும் கவனிப்பவர்கட்கும் பொருளீட்டும் பொறிகட்கும் (எந்திர மனிதர்கட்கும்) கலையாவது கத்தரிக்காயாவது? மேலும் புதிய கலைகளை ஆக்கி வளர்ப்பதோடு, பழைய கலை களையும் அழிய விடாமல் போற்றிப் பேண வேண்டுவது மக்களின் கடமையாகும்.

# 12. சிலம்பில் போர்கள்

சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ள போர்கள் சில, பல தலைப்புகளில் அங்கும் இங்குமாகக் குறிப்பிடப் பட்டிருப்பினும், அவற்றையெல்லாம் தொகுத்து இந்தத் தலைப்பின் கீழ்க் காணலாம்.

முசுகுந்தச்சோழன் அரக்கரோடு போர்செய்தான். தொடித்தோள் செம்பியன் வானில் தூங்கு எயில் எறிந்தான்.

கரிகால் சோழன் வடக்கே படையெடுத்துச் சென்று வடவரை வென்று இமயத்தைச் செண்டால் அடித்துப் புலிக்கொடி நாட்டி வந்தான்.

பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானம் என்னும் இடத்தில் தன் இளம் பருவத்திலேயே பகைவர் எழுவரை வென்றான். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் இமயமும் கங்கையும் வென்றான்.

ஒரு சேரன் கடலிலே பகைவரின் கடம்பு எறிந்து வென்றான்.

பொற்கைப் பாண்டியன் இந்திரன் முடிமீது வளை என்னும் படைக்கலத்தை எறிந்து தகர்த்தான்.

இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் வடக்கே இமயம் வரை படையெடுத்துச் சென்று வென்று 'இமயவரம்பன்' என்னும் சிறப்புப்பெயர் பெற்று ஒரு மொழி வைத்து நாவலந் தீவு (இந்தியா) முழுமையும் ஆண்டான்.

சேரன் செங்குட்டுவன் கொங்கர் செங்களத்திலே பகைவரை வென்று களவேள்வி செய்தான்; தாயைக் கங்கையில் நீராட்டச் சென்று எதிர்த்த படைகளை வென்றான்; தன் மைத்துனச் சோழனாகிய கிள்ளியைப் பங்காளிச் சோழர்கள் ஒன்பதின்மர் நேரி வாயில் என்னும் இடத்தில் எதிர்த்தபோது அவர்களை வென்று மைத்துனனுக்கு அரசு நிலைக்கச் செய்தான்; மோகூரில் பழையன் என்பவனின் காவல் மரமாகிய வேம்பை வெட்டி வெற்றி வாகை சூடினான்; வியலூரை வென்றான்; இடும்பில் என்னும் இடத்தில் கொடும்போர் புரிந்து பகைவரை வென்றான்.

மற்றும் செங்குட்டுவன், கனக விசயருடன் உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்திரன், சிவேதன் என்னும் வடபுல வேந்தர்கள் சேர்ந்து கொண்டு பொர எழுந்தபோது, அவர்கள் அனைவரையும் வென்று வீழ்த்தினான்; கனக விசயரின் முடிமேல் கண்ணகிக்குச் சிலை செய்யும் கருங்கல்லை ஏற்றிச் சுமக்கச் செய்து கொண்டு வந்தான்.

இவ்வாறு மன்னர்கள் புரிந்த போர்களேயன்றி, சிவன், திருமால், முருகன், கொற்றவை ஆகியோர் புரிந்த போர்களும் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் குறிப்பிடப் பட்டுள்ளன.

ஒவ்வொரு போரையும் விரிப்பின் பெருகிப் பெருநூலாக விரியும்.

# 13. வாணிகம்

உள்ளூருக்குள்ளேயோ வெளியூருக்குள்ளேயோ - உள் நாட்டுடனேயோ - வெளிநாட்டுடனேயோ வாணிகம் இன்றி மக்களினம் வாழ முடியாது. எல்லாராலும் எல்லாப் பொருள்களும் உண்டாக்க வியலாது. ஒவ்வொருவரும் உண்டாக்கிய பொருள்களை ஒருவர்க் கொருவர் 'பண்ட மாற்று' செய்து கொண்டனர் பழங்காலத்தில்.

பின்னர்ப் பண்ட மாற்று படிப்படியாகப் பல உருவம் பெற்றுவர, இறுதியில் இன்றுள்ள வணிக முறை தோன்ற லாயிற்று. சங்க காலத்திலும் அதைச் சார்ந்த காலத்திலும், உள் நாட்டில் காலால் நடந்து எடுத்து வந்தும் வண்டிகளில் ஏற்றி வந்தும் பொருள்கள் பண்டமாற்று செய்யப்பட்ட தல்லாமல், பிறநாடுகளிலிருந்து நீர் வழியாகக் கப்பல்கள் வாயிலாகவும் பொருள்கள் கொண்டு வந்து தரப்பெற்று மாற்றாக வேறு பொருள்கள் கொண்டு செல்லப்பட்டன.

### மனையறம் படுத்த காதை

பண்டைக் காலத்தில் சோழர்களின் தலை நகராகிய புகார் ஒரு பெரிய வாணிகக் களமாக (சந்தையாக) விளங்கிற்று. புதிய புதிய நாடுகளி லிருந்து பல்வேறு பண்டங்கள் கால் வழியாகவும் கப்பல் வழியாகவும் கொண்டுவரப் பெற்றுப் புகாரில் ஒருங்கு குவிக்கப் பட்டிருந் தனவாம். இது சிலம்பு - மனையறம் படுத்த காதையில்,

**"அரும்பொருள் தரூஉம் விருந்தின் தேஎம்**
**ஒருங்கு தொக்கன்ன உடைப்பெரும் பண்டம்**
**கலத்தினும் காலினும் தருவன ரீட்ட ..."** (5-7)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. விருந்தின் தேஎம் = புதிய நாடுகள். ஒவ்வொரு நாட்டில் ஒவ்வொரு பொருள் மிகுதியாக உண்டாக்கப் படலாம். ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு பொருளுக்குப் பெயர் பெற்றதா யிருக்கலாம். இத்தகைய பன்னாட்டுப் பண்டங்களும் புகாரில் ஒருங்கு குவிந்திருப்பதால், பல நாடுகளும் ஓரிடத்தில் - ஒன்று சேர்ந்து காணப்படுவது போன்ற தோற்றம் புகாரில் காணப் பட்டதாம்.

## அந்தி மாலைச் சிறப்புச்செய் காதை

**நால் திசைப் பொருள்கள்:**

அந்தி மாலையில் நிலா முற்றத்தில் கோவலனும் மாதவியும், மற்ற மக்களும் இன்பப் பொழுது போக்கினர். அது காலை, மேற்குத் திசையிலிருந்து வந்த கண்டு சருக்கரையையும் கிழக்குத் திசையிலிருந்து வந்த கரிய அகிலையும் புகைக்காமல், வடதிசையிலிருந்து வந்த வட்டக் கல்லில் தென்திசையிலிருந்து வந்த சந்தனக் கட்டைகளை அரைத்துக் குழம்பாக்கிப் பூசிக்கொண்டனராம்:

**"குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு**
**குணதிசை மருங்கின் காரகில் துறந்து,**
**வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்துத்**
**தென்மலைப் பிறந்த சந்தனம் மறுக ...."** (35-38)

என்பது பாடல் பகுதி.

குளிர் காலத்தில் அயிரும் (கண்டு சருக்கரையும்) அகிலும் புகைக்கப் படும். இந்தப் புகை திட்டமான வெப்பத்தோடு மணமும் தரும். வேனில் (வெயில்) காலத்தில் வட்டக் கல்லில் சந்தனம் அரைத்துப் பூசிக்கொள்ளப் பெறும். வீடுகளில் சந்தனக் கட்டையைத் தேய்த்து அரைக்கும் வட்டக் கல் இருக்கும் என்பதை, எங்கள் வீட்டில் உள்ள

கல்லைக் கொண்டே யானறிவேன். குளித்து விட்டு, நெற்றியில் திருநீறு அணிந்து, நடுவில் சந்தனச் சாந்துப் பொட்டு இட்டு, அதன் நடுவில் சிறிய அளவில் குங்குமப் பொட்டு வைப்பது இளமைக்காலச் செயல். இப்போது வீடுகளில் வட்டக்கல் அருகியுள்ளது.

ஈண்டு நெடுநல் வாடை என்னும் நூலில் உள்ள

**"இருங்காழ் அகிலொடு வெள்ளயிர் புகைப்ப"** (56)
**"வடவர் தந்த வான்கேழ் வட்டம்**
**தென்புல மருங்கின் சாங்தொடு துறப்ப"** (51, 52)

என்னும் பகுதிகள் ஒப்பு நோக்கற்பாலன. சொல்லிச் செய்தாற்போல, இரு நூல்களிலும் இவை ஒத்துள்ளமை வியப்பு அளிக்கிறது.

மேலுள்ள பாடல் பகுதியால், மேற்கே யிருந்து அயிரும், கிழக்கேயிருந்து அகிலும், வடக்கிலிருந்து வட்டக் கல்லும், தெற்கிலிருந்து சந்தனக் கட்டைகளும் வரவும் விற்கவுமான வாணிகம் நடைபெற்றது என்பதை அறியலாம்.

புகார், கடற்கரையில்தானே இருந்தது. அதன் கிழக்கே கடலாயிற்றே - கிழக்கிலிருந்து அகில் எப்படி வரும்? - என்னும் ஐயம் எழலாம். உள்நாட்டில் அகில் விளையும் இடத்திலிருந்து கிழக்கேயுள்ள கடல் வழியாகக் கப்பல்கள் கொண்டு வரலாம் அல்லவா? மற்றும் கடல் தாண்டிக் கிழக்கேயுள்ள - வங்கக் கடலின் கீழ்பாலுள்ள நாடுகளி லிருந்தும் வரலாம் அன்றோ? மற்ற மூன்று திக்குகளி லிருந்து கடல் வழியாகக் கப்பல் வாயிலாக வரவேண்டும் என்ப தில்லை - தரை வழியாகவே வரலாம்.

## இந்திர விழவு ஊர் எடுத்த காதை

**மருவூர்ப் பாக்கம்:**

புகார் நகரில் மருவூர்ப் பாக்கம், பட்டினப் பாக்கம் என்னும் இரு பகுதிகள் இருந்தன. புதுச்சேரியிலும்,

பிரெஞ்சுக்காரரின் ஆட்சியின்போது, வெள்ளைக்காரர் பகுதி, தமிழர் பகுதி என இரண்டு உண்டு. கடற்கரை ஓரமாக வெள்ளையர் பகுதியும் அதன் மேற்கே தமிழர் பகுதியும் இருக்கும். இப்போதும் அதற்குரிய அடையாளங்கள் உண்டு. இரண்டு பகுதிகளையும் இடையே ஒரு வாய்க்கால் பிரிக்கின்றது. வெள்ளைக்காரர் போன பிறகும், அவர் இருந்த பகுதி தூய்மையாக இருக்கிறது. தமிழர் பகுதி அவ்வளவு தூய்மையுடன் இருப்பதாகச் சொல்ல முடியாது. "அண்மையிலிருந்து சேய்மைக்குச் செல்லுதல்", நிகழ்காலத்திலிருந்து கடந்த காலத்துக்குச் செல்லுதல், எளிமையிலிருந்து அருமைக்குச் செல்லுதல், "தெரிந்ததிலிருந்து தெரியாததற்குச் செல்லுதல்" என்னும் உளவியல் (Psychology) முறைப்படி புதுச்சேரியிலிருந்து புகாருக்குச் செல்லலாம்.

புதுச்சேரியின் கடற்கரையில் வெள்ளையர் பகுதி இருப்பது போலவே, புகாரில் பன்னாட்டார் தங்கியிருந்த மருவூர்ப்பாக்கம் என்னும் பகுதி இருந்தது. அதன் மேற்கே பட்டினப்பாக்கம் இருந்தது. பாக்கம் என்பது ஊரைக் குறிக்கும் சொற்களில் ஒன்று. பட்டினம் என்பது நகரைக் குறிக்கும். பட்டினப்பாக்கம் என்பது, பட்டணமாக உள்ள பெரிய ஊர் என்பதைக் குறிக்கும்.

இனி மருவூர்ப் பாக்கம் என்பது பற்றிக் காணலாம். மருவு + ஊர் = மருவூர். மருவுதல் = சேர்தல் — கலத்தல். "மருவுக மாசற்றார் கேண்மை" என்னும் திருக்குறளிலும் (800) இந்தச் சொல் இந்தப் பொருளில் ஆளப்பட்டிருப்பதை அறியலாம். வெளிநாட்டினர் பலரும் வந்து மருவிய - சேர்ந்த - கலந்த ஊர்ப் பகுதி மருவூர்ப் பாக்கம் எனப் பட்டது. திருமணம் நிகழ்ந்ததும் மணமகன் மணமகள் வீட்டிற்கோ - மணமகள் மணமகன் வீட்டிற்கோ முதல்

முதலாகச் சென்று கலந்து உண்ணுதற்கு 'மருவுண்ணுதல்' என்னும் வழக்கு தென்னார்க்காடு மாவட்டப் பகுதியில் உண்டு. இரு வீட்டாரையும் 'சம்பந்திகள்' எனக் கூறுவது உண்டு. 'சம்பந்திகள்' என்னும் வடமொழிப் பெயருக்குப் பதிலாக, 'மருவினோர் - மருவினவர்' என்னும் தமிழ்ச் சொல்லால் குறிப்பிடுவது சால அழகுடைத்து.

**மருவூர்ப்பாக்கத்தில் இருந்தவை**

காண்போரைப் போக விடாமல் தடுக்கும் அழகிய பயன் நிறைந்த யவனர் இருக்கை – பல நாடுகளிலிருந்து கப்பலில் பல்வேறு பண்டங்களை ஏற்றி வந்தவர்கள் தங்கும் இருப்பிடம் – வண்ணக் குழம்பும் சுண்ணமும் சாந்தமும் (சந்தனமும்) பூவும் புகைக்கும் பொருள்களும் நறுமணப் பொருள்களும் ஆகியவற்றைப் பலர் கூவித் திரிந்து விற்கும் தெருக்கள் – அளவிட முடியாத உடை வகைகள், மணி வகைகள், கூல (தானிய) வகைகள், உண்ணும் பொருள்கள் – மீன், இறைச்சி, உப்பு, வெற்றிலை, இன்னும் பல்வேறு பொருள்கள் விற்கப்படும் பகுதிகள், பல்வேறு தொழில் வல்லுநர்கள் இருக்கும் இடங்கள் முதலியன மருவூர்ப் பாக்கத்தில் இருந்தன. பாடல்:

> **''கயவாய் மருங்கில் காண்போர்த் தடுக்கும்**
> **பயன்அறவு அறியா யவனர் இருக்கையும்,**
> **கலம்தரு திருவின் புலம்பெயர் மாக்கள்**
> **கலந்திருந்து உறையும் இலங்குநீர் வரைப்பும்,**
> **வண்ணமும் சுண்ணமும் தண்ணருஞ் சாந்தமும்**
> **பூவும் புகையும் மேவிய விரையும்**
> **பகர்வனர் திரிதரு நகர வீதியும்,**
> **பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்**
> **கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்,**
> **தூசும் துகிலும் ஆரமும் அகிலும்**

**மாசறு முத்தும் மணியும் பொன்னும்**
**அருங்கல வெறுக்கையோடு அளந்து கடையறியா**
**வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்,**
**பால்வளை தெரிந்த பகுதிப் பண்டமொடு**
**கூலம் குவித்த கூல வீதியும்**
**காழியர் கூவியர் கள்நொடை யாட்டியர்**
**மீன்விலைப் பரதவர் வெள்ளுப்புப் பகருநர்**
**பாசவர் வாசவர் பல்நிண வினைஞரோடு**
**ஓசுநர் செறிந்த ஊன்மலி இருக்கையும்......''** (9-27)

(*காழியர் = பிட்டு வாணிகர். கூவியர் = அப்பம் சுடுவோர். பாசவர் = வெற்றிலை விற்பவர். ஓசுநர் = எண்ணெய் விற்பவர்.*) *என இன்னும் நீளமாக இளங்கோ பாடிச் சென்றுள்ளார். சீனம், அரபு நாடுகள், கிரேக்கம், எகிப்து, உரோம் முதலிய வெளி நாட்டார்கள் யவனர் என்றும் சோனகர் என்றும் குறிப்பிடப்படுவர்.*

*மேற் காட்டியுள்ள பாடல் பகுதியைக் கொண்டு, புகார் நகரில் நடைபெற்ற வணிக வளத்தைத் தெளியலாம்.*

**விற்பனைக் கொடி**

*பல்வேறு நாடுகளிலிருந்து கப்பல்களின் வாயிலாகப் பல்வேறு பொருள்களைக் கொண்டு வந்த வணிகர்கள், கடல் கரையில் உள்ள வெண் மணல் பகுதியில் பொருள் களைப் பரப்பி விற்பனை செய்கின்றனர். ஒவ்வொரு பொருளையும் அறிவிக்கும் - அறிவிப்புக் கொடிகளை அவ்வப் பொருள்கள் குவிக்கப்பட்டிருக்கும் பகுதியில் நட்டு விற்பனை செய்யப்படுகிறதாம்.*

**''கலம்தரு திருவின் புலம்பெயர் மாக்கள்**
**வேலை வாலுகத்து விரிதிரைப் பரப்பில்**
**கூல மறுகில் கொடியெடுத்து நுவலும்**
**மாலைச் சேரி மருங்கு......''** (130-133)

என்பது பாடல் பகுதி. இந்தக் காலத்தில் வணிகர்கள் சிலர், அகல - நீள வாட்டமுள்ள துணியில் எழுதி விளம்பரப் படுத்தி விற்பனை செய்கின்றனர். துணியின் வாயிலாக விளம்பரப்படுத்தும் வழக்கு அந்த நாளிலும் இருந்ததாகத் தெரிகிறது. இப்பகுதியில் உள்ள 'மாலைச் சேரி' என்பது நோக்கற்பாலது. மாலை = ஒழுங்கு. சேரி என்பது, ஒவ்வொரு பொருளும் விற்கும் ஒவ்வொரு பகுதியையும் குறிக்கும்.

இவ்வளவு சிறப்புடன் திகழ்ந்த காவிரிப்பூம்பட்டினம் கடல் கொள்ளப்பட்டது வேதனைக்கு உரியது. இதுகாறும் சோழரின் புகார் நகர வணிக வளம் இடம் பெற்றது. அடுத்து, பாண்டியரின் மதுரை நகரின் வணிக வளம் காணலாம்.

## ஊர் காண் காதை

மதுரை மாநகரின் புறஞ்சேரியிலே (புறநகர்ப் பகுதியில்) கண்ணகியைக் காக்குமாறு கவுந்தியிடம் ஒப்படைத்துவிட்டுக் கோவலன் மதுரையைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டான். அவன் கண்ட வணிகப் பகுதிகள் இவண் வருமாறு:- ஒன்பான் மணிகள் (நவரத்தினங்கள்) விற்கும் கடைத்தெரு - கொடி கட்டி விளம்பரம் செய்து பொன் விற்கப்படும் பகுதி - பருத்தி நூலாலும் பட்டு நூலாலும் பல் வகை மயிர்களாலும் நெய்யப்பட்ட பல்வேறு வகை ஆடைகள் விற்கும் பகுதி - மிளகுப் பொதியுடனும் நிறுக்கும் துலாக் கோலுடனும் ஓரிடத்தில் நில்லாது நேரம் பாராது கூலங்களைச் (தானிய வகைகளைச்) சுமந்து திரிந்து விற்கும் பகுதிகள் - இன்ன பிற வணிக நிறுவனங்கள் உள்ள பகுதிகள் ஆகியவற்றையும் மற்றுமுள்ள நகர்ப் பகுதிகளையும் கோவலன் சுற்றிப் பார்த்தான்:

"வகைதெரி மாக்கள் தொகைபெற் றோங்கிப்
பகைதெறல் அறியாப் பயங்கெழு வீதியும்,
சாத ரூபம் கிளிச்சிறை ஆடகம்
சாம்பூ நதமென ஓங்கிய கொள்கையின்
பொலந்தெரி மாக்கள் கலங்குஅஞர் ஒழித்தாங்கு
இலங்குகொடி எடுக்கும் நலங்கிளர் வீதியும்
நூலினும் மயிரினும் நுழைநூல் பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூறு அடுக்கத்து
நறுமடி செறிந்த அறுவை வீதியும்,
நிறைக்கோல் துலாத்தர் பறைக்கண் பராரையர்
அம்பண அளவையர் எங்கணும் திரிதரக்
காலம் அன்றியும் கருங்கறி மூடையொடு
கூலம் குவித்த கூல வீதியும்...." (199-211)

என்பது பாடல் பகுதி. ஒன்பது மணிகளின் இயல்பை ஆராய்ந்து அறிபவர் இருக்கும் கடைத் தெருவில் பகைவர் வருவார் என்ற அச்சமே இல்லையாம். அவ்வளவு காவல் உள்ள பகுதி அது.

சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என்னும் நால்வகையான பொன் கட்டிகளை விற்பவர், கொடி கட்டி விளம்பரம் செய்து விற்பராம்.

இந்தக் காதையில், ஒன்பது மணிகளின் இயல்புகளும் அவற்றை ஆராய்ந்து காணுவோரின் பொருளறிவும் விளக்கப்பட்டுள்ளன. மதுரை பற்றிய தலைப்பில் வாணிகம் பற்றி இன்னும் விரிவாகக் காணலாம்.

பண்டைக் காலத்தில் தமிழகத்தில் நடைபெற்ற வாணிக வளத்தை நோக்கின் பெரு வியப்பு தோன்றுகிறது.

# 14. பழக்க வழக்க மரபுகள்

சிலப்பதிகாரக் காலத்தில் மக்களிடையே நிலவி வந்த பழக்க வழக்கங்கள் அதாவது மரபுகள் சிலவற்றை அந்நூலில் கூறியுள்ளாங்குக் காணலாம்.

தலைக்கோல் நகர்வலம் வந்து வழிபாடு ஆற்றிய பின்னரே கணிகையரின் முதல் நடன அரங்கேற்றம் தொடங்கப்பெறும். (அரங்கேற்று காதை):

**"வந்தனை செய்து வழிபடு தலைக்கோல்** (3:120)

.............................................

**ஊர்வலம் செய்து புகுந்துமுன் வைத்து"** (3:128)

ஒரு மாளிகையில் புகும்போதோ — திருமண வீட்டில் முதலில் செல்லும்போதோ பெண்கள் வலக்காலை முதலில் எடுத்து வைப்பர். மாதவி அரங்கத்தில் வலக்காலை முதலில் வைத்து ஏறினாள்.

**"வலக்கால் முன்வைத்து ஏறி அரங்கத்து"** (3:131)

கனா - நிமித்தங்களில் நம்பிக்கை உண்டு. கனாத் திறம் உரைத்த காதை என ஒரு காதையே உள்ளது.

**"கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்**
**எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன"**
(5:27)

இதனால் நிமித்த நம்பிக்கை உண்டெனஅறியலாம். மாதவி புணர்ச்சியில் இருந்ததால் அவள் கண்கள் செங்கண்களாகக் கூறப்பட்டன.

*படை மறவர்கள் தம் வேந்தன் வெற்றி பெறுவதற்காகத் தம் உயிரைப் பலி கொடுப்பது உண்டு:*

**"வெற்றி வேந்தன் கொற்றம் கொள்கென**
**நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்கு**
**உயிர்ப்பலி உண்ணும் உருமுக்குரல் முழக்கத்து"**
(5:85-87)

*குழந்தை பிறந்த ஐந்தாம் நாள் பிறப்புத் தீட்டு கழித்துப் பின் பெயர் சூட்டு விழா நடத்துவர். மாதவிக்கு மணிமேகலை பிறந்தபின், இவ்வாறு நடைபெற்றது. பாடல்:*

**"மாந்தளிர் மேனி மாதவி மடந்தை**
**பால்வாய்க் குழவி பயந்தனள் எடுத்து**
**வாலாம் ஐந்நாள் நீங்கிய பின்னர்**
**மாமுது கணிகையர் மாதவி மகட்கு**
**நாம நல்லுரை நாட்டுதும் என்று..."** (15:22-26)

*என்பது பாடல் பகுதி.*

*யானைக்கு முன்னே, யானை வருகிறது என்று மக்களை விழிப்பாயிருக்கச் செய்யப் பறை அறைந்து அறிவிப்பது உண்டு:*

**"அரசுஉவா தடக்கையின் பரசினர் கொண்டு**
**முரசு எழுந்து இயம்ப"** (3:124, 125)

**"பாகுகழித்து யாங்கணும் பறைபட வரூஉம்**
**வேக யானை வெம்மையின் கைக்கொள"** (15:46, 47)

*ஒரு சிலர்க்கு 'எட்டி' என்னும் பட்டம் அளிப்பது உண்டு: சாயலன் என்பவன் எட்டிப் பட்டம் பெற்றவன்.*

*சிலர் உள்ளத்தில் பெருந்துயருற்றுச் சோர்ந்திருக்கும் போது, யாராவது அவர்களைப் பார்த்து 'ஏன் என்னவோ போல் இருக்கிறீர்கள்?" என்று கேட்கின், "ஒன்றுமில்லை, இலேசா தலையை வலிக்கிறது" என்று பொய் சொல்லி*

வைப்பர். பாண்டியன் நெடுஞ்செழியன், நாடக மகளிரின் ஆடல் பாடல்களில் ஈடுபட்டு அவர்களால் உள்ளங் கவரப் பட்டுள்ளான் எனக் கோப்பெருந்தேவி அவன்மேல் ஊடல் கொண்டாள். ஆனால், அந்த ஊடலை வெளிக்காட்டாமல், தனக்குத் தலையை நோவதால் என்னவோபோல் இருக்கிறேன் என்று சொன்னாளாம். மக்களிடையே இது போன்ற பழக்கம் உண்டு தானே! அலுவலகத்திற்கு விடுமுறை எடுக்கும் காரணப் பட்டியலில் தலை நோவும் ஒன்றல்லவா? இதை அரசியும் பின்பற்றியுள்ளாள். பாடல்:

**"கூடல் மகளிர் ஆடல் தோற்றமும்**
**பாடல் பகுதியும் பண்ணின் பயங்களும்**
**காவலன் உள்ளம் கவர்ந்தன என்றுதன்**
**ஊடல் உள்ளம் உள்கரந்து ஒளித்துத்**
**தலைநோய் வருத்தம் தன்மேல் இட்டுக்**
**குலமுதல் தேவி கூடாது ஏக"** (16:131-136)

தெய்வத்திற்குப் பலியிடல் அன்றே இருந்தது. பத்தினிப் பெண்டிரை வணங்குதல் முதலாகப் பல்வேறு தெய்வ வணக்கம் அன்றே இருந்தது. சமணமும் புத்தமும் பெருவாரியாகப் பின்பற்றப் பட்டன.

ஊழ்வினை நம்பிக்கையும் பழம் பிறவி நம்பிக்கையும் நிரம்ப இருந்தன என்பது வேறு தலைப்பில் விரிவாக விளக்கப் பட்டுள்ளன. பூதம் பேய் பிசாசு நம்பிக்கையும் உண்டு. தீயன செய்பவரைப் பூதம் அறைந்து உண்ணும் நம்பிக்கையும் இருந்தது. "பூதம் புடைத்து உணும் பூத சதுக்கமும்" (5:134) என்பது பாடல் பகுதி.

பரத்தமைத் தொழில் அன்றே இருந்தது. விழாக் காலங்களில் ஆடவரும் மகளிரும் இன்பத்துடன் திரிந்து பொழுது போக்குவராம்.

பல சமயங்கள் இருந்தும், பலர் சமய வேறுபாடு இன்றி நடந்துகொண்டனர். கோவலன் கண்ணகியுடன் புகாரை விட்டுப் பிரிந்த வேளையில், திருமால், புத்தர், அருகர் ஆகியோரின் கோயில்களை வணங்கிச் சென்றானாம்.

**"அணிகிளர் அரவின் அறிதுயில் அமர்ந்த**
**மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து"**
(10:9, 10)

**"பணைஐந்து ஓங்கிய பாசிலைப் போதி** (10:11)
**இந்திர விகாரம் ஏழுடன் போகி"** (10:14)

**"ஐவகை நின்ற அருகத் தானத்து** (10:18)
**இலகொளிச் சிலாதலம் தொழு துவலங்கொண்டு"**
(10:25)

என்பன பாடல் பகுதிகள். முன்னது வைணவம். நடுவனது புத்தம். மூன்றாவது சமணம். கோவலனுக்குச் சமய வேறுபாடு இல்லை என்பது தெரிகிறது.

மற்றும் ஒன்று: சேரன் செங்குட்டுவன் வடபுலம் நோக்கிப் போருக்குப் புறப்பட்டபோது, வஞ்சியில் உள்ள சிவன் கோவிலை வணங்கி, அங்கே தந்த பூமாலையைத் தலையில் சூடிக் கொண்டானாம். பின்னர் திருமால் கோயிலுக்கு வந்தபோது, அங்கே தந்த பூமாலையைச் (சேடம்) தோளில் சூடிக்கொண்டானாம். இச்செய்தியைக் கால்கோள் காதையில் காணலாம்.

கோவலன் - கண்ணகி ஆகியோர்க்குத் திருமணம் நடைபெற்ற முறை ஒருவிதமானது. கண்ணகிக்குப் பன்னிரண்டாண்டு (ஈராறு ஆண்டு அகவையாள்) அகவையிலும், கோவலனுக்குப் பதினாறாவது (ஈரெட்டு ஆண்டு அகவையாள்) அகவையிலும் திருமணம் நடைபெற்றதாம். தொல்காப்பிய உரையாசிரியர்களும் இந்தக் கருத்தைக் கூறியுள்ளனர்:

தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியலில் உள்ள "பிறப்பே குடிமை ஆண்மை யாண்டோடு" (25) என்று தொடங்கும் நூற்பாவின் உரையில், பேராசிரியர், "யாண்டு என்பது ஒத்தவாறு என்னையெனின், பன்னீர் யாண்டும் பதினாறு யாண்டுமே பெண்மையும் ஆண்மையும் பிறக்கும் (முதிரும்) பருவம் என்பது " என எழுதியுள்ளார்.

இளம்பூரணர், (களவியல் — 2) "ஆண்டு என்பது ஒத்த பருவத்தராதல். அது குழவிப் பருவம் கழித்து பதினாறு பிராயத்தானும் பன்னிரண்டு பிராயத்தாளும் ஆதல்" என்று உரை எழுதியுள்ளார்.

இந்தக் காலத்தில் திருமண அகவை பெண்ணுக்குப் பதினெட்டின் கீழும் ஆணுக்கு இருபத்தொன்றின் கீழும் இருத்தலாகாது எனச் சட்டம் வகுத்துள்ளனர். அந்தக் காலத்தில் குழந்தைத் திருமணம் நடைபெற்றது. அண்ணல் காந்தியடிகள் தமது குழந்தைத் திருமணத்தைப் பற்றிக் கூறுகையில், எனக்கு விளையாடுவதற்கு ஒரு சிறுமியைச் சேர்த்து வைத்தனர் என எண்ணினேன் - என்று கூறியதாக எதிலோ படித்த நினைவு உள்ளது. குழந்தைத் திருமணம் பார்ப்பனரிடையே கட்டாயமாக அன்று இருந்தது. அது மற்ற இனத்தாரையும் நாளடைவில் தொற்றிக் கொண்டது இப்போதோ, முப்பத்தைந்து அகவை நிறைந்த இளங் கிழவிகள் சிலர்க்கு மாப்பிள்ளை கிடைப்பது அரிதாயுள்ளது. அந்தோ, கொடியது மக்கள் குழு!

சிலப்பதிகார மணமக்களின் பெற்றோர்கள் மா பெருஞ் செல்வராதலின், யானையின்மேல் பெண்களை ஏற்றி நகரைச் சுற்றி வந்து திருமணச் செய்தியை அறிவிக்கும்படி ஏற்பாடு செய்தார்களாம்.

**"யானை எருத்தத்து அணியிழையார் மேல்இரீஇ**
**மாநகர்க்கு ஈந்தார் மணம்"** (1:43, 44)

என்பது பாடல் பகுதி. அந்தக் காலத்து மேட்டுக் குடி மக்களிடையே இந்த மரபு இருந்தது. இப்போது நடக்குமா?

திங்கள் உரோகிணி விண்மீனுடன் சேர்ந்திருக்கும் நாள் நல்லநாளாம். அந்த நாளில் திருமணம் நடைபெற்றதாம். அசுவனி முதலிய இருபத்தேழு விண்மீன்களுள் உரோகிணியும் ஒன்று. இவை தக்கன் பெண்மக்களாம். இந்தப் பெண்களைத் திங்கள் மணந்து கொண்டானாம். இப்பெண்களுள் உரோகிணி என்னும் மனைவிமேல்தான் திங்களுக்குக் காதல் மிகுதியாம். இதனால் தக்கன் திங்கள்மேல் சினம் கொண்டானாம். இது புராணக்கதை. இதை வானநூல் புலமையுடன் நோக்கின் நிலைமை புரியும்.

கோவலனும் கண்ணகியும், மா முது பார்ப்பான் மறை வழி காட்டிடத் தீ வலம் செய்து திருமணம் செய்து கொண்டனராம். சாந்து, புகை, சுண்ணம், விளக்கு, பாலிகை முளை முதலியன பெண்கள் எடுத்தனராம். மற்றும் மடந்தையர் வாழ்த்தி அருந்ததி அனைய கண்ணகியை அமளி ஏற்றினராம்.

> **"தீதுஅறுக எனஏத்திச் சின்மலர் கொடுதூவி**
> **அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை**
> **மங்கல நல்லமளி ஏற்றினார்"** (1:62-64)

என்பது பாடல் பகுதி. அமளி ஏற்றினார் என்பதற்கு அமளியில் ஏற்றினார் என்று மட்டுமே உரையாசிரியர்கள் எழுதியுள்ளனர். நான் (சு.ச.) அச்சத்தோடு ஒரு கருத்து சொல்கிறேன்: திருமண நாள் அன்றிரவே அமளியில் - படுக்கையில் ஏற்றி 'முதலிரவு' நடத்தச் செய்தனர் என்று சொன்னால் என்ன? அங்ஙனம் இல்லையெனில், இருக்கையில் அமரச் செய்தனர் என்றல்லவா கூறியிருக்க வேண்டும். அமளி என்பது படுக்கை யாயாயிற்றே. முதலிரவில் பெண்

கூச்சப்பட்டுக் கொண்டு தயங்குவாள் ஆதலின், 'ஏற்றினர்' என்றார்.

திருமண நாளன்றே முதலிரவு நடத்தும் பழக்கம் சில குடும்பங்களில் உண்டு - சில குடும்பங்களில் இல்லை. மணமானதும், மணமக்களைப் பலநாள் காக்க வைத்துப் 'பத்தியம்' பிடிக்கச் செய்யாமல் முதல்நாளே ஒன்று சேர்ப்பது நல்லது என்பர் சிலர். சிலநாள் பழக வைத்து கூச்சம் தெளிந்தபின் இணைப்பது நல்லது என்பர் சிலர். சில மணமக்கள், பெரியோர்கள் நல்ல நாள் பார்த்து ஏற்பாடு செய்வதற்கு முன்பே, அவர்கள் அறியாதபடி நேரடி நடவடிக்கையில் இறங்கிவிடுவதும் உண்டு. சில குடும்பங்களில் முதலிரவுக்கு நல்ல நாள் பார்த்து விருந்து ஓம்பி ஒரு விழாவே நடத்துவது உண்டு.

கோவலன் கண்ணகி திருமணமும் நடைபெற்றது தொடர்பாக ஒரு சிக்கல் உண்டு. ஐயரை வைத்து நெருப்பு மூட்டிச் சடங்குகள் செய்து திருமணம் நடத்தியதாகச் சிலம்பு சொல்கிறது. இது ஆரிய முறை - தமிழ் முறை இன்னதன்று - ஆரிய முறையை ஒழிக்க வேண்டும் என்கின்றனர் சிலர். சிலப்பதிகாரத்திலேயே சொல்லப் பட்டிருப்பதால் அந்த (ஆரிய) முறையில் செய்யலாம் என்கின்றனர் சிலர்.

ஒவ்வொரு குடும்பத்தில் ஒவ்வொரு பழக்கம் இருக்கலாம். சிலப்பதிகாரத்தில் சொல்லியிருப்பதனால், தமிழர்கள் அனைவரும் அந்தக் காலத்தில் ஆரிய முறையைப் பின் பற்றினர் என்று கூறமுடியாது. 1960-ஆம் ஆண்டு, பெரியார் மாவட்டத்திலுள்ள எலுகான்வலசு என்னும் ஊரில் ப. சாமியப்பன் என்பவருக்கு யான் (சு.ச.) தலைமை தாங்கித் திருமணம் செய்து வைத்தேன். பழைய பழக்கம் எப்படி என்று அங்கு வினவியபோது, எங்கள் பக்கத்தில் மரபு வழி - மரபு வழியாகப் (பரம்பரையாகப்) பார்ப்பனரை வைத்துத்

திருமணம் நடத்துவதில்லை - தமிழ்ப் பெரியவர் ஒருவரைக் கொண்டே நடத்துவது வழக்கம் என்றனர். 1969-ஆம் ஆண்டு, இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள குருந்தம்பட்டு என்னும் ஊரில் குமர. ஞானபூரணம் என்பவருக்கு யான் தலைமை தாங்கித் திருமணம் நடத்தி வைத்தேன். அங்கே விசாரித்தபோதும், வழி வழியாகத் தமிழ்ப் பெரியாரைக் கொண்டே திருமணம் நடத்துவது வழக்கம் என்றனர்.

எனவே, சிலப்பதிகாரம் சொல்வது ஒரு சாராரின் வழக்கமாயிருக்கலாம். அனைவரையும் அது கட்டுப் படுத்தாது.

அடுத்து - மேலும் சில: கடைகளில், இன்ன பொருள் இங்கே விற்கும் என்பதை அறிய அறிவிப்புக் கொடிகள் கட்டிவைப்பது உண்டு,

**"பொலந்தெரி மாக்கள் கலங்களுர் ஒழித்தாங்கு**
**இலங்கு கொடிஎடுக்கும் நலங்கிளர் வீதி"**

(14:203, 204)

வணிகம் செய்யும் யவனர் முதலிய அயல்நாட்டினர் தமிழகத்தில் நிரம்ப இருந்தனர்.

ஒன்றை வலம் வருபவர்கள் மூன்று முறை வலம் வருவது அக்காலத்தும் உண்டு, செங்குட்டுவன் கண்ணகிக் கோட்டத்தை மும்முறை வலம் வந்தானாம்.

**"வலமுறை மும்முறை வந்தனன் வணங்கி**
**உலக மன்னவன் நின்றோன் முன்னர்"** (30:155, 156)

ஆடவர் கோவேறு கழுதைமேல் ஊர்ந்து செல்லும் பழக்கம் இருந்ததாகத் தெரிகிறது. கோவலன் இதன்மேல் ஊர்ந்து கடற்கரைக்குச் சென்றதாகக் கடலாடு காதையில் அறிவிக்கப்பட்டுள்ளது.

**"வான வண்கையன் அத்திரி ஏற"** (6:119)

அத்திரி = கோவேறு கழுதை. இதைக் குதிரை வகைகளுள் ஒன்று என்றும் கூறுவர். சில ஊர்க் குதிரைகள் கழுதைகள் போலவே இருக்கும். அத்தகையதோ இது!

கோவலன் தான் கண்ட கனவை மாடலனிடம் கூறி, இரவின் பிற்பகுதியில் கண்ட கனவு பலிக்கும் என்று கூறுகிறார்களே — அவ்வாறு தனக்கு ஏதேனும் தீங்கு வருமோ என அஞ்சுகிறான்.

**"நனவு போல நள்ளிருள் யாமத்துக்**
**கனவு கண்டேன் கடிதுஈங்கு உறும்என"**
(15:105, 106)

நள்ளிருள் யாமம் என்பதற்குக் கடையாமம் எனச் சிலர் பொருள் எழுதியுள்ளனர். கடிது உறும் என்றால், விரைவில் பலித்து விடும் என்பதாம். நள்ளிருள் யாமம் என்பதற்கு நேர்ப் பொருள் கடையாமம் என்பதாகாது. கடிது உறும் என்பதைக் கொண்டு கடை யாமம் எனப் பொருள் கொண்டுள்ளதாகத் தெரிகிறது. இதற்கு அகச்சான்று கனா நூலில் உள்ளது. முதல் சாமத்தில் கண்ட கனவு ஓராண்டில் பலிக்குமாம். இரண்டாம் சாமத்தில் கண்டது எட்டுத் திங்களில் (எட்டு மாதத்தில்) பலிக்குமாம். மூன்றாம் சாமத்தில் கண்டது மூன்று திங்களில் பலிக்குமாம். கடையாமமாகிய நான்காம் சாமத்தில் கண்ட கனவோ பத்தே நாளில் பலித்து விடுமாம்.

**"படைத்த முற்சாமம் ஓராண்டில்**
**பலிக்கும், பகர் இரண்டே**
**கிடைத்த பிற்சாமம் மிகுதிங்கள்**
**எட்டில் கிடைக்கும் என்றும்,**
**இடைப்பட்ட சாமமோர் மூன்றினில்**
**திங்களோர் மூன்றென் பவால்;**
**கடைப்படுசாமமும் நாள்**
**பத்துளே பலம் கைபெறுமே"** (3)

என்பது கனா நூல் பாடல். கடையாமமாகிய நான்காம் யாமம் என்பது வைகறை மூன்று மணியிலிருந்து ஆறு மணி வரையிலுமாம். கடிது உறும் என்று இருப்பதைக் கொண்டு, அது கடையாமமாயிருக்கலாம் என்று எண்ணி நள்ளிருள் யாமம் என்பதற்குக் கடையாமம் எனப் பொருள் வரைந்து உள்ளனர் என்று தோன்றுகிறது.

மகிழ்ச்சியான சூழ்நிலையில் மன்னர்கள் சிறையில் உள்ளவர்களை விடுதலை செய்வதும் வரி நீக்கம் செய்வதும் உண்டு. வெற்றி வாகை சூடிய செங்குட்டுவன் இவ்வாறு செய்தானாம்.

**"சிறையோர் கோட்டம் சீமின் யாங்கணும்**
**கறைகெழு நல்லூர்க் கறைவீடு செய்ம்மென**
**அழும்பில் வேளோடு ஆயக் கணக்கரை**
**முழங்கு நீர்வேலி மூதூர் ஏவி"** (28:203-206)

அழும்பில் வேளையும் ஆயக்கணக்கரையும் ஏவி இவ் வாறு செய்வித்தானாம். இது நடுகல் காதையில் அறிவிக்கப் பட்டுள்ளது. பாண்டியனும் இவ்வாறு செய்ததாகக் கட்டுரை காதையில் சொல்லப்பட்டுள்ளது.

**"சிறைப்படு கோட்டம் சீமின் யாவதும்**
**கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மின்"**(23:126,127)

மற்றும் ஒருவகை மரபு:— கணவர்க்கு உணவு இடும் போது அவன் கால்களைத் தூய்மை செய்தலும், இலை போடுமுன் தரையில் தண்ணீர் தெளித்தலும் உண்டு. கோவலனுக்கு உணவு இடும் போது கண்ணகி இவ்வாறு செய்தாளாம். வணிக மரபினர் உண்ணுமுன் சில சடங்குகள் செய்வராம்.

**"கடிமலர் அங்கையின் காதலன் அடிநீர்**
**சுடுமண் மண்டையின் தொழுதனள் மாற்றி"**
(16:38, 39)

**தண்ணீர் தெளித்துத் தன்கையால் தடவி** (16:41)
**அரசர் பின்னோர்க்கு அருமறை மருங்கின்**
**உரிய மருங்கின் ஒருமுறை கழித்து...''** (16:44, 45)

*பெண்கள் மேல் தெய்வம் ஏறி (சாமியாடி) ஏதேதோ கூறுவது உண்டு. வேட்டுவர் குடியில் இறை பூசனை செய்யும் சாலினி என்பவள் மீது தெய்வம் ஏறிய செய்தி வேட்டுவ வரியில் கூறப்பட்டுள்ளது.*

**''பழங்கடன் உற்ற முழங்குவாய்ச் சாலினி**
**தெய்வ முற்று மெய்ம்மலர் நிறுத்து...** (12:7, 8)
**நடுவூர் மன்றத்து அடிபெயர்த்து ஆடி''** (12:11)

*மற்றும் தேவந்தி மீது பாசண்டச் சாத்தன் என்னும் தெய்வம் ஏறிப் பேசியதாக வரந்தரு காதையில் சொல்லப் பட்டுள்ளது.*

**''தெய்வம் உற்றெழுந்த தேவந்திகைதான்**
**கொய்தளிர்க் குறிஞ்சிக் கோமான் தன்முன்**
(30:45, 46)
**பாசண்டன் யான் பார்ப்பனி தன்மேல்**
**வந்தேன் என்றலும்''** (30:69, 70)

*இது பாசண்டச் சாத்தன் தேவந்தி மீது ஏறிச் செங்குட்டுவனிடம் சில சொல்லிய பகுதி. மற்றும், தேவந்தி மேல் கண்ணகி ஏறி இளங்கோ அடிகட்குச் சில கூறியதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.*

**''தேவந் திகைமேல் திகழ்ந்து தோன்றி''** (30:172)

*கண்ணகி தேவந்தியின் வாயால் பல கூறியதாக இந்தப் பகுதியில் ஒரு செய்தி உள்ளது.*

*இவ்வாறு தெய்வம் ஏறிச் சாமியாடிக் குறி சொல்லும் செயல் இக்காலத்திலும் தொடர்கின்றது. சாமியாடுபவளிடம் பலர் குறி கேட்பார்கள்; சாமியாடுபவள் தன் மனம்போன போக்கில் ஏதேதோ கூறுவாள். அன்பர்கள் கேட்கும்*

குறிக்குப் பதில் சொல்ல முடியாவிட்டால், "அடேய், என்னைச் சோதிக்கிறாயா - ஆமாம் அடேய் என்னைச் சோதிக்கிறாயா? - நான் மலை ஏறப் போறேன்டா - நான் மலை ஏறப் போறேன்டா என்று கூறி மலையேறி விடுவதும் உண்டு. சூழ்நிலைக்கு ஏற்ப உணர்ச்சி வயப்பட்டுச் சிலர் சாமியாடுவது ஒருவகை (இசுதீரியா என்னும்) நோய் என்று அறிவியலார் கூறுவதாகத் தெரிகிறது. இது குறித்து மேலும் ஆராய்ந்த பின்னரே ஒரு முடிவுக்கு வரமுடியும்.

மற்றொரு மரபையும் இவண் சொல்லாமல் விடுவதற்கு இல்லை. பெரியோர்களிடமோ - மன்னரிடமோ ஒருவர் ஏதேனும் சொல்லத் தொடங்கின் முதலில் வாழ்த்து கூறுவது வழக்கம். சொல்லி முடித்தபின் இறுதியிலும் வாழ்த்து கூறுவதும் உண்டு. சிலப்பதிகாரத்தில் இந்த மரபு சில இடங்களில் பின்பற்றப்பட்டுள்ளது.

வழக்கு உரைக்கக் கண்ணகி வந்திருப்பதைப் பாண்டிய மன்னனிடம் அறிவிக்க வந்த வாயில் காப்பாளன் முதலில் "வாழிஎம் கொற்கை வேந்தே வாழி" (20:30) என்று வாழ்த்து சொல்லியே பேச்சைத் தொடர்ந்தான்.

தேவந்தி செங்குட்டுவனிடம் மணிமேகலையைப் பற்றிச் சொல்லத் தொடங்குமுன்,

**"கோமகன் கொற்றம் குறைவின் றோங்கி**
**நாடு பெருவளம் சுரக்க"** (30:6, 7)

என வாழ்த்தினாள்.

மலைவாழ் மக்கள் செங்குட்டுவனிடம் கண்ணகியைப் பற்றிக் கூறத் தொடங்கியபோது,

**"ஏழ்பிறப்பு அடியேம் வாழ்க நின்கொற்றம்"** (25:56)

என்று வாழ்த்திச் செய்தியைக் கூறி, முடிக்கும் போதும்

**"பன்னூ றாயிரத் தாண்டு வாழியர்"** (25;63)

என்று வாழ்த்தி முடித்தனர். பன்னூறாயிரத்து ஆண்டு = பல இலட்சம் ஆண்டு. இலட்சம் என்னும் வடமொழி எண்ணுப் பெயருக்கு நேரான தமிழ்ப் பெயர் 'நூறாயிரம்' என்பது.

மாடலன் செங்குட்டுவனிடம் முன் நடந்ததைக் கூறத் தொடங்குமுன்

**"மன்னவர் கோவே வாழ்க என்று ஏத்தி"** (30:118)

என்று வாழ்த்தி, முடிக்கும் போதும்

**"ஊழிதோ றூழி உலகம் காத்து**
**நீடு வாழியரோ நெடுந்தகை"** (30:145, 146)

என்று வாழ்த்தி முடித்தானாம்.

மணிமேகலை ஆசிரியர் சாத்தனார் செங்குட்டுவனிடம் மதுரையில் நடந்ததைக் கூறி முடிக்கும் போது

**"ஒழிவின்று உரைத்து ஈண்டு ஊழிஊழி**
**வழிவழி சிறக்கநின் வலம்படு கொற்றம்"** (25:91, 92)

என்று வாழ்த்தி முடித்தாராம். வில்லவன் கோதை செங்குட்டுவனிடம் செய்தி கூறத் தொடங்குமுன் சேரனை வாழ்த்தித் தொடங்கினானாம்:

**"பல் யாண்டு வாழ்கநின் கொற்றம் ஈங்கென**
**வில்லவன் கோதை வேந்தற் குரைக்கும்"** (25:150, 151)

என்பது பாடல் பகுதி. அரசனிடம் பேசும்போது மட்டுமன்று; அரசனது கட்டளையைப் பறையறைந்து சொல்லும் போதும் அரசனை வாழ்த்துவது மரபு:

**"வாழ்க எங்கோ மன்னவர் பெருந்தகை**
**ஊழிதோ றூழி உலகம் காக்க"** (25:181, 182)

என்று பறையறைந்தோர் வாழ்த்திப் பின்னரே செய்தியை அறிவித்தனராம். இவ்வாறு அரசர்களை வாழ்த்துவது ஒரு மரபு.

இந்த இடத்தில், யான் (சு. ச.) சிறுவனாய்ப் பள்ளியில் படித்தபோது வகுப்பு தொடங்குவதற்கு முன் பாடிய

**"வாழ்க வாழ்கவே ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்**
**வாழ்க வாழ்கவே"**

என்னும் பாடல் நினைவுக்கு வருகிறது. எல்லாம் காலத்தின் கோலம்!

மற்றும் ஓர் அரிய மரபு சிலம்பிலிருந்து தெரியவருகிறது. ஆடல் பாடலில் வல்ல கணிகையர் குலத்து மங்கை ஒருத்தி, முறைப்படி அரசன் முன்னே தனது கலையை அரங்கேற்றம் செய்த பின்பே, அவள் யாரையாவது வரித்துக் கொள்ளவோ - கலையுலக வாழ்வில் ஈடுபடவோ உரிமை உடையவள் ஆவாள் - என்பது போன்ற ஒரு வகை மரபு இருந்ததாகத் தெரிகிறது. மாதவி அரங்கேற்றம் செய்த பின்பு, அரசன் கொடுத்த மரகத மாலையை விலைக்கு வாங்குபவர் தன்னை அடையலாம் என்று கூறி மாலையைத் தன்தோழி ஒருத்தியின் வாயிலாகக் கடைத்தெருவுக்கு அனுப்பினாள். அங்கே திரிந்து கொண்டிருந்த கோவலன் மாலையை விலைக்கு வாங்கி மாதவியை அடைந்தான் என்பது முன்னரே அறிந்த செய்தி. 'மானம் கப்பல் ஏறிற்று' என்று சொல்வர், அந்த அளவுக்குப் போகாமல், மாதவி-கோவலன் ஆகியோர் மானம் கடைத்தெரு ஏறியுள்ளது இது ஒரு பண்பாடு அற்ற - நாகரிகம் அற்ற முறையாகும்.

மணிமேகலைக் காப்பியத்திலும் இந்த ஆடல் மரபு கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது. புகாரில் நடைபெற்ற இந்திர விழாவிற்கு மாதவியும் மணிமேகலையும் ஏன் வரவில்லை என ஊரில் மக்களிடையே அலர் எழுந்தது.

**"மணிமே கலையொடு மாதவி வாராத்**
**தணியாத் துன்பம் தலைத்தலை மேல்வர"** (2:4, 5)

என்பது மணிமேகலைப் பாடல் பகுதி. மாதவியின் தாய் சித்திராபதி, வயந்த மாலையை நோக்கி, நீ மாதவிபால்

சென்று ஊரில் ஒரே அலராயிருக்கிறது என்று கூறி அழைத்து வா என்றாளாம்;

**"வயந்த மாலையை வருகெனக் கூஉய்ப்**
**பயங்கெழு மாநகர் அலர்எடுத்து உரையென"** (2:8, 9)

என்பது பாடல் பகுதி. இரட்டைக் காப்பியங்களாகிய சிலப்பதிகாரத்தாலும் மணிமேகலையாலும் இப்படியொரு மரபு இருந்தது புலனாகிறது. இந்தக் காலத்திலும், இதை விடக் குறைந்த அளவில் இம்மரபு எங்கெங்கோ பின்பற்றப் படுவதாகச் சொல்லப்படுகிறது. அந்தக் காலத்தில் அரசெதிரே அரங்கேற்ற வேண்டுமெனில், இந்தக் காலத்தே பெருந்தலைவர் யாராவது ஒருவர் முன் நடைபெறுகிறதாம். போகப்போக இதுவும் குறைந்து - பின் அறவே நீங்கிவிடும். காலம் மாறும் தன்மையது.

**முடங்கல்**

இந்தக் காலத்தில் முடங்கல் (கடிதம்) அஞ்சல்துறை வாயிலாகத் தொலைவையும் நேரத்தையும் வென்று விடுகிறது. பிறகு தொலைபேசி - பின்பு தொலைக் காட்சி - இப்படியாகக் கருத்துப் பரிமாற்றம், ஒரே நேரத்தில் - இடையீடு இன்றி உடனுக்குடன் நடைபெறுகிறது. அறிவியலின் திருவிளையாடல் இது. தமிழ் இலக்கியங்களுள் சிலப்பதிகாரத்தில் தான் முடங்கல் எழுதும் முறை அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது. மாதவி, வயந்த மாலை வாயிலாகவும் கோசிகன் வாயிலாகவும் இருமுறை கோவலனுக்கு முடங்கல் அனுப்பினாள். இந்த மரபு அந்தக் காலத்திலேயே தொடங்கப்பட்டது.

**பத்தினி வழிபாடு**

தமிழ் நூல்களுள் சிலப்பதிகாரத்தில் தான் பத்தினி வழிபாடு முதல் முதல் அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது எனக் கூறலாம்போல் தோன்றுகிறது. நடுகல் வழிபாட்டை இங்கே

கொள்ளலாகாது, செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோட்டம் எடுத்துப் பத்தினி வழிபாட்டைத் தொடங்கிவைத்தான். மற்றும், சிறைவீடு பெற்ற கனக விசயர் முதலிய ஆரிய மன்னர்களும், சிறைவீடு பெற்ற வேறு மன்னர்களும், குடகக் கொங்கரும், மாளுவ வேந்தரும், இலங்கைக் கயவாகு மன்னனும், கண்ணகித் தெய்வத்தை விளித்து, எங்கள் நாடுகளிலும் எழுந்தருளி அருள்புரிய வேண்டும் என வேண்டினராம்.

**"உலக மன்னவன் நின்றோன் முன்னர்**
**அருஞ்சிறை நீங்கிய ஆரிய மன்னரும்**
**பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னரும்**
**குடகக் கொங்கரும் மாளுவ வேந்தனும்**
**கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்**
**எம்நாட் டாங்கண் இமய வரம்பனின்**
**நன்னாள் செய்த நாளணி வேள்வியில்**
**வந்து ஈகஎன்றே வணங்கினர் வேண்டத்**
**தந்தேன் வரமென்று எழுந்தது ஒருகுரல்"**

(30:156-164)

என்பது பாடல் பகுதி. இதனால், வடபுல மன்னர்களும் பத்தினிக்குக் கோயில் எடுத்தனர் என்பது தெளிவு. இவ்வாறு நாவலந் தீவு (இந்தியா) முழுவதும் பரவியிருந்த கண்ணகி வழிபாடு, பாரதக்கதை தென்புலத்தில் பரப்பப்பட்ட பின்னர் மறையலாயிற்று. இப்போது தமிழ் நாட்டில் உள்ள துரோபதையம்மன் கோயில்கள் முன்னர்க் கண்ணகி கோயில் களாக இருந்தவை என்றும் அதாவது கண்ணகியின் இடத்தைத் துரோபதை பிடித்துக் கொண்டாள் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

தமிழகத்தில் அம்மன் கோயில் கொண்டுள்ள பெண் தெய்வங்கள் அனைவரும் மக்கள் பெண்டிரே. மாரி (மழை) பெய்ய வைப்பதால் மாரியம்மன் என்ற பெயருள்ள அம்மன்

களின் வரலாறுகளைக் கிளறிப் பார்க்கின் உண்மை விளங்கும். திருவள்ளுவரின் மனைவிதான் மாரியம்மன் ஆனாள் என்பது ஒரு கதை. பிருகு முனிவரின் மனைவி நாகவல்லி என்பவளே மாரியம்மன் ஆனாள் — சமதக்கினி முனிவரின் மனைவி இரேணுகாதேவியே மாரியம்மன் ஆனாள் — என்பன கதைகள். இரேணுகாவின் மகன் பரசுராமன், தாய் செய்த ஒரு பெருங்குற்றம் பற்றி, அவளைத் தலை வேறாகவும் உடல் வேறாகவும் வெட்டி விட்டானாம். எனவேதான், சில இடங்களில் கழுத்தை மட்டும் வைத்து வழிபடுகின்றனர். கழுத்து மாரியம்மன் தோன்றிய வரலாறுகளுள் இஃதும் ஒன்று. ஐவர்க்கும் தேவி அழியாத பத்தினியாகிய துரோபதையின் வரலாற்றைச் சொல்ல வேண்டியதில்லை.

இதுகாறும் கூறியவற்றால், பத்தினி தெய்வமாகிய கண்ணகி கோயில் எடுத்து வழிபடப்பட்டாள் என்னும் உண்மையை ஐயமின்றி ஒத்துக்கொள்ளலாம். சிலப்பதிகாரக் காலத்தில் இந்த மரபு தொடங்கப்பட்டது.

இப்போது, மதுரை மாவட்ட எல்லையின் அண்மையில் உள்ள மங்களதேவி கோயில் என்னும் கோயில் கேரள அரசின் எல்லைக்குள் உள்ளது. அந்தப் பகுதியைத் தமிழ் நாட்டுக்கு அளிக்குமாறு தமிழ்நாடு அரசு கேரள அரசைக் கேட்டுக் கொண்டிருப்பதைச் செய்தித்தாள் படிப்பவர்கள் அறிவர். மங்களதேவி கோயில் எனப்படுவதுதான் கண்ணகி கோயில் எனப்படுகிறது. 'மங்கல மடந்தை கோட்டம்' (30:88) என்று சிலம்பில் கூறப்பட்டுள்ளது.

**தாலி கட்டுதல்**

மணமகன் மணமகளின் கழுத்தில் தாலி கட்டியது சிலப்பதிகாரக் காலத்தில் உண்டா - இல்லையா - என்பது ஒரு கேள்விக் குறி.

சிலம்பு – முதல் காதையாகிய மங்கல வாழ்த்துப் பாடல் என்னும் பகுதியில் உள்ள "அகலுள் மங்கல அணி எழுந்தது" (46) என்னும் தொடருக்கு, "ஊரிலே மங்கல நாண் வலம் செய்தது" என்று பெரியோரால் உரை எழுதப்பட்டுள்ளது. மங்கல நாண் என்பது தாலி. எனவே, தாலி கட்டும் வழக்கம் அன்று இருந்தது எனலாம்.

சிலப்பதிகாரக் காலத்தில் இருந்த மற்றொரு கடுமையான மரபைச் சொல்லாமல் விடுவதற்கு இல்லை. அதுதான் திருடனுக்கு இறப்பு ஒறுப்பு (மரண தண்டனை) கொடுப்பது. இந்தக் காலத்தில் கொலை செய்தவனுக்கே இறப்பு ஒறுப்பு தரப்படுகிறது. கொலை செய்த சிலர் வாணாள் ஒறுப்பு (ஆயுள் தண்டனை) பெறுவதோடு தப்பித்துக் கொள்கின் றனர். ஆனால் அந்தக் காலத்தில் கொலை செய்தவனுக்கு மட்டுமன்று; கள்வனுக்கும் இந்த ஒறுப்பு தரப்பட்டது. கண்ணகி பாண்டியன் நெடுஞ்செழியனிடம் வந்து தன் கணவனைக் கொன்றது தகாது என்று வழக்கு உரைத்த போது, கள்வனைக் கொன்றது கடுங்கோல் அன்று — செங்கோலே என்றான் பாண்டியன்.

**"கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று**
**வெள்வேல் கொற்றம் காண்என"** (20:64, 65)

என்பது பாடல் பகுதி. 'கள்வன் மனைவியும் காவலன் மனைவியும் கைம்பெண்டாட்டிகள்' என்பது ஒரு பழமொழி. காவலன் = அரசன். கைம்பெண்டாட்டி = கைம்பெண் - விதவை. அந்தக் காலத்தில் அரசர்கள் அடிக்கடிப் போரிட்டுக் கொண்டு இறந்து போவதால் அவர்களின் மனைவியர் கைம்பெண் ஆகின்றனர். அதேபோல், கள்வனுக்கு இறப்பு ஒறுப்பு தருவதால் அவன் மனைவியும் கைம்பெண் ஆகிறாள். இந்தப் பழமொழியின் விளக்கம் இது.

அரபு நாடுகள் சிலவற்றில், திருடினால் உறுப்பைக் குறைத்தல் போன்ற ஒறுப்புகள் தரப்படுவதாகச் சொல்லப் படுகிறது. சில அரபு நாடுகளிலும் சோவியத் நாட்டிலும், பிறர் வைத்தபொருள் வைத்த இடத்திலேயே இருக்குமாம்- யாரும் தொடமாட்டார்களாம். போய் வந்தவர்கள் புகல்கின்றனர். உறுப்பைக் குறைத்தல் நம் நாட்டிலும் அன்று இருந்திருக்கிறது. நாலடியாரில் இது கூறப்பட் டுள்ளது. பிறர் மனைவியை விரும்புபவன் அகப்பட்டுக் கொண்டால் அவன் கால்களை வெட்டி விடுவார்களாம். மேலும் பழியும் துன்பமும் விளையும்:

> **"காணின் குடிப்பழியாம், கையுறின் கால்குறையும்,**
> **ஆணின்மை செய்யுங்கால் அச்சமாம் - நீள்நிரயத்**
> **துன்பம் பயக்குமால், துச்சாரி! நீகண்ட**
> **இன்பம் எனக்கெனைத்தால் கூறு"** (14)

ஆண்மையின்றித் தீய புணர்ச்சி செய்யின் அச்சமும் நெடுங்கால நரகத்துன்பமும் உண்டாகும். எனவே, ஏ காமுகனே! நீ பெற்ற இன்பம் என்னதான் என்று எனக்குக் கூறு - என்பது கருத்து. 'கையுறின் கால் குறையும்' என்பது எண்ணத்தக்கது.

கையூட்டு (இலஞ்சம்) பெற்ற அரசு அலுவலர் இருவர்க்கு இரழ்சியாவில் (சோவியத்) இறப்பு ஒறுப்பு கொடுக்கப்பட்டதாகச் சில ஆண்டுகட்கு முன் செய்தித் தாளில் படித்த நினைவிருக்கிறது. திருவள்ளுவரும் இதை ஒத்துக்கொண்டுள்ளார். கொடியவரைக் கொலை செய்வது, பயிரைக் கெடுக்கும் களைகளைக் களைவது போன்றதாம்!

> **"கொலையின் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்**
> **களைகட் டதனொடு நேர்"** (550)

என்பது திருக்குறள். இறப்பு ஒறுப்பு தருவதை நிறுத்தி விடவேண்டும் என்றும் சிலர் கூறும் காலம் இது. எல்லாவற்றிற்கும் உரிய காலத்தில் தக்க பதில் கிடைக்கும்:

பகல் முடிந்து இரவை நோக்கிப் பொழுது போகும் வேளையில், பெண்கள், நெல்லோடு முல்லை மலரைக் கலந்து வீடெல்லாம் தூவி, விளக்கு ஏற்றி இறை வணக்கம் செய்வர். பின்னர் இரவுக்கு ஏற்ற உடை (Night Dress) உடுப்பர். பாடல்:

**"அகல் நகரெல்லாம் அரும்பவிழ் முல்லை**
**நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப் பகல்மாய்ந்த**
**மாலை மணிவிளக்கம் காட்டி இரவிற்கோர்**
**கோலம் கொடி யிடையார் தாம்கொள்ள"** (9:1-4)

என்பது பாடல் பகுதி. நகர் = வீடு, நிகர் = ஒளி. நக்கீரர் நெடுநல்வாடையிலும் இந்த மரபைக் கூறியுள்ளார்:

**"நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது**
**மல்லல் ஆவண மாலை அயர"** (43, 44)

என்பது பாடல் பகுதி. இந்தக் காலத்திலும் ஏழைகள் தவிர்த்த மற்ற பெண்டிருள் சிலர் இரவு ஆடை உடுத்து கின்றனர். பெண்டிர் சிலர் பகலிலும், கத்தோலிக்கக் கிறித்துவத் துறவியரின் உடைபோன்ற 'நெடு அங்கி' உடுத்திப் பெண்மையின் பொலிவைக் குறைத்துக் கொள்கின் றனர்.

கணவனால் கைவிடப் பட்டவர்கள், அறுகம்புல், சிறுபூளைப் பூ, நெல் ஆகியவற்றைக் கலந்து தூவி இறை வழிபாடு செய்யின், கணவனை மீண்டும் பெறலாம் என்று தேவந்தி கண்ணகிக்காகச் செய்து கணவனைப் பெறுக என்று வாழ்த்தினாளாம்.

**"கண்ணகி நல்லாளுக்கு உற்றகுறை உண்டென்று**
**எண்ணிய நெஞ்சத்து இளையளாய் நண்ணி**
**அறுகு சிறுபூளை நெல்லொடு தூஉய்ச்சென்று**
**பெறுக கணவ னோடு என்றாள்"** (9:41-44)

இது பாடல் பகுதி. இந்த மரபு இப்போது எல்லா இடங்களிலும் பின்பற்றப் படுவதாகத் தெரியவில்லை.

கோவலனும் கண்ணகியும் இறந்த செய்தி யறிந்ததும் கவுந்தி உண்ணா நோன்பு பூண்டும், மாதரி தீக்குளித்தும் இறந்தனராம். உறவினரோ — நெருங்கிப் பழகியவரோ இறப்பின், சிலர் இவ்வாறு இறப்பது இந்தக் காலம் போல அந்தக் காலத்திலேயே உண்டு எனத் தெரிகிறது.

இவ்வாறு அன்று பல்வகைப் பழக்க வழக்க மரபுகள் இருந்தன.

# 15. இயற்கைக் காட்சிப் புனைவு

இலக்கியங்களில் இயற்கைக் காட்சிகளைப் புனைவு (வருணனை) செய்வது இயற்கை. இயற்கைக் காட்சிகளைப் புனைவு செய்தல் மட்டுமுள்ள சிறுசிறு நூல்களும் உண்டு. இந்நிலையில், சிலப்பதிகாரப் பெருங் காப்பியத்தில் இயற்கைப் புனைவு இடம் பெற்றிருப்பதற்குக் கேட்கவா வேண்டும்!

மங்கல வாழ்த்துப் பாடல்: திங்கள் உலகளிக்கிறது. ஞாயிறு மேரு வலம் வருகிறது. மாமழை நீர் சுரக்கிறது.

மலை, கடல், ஆறு, முகில், பறவைகள், விலங்குகள், மர இனம், சோலை, நாடு — நகரம் முதலியவை சிலம்பில் அங்கும் இங்குமாகப் புனையப்பட்டுள்ளன.

நாடு காண் காதை: கவுந்தியடிகள் வழிநிலைமை கூறல், வேனிலின் வெம்மை, பாலையின் கொடுமை, மராம் ஓமை, உழிஞ்சில் மூங்கில் முதலிய மரங்கள் கருகல், நீர் பெறாது மான்கள் கதறல் — முதலியவை அறிவிக்கப்பட்டுள்ளன.

வேனில் காதை: வேனில் வந்தது என்பதைப் பொதிய மலையிலிருந்து வந்த தென்றலாகிய தூதன் அறிவித்தானாம். காமனது படையைச் சேர்ந்த குயிலோன் கூவினானாம். பலவகைப் பூக்களும் பூத்துக் குலுங்கின.

கானல் வரிப் பாடல்களில் இயற்கைக் காட்சிகள் மிகுதி. குன்றக் குரவையில் மலைவளம் இடம் பெற்றுள்ளது.

இந்திர விழவூர் எடுத்த காதையில், புகாரில் இருந்த பட்டினப்பாக்கமும், மருவூர்ப்பாக்கமும் புனையப் படுவதில் மிக்க சிறப்பிடம் பெற்றுள்ளன.

கடலாடு காதையில், கடற்கரைப் புனைவு உள்ளத்தைத் தொட்டு மகிழ்விப்பதாகும்.

ஊர் காண் காதையில், மதுரை மாநகர் சொல்லோவிய மாகத் தீட்டப்பட்டுச் சிறந்துள்ளது.

புகார்ப் புனைவும், மதுரைப் புனைவும் இயற்கைக் காட்சிகள் அல்லவாயினும், அப்பெரு நகரங்களில் இன்னின்னவை இருக்கலாம் என இளங்கோ அடிகள் கற்பனைக் கண்ணால் கண்டே புனைவு செய்திருக்க வேண்டும்.

**அந்தி மாலைப் புனைவு:**

சிலம்பில் அந்தி மாலைச் சிறப்புச் செய் காதையில் அந்தி மாலை நன்கு புனையப்பட்டுள்ளது.

அந்தியில் ஞாயிறு மறைந்தது. நிலமகள் ஞாயிறாகிய கணவனைக் காணாது வருந்தினாள். அடுத்து, கடலை ஆடையாக உடைய அந்த நிலமகள் திங்களாகிய செல்வனையும் காணாமல், நான்கு திசைகளிலும் முகம் பசந்து நெஞ்சம் பனித்துச் சுழன்றாள். அந்தி மாலையில் ஞாயிற்றின் ஒளி மறைந்து திங்கள் ஒளி வீசத்தொடங்கும் வரையும் சிறிது இடை வெளி இருக்கும். அந்தநேரமே இவ்வாறு புனையப்பட்டுள்ளது. 'முகம் பசந்து நெஞ்சம் பனித்து' என்பது இருபொருள் அமையப்பாடப்பட்டுள்ளது.

**"திசைமுகம் பசந்து செம்மலர்க் கண்கள்**
**முழுநீர் வார முழுமெயும் பனித்து"** (4:5, 6)

என்பது பாடல் பகுதி. ஞாயிறு மறைந்ததால் திசையாகிய முகம் பசந்தது; மலராகிய கண்கள் நீர் சொரிந்தன – அதாவது, மலர்கள் தேனைச் சொரியலாயின. நிலம் பனி நீரால் நனையத் தொடங்கியது - என்பது கருத்து.

இந்த நேரம் வந்ததும் காதலரைப் பிரிந்தோர் துன்புற்றனர்: காதலரைப் பிரியாதார் இன்புற்றனர்.

கோவலர் குழலில் முல்லைப் பண் இசைத்தனர். வண்டுகள் முல்லை மலரில் வாய் வைத்து ஊதின.

மலர் மணத்தைத் தென்றலானவன் எங்கும் தூற்றினான் - அதாவது - மணமுடன் தென்றல் வீசியது மகளிர் மணி விளக்கு ஏற்றினர்.

இளைய ராயினும் பாண்டியர் பகைவர்களை வென்றது போல், வெண் பிறை நிலா அந்திமாலை என்னும் குறும்பை வென்று விண்மீன்களை ஆண்டது. குறும்பு = குறும்பர்கள். அந்திமாலை குறும்பராக உருவகிக்கப் பட்டுள்ளது - அதாவது அந்திமாலை கழியத் தொடங்கியது என்பது கருத்து.

காதலரைப் புணர்ந்த மாதவி போன்றோர் களியாட் டயர்ந்தனர் - காதலர் பிரிந்த கண்ணகி போன்றோர் துயரம் பெருகினர். காமவேள் வெற்றிக் களிப்புடன் திரியலானான். அந்திமாலை நிகழ்ச்சிச் சுருக்கம் இது.

இளங்கோ இதற்கென்று ஒரு தனிக்காதை செலவிட் டுள்ளார். முப்பது காதைகள் வேண்டுமே என்பதற்காக இவ்வாறு செய்திருப்பாரோ!

# 16. உவமை - உருவகங்கள்

சிலப்பதிகாரத்தில் எத்தனையோ உவமைகளும் உருவகங்களும் வந்துள்ளன. தாமரை போன்றமுகம் என்னும் பொருளில் தாமரை முகம் என்று சொல்லின் அது உவமை. முகமாகிய - அதாவது முகம் என்னும் தாமரை என்னும் பொருளில் முகத்தாமரை என்று சொல்லின் அது உருவகம். சில காண்பாம்:

**உவமைகள்**

மனையறம் படுத்த காதை: அமளிமிசை கோவலனும் கண்ணகியும் ஞாயிறும் திங்களும் ஒன்றாயிருந்தது போன்ற காட்சியினராய் அமர்ந்திருந்தனராம்:

> **"முதிர்கடல் ஞாலம் முழுவதும் விளக்கும்**
> **கதிர் ஒருங்கிருந்த காட்சி போல"** (2:30, 31)

'கதிர் ஒருங்கிருந்த' என்பதைக் கொண்டு இரண்டு கதிர்கள் என்பது பெறப்படும். இப்போது பெண்கள் பெரிய உரிமை எடுத்துக் கொள்ளினும், தொடக்கத்தில் கோவலன் செய்த திருவிளையாடல்களையும் கண்ணகி அடக்கமாயிருந்ததையும் நோக்குங்கால், கோவலனை ஞாயிறாகவும் கண்ணகியைத் திங்களாகவும் கூறலாம். கதிர்கள் இரண்டும் ஒன்றாயிருத்தல் இல்லையாதலின், இது இல்பொருள் உவமை எனப்படும். வடமொழியில் அபூத உவமை என்பர்.

இந்தக் காதையின் இறுதி வெண்பாவில் இரண்டு உவமைகள் உரைக்கப்பட்டுள்ளன. இருவரும் காமனும் அவன் மனைவி இரதியும் போல் தோற்றத்தில் காணப்

பட்டனராம். ஆண் பாம்பும் பெண் பாம்பும் ஒன்றோடு ஒன்று முறுக்கிக் கொண்டு இன்பம் துய்ப்பதுபோல், இருவரும் தம் உடல்களைப் பின்னிப் பிணைத்துக் கொண்டு பிரிக்க முடியாதபடி இன்பத்தில் மிதந்தனராம்.

**"தூமப் பணிகள் ஒன்றித் தோய்ந்தால் என ஒருவார்**
**காமர் மனைவி யெனக் கைகலந்து..."**

என்பது பாடல் பகுதி. பாம்புகளின் உவமை மிக்க பொருள் பெறுமானம் உடையது.

அந்திமாலைச் சிறப்புச் செய்காதை: தங்கள் பேரரசன் போய் விட்டபோது, குடிகளை வருத்தி வரிவாங்கும் கொடிய குறுநிலமன்னரைப் போல், ஞாயிறு மறைந்ததும் அந்தி மாலை வந்ததாம்:

**"அரைசுகொடுத்து அலம்வரும் அல்லல் காலைக்**
**கறைகெழு குடிகள் கைதலை வைப்ப**
**அறைபோகு குடிகளோடு ஒருதிறம் பற்றி**
**வலம்படு தானை மன்னர் இல்வழிப்**
**புலம்பட இறுத்த விருந்தின் மன்னரின்** (4:8-12)
**மல்லல் மூதூர் மாலைவந் திறுத்தென"** (4:20)

ஞாயிறு பேரரசன் போன்றது. அந்திமாலை குறு நில மன்னர் போன்றது. ஞாயிறு போனதும் மாலை வந்தது.

ர காதையின் இறுதி வெண்பா: வேந்தனின் குடை தன் குடி மக்கட்குக் குளிர்ச்சியும் பகைவர்க்கு வெப்பமும் தருவது போல, இரவில் திங்கள் தோன்றி மாதவிக்கு இன்பமும் கண்ணகிக்குத் துன்பமும் தந்தது.

**"கூடினார்பால் நிழலாய்க் கூடார்பால் வெய்யதாய்க்**
**காவலன் வெண்குடைபோல் காட்டிற்றே – கூடிய**
**மாதவிக்கும் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து**
**போதவிழ்க்கும் கங்குல் பொழுது"**

மன்னன் குடிமக்களை நன்முறையில் காப்பதை, மன்னனின் குடை நிழலிலே மக்கள் மகிழ்ச்சியா யிருக்கிறார் கள் என்று கூறுதல் மரபு. ஒரு குடைக் கீழ் நாடு முழுதும் இருப்பதாகப் பொருள் கொள்ளலாகாது. உலக வழக்கில், 'ஏதோ உங்கள்நிழலில் தான் இருக்கிறோம் – நீங்கள்தான் காப்பாற்றவேண்டும்' – என்று மக்கள் கூறுவது உண்டு.

**"தெண்கடல் வளாகம் பொதுமையின்றி**
**வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்"** (189:1,2)

என்னும் புறநானூற்றுப் பாடல் பகுதியில் உள்ள 'நிழற்றிய' என்னும் சொல் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

தன் குடிமக்கட்குக் குடை குளிர்ச்சி தருகிறது எனில், தன் பகைவர்க்கு எதிர்மாறாக வெப்பம் தருவதாகக் கூறுதல் தானே முறை.

இந்தக் குடைபோல், திங்கள், கோவலனோடு கூடியிருக்கும் மாதவிக்கு இன்பமும், கோவலனைப் பிரிந்திருக்கும் கண்ணகிக்குத் துன்பமும் கொடுக்கிறதாம்.

காதலரைப் பிரிந்தவர்களைத் திங்கள் வருத்தும் செய்தி எண்ணிறந்த இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது.

கனாத்திறம் உரைத்த காதை: மாலதி என்பவள் தன் மாற்றாள் குழந்தைக்குப் பால் புகட்டியபோது பால் விக்கிக் குழந்தை இறந்து விட்டது. மாலதி அஞ்சி, குழந்தையைப் பிழைக்கச் செய்யுமாறு தெய்வங்களை வேண்டிக் கொண்டிருந்தபோது இடாகினி என்றும் பேய் அக் குழந்தையை விழுங்கிவிட்டது. உடனே மாலதி இடியோசை கேட்ட மயில் போல் ஏங்கி அழுதாளாம்:

**"இடியுண்ட மஞ்ஞைபோல் ஏங்கி அழுதாள்"** (23)

இந்த உவமை சிக்கலாய்த் தோன்றுகின்றது. மழைவரப் போகிறது எனில் மயில் தோகை விரித்தாடும் என்பதாக

ஒரு கருத்து சொல்லப் படுவதுண்டு. ஆனால், இடியுண்ட மயில்போல் ஏங்கி அழுதாள் என்பதை நோக்குங்கால் இடி இடித்தால் மயில் அஞ்சித் துன்புறும் என்பது போன்ற கருத்தே கிடைக்கிறது. இது சரியா?

இங்கே ஞானசம்பந்தரின் திருவையாற்றுப் பதிகத்தில் உள்ள தேவாரப் பாடல் ஒன்று நினைவைத் தூண்டுகிறது. மயில்கள் நடனம் ஆடுகின்றனவாம் - முகில் இடி இடிக்கிறதாம் - நடனத்தைக் கண்டதும் இடியொலியைக் கேட்டதும் மழை வருமோ என அஞ்சி மந்திகள் (குரங்குகள்) மரத்தின் உச்சியில் ஏறி மழைவரும் நிலைமையைத் தெரிந்துகொள்ள முகிலைப் பார்த்தனவாம்.

**"வலம்வந்த மடவார்கள் நடமாட**
**முழவுஅதிர மழைஎன்று அஞ்சிச்**
**சிலமந்தி அலமந்து மரமேறி**
**முகில் பார்க்கும் திருவையாறே" (3:1)**

என்பது பாடல் பகுதி. நடனம் ஆடும் மயில்கள் கோயிலைச் சுற்றிவரும் மடவாரே. அவர்கள் நடப்பது மயில்கள் நடப்பது போல் தெரிகின்றதாம். இடியொலி என்பது கோயிலில் அடிக்கும் முழவின் ஒலியே. மடவாரின் நடையை மயில் நடையாகவும் முழவொலியை இடியொலியாகவும் மந்திகள் மாறி எண்ணிவிட்டனவாம். ஞானசம்பந்தரின் இந்தப் பாடலில் உள்ள இலக்கிய நயம் மிகவும் சுவைக்கத் தக்கது.

மயில் தொடர்பாக இந்தப் பாடலிலிருந்து கிடைப்பது இடியொலியுடன் மழைவரும் அறிகுறி தோன்றின் மயில்கள் மகிழ்ச்சியுடன் நடனமாடும் என்னும் செய்தியாகும். இளங்கோவின் பாடலுக்கும் ஞானசம்பந்தரின் பாடலுக்கும் இடையே முரண்பாடு தெரிகிறதே. இந்தச் சிக்கலுக்குத் தீர்வு என்ன? ஒருவேளை, மிகவும் கடுமையாகத் தொடர்ந்து

இடி இடிப்பின் மயில் அஞ்சுமோ! விலங்கு - பறவை நூல் வல்லுநரிடம் கேட்டால் தெரியலாம்.

**உலக இடை கழி**

நாடு காண் காதை: புகாரின் வெளிக் கோபுர வாயிலைக் கடந்து கோவலனும் கண்ணகியும் சென்றார்களாம். அவ்வழியாக உலகத்து வாணிக மக்களும், சுற்றுலா வரும் மக்களும் போய் வருவதால், அந்த இடம் 'உலக இடைகழி' என இளங்கோவால் இயம்பப்பட்டுள்ளது. பம்பாய் 'இந்தியாவின் வாயில்' (Gate of India) என்று சொல்லப்படுகிறது. புகாரின் கோபுர வாயிலோ உலக இடைகழி (Gate of World) எனச் சிறப்பிக்கப் பெற்றுள்ளது. வெளியில் செல்லும் தெரு கோபுர வாயிலிலிருந்து தொடங்குகிறது. இது, மலையிலிருந்து தொடங்கும் பெரிய ஆறு போன்று இருக்கின்றதாம்! கோபுரவாயில் மலை — தெரு ஆறு. பாடல்:

**"மலைதலைக் கொண்ட பேர்யாறு போலும்**
**உலக இடைகழி ஒருங்குடன் நீங்கி"** (10:26, 27)

என்பது பாடல் பகுதி. பெரும்பாலும் ஆறுகள் மலைகளிலிருந்து தோன்றுவன. 'மலை தலைக் கொண்ட' என்றால், 'மலையைத் தொடக்க இடமாகக் கொண்ட' என்பது பொருளாம். "மலைத் தலைய கடல் காவிரி" (6) என்னும் பட்டினப்பாலைப் பகுதி ஈண்டு ஒப்புநோக்கத் தக்கது. மற்றும், நீண்ட தெரு ஆறு கிடந்தாற்போல் இருப்பதாகக் கழக இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளது:

**"ஆறு கிடந்தன்ன அகல் நெடுந்தெரு**
(நெடுநல்வாடை - 30)

**யாறு கிடந்தன்ன அகல் நெடுந்தெரு"**
(மதுரைக்காஞ்சி - 359)

என்பன பாடல் பகுதிகள். 'உலக இடைகழி' என்பது புகாருக்குப் புதுப்பெருமை அளிக்கின்றதன்றோ?

பல வகையான பறவைகளின் ஒலி, வெற்றிவேந்தரின் போர்முனை ஒலிபோல் கேட்டதாம்:

**"உள்ளும் ஊரலும் புள்ளும் புதாவும்**
**வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்**
**பல்வேறு குழூஉக் குரல்பரந்த ஓசையும்"** (117-119)

வெற்றி பெற்றவர்கள் எழுப்பும் ஆரவார ஒலி எத்தகையது என்பதை, இந்தக் காலத்துத் தேர்தலில் வெற்றி பெற்றவர்களும் அவரைச் சார்ந்தவர்களும் எழுப்பும் ஒலியைக் கொண்டு புரிந்து கொள்ளலாம்.

**யாக்கை நிலையாமை**

சாரணர்கள் கவுந்திக்கு அருளுரை கூறுகின்றனர்: தீ யூழ் தீமை தருவதை யாராலும் தடுக்கமுடியாது. விதை விதைத்தால் அது பயிராகிப் பயனைக் கட்டாயம் தருதல் போல், நல்லூழ் இருப்பின் நல்ல பயன் கிடைத்தே தீரும். காற்று வீசும் வெளி இடத்தில் விளக்கு அணைந்து விடுதல் போல, உரிய காலத்தில் உயிர் உடம்பினின்றும் பிரிந்து விடும். பாடல்:

**"ஒழிகென ஒழியாது ஊட்டும் வல்வினை**
**இட்ட வித்தின் எதிர்ந்து வந்துஎய்தி**
**ஒட்டுங் காலை ஒழிக்கவும் ஒண்ணா**
**கடுங்கால் நெடுவெளி இருஞ்சுடர் என்ன**
**ஒருங்குடன் நில்லா உடம்பிடை உயிர்கள்"**
(10:171-174)

இது பாடல் பகுதி. விரும்பினும் விரும்பாவிடினும் நடப்பது நடந்தே தீரும். ஈண்டு நாலடியாரில் உள்ள,

**"உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா**
**பெறற்பா லனையவும் அன்னவாம்"** (பழவினை-4)

*என்னும் பாடல் ஒப்புநோக்கத் தக்கது.*

**வேங்கடவன் கோலம்**

*வேங்கட மலையின் உச்சியில், ஒரு பக்கம் தெரியும் ஞாயிற்றுக்கும் மற்றொரு பக்கம் தெரியும் திங்களுக்கும் இடைப்பட்ட பகுதியில், நீலநிற முகில், மின்னலாகிய புதுப் பொன்னாடை உடுத்து, இந்திரவில்லாகிய அணிகலனைப் பூண்டு நின்றாற் போல், திருமால் ஒருகையில் ஆழியும் (சக்கரமும்) மற்றொரு கையில் வெண் சங்கும் ஏந்தி, மார்பிலே ஆரம் அணிந்து, பூவாடை போர்த்துப் பொலிவுடன் நின்றகோலத்தில் உள்ளாராம் - என்று மாங்காட்டு மறையவன் கோவலனிடம் கூறினான்.*

**"வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்**
**ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை**
**விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி**
**இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து**
**மின்னுக் கோடிஉடுத்து விளங்குவில் பூண்டு**
**நன்னிற மேகம் நின்றது போலப்**
**பகையணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்**
**தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி**
**நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு**
**பொலம்பூ ஆடையின் பொலிந்து தோன்றிய**
**செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்"** (11:41-51)

*இது பாடல் பகுதி. பரிபாடலிலும் இது கூறப்பட்டுள்ளது.*

**"பருவம் வாய்த்தலின் இருவிசும்பு அணிந்த**
**இருவேறு மண்டிலத்து இலக்கம் போல**
**நேமியும் வளையும் ஏந்திய கையால்"** (13:7-9)

*இருவேறு மண்டிலம் = ஞாயிறும் திங்களுமாகும்.*

இரட்டைக் காப்பியங்களுள் ஒன்றான மணிமேகலை யிலும் ஞாயிறு - திங்கள் தோற்றம் இவ்வாறு கூறப் பட்டுள்ளது. புகார் என்னும் பெண், மாலையில் ஒரு பக்கம் வெண்தோடும் மற்றொரு பக்கம் பொன்தோடும் அணிந்திருந்தாற் போன்று, கீழ்பால் திங்களும் மேல் பால் ஞாயிறும் விளங்கின எனக்கூறப்பட்டுள்ளது.

**"புலவரை யிறந்த புகாரெனும் பூங்கொடி** (5:109)
**குணதிசை மருங்கில் நாள்முதிர் மதியமும்**
**குடதிசை மருங்கில் சென்றுவீழ் கதிரும்**
**வெள்ளி வெண் தோட்டோடு பொன்தோடாக"**
(5:119-121)

இது பாடல் பகுதி. மாலையில் ஒரே நேரத்தில் கிழக்கே திங்களும் மேற்கே ஞாயிறும் காணப்படுவது ஆங்கிலப் பாடல் ஒன்றிலும் அறிவிக்கப் பட்டுள்ளது. லார்டு டென்னிசன் (Lord Tennyson) இயற்றிய "The Lotos Eaters" என்னும் பாடல் அது. யூலிசெஸ் (Ulysses) என்னும் கிரேக்க மன்னனின் போர் மறவர்கள், ஆசியாமைனரில் உள்ள எதிரியின் 'ட்ராய்' (Troy) என்னும் பகுதியை வென்று, தமது 'இதாகா' (Ithaca) என்னும் பகுதிக்குத் திரும்பி வந்து கொண்டிருந்த வழியில் ஒரு தீவில் தங்கினார்களாம். அவர்கள் அத்தீவில் மாலையில் ஞாயிறுக்கும் திங்களுக்கும் இடையே அமர்ந்திருந்தார்களாம். பாடல்:

"They sat them down upon the yellow sand
Between the sun and moon upon the shore"
(5:1,2)

என்பது பாடல் பகுதி. இளங்கோவின் சிலம்புக்கு நயம் கூட்டுவதற்காக, இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் முறையில் வேறு மூன்று நூற்பாடல்கள் ஈண்டு எடுத்துக் காட்டப்பட்டன.

**நிலம் திரிதல்**

வேனில் (வெயில்) காலத்தோடு ஞாயிற்றின் கொடிய வெப்பமும் சேர்ந்து கொண்டதால், முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் தம் நிலை மாறிப் பாலைவனமாக மாறினவாம். இதற்குப் பொருத்தமான உவமை தரப் பட்டுள்ளது. அமைச்சர் முதலான துணைவர்களோடு அரசனும் முறைமாறி நடக்க, நல்ல அரசியல் இன்மையால் வருந்தும் நாட்டைப்போல நிலம் திரிந்ததாம்.

> **"கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி**
> **வேத்தியல் இழந்த வியனிலம் போல**
> **வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்**
> **தானலம் திருகத் தன்மையில் குன்றி**
> **முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**
> **நல்லியல் பழிந்து நடுங்குதுயர் உறுத்துப்**
> **பாலை என்பதோர் படிவங் கொள்ளும்"** (11:60:66)

கோத்தொழிலாளர் = அமைச்சர் முதலான அரச வினைஞர்கள். வேனலம் கிழவன் = வேனில் காலம் கிழவன் என உருவகிக்கப் பட்டுள்ளது. கோத் தொழிலாளர் போன்றது வேனில். வெங்கதிர் வேந்தனாகிய ஞாயிறு அரசனுக்கு ஒப்புமை.

**புறஞ்சேரி இறுத்த காதை**

கோசிகன் வெயிலால் வாடிய மாதவிக் கொடியைப் பார்த்து, கோவலன் பிரிந்ததால் கொடுந்துன்பம் அடைந்த மடந்தையாகிய மாதவி போல நீயும் வருந்தினையோ – என்றான்.

> **"கோவலன் பிரியக் கொடுந்துயர் எய்திய**
> **மாமலர் நெடுங்கண் மாதவி போன்றுஇவ்**
> **அருந்திறல் வேனிற் கலர்களைந் துடனே**
> **வருந்தினை போலும் நீ மாதவி"** (13:48-51)

கொடி மாதவிக்கு மடந்தை மாதவி ஒப்புமையாக்கப் பட்டுள்ளாள். பொருத்தமான உவமை. சொல் விளையாட்டு இது.

கோசிகன் கோவலனை நோக்கி, நின் பிரிவால் உன் தந்தையும் தாயும் சுற்றமும் மணி இழந்த நாகப்பாம்பு போலவும் உயிர் பிரிந்த உடம்புபோலவும் நிலைமாறிக் கிடக்கின்றனர் என்றான்.

**"இருநிதிக் கிழவனும் பெருமனைக் கிழத்தியும்**
**அருமணி இழந்த நாகம் போன்றதும்**
**இன்னுயிர் இழந்த யாக்கை என்னத்**
**துன்னிய சுற்றம் துயர்க்கடல் வீழ்ந்ததும்"** (13:57-60)

கோவலனுக்கு மாணிக்கமும் உயிரும் உவமையாக்கப் பட்டுள்ளன. மற்றும், பெரும்பெயர் மூதூர் இராமன் பிரிந்த அயோத்திபோல் பேதுற்றதாம். இங்கே கோவலனுக்கு இராமன் ஒப்புமை. (அருந்திறல் = இராமன்).

**"அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்**
**பெரும்பெயர் மூதூர்பெரும்பே துற்றதும்"** (13:65,66)

காட்சிக்காதை:- சேரன் செங்குட்டுவன் பேராற்றங் கரையிலே மணல் குன்றிலே வந்து தங்கியிருந்தபோது, மலைவாழ் மக்கள் பலவகையான காணிக்கைப் பொருள்களைச் சுமந்து கொண்டு வந்து செங்குட்டுவனுக்குக் கொடுக்க இருந்தனர். இதற்குச் சேரனின் சிறப்பை அறிவிக்கும் உவமை ஒன்று கூறப்பட்டுள்ளது. சேரனிடம் தோற்ற பகை மன்னர்கள் அவனுக்குப் பணிந்து திறைப் (கப்பப்) பொருளைச் சுமந்து கொண்டு வந்து சேரனைக் காணும் வாய்ப்புக்காக நின்றபடிக் காத்திருந்தார்களாம். அதுபோல், மலைவாழ் மக்கள் காத்திருந்தார்களாம்.

**"இறைமகன் செவ்வி யாங்கணும் பெறாது**
**திறைசுமந்து நிற்கும் தெவ்வர் போல"** (25:35, 36)

என்பது உவமைப் பகுதி. இறைமகன் = சேரமன்னன். செவ்வி = நேரில் காணும் நேரம். யாங்கணும் பெறாது = எவ்விடத்தும் பெறாமல். அதாவது, கப்பம் கட்டத் தலைநகர் வஞ்சி சென்றும் காணமுடியவில்லை. மலைவளங் காண மன்னன் சேரன் சென்றுள்ளான் என்று அறிந்து அங்கே சென்றும், விரைவில் - எளிதில் காணமுடிய வில்லையாம். இது சேரன் பெருமைக்குச் சான்று. இந்தக் காலத்திலும், பெரிய மனிதர்கள் என்று தங்களை எண்ணிக் கொண்டிருக்கும் மேதைகள் சிலரைக் காண நெடு நேரம் வரிசையில் காத்திருப்பது உண்டல்லவா?

கால்கோள் காதை:- சேரன் செங்குட்டுவன் பகைவ ரோடு போர் புரிய வஞ்சியினின்றும் புறப்பட்டு எழுந்தது, அரக்கரோடு போர்புரிய இந்திரன் புறப்பட்டதுபோல் இருந்ததாம்.

> **"தானவர் தம்மேல் தம்பதி நீங்கும்**
> **வானவன் போல வஞ்சி நீங்கி"** (26:78, 79)

தானவர் = அரக்கர், தம்பதி = இந்திரன் நகரம். வானவன் = இந்திரன்.

இரை வேட்டு எழுந்த அரிமா (சிங்கம்) யானைக் கூட்டத்தின்மேல் பாய்ந்தாற்போல் சேரன் பகைவர்கள்மேல் சீறிப் பாய்ந்தானாம்:

> **"இரைதேர் வேட்டத்து எழுந்த அரிமாக்**
> **கரிமாப் பெருநிரை கண்டுஉளம் சிறந்து**
> **பாய்ந்த பண்பின்"** (26:188-190)

என்பது உவமைப்பகுதி.

**முகமதியம்**

செங்குட்டுவன் கால்களில் அணிந்துள்ள கழல்கள், அவன் வென்று அடிமையாக்கிய மன்னர்களின் முடியைத்

தேய்க்கின்றனவாம். பகைவர்க்கு அவ்வாறு இருக்கும் சேரன் தன் குடிமக்கட்கு அருள் புரியும்போது அவனது மலர்ந்த குளிர்ந்த முகத்தைப்போல் மூதூரில் திங்கள் தோன்றியதாம்

**"முடிபுறம் உறிஞ்சும் கழல்கால் குட்டுவன்**
**குடிபுறந் தருங்கால் திருமுகம் போல**
**உலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்**
**பலர்புகழ் மூதூர்க்குத் காட்டி நீங்க"** (28:37-40)

பெண்களின் முகத்திற்குத் திங்களை உவமையாகச் சொல்வது பெருவாரியான வழக்கு. இங்கே திங்களுக்குச் சேரன் முகம் ஒப்பாக்கப் பட்டிருப்பது ஒரு புதிய ஆட்சி. இது குளிர்ச்சி கருதிக் கூறப்பட்டுள்ளது. (பிறைமதி உலகு தொழத் தோன்றுகிறது.)

பகைவரிடம் கடுமையாகப் போரிடும் பெரிய யானை, சிறார்களிடம் மென்மையாக நடந்து கொண்டு, நீர்த்துறை யில் தன் கொம்புகளைக் கழுவும் அவர்களுடன் விளையாடுவது போல, அதியமான் பகைவர்களிடம் கடுமையாய் நடந்து கொள்ளினும் ஔவையார் போன்ற புலவர் பெருமக்களிடம் இனிமையாய் நடந்து கொள்வான் என்னும் கருத்தில் ஔவையார் பாடிய புறநானூற்றுப் பாடல் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. பாடல்;

**"ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்**
**நீர்த்துறை படியும் பெருங்களிறு போல**
**இனியை பெரும எனக்கே மற்றதன்**
**துன்னருங் கடாஅம் போல**
**இன்னாய் பெருமநின் ஒன்னா தோர்க்கே"** (94)

இதுபாடல். எவ்வளவு நயமான கருத்து!

வாழ்த்துக் காதை - உரைப்பாட்டு மடை:- வடபுலம் சென்று இமயமலையிலிருந்து சிலை செய்தற்கு வேண்டிய கல்லைக் கொணரவேண்டும் என்றிருந்த சேரன் செங்குட்டு வனிடம், வடமன்னர்கள் தென்புல மன்னர்களை

இகழ்ந்தனர் என்ற செய்தி கூறினதும் அவன் கொதித்து எழுந்ததற்கு உவமையாக, இயல்பாகவே உருண்டு கொண்டிருக்கும் மணிவட்டை (சக்கரத்தை) ஒரு குறுந்தடி கொண்டு தள்ளி மேலும் விரைந்து ஓடச் செய்யும் செயல் உவமையாக்கப்பட்டுள்ளது. "உருள்கின்ற மணிவட்டைக் குணில்கொண்டு துரந்தது போல்" என்பது உவமைப் பகுதி - (29; உரைப்பாட்டு மடை)

நூலின் இறுதியில் 'நூற் கட்டுரை' என்னும் தலைப்பில் ஒரு நயமான - திறமையான உவமை கூறப்பட்டுள்ளது. ஒரு முகம்பார்க்கும் கண்ணாடியிலே நீண்ட பெரிய மலையைக் காட்டிக் காணச் செய்யும் அற்புதம் போல, ஒரு பெரிய வரலாறு சிலப்பதிகாரம் என்னும் நூலில் அடக்கிச் சொல்லப்பட்டுள்ளது – பாடல்:

**"ஆடி நிழலின் நீடிருங் குன்றம்**
**காட்டுவார் போல் கருத்து வெளிப்படுத்து**
**மணி மேகலைமேல் உரைப்பொருள் முற்றிய**
**சிலப்பதி காரம் முற்றும்"** (15-18)

இது பாடல் பகுதி.

**உருவகம்**

**மீனரசு**

அந்தி வானத்திலே திங்களாகிய அரசன் தோன்றி மாலையாகிய பகையை ஓட்டிப் பால்கதிர் பரப்பி விண் மீன்களாகிய குடிகளை ஆளுவதாக உருவகம் செய்யப் பட்டுள்ளது.

**"அந்தி வானத்து வெண்பிறை தோன்றிப்**
**புன்கண் மாலைக் குறும்பு எறிந்து ஓட்டிப்**
**பான்மையின் திரியாது பால்கதிர் பரப்பி**
**மீனர சாண்ட வெள்ளி விளக்கத்து"** (4:23-26)

இது பாடல் பகுதி. மாலையைப் பகைக் குறும்பு என்றதால் வெண்பிறையை வெற்றி வேந்தனாகக் கொள்ளல் வேண்டும். மன்னர்கள் மண்ணிலேயிருந்து மக்களை ஆளுவது போல், பிறைத் திங்கள் விண்ணிலேயிருந்து விண்மீன்களை ஆள்கின்றது. மாலையைக் குறும்பாக உருவகித்துள்ளார். மாலைக் குறும்பு = ஓரிட உருவகம்.

**பொய்கைப் பெண்**

பொய்கையாகிய பெண் அன்னமாகிய நடையையும், ஆம்பலின் மணமாகிய நறுமணப் பொருளையும், தாமரை ஆகிய வாயையும் அறல் மணலாகிய கூந்தலையும் வண்டுகளாகிய பாணர்களின் பண்ணையும் குவளையாகிய கண்ணையும் உடைத்தாயிருக்கிறாள். பொய்கையைச் சுற்றிப் பறவைகளின் ஒலியாகிய முரசம் முழங்குகிறது.

**"அன்ன மென்னடை நன்னீர்ப் பொய்கை**
**ஆம்பல் நாறும் தேம்பொதி நறுவிரைத்**
**தாமரைச் செவ்வாய்த் தண்அறல் கூந்தல்**
**பாண்வாய் வண்டு நேர்திறம் பாடக்**
**காண்வரு குவளைக் கண்மலர் விழிப்ப**
**புள்வாய் முரசமொடு......"** (4:72-77)

என்பது பாடல் பகுதி.

**உழவு**

மாடல மறையோன் தன் நாக்காகிய ஏராலே உழுது செங்குட்டுவனின் செவியாகிய வயலிலே உயர்ந்த அறவுரையாகிய விதையை விதைத்தானாம்.

**"மறையோன் மறைநா உழுது வான்பொருள்**
**இறையோன் செவி செறுவாக வித்தலின்"**
(28:187,188.)

**மண்ணக மடந்தை**

கடலாகிய ஆடையும் மலையாகிய முலையும் பெரிய ஆறாகிய மார்பு மாலையும் முகிலாகிய கூந்தலும் கொண்ட நிலம் (மண்ணகம்) என்னும் பெண்ணின் இருளாகிய போர்வையை நீக்கிக் கதிர் பரப்பி ஞாயிறு தோன்றிற்றாம்.

**"அலைநீர் ஆடை மலைமுலை ஆகத்து**
**ஆரப் பேரியாற்று மாரிக் கூந்தல்**
**கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை**
**புதையிருள் படாஅம் போக நீக்கி**
**உதய மால்வரை உச்சித் தோன்றி**
**உலகுவிளங்கு அவிரொளி மலர்கதிர் பரப்பி"** (5:1-6)

அலை நீர் = கடல். ஆகம் = மார்பு. ஆரம் = மார்பு மாலை. மாரி = முகில் (மேகம்). படாஅம் = படாம் = போர்வை.

**பொய்யாக் குலக்கொடி**

பல்வேறு மரங்களிலிருந்து அடித்துக்கொண்டு வரும் மலர்களாகிய மாலையும் மேகலையும், கரையாகிய அல்குலும், மணல் குன்றுகளாகிய முலைகளும், முருக்க இதழாகிய சிவந்த வாயும், முல்லையாகிய பற்களும், கயலாகிய கண்களும், அறலாகிய கூந்தலும் கொண்டுள்ளாள் வையை என்னும் பொய்யாக் குலக் கொடி. பாடல்:

**"குடசமும் வெதிரமும் கொழுங்கொடிப் பகன்றையும்**
**பிடவமும் மயிலையும் பிணங்கரில் மணந்த**
**கொடுங்கரை மேகலைக் கோவை யாங்கணும்**
**மிடைந்துசூழ் போகிய அகன்றேந்து அல்குல்**
**வாலுகம் குவைஇய மலர்ப்பூந் துருத்திப்**
**பால்புடைக் கொண்டு பன்மலர் ஓங்கி**
**எதிரெதிர் விளங்கிய கதிரிள வனமுலை**
**வரைநின் றுதிர்த்த கவிர்இதழ்ச் செவ்வாய்**

**அருவி முல்லை அணிநகை யாட்டி**
**விலங்குநிமிர்ந்து ஒழுகிய கருங்கயல் நெடுங்கண்**
**விரைமலர் நீங்கா அவிர்அறல் கூந்தல்**
**உலகு புரந்தூட்டும் உயர்பேர் ஒழுக்கத்துப்**
**புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி**
**வையை என்ற பொய்யாக் குலக்கொடி"** (13:157-170)

இது பாடல் பகுதி. குடசம் முதலிய மர இனங்கள். வாலுகம் = மணல் குன்று. கவிர் இதழ் = முருக்க மலரின் இதழ். பூங்கொடி வையை = வையை ஆறு என்னும் பெண். இது புலவர்களால் புகழ்ந்து போற்றப்பட்டது. நீர் பொய்க்காமல் ஒழுகுவதாம். ஈண்டு கம்பர் கோதாவரியைத் 'தண்ணென் ஒழுக்கமும் தழுவிய' தாகக் கூறியிருப்பது ஒப்புநோக்கத்தக்கது. பாண்டியர் குலத்துக்கு உரியதாம்.

**நோயும் மருந்தும்**

போர் மறவர்கள் போர்க்களப் பாசறையிலே தங்கி இருந்த போது, அவர்களின் மனைவிமார்களின் கவர்ச்சியான கடைக்கண் பார்வையை மனக்கண் முன் நோக்கி நோக்கி வருந்தினார்களாம். அந்தக் கடைக்கண் எங்கே இருக்கிறது? கூந்தலாகிய முகிலுக்குள் இருக்கும் முகமாகிய திங்களிடம் உள்ள புருவமாகிய வில்லின் கீழ்க் கண்கள் உள்ளன. அந்தக் கண்கள் மன்மதனின் மலராகிய அம்புகளை வென்று செவ்வரி படர்ந்துள்ளனவாம். இப்போது போர் மறவர்கள் போர்க் களப் பாசறையினின்றும் வெற்றியுடன் வீட்டிற்கு வந்து விட்டார்கள். மறவர்களின் மனைவிமார்கள் தங்கள் கடைக் கண் பார்வையை அவர்களிடம் தூதாக அனுப்புகிறார் களாம். அதாவது, கடைக் கண்ணால் காதல் உணர்வு தோன்ற நோக்குகிறார்களாம். பிரிந்து பாசறையிலேயே இருந்த போது நினைக்கச் செய்து நோய் (மன்நோய்) உண்டாக்கிய கண்கள், இப்போது அந்த நோய்க்கு மருந் தாகிக் கணவரை இன்புறுத்துகின்றனவாம். பாடல்:

**"மைம்மலர் உண்கண் மடந்தையர் அடங்காக்**
**கொம்மை வரிமுலை வெம்மை வேதுநீஇ**
**அகிலுண விரிந்த அம்மென் கூந்தல்**
**முகில்நுழை மதியத்து முரிகருஞ் சிலைக்கீழ்**
**மகரக் கொடியோன் மலர்க்கணை துரந்து**
**சிதர்அரி படர்ந்த செழுங்கடைத் தூதும்**
**மருந்தும் ஆயது "** (28:15-21)

இது பாடல் பகுதி. முகில் கூந்தல், மதியம் முகம், சிலை (வில்) புருவம், கடைக் கண் தூது.

பிரிந்திருந்தபோது நோய் உண்டாக்கிய கண்கள் சேர்ந்திருக்கும் இப்போது அந்நோய்க்கு மருந்தாயுள்ளது என்னும் கருத்தோடு ஒத்த திருக்குறள் ஒன்று நினைவைத் தூண்டுகிறது:

**"இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு**
**நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து"** (1091)

என்பது பாடல். இவளுடைய மையுண்ட கண்களில் இரட்டைப் பார்வை உண்டு; அவற்றுள் ஒரு பார்வை காம நோய் தரும் பார்வை; மற்றொன்று அந்நோய் நீக்கும் மருந்து.

மாலை நான்கு மணியானால் சிலருக்குத் தலைவலி வந்து விடும். தேநீர் அருந்தியதும் அது நீங்கி விடும். அந்தத் தலைவலிக்கு மருந்து எது? தேநீர். அந்தத் தலைவலிக்குக் காரணம் எது? அதுவும் அந்தத் தேநீர்தான். கிடைக்காத போது நோய் - கிடைத்த போது மருந்து. மதுவும் அப்படியே - மங்கையும் அப்படியே போலும்! இந்தக் கருத்து, குண நாற்பது என்னும் நூலில் உள்ள-

**"மருந்தின் தீராது மணியின் ஆகாது**
**அருந்தவ முயற்சியின் அகறலும் அரிதே**
**தான்செய் நோய்க்குத் தான்மருந் தாகிய**

**தேனிமிர் நறவின் தேறல் போல**
**நீதர வந்த நிறையழி துயரம்நின்**
**அருளின் அல்லது பிறிதின் தீராது''**

என்னும் பாடல் பகுதியோடு ஒத்து நோக்கற்பாலது. நறவின் தேறல் = மது. நீ என்றது தலைமகளை. தலைமகன் தலைமகளை நோக்கிச் சொல்வதாக அமைந்துள்ளது இப்பாடல்: தலைமகளது நோக்கம் பிள்ளையையும் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டி விடுகின்ற கதையாயுள்ளது. அவளது பார்வையிலே உள்ள கவர்ச்சி அவனது காம நோயைத் தூண்டுகிறது; அவளது பார்வையிலே உள்ள காதல் குறிப்பு அவனுக்கு அமிழ்த மருந்தாகி ஆறுதல் அளிக்கின்றது - அவ்வளவுதான்.

குண நாற்பது நூல் பாடலின் கருத்து, மேற்காட்டிய குறள் கொடுத்த கொடையா யிருக்குமோ! கண் பார்வை நோயாகவும் மருந்தாகவும் இருப்பதாக இளங்கோ கூறி இருப்பதும், அவரது சொந்தக் கற்பனையாக இருக்குமோ?- அல்லது குறள் கொடுத்த கொடையாக இருக்குமோ! சிலம்பு - கானல் வரியிலும் இதனை ஒத்த ஒரு கற்பனை உள்ளது. அதாவது:-

பெண்ணின் கண்கள் செய்த நோயை அவள் முலைகளே தீர்க்க முடியும் என்பதாக ஒரு கருத்து கூறப்பட்டுள்ளது:

**''நிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த**
**உறைமலி உய்யாநோய் ஊர்சுணங்கு மென்முலையே**
**தீர்க்கும் போலும்''** (7:8:3, 4)

என்பது பாடல் பகுதி. முலை தீர்க்கும் என்பது தழுவுதலைக் குறிக்கும்.

இவ்வாறு, இளங்கோ, உவமைகளையும் உருவகங்களையும் தம் நூலில் கையாண்டு நூலை மெருகூட்டி நயப்படுத்தி உள்ளார்.

படிக்காத மக்களும் தமது பேச்சினிடையே கையாளும் மக்கள் கலையாகிய உவமை உருவகங்கள், இலக்கியங்கட்கு இன்றியமையாத அணிகலன்களாகும். சில இலக்கியங்கள், அவற்றில் உள்ள உவமை உருவகங்களால் பெருமதிப்பு பெறுவதும் உண்டு. உவமைகளை மிகுதியாகக் கையாண்டு இருப்பதால் 'உவமைக் கவிஞர்' என்ற பட்டம் பெறுபவரும் உளர்.

இத்தனை உவமைகளைப் புகுத்த வேண்டும் எனத் திட்டமிட்டு வலிந்து புகுத்துபவர்கள் உயர்வுபெற இயலாது. கருத்தோட்டத்தின் ஊடே உவமைகள் இயற்கையாக இழையோடிச் சுவையளிக்க வேண்டும். இளங்கோ இயற்கையாகத் தேவையான இடங்களில் தேவையான அளவு கையாண்டு காப்பியத்தை அணி செய்துள்ளார்.

# 17. காப்பியத்தில் கானல் வரியின் இடம்

## திருப்பு முனை

சிலப்பதிகாரக் காப்பியத்தில் கானல் வரி என்னும் காதை ஒரு திருப்பு முனையாகும். கண்ணகிக்குச் சிலை செய்வதற்கு உரிய கருங்கல்லைச் சுமக்கச் செய்து வட புலத்துக் கனக விசய மன்னர்களின் முடித்தலையை நெரித்தது இந்தக் கானல் வரிப்பாட்டு தான் என மாடல மறையோன் சேரன் செங்குட்டுவனிடமே கூறினான். இந்த வரிப் பாட்டு இல்லையெனில், மதுரைக் காண்டத்திற்கும் வஞ்சிக் காண்டத்திற்கும் இடம் இருந்திருக்காது.

கானல் = கடற்கரைச் சோலை வரி = ஒருவகைப் பாடல் கோவலனும் கண்ணகியும் கானலில் அமர்ந்து பாடிய பாட்டுகள் கானல் வரியாகும்.

புகாரிலே இந்திர விழா நடைபெற்றது. அவ்விழாவில் வழக்கம்போல் மாதவி ஆரவாரமாக ஆடல் பாடல் நிகழ்த்தினாள். பலரும் கண்டு களித்தனர். கோவலனால் இதைப் பொறுக்க முடியவில்லை. தனக்கென்று மாதவி உரிமையாய் விட்டபிறகு, பலரும் களிக்க ஆடலாமா என எண்ணி வெறுப்புற்றான். இது சில ஆடவர்க்கு உரிய ஓர் இயல்பு. தான் எவளை வேண்டுமானாலும் விரும்பலாம் - ஆனால், தன் மனைவி மட்டும் வேறு எவனையும் ஏறெடுத்துக் கூடப் பார்க்கலாகாது. ஒரு மாப்பிள்ளைக்குப் பெற்றோர்கள் பெண் பார்த்துவிட்டு வந்தார்கள். இந்த மாப்பிள்ளை, இதற்கு முன் வேறு மாப்பிள்ளை எவனாவது வந்து அந்தப் பெண்ணைப் பார்த்துவிட்டுப் போனானா?-

அப்படியிருந்தால் அந்தப் பெண் எனக்கு வேண்டாம் - என்று சொன்னானாம். இந்த மாப்பிள்ளைக்கு அண்ணனாய் இருப்பான் போல் தெரிகிறான் கோவலன். மாதவியோ கணிகை குலத்தவளாயினும் கற்புடையவள்.

தன்மேல் கோவலன் வெறுப்புற்றிருக்கிறான் என்பதை அறிந்த மாதவி திறமையாக அவனைக் குளிரச் செய்தாள். பெண்களுக்கா சொல்லித் தரவேண்டும்! முழு நிலாப் பருவம் (Full Moon) வந்தது. ஊரார் கடலாடச் சென்றனர். அப்போது மாதவியும் கோவலனும் கூடக் கடற்கரை ஏகினர். இவர்கள் சென்றதிலேயே பிரிவு இயற்கையாக ஏற்பட்டு விட்டது. குதிரை போன்ற கோவேறு கழுதையின் மேல் கோவலன் சென்றான்; ஒரு வண்டியில் மாதவி சென்றாள்.

கடற்கரைக் கானல் சோலையில் ஒரு புன்னை மர நிழலில் புதுமணல் பரப்பில் ஓர் அறைபோல் சுற்றித் திரைகட்டி மறைவிடமாக்கி உள்ளே கட்டில் இட்டு அதன் மேல் மாதவியும் கோவலனும் அமர்ந்தனர்.

மாதவி வயந்த மாலை கையில் இருந்த யாழை வாங்கினாள். பத்தர், கோடு, ஆணி, நரம்பு இவற்றில் குற்றம் இல்லாத யாழை, பண்ணல், பரிவட்டணை முதலிய எண் வகையாலும் இசையெழுப்பி ஆய்வு செய்தாள் (சோதித்தாள்). விரல்கள் நரம்புகளின் மேல் படர, வளர்தல், வடித்தல் முதலிய இசைக்கரணங்கள் எட்டும் சரிவரப் பொருந்தியுள்ளனவா எனச் செவியால் கேட்டுணர்ந்தாள். கோவலனை வாசிக்கும்படி ஏவவில்லை - வாசிக்க வேண்டிய தாளத்தைத் தொடங்கித் தருவீர் என்று கேட்பவள்போல் கோவலன் கையில் யாழைத் தந்தாள்.

கோவலன் இயற்கையாகக் கானல்வரி வாசித்தான். ஆனால், அதில், ஒரு பெண்மேல் குறிப்புவைத்து வாசித்தாற்

போன்ற அறிகுறியுடன் பாடல்கள் அமைந்திருந்தன. குறும்புக்காகக்கூட - விளையாட்டிற்காகக்கூட இவ்வாறு ஒரு குறிப்பு வைத்திருக்கலாம்; பாடல்களின் கருத்துகள் சுருக்கமாக வருமாறு: —

**1. ஆற்று வரி - வாழி காவேரி**

காவிரியே! சோழன் கங்கையைப் புணர்ந்தாலும் நீ புலவாய் – அதுகற்பு - வாழி. சோழன் குமரியொடு கூடினும் நீ புலவாய் - அது கற்பு - வாழி. புதுப்புனலுடனும் பேரொலியுடனும் நீ செல்வது சோழனுக்கு வளமேயாகும் - வாழி காவேரி - என்று முதலில் பாடினான். இந்த மூன்று கருத்துகட்கும் உரிய மூன்றுபாடல்களை மட்டும் இங்கே காண்பாம்.!

**''திங்கள் மாலை வெண்குடையான்**
**சென்னி செங்கோல் அதுஓச்சிக்**
**கங்கை தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாய் வாழி காவேரி**
**கங்கை தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாதொழிதல் கயல் கண்ணாய்**
**மங்கை மாதர் பெருங்கற்பு**
**என்றறிந்தேன் வாழி காவேரி''** (2)

**''மன்னு மாலை வெண்குடையான்**
**வளையாச் செங்கோல் அதுஓச்சிக்**
**கன்னி தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாய் வாழி காவேரி**
**கன்னி தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாதொழிதல் கயல் கண்ணாய்**
**மன்னு மாதர் பெருங்கற்பு**
**என்றறிந்தேன் வாழி காவேரி''** (3)

**"உழவர் ஓதை மதகோதை**
**உடைநீர் ஓதை தண்பதங்கொள்**
**விழவர் ஓதை சிறந்தார்ப்ப**
**நடந்தாய் வாழி காவேரி**
**விழவர் ஓதை சிறந்தார்ப்ப**
**நடந்த வெல்லாம் வாய்காவா**
**மழவர் ஓதை வளவன்றன்**
**வளனே வாழி காவேரி"** (4)

காவிரியாற்றிற்கு உரிய சோழன் கங்கையாற்றையோ குமரி(கன்னி) யாற்றையோ சேர்ந்தாலும் கயலாகிய கண்ணையுடைய காவேரி சோழனுடன் ஊடல் கொள்ள மாட்டாள். அவ்வாறு ஊடல் கொள்ளாதிருப்பது தான் கற்புடைமையாகும். காவிரியே நீ வாழி - என்பதில் உள்பொருள் உள்ளது. விளையாட்டாகப் பாடிய இது மாதவியின் நெஞ்சில் வினையை விதைக்கத் தொடங்கியது. இனி அடுத்த கருத்துகட்குச் செல்லலாம்.

**2. சார்த்து வரி - புகாரே எம்மூர்**

முன்பு சூளைப் பொய்த்தவர் இவர் என்பதை எப்படி அறிவோம்? சங்கையும் முத்துகளையும் கண்டு, திங்களும் விண்மீன்களும் என எண்ணி அல்லி மலரும் புகாரே எம்மூர். (5).

பெண்கள் வீசிய குவளை மலர்களைக் கண்களே எனச் சிலர் மருண்டு நோக்கும் புகாரே எம்மூர் (6).

அன்று கையுறை ஏந்திவந்தவரை இன்று யாம் வேண்டி நிற்போம் என்பதை முன்கூட்டி அறியோம். கண்ணுக்கும் மலருக்கும் வேறுபாடு தெரியாமல் வண்டு மயங்கும் புகாரே எம்மூர் (7).

இந்தக் கருத்துகள் கொண்ட மூன்று பாடல்களும் தலைவன்மேல் குறைகூறிக் குற்றம் சுமத்தும் பாடல்கள்.

கோவலன் தன்மேல் மாதவியோ தோழிமாரோ குற்றம் சுமத்துவதாக எண்ணும் குறிப்பு உள்ளது.

### 3. அறிவேனேல் அடையேன்

மணலில் வலம்புரிச் சங்கு உழுத சுவடு மறையும்படிப் புன்னை மலர்த்தாது உதிரும் கானலிலே, இவளது கயல்கண் உண்டாக்கிய புண்ணுக்கு முலைகளே மருந்து போலும்! (8)

புலால் தின்னும் பறவை ஓட்டும் சாக்கில் கன்னி ஞாழலைக் கையால் ஓச்சும் இந்த அணங்கு இருப்பதை அறியேன்; அறிந்தால் வந்திரேன். (9)

மீன் விற்கும் உருவத்தில் கூற்றம் இருப்பதை அறியேன் அறிந்தால் வந்திரேன். (10)

யரோ ஒரு பெண்ணை எண்ணிக் கோவலன் கூறுவது போல் பாடல்கள் உள்ளன.

### 4. சிற்றூரில் வாழ்கிறது

பிறரை வருத்தும் காமனுக்குத் துணையான முகம் திங்களாகும். அது சிற்றூரில் வாழ்கிறது. (11)

மகளாய்க் கூற்றம் ஒன்று சிற்றூரில் வாழ்கிறது. (12)

பறவை ஓட்டும் பெண் வடிவம் கொண்ட தெய்வம் ஒன்று வாழ்கிறது. (13)

### 5. இடர் செய்பவை

இடையும், (14), இணை விழிகளும் (15), இணை முலைகளும் (16) இடர் செய்கின்றன.

### 6. உயிர் கொல்வை

உன் குடும்பத்தினர் கடலில் புகுந்து உயிர் கொல்வர்; நீ என் உடலில் புக்கு உயிர் கொல்கிறாய். (17)

உன் தந்தையர் கண்கள் (துளைகள்) பொருந்திய வலையால் உயிர் கொல்வர். நீ நின் கண்ணாகிய வலையால் உயிர் கொல்கிறாய். (18)

உன் குடும்பத்தார் படகால் உயிர் கொல்வர்; நீ நின் புருவத்தால் உயிர் கொல்கிறாய். (19)

## 7. கொடிய-வெய்ய

பவள உலக்கையால் முத்தம் குற்றுபவளின் கண்கள் குவளை மலர்கள் அல்ல; கொடிய - கொடிய (20)

அன்னம் தன் நடையைப் பார்த்து நடக்கும்படி நடப்பவளின் கண்கள் கூற்றம் – கூற்றம் (21)

நீல மலர்களைக் கொண்டு மீன் உணங்கலைத் தின்ன வரும் பறவைகளை ஓட்டுபவளுடைய கண்கள், வேல்கள் அல்ல - அவ்வேலினும் வெய்ய - வெய்ய (22)

## 8. சேரல் மட அன்னம்

மட அன்னமே! அவள் நடையை நீ ஒவ்வாய். அவள் பின் செல்லாதே - தோற்றுவிடுவாய் – பாடல்.

**"சேரல்மட அன்னம் சேரல் நடைஒவ்வாய்**
**சேரல்மட அன்னம் சேரல் நடைஒவ்வாய்**
**ஊர்திரை நீர்வேலி உழக்கித் திரிவாள்பின்**
**சேரல்மட அன்னம் சேரல் நடைஒவ்வாய்"** (23)

இவ்வாறு கோவலன் வேறு பெண்ணொருத்தி மீது மனம் நாடியவன் போன்ற குறிப்பமைத்துச் செயற்கையாகப் பாடினான். இதைக் கேட்ட மாதவி தானும் செயற்கையாக வேறொருவன் மேல் குறிப்பமைத்து யாழ் இசையும் தன் குரல் இசையும் ஒன்றப் பாடலானாள். (24)

வண்டு ஒலிக்க, பூ ஆடை போர்த்து, கயற் கண்ணால் விழித்து அசைந்து நடந்தாய் காவேரியே. நீ இவ்வாறு

நடந்தது நின் கணவன் செங்கோல் வளையாமையாலே யாம். (25)

சோலையில் மயில் ஆடவும் குயில் பாடவும் மாலை அசையவும் நடந்தாய் காவேரி. நீ இவ்வாறு நடந்தது நின் கணவனது வேலின் கொற்றத்தினாலேயாம். (26)

அவன் நாட்டை மகவாய் எண்ணி வளர்க்கும் தாயாக நீ உள்ளாய். ஊழிக்காலம் வரையும் இந்த உதவியை நீக்க மாட்டாய். இது அவன் அருளாலேயே - வாழி காவேரி! (27) இந்த மூன்றுக்கு மட்டும் உரிய பாடல்களைப் பார்க்கலாம். இவை மிகவும் புகழ்பெற்ற சுவைப் பாடல் களாகும்:—

**ஆற்றுவரி**

**"மருங்கு வண்டு சிறந்தார்ப்ப**
**மணிப்பூ ஆடைஅது போர்த்துக்**
**கருங்கயல் கண் விழித்தொல்கி**
**நடந்தாய் வாழி காவேரி**
**கருங்கயல் கண் விழித்தொல்கி**
**நடந்த வெல்லாம் நின்கணவன்**
**திருந்து செங்கோல் வளையாமை**
**அறிந்தேன் வாழி காவேரி"** (25)

**"பூவார் சோலை மயிலாலப்**
**புரிந்து குயில்கள் இசைபாடக்**
**காமர் மாலை அருகசைய**
**நடந்தாய் வாழி காவேரி**
**காமர் மாலை அருகசைய**
**நடந்த வெல்லாம் நின்கணவன்**
**நாம வேலின் திறங்கண்டே**
**அறிந்தேன் வாழி காவேரி"** (26)

**"வாழி அவன்றன் வளநாடு**
**மகவாய் வளர்க்கும் தாயாகி**
**ஊழி உய்க்கும் பேருதவி**
**ஒழியாய் வாழி காவேரி**
**ஊழி உய்க்கும் பேருதவி**
**ஒழியா தொழுகல் உயிரோம்பும்**
**ஆழி யாள்வான் பகல்வெய்யோன்**
**அருளே வாழி காவேரி"** (27)

*காவேரியைப் பெண்ணாக்கி அப்பெண்ணுக்கு ஒரு கணவனைப் படைத்து ஏதேதோ சொல்கிறாள். தனக்கு வேறு கணவன் ஒருவன் இருப்பது போல் தொடர்ந்து சொல்கிறாள்.*

*தலைவா! முத்து பெறு என்கிறாய். முத்து வேண்டா. முத்தைக் கரையில் கொணர்ந்து பூக்களைத் தான் கொண்டு செல்லும் அலை கடலையுடைய புகாரே எம்மூர்.* (28)

*தலைவா! வளையல் கழன்று அலர் தூற்றுவது யாங்ஙனம் அறிவோம்? அன்னத்தையும் புன்னை மலரையும் மதியமும் விண்மீனும் என எண்ணி வண்டுகள் ஆம்பல் மலரை ஊதும் புகாரே எம்மூர்.* (29)

*மாதர்க்குப் பிரிவு தருவாய் என்பதை யாங்ஙனம் அறிவோம்? சிற்றில் சிதைத்த கடலைச் சிறுமியர் தூர்க்கும் புகாரே எம்மூர்.* (30)

*பிரிவைப் பொறுக்காத தலைவியின் மெலிவு, பெற்றோர்க்கு உண்மையை உணர்த்தி விடும்.*

*தோழியே! துணை புணரும் வண்டையும் என்னையும் நோக்கித் தன்னை மறந்தவன் வண்ணம் உணரேன்.* (31)

*அடும்புகாள்! அன்னங்காள்! எம்மை நினையாது விட்டார் விட்டகல்க. நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேம்.* (32)

மாலைப் பொழுதே! நெய்தலே! என் கண்கள் போல் துயிலுவது இல்லையா? துயிலின், கனவில் அவர்வரின் கூறுவாய்! (33)

கடலே! அவர் சென்ற தேர்ச் சுவட்டை அழித்தாய். அவர் போலவே நீயும் என்னை மறந்தாயோ! (34)

தேர்ச் சுவட்டை அலைகள் அழிக்கின்றன. அன்னமே இது தகாது. (35)

அலையே! நீ தேர்ச் சுவட்டை அழித்தாய். நீ உறவு போல் இருந்து உறவு அல்லா யானாய். (36)

(தோழி சொல்வதுபோல்) தலைவா! மன்மதனது அம்புப் புண்ணைத்தலைவி மறைக்கிறாள். அன்னை அறியின் என் செய்கோ! (37)

தலைவா! தலைவி உன்னால் பீர்க்கின் நிறம் கொள்கிறாள். அன்னை கடவுளைத் தொழுது காரணம் அறியின் என் செய்கோ! (38)

தலைவா! தலைவி தனியே துன்புறுகிறாள். அவளது உண்மையான நோயை அன்னை அறியின் என் செய்கோ! (39)

(தலைவி சொல்வது போல்) தோழியே! ஞாயிறு போய் இருள் வந்தது. மயக்கும் இம் மாலை நம்மை மறந்தவர் இருக்கும் நாட்டிலும் உள்ளதோ! (40)

இருளில் கண்கள் நீரைச் சொரிந்தனவே. மயக்கும் இம் மாலை அவர் நாட்டிலும் உளதோ! (41)

பறவைகளின் ஒலிகள் அடங்கின. மயக்கும் மாலை அவர் இருக்கும் இடத்திலும் உளதோ! (42)

ஒருவர் வந்து எம் விளையாட்டை மறப்பித்தார். அவர் நம் மனம்விட்டு நீங்கார். (43)

ஒருவர் வந்து அருள் புரிவாய் என்றார். அவர் நம் மான் போலும் நோக்கை மறவார். (44)

நேற்று ஒருவர் வந்து, அன்னம் துணையுடனே ஆடியதையே நோக்கி நின்றார். அவர் நம்மைப் பிரியார். (45)

குருகே! எம் கானலை வந்து அடையாதே. ஏனெனில், நீ எம் தலைவனுக்குப் பிரிவு நோயை உணர்த்துவதில்லை; அதனால் நீ இங்கு வந்து அடையாதே! (46)

மாலைப் பொழுதே! வலையர் நெய்தல் யாழ் வாசிக்க நீ வந்தாய். என் உயிர் கொள்வாய். நீ வாழி! (48)

பிரிந்தவரின் உயிரை முற்றுகையிட்டாய். முற்றுகை இட்ட மதில்புற வேந்தனுக்கு நீ என்ன உறவு? (மதில்புறத்து நிற்கும் தலைவனைக் குறிப்பிட்டுச் சொன்னது இது) (49)

மாலையே! உலகெங்கும் கண்ணை மூட இருளைக் கொண்டு நீ வந்திருக்கிறாய். அவர் மணந்து பிரிந்ததால் உலகமே வறியதாய்த் தோன்றுகிறது. (50)

கடல் சூழ் தெய்வமே! மாலைப் பொழுதை எண்ணாமல் பொய்ச்சூள் உரைத்தவரின் குற்றத்தைப் பொறுத்தருளும்படி நின் மலரடி வணங்குகிறோம். (51)

இவ்வாறாக, கோவலன் வேறொருத்திமேல் தொடர்பு உள்ளதுபோல் குறிப்பு வைத்துப் பாட, பதிலுக்கு மாதவியும் வேறொருவன் மேல் தொடர்பு உள்ளது போல் குறிப்பு வைத்துப் பாடினாள். ஊழ்வினை வந்து உந்தியதால், கோவலன் மாதவிமேல் சினமும் வெறுப்பும் கொண்டு, பொழுது கழிந்ததால் மாதவியை விட்டுப் பிரிந்து ஏவலருடன் சென்றுவிட்டான். மாதவி உள்ளம் வருந்தி, காதலன் போய்விட்டதால் தனியளாய்த் தன்வீடு சேர்ந்தாள். (52)

உலக இலக்கியங்களுள் ஏதாவது ஒன்றில் இவ்வளவு சுவையான பகுதி இருக்குமா - என்று ஐயுறும் அளவில் இந்தக் கானல் வரி உள்ளது. இளங்கோ அடிகள் இத்தகைய கற்பனையை எங்கு யாரிடம் கற்றாரோ? நம் தமிழ்க் கழக இலக்கியங்களிலிருந்து பிழிந்து எடுத்த சாறாக இருக்குமோ இது! தமிழுக்கே உரியது அகப்பொருள் இலக்கணம் - என்று சொல்கிறார்களே - அதுதானோ இது. எவர் பெயரையும் குறிப்பிடாமல் நிகழ்ச்சியைச் சொல்வது அகப்பொருள்.

**"மக்கள் நுதலிய அகனைந் திணையும்**
**சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்"** (57)

என்பது தொல்காப்பியம் - அகத்திணையியல் நூற்பா. இதில் குறிப்பிட்ட எவர் பெயரையும் கூறாமையால், இதனை முழுக்க முழுக்க நூற்றுக்கு நூறு அகத்திணைப் பகுதி எனலாம். சிலப்பதிகாரம் புறப்பொருளேயாயினும் கானல் வரி மட்டும் அகப்பொருள் அமைந்தது.

கானல் வரியில் பல அகத்துறைகள் உள்ளன. அவை:- தோழி தலைமகனிடம் வரைவு கடாயது. கையுறை மறுத்தல். குறியிடத்துப் போன பாங்கன் தலைமகளின் மிக்க காதலைக் குறிப்பால் அறிந்து உரைத்தது. கழறியதற்கு எதிர் மறுப்பு. தனியாக இடத்தெதிர்ப்பட்ட தலைவியை நோக்கித் தலைமகன் கூறியது. பாங்கன் கேட்பத் தலைமகன் உற்றது உரைத்தல். புணர்ச்சி நீடிக்க இடந்தலைப் பாட்டில் புணர்தலுறுவான் கூறியது. குறியிடத்துக் கண்ட பாங்கன் சொல்லியது. காமம் சாலா இளமையோள் வயின் ஏமம் சாலா இடும்பை எய்தியோன் சொல்லியது. தோழியிற் கூட்டம் கூடிப் பின்பு வந்து வரைவேன் என்றாற்குத் தோழி கூறியது. குறை நயப்பித்தது. காமம் மிக்க கழிபடர் கிளவியாகத் தலைவி கூறியது. அலர் அறிவுறுத்தி வரைவு கடாவியது. பொழுது கண்டு ஆற்றாளாகிய தலைவி

தோழிக்கு உரைத்தது. ஆற்றுவித்தற் பொருட்டுத் தோழி இயற்பழிக்கத் தலைமகள் இயற்பட மொழிந்தது. மாலைப் பொழுது கண்டு தலைவி கூறியது. வரைவு நீட்டித்த இடத்துத் தலைமகன் சிறைப்புறத்தா னாகக் கூறியது.

இவ்வாறு பலதுறைகள் அமைத்துச் சுவையுறப் பாடப் பெற்றது கானல் வரி.

வரிப்பாட்டின் இலக்கணம் தொடர்பாக உள்ளவற்றில் சுவையான ஒன்றே ஒன்றை மட்டும் இங்கே குறிப்பிடலாம். அது, ஒரே அடி இருமுறை மடக்கி வருதலாகும். அதாவது, இரண்டாம் அடி மூன்றாம் அடியாக மடங்கி வரும். அவை:

**''கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாதொழிதல்''** (2)

**''கன்னிதன்னைப் புணர்ந்தாலும் புலவாய்வாழி காவேரி
கன்னிதன்னைப் புணர்ந்தாலும் புலவா தொழிதல்''** (3)

**''விழவர் ஓதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி
விழவர் ஓதை சிறந்தார்ப்ப நடந்த வெல்லாம்''** (4)

**''தவள முத்தம் குறுவாள் செங்கண்
தவள முத்தம் குறுவாள் செங்கண்''** (20)

**''அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண்
அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண்''** (21)

**''புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண்
புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண்''** (22)

**''கருங் கயற்கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழி காவேரி
கருங் கயற்கண் விழித்தொல்கி
நடந்த வெல்லாம்''** (25)

**''காமர் மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி
காமர் மாலை அருகசைய நடந்த வெல்லாம்''** (26)

**"ஊழி உய்க்கும் பேருதவி ஒழியாய் வாழி காவேரி**
**ஊழி உய்க்கும் பேருதவி ஒழியா தொழுகல்"** (27)

**"தெள்ளுநீர் ஓதம் சிதைத்தாய்மற் றென்செய்கோ**
**தெள்ளுநீர் ஓதம் சிதைத்தாய் மற்று"** (34)

**"ஊர்ந்த வழிசிதைய ஊர்ந்தாய் வாழி கடலோதம்**
**ஊர்ந்த வழிசிதைய ஊர்ந்தாய் மற்று"** (36)

**"பொய்தல் அழித்துப் போனார் ஒருவர்**
**பொய்தல் அழித்துப் போனார் அவர்நம்"** (43)

**"நீநல் கென்றே நின்றார் ஒருவர்**
**நீநல் கென்றே நின்றார் அவர்நம்"** (44)

**"நென்னல் நோக்கி நின்றார் ஒருவர்**
**நென்னல் நோக்கி நின்றார் அவர்நம்"** (45)

**"அடையல் குருகே அடையல் எங்கானல்**
**அடையல் குருகே அடையல் எங்கானல்"** (46)

*மேற்காட்டிய பாடல் பகுதியில் இறுதியில் தந்துள்ள 'அடையல் குருகே' என்று தொடங்கும் அடி பாடலின் முதல் அடியாகும். இதுவே இரண்டாம் அடியாகவும் மடங்கி வந்துள்ளது. மற்றைய பாடல் பகுதிகளிலெல்லாம் இரண்டாம் அடிகளே மூன்றாம் அடிகளாக மடங்கி வந்துள்ளன.*

*கானல் வரியைப் பற்றி இதுபோல் எழுதியதைப் படித்தால் முழுச் சுவையும் பெற முடியாது. சிலப்பதிகார நூலை எடுத்து வைத்துக் கொண்டு கானல் வரிப் பகுதியை ஏடு தள்ளி எடுத்துப் பாடல்களை உரக்க இசைத்துப் படித்தாலேயே முழுச் சுவையையும் பெற முடியும். யான் (சு. ச.) இந்தத் தலைப்பில் எழுதியுள்ள விளக்கம், நூலை எடுத்து நேராகப் பாடலைப் படித்துச் சுவைக்கவேண்டும் என்னும் ஆர்வத்தையும் முயற்சியையும் தூண்டும் பரிந்துரையேயாகும்.*

நிற்க, - இந்தக் கால நிலைக்கு ஏற்ற கருத்து ஒன்றை இங்கே விதந்து சுட்டாமல் விடுவதற்கில்லை. மாதவி வாயிலாக இளங்கோவடிகள்,

**"வாழி அவன்தன் வளநாடு**
**மகவாய் வளர்க்கும் தாயாகி**
**ஊழி உய்க்கும் பேருதவி**
**ஒழியாய் வாழி காவேரி"**

என்று பாடியுள்ள பகுதி, நாட்டு மக்களாகிய குழந்தை கட்குத் தாயாக இருந்து எத்தனை ஊழிக் காலமாயினும் நீர் உதவிக் காக்குமாம் காவிரி. இங்கே புறநானூற்றில் உள்ள

**"புனிறுதீர் குழவிக்கு இலிற்று முலைபோலச்**
**சுரந்த காவிரி மரங்கொள் மலிநீர்**
**மன்பதை புரக்கும் நன்னாட்டுப் பொருநன்"** (68:8-10)

என்னும் பாடல் பகுதியும் அம்பிகாபதி காப்பியம் - நாடு நகர் நலங்கூறு காதையில் உள்ள

**"வீட்டு மக்களை விரும்பும் தாய்போல்**
**நாட்டு மக்களை நலமுடன் பேணி......**
**இயங்கும் காவிரி"** (98, 99)

என்னும் பாடல் பகுதியும் இன்ன பலவும் ஒப்புநோக்கத் தக்கன.

ஆனால், பொய்க்காது பேருதவி உய்க்கும் காவிரி, இன்று தமிழ் நாட்டுக்கு அவ்வாறு உதவ முடிகிறதா? காவிரியின் தொடக்க முதல் முடிவு வரை உள்ள பகுதிகள் சமமாக நீர் பெறும் உரிமை உடையவை என்னும் அறநெறி ஏற்கப்படின், புலவர்களின் உரைகள் பொய்யாக மாட்டா. வாழ்க காவிரி.

# 18. காப்பிய முன்னோட்டச் சுவை

காப்பிய ஆசிரியர்கள் தம் காப்பியத்தில் பல்வேறு சுவைகளை அமைப்பர். அவற்றுள் முன்னோட்டச் சுவை மிகவும் மேலானது. முன்னோட்டச் சுவை என்பது நான் (சு.ச.) வைத்த பெயராகும்.

காப்பியத்தில் பின்னால் நிகழப் போகும் செயலை முன்னாலேயே குறிப்பாக அறிவிப்பதை முன்னோட்டம் எனலாம். இந்த முன்னோட்டம், பின்னால் நிகழ இருப்பதற்கு எதிர்மாறானதாக முன்னால் சொல்லப்படும் போது சுவை மிகுகின்றது. இந்தச் சுவையை முன்னால் படிக்கும் போது அறிய இயலாது. இதற்கு எதிர்மாறான நிகழ்ச்சி பின்னால் நடந்திருப்பதைப் படிக்கும்போதுதான், இரண்டையும் ஒத்திட்டு நோக்கி மகிழ முடியும். எடுத்துக்காட்டாகக் கம்பராமாயணத்தில் அமைந்துள்ள சில முன்னோட்டங்களைக் காண்பாம். சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ள சில முன்னோட்டங்களை அறிந்தும் புரிந்தும் சுவைப்பதற்காக 'இலக்கிய ஒப்புமை காண்டல்' என்னும் முறையில், கம்ப ராமாயண முன்னோட்டங்கள் சில ஈண்டு அறிவிக்கப்படும். கம்ப ராமாயணப் பாடல்களையெல்லாம் ஈண்டு எழுதின் விரியும் ஆதலின், அந்தப் பாடல்களில் உள்ள கருத்துகளை மட்டும் ஈண்டு எடுத்துக் கொள்ளலாம்.

**மகன் இராமன்**

மந்தரை சூழ்ச்சிப் படலம்:- உறங்கிக் கொண்டிருந்த கைகேயியைக் கூனி எழுப்பி, துன்பம் வந்த போதும் தூங்கிக் கொண்டிருக்கிறாயே என்று கூற, கைகேயி எழுந்து பின்

வருமாறு கூறுகிறாள்: என் பிள்ளைகள் நால்வரும் நல்லவர்கள். அவர்கள் இருக்கும் போது எனக்கு எந்தத் துன்பமும் வராது. அதிலும், இராமனைப் பிள்ளையாகப் பெற்ற எனக்குத் துன்பமே இல்லை – என்றாள். இதே இராமனைப் பின்னால் கைகேயி முடியைப் பறித்துக் காட்டிற்கு அனுப்பினாள்.

**வாழிய**

கைகேயிக்கு இராமனது முடி சூட்டைப் பற்றித் தெரிவிப் பதற்காக, யாழ் இசையினும் இனிமையாகப் பேசும் கைகேயி இருந்த இடத்திற்கு, வாழிய வாழிய என்று வாழ்த்திக் கொண்டு சிற்றரசர்கள் பின் தொடரச் சிங்கம் போன்ற தயரதன் வந்தான் – என்பது ஒரு பாடல் கருத்து.

யாழ் இசையினும் இனிமையாகப் பேசும் கைகேயி இன்னும் சிறிது நேரத்தில் தயரதனிடம் கடுமையாகப் பேசப் போகிறாள். சிங்கம் போன்ற தயரதன் நாடி ஒடுங்கி அவளிடம் கெஞ்சும் கோழையாகப் போகிறான். வாழிய - வாழிய என்று சிற்றரசர்களின் வாழ்த்தைப் பெற்ற மன்னன் இன்னும் சிறிது நேரத்தில் இறக்கப் போகிறான். இது ஒரு சுவையான முன்னோட்டம் அன்றோ!

கைகேயி வருந்தியவள் போல் கீழே வீழ்ந்தாள். தயரதன் அவளை நோக்கி, ஏன் வருந்துகிறாய்? யாராவது இகழ்ந்தார்களா? உன்னை இகழ்ந்தவர் இறப்பது உறுதி என்றான். பின்னர் கைகேயின் விடாப்பிடிச் செயலைக் கண்டு அவளைத் தயரதன்தான் இகழ்கிறான். இகழ்ந்தவர் இறப்பர் என்று சொன்னபடி கைகேயியை இகழ்ந்த அவனே இறந்து போகிறான்.

**வளர்த்த தாய்**

முனிவர் முதலிய பெரியோர்கள் பின் வருமாறு பேசிக் கொள்கின்றனர்: இராமன் பெற்ற தாயாகிய கோசலை

கையில் வளரவில்லை. அவனைத் தவப் பயனால் வளர்த்தது கைகேயியே. மகிழ்ச்சியோடு வளர்த்த கைகேயி இராமனது முடி சூட்டிற்காக அடையும் மகிழ்ச்சியின் அளவைச் சொல்ல முடியாது - என்றனர். இதற்கு எதிர்மாறாகக் கைகேயி இராமனைக் காட்டிற்கு விரட்டி விட்டாள்.

இவ்வாறு கம்ப ராமாயணத்தில் இன்னும் எவ்வளவோ சொல்லலாம். இவை போன்றே, சிலப்பதிகாரத்தில் காப்பிய முன்னோட்டச் சுவை எவ்வளவோ உண்டு. சில காண்பாம்:

**காதலற் பிரியாமை**

திருமண அரங்கிலே மணமக்களை வாழ்த்துபவர்கள், உங்கட்கு வயிற்று வலி வராமல் இருப்பதாகுக! உங்கட்குக் காச நோய் வராமல் இருப்பதாகுக! உங்கட்கு இதய நோய் வராமல் இருப்பதாகுக!- என்று வாழ்த்தினால், அது இயற்கைக்கு மாறான தீய நிமித்தம் அல்லவா? எனவே, இது போல யாரும் வாழ்த்துவதில்லை. நீங்கள் எல்லா நலங்களும் வளங்களும் பெற்று நீடூழி வாழ்வீராக என வாழ்த்துவதுதான் முறை - இயற்கையுமாகும்.

திருமண அரங்கில் கோவலனுடன் இருந்த கண்ணகியை நோக்கி முதிய பெண்டிர் சிலர், நீ காதலனைப் பிரியாமலும், கைகோத்த நெருங்கிய தொடர்பு தளராமலும், தீமை வராமலும் வாழ்வாயாக என வாழ்த்தினர்;

> **"காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்**
> **தீதுஅறுக என ஏத்தி"** (1:61-62)

என்பது பாடல் பகுதி. பின்னால் கண்ணகியும் கோவலனும் கவவுக் கை நெகிழ்ந்து பிரியப் போகிறார்கள் - தீமை வரப் போகிறது என்பதை இந்த வாழ்த்து உள்ளடக்கிக் கொண்டுள்ளது. வரலாறு முழுவதும் நடந்து முடிந்த பிறகு, ஆசிரியர் இளங்கோ இந்தக் காப்பியத்தை எழுதிய

தால், பின்னால் நிகழ்ந்ததை அறிந்து முன்னோட்டமாக முன்னாலேயே எழுதிச் சுவை தந்துள்ளார். இது மட்டுமா?

**உலவாக் கட்டுரை**

மனையறம் படுத்த காதையில், கோவலனும் கண்ணகியும் இன்புற்றிருந்த வாழ்க்கையைத் தொண்ணூறு (90) அடிகளால் தெரிவித்துள்ளார் இளங்கோ. இந்தத் தொண்ணூறு அடிகளில் நாற்பத்தைந்து அடிகள், கோவலன் கண்ணகியைப் பாராட்டிய அடிகளாகும். இந்தப் பாராட்டு 'எவரெஸ்ட்' உச்சிக்குப் போய் விட்டிருக்கிறது. இவண் இறுதிப் பகுதியை மட்டும் காணலாம்:

**''மாசறு பொன்னே வலம்புரி முத்தே**
**காசறு விரையே கரும்பே தேனே**
**அரும்பெறல் பாவாய் ஆருயிர் மருந்தே**
**பெருங்குடி வாணிகன் பெருமட மகளே**
**மலையிடைப் பிறவா மணியே என்கோ**
**அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ**
**யாழிடைப் பிறவா இசையே என்கோ**
**தாழிருங் கூந்தல் தையால் நின்னை என்று**
**உலவாக் கட்டுரை பல பாராட்டி''** (2:73-81)

என்பது தான் அந்தப் பாராட்டு. இரண்டாம் காதையின் இறுதியில் இவ்வாறு அமைத்தது, அடுத்த காதையிலேயே கோவலன் (45 அடி) கண்ணகியைப் பிரியச் செய்து விடுவதால் தான். இவ்வாறு பாராட்டியவன் அடுத்த காதையிலேயே பிரிந்து விடுவது பின்னுக்கு உரிய முன்னோட்டச் சுவை பயக்கிறதன்றோ?

இந்த மனையறம் படுத்த காதையின் இறுதியில் ஒரு தனி வெண்பா உள்ளது. இது முற்றிலும் முன்னோட்டப் பாடலாகும். ஆண் பாம்பும் பெண் பாம்பும் ஒன்றோடு ஒன்று உடலைப் பின்னி முறுக்கிக் கொண்டு இன்பம்

துய்ப்பது போலவும், மன்மதனும் இரதியும் கலந்து இன்புறுவது போலவும், கோவலனும் கண்ணகியும் இரண்டற ஒன்றிக் கலந்து இன்பம் துய்த்தனராம். இந்த உலக இன்பம் நிலையில்லாதது; எனவே நாம் இருக்கும் போதே எவ்வளவு மிகுதியாகச் சிற்றின்பம் துய்க்க முடியுமோ -- அவ்வளவும் துய்த்துவிட வேண்டும் என்று எண்ணிச் செய்தவர்கள் போல் காணப்பட்டனராம்:

**''தூமப் பணிகள் ஒன்றித் தோய்ந்தாலென ஒருவார்**
**காமர் மனைவி யெனக் கைகலந்து-நாமம்**
**தொலையாத இன்பமெலாம் துன்னினார் மண்மேல்**
**நிலையாமை கண்டவர்போல் நின்று''**

இது பாடல். பணிகள் = பாம்புகள். காமர் - மனைவி = மன்மதனும் அவன் மனைவி இரதியும். 'நிலையாமை கண்டவர் போல்' என்பது இவர்களின் வாழ்க்கையில் உண்மையாகவே பலித்து விட்டதே. காமத் துறைக்குப் பொறுப்பாளனாகச் சொல்லப்படும் மன்மதனை இங்கே இழுத்திருப்பதும் குறிப்பிடத்தக்கது

**கண்ணகியின் மென்மையும் வன்மையும்**

அமைதியான மென்மையின் எல்லையில் கண்ணகியைப் படிப்படியாகக் கொண்டுபோய் நிறுத்திப் பின்னர்த் திடீர்த் திருப்பமாக அவளை வன்மை உடையவளாக ஆக்கியிருப்பதும் ஒருவகைக் காப்பிய முன்னோட்டமாகும். அதாவது:

1. கோவலன் மாதவியைப் பிரிந்து கண்ணகியிடம் வந்து அவளது வாடிய மேனியைக் கண்டு வருந்தித் தன் குறைபாட்டைக் கூறித் தன்னைத்தானே நொந்துகொண்ட பொழுது, மாதவிக்குத் தர ஒன்றுமில்லை எனக் கோவலன் வருந்துவதாக எண்ணிக் கண்ணகி நகைமுகம் காட்டிச் சிலம்புகள் உள்ளன எடுத்துச் செல்லுங்கள் என்றாளாம்:

"நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச்
சிலம்புள கொண்மன" (9:72, 73)

என்னும் பகுதியில் கண்ணகியின் உயரிய பண்பு ஓவியப் படுத்தப்பட்டுள்ளது. வந்த கணவனிடம் முகத்தைச் சுளித்துக் காட்டி வெறுப்பு தெரிவிக்காமல், சிலம்புகள் தவிர்த்த மற்ற எல்லா நகைகளையும் இழந்த நிலையிலும், புன்முறுவலுடன் நகைமுகம் காட்டியது அவளது மென்மைக்குச் சான்று.

2. நகர் எல்லையைத் தாண்டி ஒரு காவதம் சென்றதுமே, மதுரை எவ்வளவு தொலைவில் உள்ளது எனக் கேட்டதும் மென்மையே.

3. கடிய கொடிய வழியில் நடக்க முடியாமல் கணவனின் தோள்மேல் தாங்கலாகக் கையைப் போட்டுக் கொண்டு நடந்ததும் மென்மையே.

4. வம்பப் பரத்தனும் பரத்தையும் கோவலனையும் கண்ணகியையும் பார்த்த பின், இவர்கள் யாரெனக் கவுந்தியைக் கேட்க, என் மக்கள் என்று கவுந்தி கூற, அண்ணனும் தங்கையும் காதலர்களாக இருப்பதுண்டோ என அவர்கள் எள்ளி நகையாடியபோது, அதைக் கேட்கப் பொறாமல் கண்ணகி தன் செவிகளைக் கையால் பொத்திக் கொண்டு கோவலன் முன்னே நடுங்கியதும் மென்மையே.

5. கவுந்தி பரத்தர்களை நரியாகச் சபித்தபோது, கண்ணகி கோவலனுடன் சேர்ந்துகொண்டு, அவர்கட்காக இரங்கிச் சாப விலக்கு செய்யும்படி வேண்டியதும் மென்மையே.

6. ஐயை கோட்டத்தில் தங்கியிருந்தபோது, தெய்வம் ஏறிய சாலினி கண்ணகியைப் பலவாறு புகழ்ந்தபோது, அந்தப் புகழ்ச்சிக்கு நாணிக் கணவன் பின்னால் ஒடுங்கி நின்று புதியதோர் புன்முறுவல் பூத்தாள்:

**"பேதுறவு மொழிந்தனள் மூதறி வாட்டி என்று**
**அரும்பெறல் கணவன் பெரும் புறத்து ஒடுங்கி**
**விருந்தின் மூரல் அரும்பி நிற்ப"** (12:51-53)

பல்லாண்டு கடந்தபின் மீண்டும் அரிதாக அடைந்த கணவன் ஆதலின் 'அரும்பெறல் கணவன்' எனப்பட்டது. "விருந்தே புதுமை" என்பது ஒரு வழக்கு. கண்ணகி சிரித்து நீண்ட நாள் ஆனதால், இதை 'விருந்தின் மூரல்' என்றார். 'பெண் சிரித்தால் போயிற்று — புகையிலை விரித்தால் போயிற்று' என்பது அந்தக் காலப் பழமொழி. எனவேதான், பெரிய அளவில் சிரிக்கவில்லை - சிரிப்பு அரும்பு நிலையிலேயே இருந்தது என்னும் கருத்தில் 'அரும்பி நிற்ப' எனப்பட்டது. கண்ணகியின் மென்மைக்கு இதுவும் சான்று.

7. மாதரியின் வீட்டில், கண்ணகி கணவற்காக உணவு ஆக்கி, கணவனது காலைத் தூய்மை செய்து தடுக்கு இட்டு இருக்கச் செய்து நல்ல வாழையிலை போட்டு உணவு பரிமாறி 'அமுதம் உண்க அடிகள்' என அன்போடு உரைத்தாள்.

8. கோவலன் கண்ணகியை நோக்கி, எழு என்றதும் எழுந்து வந்தனை; உனக்கு யான் ஒரு நன்மையும் செய்ய வில்லை - என்றபோது, கண்ணகி தனக்காக வருந்தாமல், பிறர்க்கு விருந்து படைத்தல் முதலிய உதவிகளைச் செய்ய முடியாது போனமைக்கு வருந்தியதாகக் கூறினாள்.

9. கண்ணகி, தன் மாமனாரும் மாமியாரும் தனக்காக வருந்தாதிருக்கும்படி, நான் மகிழ்ச்சியாகவே உள்ளேன் என்று அவர்கட்கு அறிவிப்பதற்காகப் பொய்ச் சிரிப்பு சிரித்துக் கொண்டிருந்தாளாம்.

10. கண்ணகி உண்டு முடித்த கணவனுக்கு வெற்றிலை பாக்கு அளித்து அன்புக் கடமையின் உயரிய எல்லையில் நின்றாள். கோவலன், சிலம்பு கொண்டு கடைத்தெருவிற்குப்

புறப்படுமுன், கண்ணகியைக் கட்டித் தழுவி ஆறுதல் உரை கூறி, தன் கண்களிலிருந்து வந்த நீரை மறைத்துக் கொண்டு புறப்பட்டபோது இருவரும் உணர்ச்சியின் எல்லையைக் கடந்தனர்.

கோவலன் கண்ணகியைப் பிரிந்து சென்றதும் விரைவில் இறந்துவிடப் போகிறான். ஆதலின், காப்பிய முன்னோட்டச் சுவைக்காக இளங்கோ இப்படி ஓர் உருக்கமான காட்சியைப் படைத்துள்ளார். இங்கே, சேக்சுபியரின் (Shakespeare) 'இரண்டாம் ரிச்சர்டு மன்னன்' (King Richard II) என்னும் நாடகத்தில் உள்ள ஒரு காட்சி நினைவிற்கு வருகிறது. ரிச்சர்டு மன்னன் இங்கிலாந்தை ஆண்டு கொண்டிருந்தபோது தன் பங்காளி மன்னனாகிய 'பாலிங் புரோக்' (Bolingbroke) என்பவனை நாடு கடத்தியிருந்தான். ரிச்சர்டு மேல்பார்வையிடுவதற்காக அயர்லாந்து சென்றிருந்தபோது, பாலிங் புரோக் இங்கிலாந்துக்கு வந்து ஆட்சியைப் பிடித்துக் கொண்டு இரண்டாம் ரிச்சர்டு மன்னனைச் சிறையிலிட்டான். பின்னர்க் கொலை ஒறுப்பும் (மரணதண்டனையும்) தரப் பட்டது. இறுதியில் ரிச்சர்டைக் கொலைக் களத்திற்கு அழைத்துக்கொண்டு போனபோது, அவனுடைய மனைவி வழியில் அவனைக் காண்கிறாள். இருவரிடையேயும் உருக்கமான கட்டம் நடந்தது. பின்னர் ரிச்சர்டு கொலையுண்டான்.

இது சேக்சுபியர் எழுதியது. நடந்துள்ள வரலாற்றின் படி நோக்கின், ரிச்சர்டும் அவன் மனைவியும் சந்திக்கவே இல்லையாம். நாடகச் சுவைக்காகச் சேக்சுபியரே இப்படி ஓர் உருக்கமான காட்சியைப் படைத்தாராம் — என்று திறனாய்வாளர்கள் கூறுகின்றனர்.

சேக்சுபியருக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்பே இளங்கோவடிகள் இப்படி ஓர் உருக்கமான காட்சியைப் படைத்திருப்பது மிக்க இலக்கியச் சுவையளிக்கிறது.

இப்படியெல்லாம் மிகவும் மென்மை உடையவளாகக் கண்ணகியைப் படைத்துக்கொண்டு வந்த இளங்கோ, திடீர்த் திருப்பமாக அவளுடைய வன்முறைகளை அடுக்கிக் கொண்டு போகலானார். அதாவது, கோவலன் இறந்ததைக் கேட்டதும் அவள் ஆறாத் துயர் அடைந்து வஞ்சினம் கூறிக்கொண்டு ஊரில் அலைந்தது — பாண்டியனிடம் அவன் இறக்கும் அளவுக்குக் கடுமையாகப் பேசி வழக்குரைத்தது — மதுரையை எரியூட்டியது — தனியாக வழி கடந்து சேர நாட்டு எல்லையை அடைந்து இறுதி எய்தியது — என்பன அவள் ஆற்றிய வன்முறைகள்.

கோவலனது இறப்புக்கு முன்னர்க் கண்ணகி கைக் கொண்ட செயல்கள், கோவலனது முடிவுக்குப் பின்னர்க் கண்ணகி கடைப்பிடித்த வன்செயல்கட்கு முன்னோட்டமாக அமைந்திருப்பதை அறியலாம்.

மற்றும் ஒன்று: கவுந்தி, கோவலன் கண்ணகி ஆகிய மூவரும் வழியில் ஐயை கோட்டத்தில் தங்கியிருந்தபோது, தெய்வம் ஏறிய சாலினி கண்ணகியைக் குறிப்பிட்டு,

**''இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி**
**தென்தமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து**
**ஒருமா மணியாய் உலகிற்கு ஓங்கிய**
**திருமாமணி....''** (12:47-50)

என்று கூறினாள். இதுவும் ஒருவகை முன்னோட்டமே. இறுதியில் கண்ணகி குடமலை நாடாகிய சேரநாட்டுப் பகுதியிலே சென்று இறுதி எய்தியதும், அங்கே அவளுக்குக் கோயில் எடுத்ததும், தமிழ்ப் பாவையானதும், உலகினரால் (பல நாட்டினரால்) அவரவர் இடத்தில் கோயில் எடுத்து வழிபடப்பட்டதும் பின்னால் நடந்ததை முன்னாலேயே குறிப்பாக அறிவிப்பது போல் சாலினியின் உரை இருக்கிற தல்லவா?

**பாண்டியன் பெருமை**

அடுத்த கட்டம் பாண்டியனைப் பற்றியது. பாண்டியன் நெடுஞ்செழியன் செங்கோல் கோடித் தீர்ப்பு வழங்கிக் கோவலனைக் கொல்வித்ததனால், பாண்டியர் குலத்திற்கும் மதுரைக்கும் பின்னால் தாழ்வு நேர்ந்ததல்லவா? இந்தப் பின்னோட்டத்திற்கு முன்னோட்டமாகப் பாண்டியன் பெருமையும், மதுரையின் பெருமையும், கவுந்தி, கோவலன், பாணர்கள், மாங்காட்டு அந்தணன். மாடலன், மாதரி, வாயிலோன், மதுராபதி முதலியோரால் மிகவும் பாராட்டிப் புகழ்ந்து பேசப்பட்டுள்ளன. அப்பாராட்டுப் புகழுரைகள் முறையே ஒவ்வொன்றாய் வருமாறு:

**கவுந்தி**

கோவலனும் கண்ணகியும் புகாரை விட்டு நீங்கிக் கவுந்தியடிகள் இருந்த பள்ளியை அடைந்து தாங்கள் மதுரைக்குச் செல்வதாகக் கவுந்தியடிகளிடம் கூறினர். யானும், தென்தமிழ் நாட்டில் உள்ள 'குற்றமற்ற' மதுரைக்குச் செல்லும் விருப்பம் உடையேனாதலின் யானும் வருவேன் என்று கவுந்தி அறிவித்தார்:

> **"தென்தமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்கு**
> **ஒன்றிய உள்ளம் உடையே னாதலின்**
> **போதுவல் யானும் போதுமின்"** (10:58-60)

இது பாடல் பகுதி. இளங்கோ தம் எழுத்தாணியின் வாயிலாக, 'தீதுதீர் மதுரை' என்று கவுந்தி சொல்லும்படியாகச் செய்துள்ளார். ஆனால் மதுரையில் இவர்கட்குத் தீது காத்திருக்கிறது என்பதை இவர்கள் அப்போது அறிய மாட்டார்கள் — பின்பு இளங்கோவே அறிவார் அல்லவா?

**மாங்காட்டு மறையவன்**

மூவரும் வழியில் ஓர் இளமரக் காலில் தங்கியிருந்த போது, மாங்காட்டு மறையவன் என்பான், பின்வருமாறு

பாண்டிய வேந்தை நீள வாழ்த்திக் கொண்டே அங்கு வந்து சேர்ந்தான். அந்த நீண்ட நெடிய வாழ்த்து வருமாறு:

**"வாழ்க எங்கோ மன்னவர் பெருந்தகை**
**ஊழிதோ றூழி உலகங் காக்க**
**அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி**
**வடிவேல் எறிந்த வான்பகை பொறாது**
**பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்**
**குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள**
**வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு**
**தென்திசை யாண்ட தென்னவன் வாழி**
**திங்கள் செல்வன் திருக்குலம் விளங்கச்**
**செங்கண் ஆயிரத்தோன் திறல்விளங்கு ஆரம்**
**பொங்கொளி மார்பில் பூண்டோன் வாழி**
**முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னி யென்று**
**இடியுடைப் பெரு மழை எய்தா தேகப்**
**பிழையா விளையுள் பெருவளம் சுரப்ப**
**மழை பிணித் தாண்ட மன்னவன் வாழ்கெனத்**
**தீதுதீர் சிறப்பின் தென்னனை வாழ்த்தி**
**மாமுது மறையோன் வந்திருந் தோனை"**- (11:15-31)

முன்னர் ஆண்ட பாண்டியர் குல மன்னர்களின் வெற்றிச் செயல்கள் இங்கே கூறப்பட்டுள்ளன. ஓர் அரசனுக்கு, அவனுடைய முன்னோர்களின் புகழ்களை எல்லாம் உரியனவாகச் சேர்த்துச் சொல்லுதல் ஒருவகை மரபு. அந்த முறையில், சிலப்பதிகாரக் காலத்தில் இருந்த பாண்டியன் நெடுஞ்செழியன் தன் முன்னோர்களின் வெற்றிகளை எல்லாம் உடையவனாகப் படைக்கப்பட்டுள்ளான். அவை: கங்கையும் இமயமும் கொண்டமை, வேல் எறிந்து கடலை வற்றும்படிச் செய்தமை, இந்திரன் பூட்டிய ஆரத்தைப் பூண்டமை, இந்திரன் முடிமேல் வளை எறிந்தமை, முகிலைத் தளையிட்டமை முதலியன. இவ்வரலாறுகளைத் திருவிளையாடல் புராணத்தில் விரிவாகக் காணலாம்.

மேற்கூறிய பெருமைகளை உடைய பாண்டியன் ஊழிதோறு ஊழி வாழ்க - தென்னவன் வாழ்க - பூண்டோன் வாழ்க - மன்னவன் வாழ்க - தென்னனை வாழ்த்தி - என இந்தப் பகுதியில் ஐந்து இடங்களில் வாழ்த்துச்சொல் இடம் பெற்றுள்ளது. ஆனால் பாண்டியன் வாழ்ந்தானா? ஊழி தோறு ஊழி வாழ்க என்று வாழ்த்தினானே - ஒரு சில நாள்களிலே பாண்டியன் இறந்துவிட்டானே. 'தீது தீர் சிறப்பின் தென்னன்' என்றானே - ஆனால் தீது தீராமல் சில நாள் அளவிலேயே பெரிய கொலைக்குற்றத் தீது நேர்ந்து விட்டதே. எனவே, மாங்காட்டு மறையவன் வாயிலாக இளங்கோ பாண்டியனை வாழ்த்திய வாழ்த்துகள் காப்பிய முன்னோட்டச் சுவை பயப்பனவாகும்,

**கோவலன்**

கோவலன், இனிக்கொடிய வெயில் வருத்தும் பகலிலே பயணம் செய்யவேண்டா - நிலா வீசும் குளிர்ந்த இரவிலேயே பயணம் செய்யலாம் என்று கவுந்தியிடம் கூறும்போது, பாண்டியனைப் புகழ்கிறான். பாண்டியன் நாட்டில் கரடி பிற உயிர்கள் ஆக்கிய புற்றை அகழாது; புலி மானைக் கொல்லாது; பாம்பு, முதலை, இடிமுதலியவற்றால் எவருக்கும் துன்பம் நேராது - எனப் பாண்டிய நாடு எங்கும் புகழ் பரவியது எனவே இரவில் அச்ச மின்றிச் செல்லலாம் - என்றான்.

> **"செங்கோல் தென்னவர் காக்கும் நாடென**
> **எங்கணும் போகிய இசையோ பெரிதே"** (13:9-10)

**பாணர்கள்**

செங்கோலை உடைய தென்னவர் என்பது குறிப்பிடத் தக்கது. கோவலன் கிட்டத்தட்ட மதுரையை நெருங்கிய நிலையில் வழியில் பாணர்களை நோக்கி மதுரை இன்னும் எவ்வளவு தொலைவில் உள்ளதென வினவினான். மதுரை

அண்மையில் உள்ளது; தனியாகச் செல்லினும் வழியில் தடுப்பவரோ - பறிப்பவரோ இல்லை - துணிவுடன் செல்லலாம் எனப் பாண்டியனது ஆட்சியைப் பாணர்கள் புகழ்ந்தனர்.

**மீண்டும் கோவலன்**

மதுரை நகரைச் சுற்றிப் பார்த்த கோவலன் கவுந்தியிடம் வந்து, மதுரையின் சிறப்பையும் பாண்டியனின் செங்கோன்மையையும் புகழ்ந்தான்:

**''நிலந் தரு திருவின் நிழல்வாய் நேமி**
**கடம்பூண்டு உருட்டும் கௌரியர் பெருஞ்சீர்க்**
**கோலின் செம்மையும் குடையின் தண்மையும்**
**வேலின் கொற்றமும் விளங்கிய கொள்கைப்**
**பதியெழு வறியாப் பண்புமேம் பட்ட**
**மதுரை மூதூர் மாநகர் கண்டாங்கு**
**அறந்தரு நெஞ்சின் அறவோர் பல்கிய**
**புறஞ்சிறை மூதூர்ப் பொழிலிடம் புகுந்து**
**தீதுதீர் மதுரையும் தென்னவன் கொற்றமும்**
**மாதவத் தாட்டிக்குக் கோவலன் கூறுழி''** (15:1-10)

இது பாப்பகுதி. செங்கோலின் நேர்மையையும், குடையின் குளிர்ச்சியையும், வேலின் மறத்தையும், மதுரையின் தீது தீர் சிறப்பையும், தென்னவன் கொற்றத்தையும், இன்னும் சிறிதளவு காலத்தில் பாண்டியனது தவறால் இறக்கப் போகின்ற கோவலன் வாயாலேயே கூறவைத்துள்ளார் ஆசிரியர் இளங்கோ. கோவலன் இவ்வளவையும் குறுகிய நேரத்தில் கண்டு அறிந்திருக்க முடியுமா?

உலகில் பல இடங்களில் பசியாலும் பகையாலும் மக்கள் இடம் பெயர்கின்றனர். ஆனால், மதுரை மக்கள் மதுரையை விட்டு அகல வேண்டியது நேராமல் சிறப்பாகப் பாண்டியர் ஆள்கின்றனர் என்பதைப் 'பதியெழுவறியாப்

பண்பு மேம்பட்ட மதுரை மூதூர்' என்னும் பகுதியால் அறியலாம். இதுவும் முன்னோட்டச் சுவையே அண்மைக் காலத்தில் மதுரையும் பாண்டியனும் படவிருக்கும் பாடு மிகவும் பெரியதல்லவா?

**மாடலன்**

மாடலன் என்னும் அந்தணன், கொலைக் களக்காதைக்கு முன் காதையாகிய அடைக்கலக் காதையில் அறிமுகப் படுத்தப் பட்டுள்ளான். இதுவரையும் எந்தப் பெருமையான செயலையும் செய்யாத கோவலனைச் சிறந்த கதைத்தலைவனாக (Hero) ஆக்க, இளங்கோ மாடலனைப் பயன்படுத்திக்கொண்டுள்ளார். கோவலனின் பழைய வெற்றிச் செயலையும் வள்ளன்மையையும் இரக்கத்தையும் இன்ன பிற சிறப்புச் செயல்களையும் குறிப்பிட்டு மாடலன் கோவலனைப் பாராட்டுகிறான். இந்தப் பாராட்டுகள் இல்லையெனில், அடுத்த காதையில் கோவலன் இறந்ததும், அவன்மேல் மக்கட்கு (நூல்படிப்பவர்க்கு) இரக்கமும் பரிவும் ஏற்பட முடியாதல்லவா? விளையாட்டில் பந்தைச் சரியான இடத்தில் போடுவது போல், கோவலன் பெருமையைச் சரியான இடம் பார்த்துச் செருகியுள்ளார் இளங்கோ. (கோவலன் சிறப்புகள் வேறு தலைப்பில் கூறப்பட்டுள்ளன.) புறஞ்சேரியை விட்டு நீங்கிக்கண்ணகியுடன் மதுரை நகர்க்குள் சென்றாலேயே காக்கப்படுவீர் - ஆதலின் மதுரைக்கு விரைந்து செல்க எனக் கோவலனைத் தூண்டியனுப்பினான் மாடலன்.

**மாதரி**

> **"நாவலந் தண்பொழில் மன்னர்**
> **ஏவல் கேட்பப் பாரரசு ஆண்ட**
> **மாலை வெண்குடைப் பாண்டியன்"**

என்று ஆய்ச்சியர் குரவையின் தொடக்கத்தில் பாண்டியனை மாதரி புகழ்கின்றாள். 'அவளே, ஆய்ச்சியர் குரவைக்

காதையின் இறுதியில் பாண்டியனை வாழ்த்துகிறாள். இந்திரன் முடிமேல் வளை எறிந்த மரபில் வந்த பாண்டியனது முரசம், எப்போதும் பாண்டியனுக்கு வெற்றி முரசமாகவே முழங்குவதாகுக என்னும் கருத்தில் வாழ்த்து அமைத்து வாழ்த்தினாள். பாடல்:

**"வெற்றி விளைப்பது மன்னோ கொற்றத்து**
**இடிப்படை வானவன் முடித்தலை உடைத்த**
**தொடித்தோள் தென்னவன் கடிப்பிகு முரசே"**

இது பாடல் பகுதி. மாதவியின் வாழ்த்து பாண்டியன் இறந்ததை அறியா முன்னம் நிகழ்ந்தது.

**வாயிலோன்**

வழக்கு உரைக்கக் கண்ணகி வந்திருப்பதைப் பாண்டியனுக்கு அறிவிக்கச் சென்ற வாயில் காவலன் பெரிய அளவில் பாண்டியனை வாழ்த்தியுள்ளான்:

**"வாழிஎம் கொற்கை வேந்தே வாழி**
**தென்னம் பொருப்பின் தலைவ வாழி**
**செழிய வாழி தென்னவ வாழி**
**பழியொடு படராப் பஞ்சவ வாழி"** (20:30-33)

என்பது வாயிலோனது வாழ்த்து. இந்தப் பகுதியில் ஆறு வாழிகள் உள்ளன. என்ன பயன்? இன்னும் சிறிது நேரத்தில் பாண்டியன் இறக்கப் போகின்றானே. மற்றும், "பழியொடு படராப் பஞ்சவ" என்று விளித்துள்ளான். இன்னும் சிறிது நேரத்தில் பழி படரப் போகிறதே.

இங்கே படர்தல் (படரா) என்னும் சொல்லை உற்று நோக்கவேண்டும். மர இனமாகிய மரம் செடி கொடி புல் பூண்டு என்பனவற்றுள் கொடி தவிர்த்த மற்ற நான்கும் ஒரே இடத்தில் நிற்கும். கொடி மட்டும் நெடுகிலும் படரும் - அதாவது - பரவும் - பாண்டியனது பழியும் படர்ந்து இன்று வரையும் நினைக்கப் படுகின்றதல்லவா?

மேலும் வாயிலோன் தொடர்கிறான்; கணவனை இழந்தவள் என்று கூறிக்கொண்டு கையிலே ஒரு சிலம்பை ஏந்தியபடிப் பெண்ணொருத்தி வந்துள்ளாள். அவளை நோக்கின், எருமைத்தலை அசுரனைக் கொன்ற கொற்றவையாகவோ, அறுவர்க்கு இளைய நங்கையாகவோ, சிவனோடு முரணி ஆடிய அணங்காகவோ, கானகம் உவந்த காளியாகவோ, தாருகாசுரனது மார்பைக் கிழித்த பெண்ணாகவோ தெரியவில்லை - என்று கூறினான்:

"அடர்த்தெழு குருதி அடங்காப் பசுந்துணிப்
பிடர்த்தலைப் பீடம் ஏறிய மடக் கொடி
வெற்றிவேல் தடக்கைக் கொற்றவை யல்லள்
அறுவர்க்கு இளைய நங்கை, இறைவனை
ஆடல்கண் டருளிய அணங்கு, சூருடைக்
கானகம் உவந்த காளி, தாருகன்
பேருரம் கிழித்த பெண்ணும் அல்லள்
செற்றனள் போலும் செயிர்த்தனள் போலும்"
(20:34-41)

என்பது பாடல் பகுதி. வாயிலோன் கூறியிருப்பது, எங்கள் அப்பா குதிருக்குள் இல்லை' என்று சொன்ன கதைபோல் இருக்கின்றதன்றோ? வாயிலோன் யார் - யாராக இல்லை என்றானோ - அவர் அவராகக் கண்ணகி தோற்றத்தில் காணப்படுகின்றாள் - என்ற கருத்து இதில் மறைபொருளாக உள்ளது. இதைக் கொண்டு, காளிதான் கண்ணகியாக வந்தாள் எனக் கதை கூறுவாரும் உளர். இது பின்னர் வேறொரு தலைப்பில் ஆராயப்படும்.

இது காறும் கூறியவற்றால், பின்னால் நடந்தன வற்றிற்கு முன்னோட்டமாக இளங்கோ வடிகள் கூறியவை காப்பியத்திற்குச் சுவையூட்டுகின்றன என்று தெளியலாம்.

# 19. கோவலன் நிலைமை

சிலப்பதிகாரத்தின் கதைத் தலைவன் (Hero) கோவலன். காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த மாசாத்துவான் என்னும் பெரிய செல்வ வணிகனின் மகன் கோவலன். இவன் ஆடல் கலையையும் பாடல் கலையையும் சுவைக்கத் தெரிந்தவன்; யாழ் மீட்டி முறையாகப் பாடவும் வல்லவன்; இந்தக் கலைகளோடு காமக் கலைக் களியாட்டத்திலும் ஆர்வம் உடையவன். இதற்கு அவனது செல்வம் பெருந்துணை புரிந்தது. பணக்காரர் வீட்டுப் பையன்கள் சிலர், இந்தக் காலத்திலும் காமக்கலை விரும்பித் திரிவது கண்கூடு.

**மங்கல வாழ்த்துப் பாடல்**

கோவலன் செவ்வேளாம் முருகன் என மதிக்கத்தக்க செந்நிறமுடைய அழகன்; காணும் கன்னியர் கூட்டம் பாராட்டி மகிழத்தக்க அளவுக்குப் பெருமையும் புகழும் உடையவன். இவனது பதினாறாம் அகவையில் திருமணம் நடைபெற்றதாம். பாடல்

**''பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த**
**ஒருதனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தான்**
**வருநிதி பிறர்க்கார்த்தும் மாசாத்துவான் என்பான்**
**இருநிதிக் கிழவன்மகன் ஈரெட்டாண் டகவையான்**
**அவனுந்தான்,**
**மண்தேய்ந்த புகழினான் மதிமுக மடவார்தம்**
**பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்**
**கண்டேத்தும் செவ்வேள் என்று இசைபோக்கும் காதலால்**
**கொண்டேத்தும் கிழமையான் கோவலன் என்பான்''**

(1:31-99)

சோழ மன்னனை முதல் குடிமகனாக வைத்து எண்ணுங்கால், அடுத்ததாக வைக்கப்பெறும் குடிமக்களுள் மிகவும் உயர்ந்தோங்கிய செல்வனாம் மாசாத்துவான். முடியரசு – குடியரசு என்றெல்லாம் பேசுகிறார்களே - சோழனோ, குடிமக்களுக்குள் முதல் குடிமகன் (தலைமகன்) என்று கூறப்பட்டிருப்பது மிக்க சுவை பயக்கிறது. 'செல்வத்துப் பயனே ஈதல்' என்னும் புறநானூற்றுப் (189) பாடலின் பொன்னான கருத்துப்படி, மாசாத்துவான், வந்து கொண்டிருந்த செல்வங்களைப் பிறர்க்கு வழங்கினானாம்.

அத்தகையோனின் செல்வ மகன் கோவலன். 'மண் தேய்ந்த புகழினான்' எனக் கோவலனை இளங்கோ அடிகள் குறிப்பிட்டுள்ளார். இந்த மண்ணுலகம் மிகப் பெரியது; ஏறத்தாழ இருபத்தைந்தாயிரம் கல் (மைல்) சுற்றளவுள்ளது. இதனினும் பெரிய புகழ்ப் பருமன் உடையவனாம் கோவலன். மண்ணுலகின் அளவைத் தேய்த்த அதாவது குறைத்த புகழாளன் என்பது கருத்து. இந்தப் பொருள், அளவு (quantity) கருதிக் கூறப்பட்டது,

தரம் (quality) கருதியும் இதற்கு வேறொரு வகையான பொருள் கூறலாம். அதாவது: உலகில் உயிர்கள் பயன் படுத்தும் உணவுப்பொருள், உடைப்பொருள், உறையுள் பொருள், உலோகப் பொருள்கள் யாவும் மண்ணிலிருந்தே - மண் வாயிலாகவே கிடைக்கின்றன. "இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின், நிலம் என்னும் நல்லாள் நகும்" (1040) என்னும் குறள் ஈண்டு எண்ணத் தக்கது. இவ்வாறு உதவும் மண்ணைவிட மிகுதியாக உதவுகின்றவனாம் கோவலன். இவ்வகையிலும், மண்ணின் புகழைத் தேய்த்த வனாம் - குறைத்தவனாம் கோவலன் - என்பது மற்றொரு வகைக் கருத்து. பிறர்க்கு உதவுவதால்தான் மிக்க புகழ் கிடைக்கும். அதுவே உயர்ந்த புகழாகும்.

**"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு"** (231)
**"உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ்"** (232)

என்னும் குறட்பாக்கள் ஈண்டு எண்ணத்தக்கன.

கதைத் தலைவனாகிய கோவலன், தொடக்கத்தில் பெருமைக்கு உரிய செயல் ஒன்றும் செய்யாமையால், அவன் இறந்த பின், காப்பியத்தைப் படிப்பவர்க்கு அவன் மேல் இரக்கமோ - பரிவோ ஏற்படாது என்பதற்காக, அவன் மாபெருஞ் சிறப்புச் செயல்கள் (சாதனைகள்) புரிந்துள்ளான் என ஆசிரியர் இளங்கோ அடிகள், அடைக்கலக் காதையில், மாடலன் என்பவன் வாயிலாகக் கோவலனுடைய சிறப்புச் செயல்கள் பலவற்றை அறிவித்துள்ளார் என்று பலரும் கூறுவதுண்டு. இதில் ஓரளவு உண்மை உள்ளதெனினும், இந்தப் பகுதி தேவையில்லாமலேயே, கோவலனை உயர்த்திக் காட்டத் தொடக்கமாகிய மங்கல வாழ்த்துப் பாடலில் கூறப்பட்டுள்ள "மண் தேய்த்த புகழினான்" என்னும் இந்த ஒரு தொடரே போதுமே!

## நாடு காண் காதை

**கோவலனின் இரக்கம்:**

கோவலனும் கண்ணகியும் மதுரைக்குச் செல்லும் வழியில் கவுந்தியடிகள் என்னும் சமணப் பெண் துறவியாரின் துணையைப் பெற்று வழி கடந்தனர். மூவரும் சீரங்கத்துக்கு அப்பால் காவிரியின் தென்கரையை அடைந்து ஒரு சோலையில் தங்கி இளைப்பாறிக் கொண்டிருந்தனர். அப்போது ஒழுக்கம் கெட்ட பரத்தை ஒருத்தியும் வந்த இழிமகன் ஒருவனும் இம் மூவரையும் கண்டனர். கவுந்தியை நோக்கி, கோவலனையும் கண்ணகியையும் சுட்டி, இவர்கள்

யார் என்று வினவினர். இவர்கள் என் மக்கள் (பிள்ளைகள்) என்றார் கவுந்தி. உடனே அவன், உன் மக்களாகிய இந்த அண்ணனும் தங்கையும் கணவனும் மனைவியுமாகக் காட்சி தரலாமா? - எனக் கிண்டலாகக் கேட்டனர். இவ்வாறு கேட்டதற்கு உரிய காரணப் பொருத்தத்தையும் குறிப்பாக இளங்கோவின் பாடல் பகுதியால் அறிய முடிகிறது. கவுந்தியோ துறவி. இவர்கள் இருவருமோ மன்மதனும் அவன் மனைவி இரதியும் போன்று அழகாகவும் இணைந்தும் காணப்பட்டனர். துறவிக்கும் இந்த இளைய அழகர்கட்கும் என்ன தொடர்பு? - என் றெல்லாம் எண்ணிக் கிண்டல் செய்தாராம். வெற்று வாயை மெல்பவனுக்கு அவல் கிடைத்தால் போதுமே! இயற்கையிலேயே பயனில் சொல் பேசும் இந்தத் தீயோருக்கு, இந்தச் சூழ்நிலை மேலும் இழிமொழி கூற வாய்ப்பாயிற்று. பாடல் பகுதி:

**"போதுசூழ் கிடக்கையோர் பூம்பொழில் இருந்துழி**
**வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு**
**கொங்கலர் பூம்பொழில் குறுகினர் சென்றோர்,**
**காமனும் தேவியும் போலும் ஈங்கிவர்**
**ஆரெனக் கேட்டீங்கு அறிகுவம் என்றே,**
**நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீருடன்**
**ஆற்றுவழிப் பட்டோர் ஆரென வினவ, என்**
**மக்கள் காணீர் மானிட யாக்கையர்**
**பக்கம் நீங்குமின் பரிபுலம்பினர் என,**
**உடன்வயிற் றோர்கள் ஒருங்குடன் வாழ்க்கை**
**கடவதும் உண்டோ கற்றறிந்தீர் என"** (218-228)

இந்தப் பகுதியால், தமிழர்களுள் அண்ணன் தங்கை முறையினர் கணவன்-மனைவியாக மணந்து கொள்வதில்லை என்ற உயரிய நாகரிகக் கோட்பாடு புலனாகிறது. வேறு இடத்தில், அண்ணனும் தங்கையும் மணந்து கொள்வது

உண்டு ஆதலின், இங்கே தமிழர் நாகரிகம் சிறப்பித்துச் சுட்டப்பட்டது. இராமனும் சீதையும் அண்ணனும் தங்கையும் ஆவர் - இவர்கள் கணவனும் மனைவியுமாக மணந்து கொண்டனர் எனப் பௌத்த இராமாயணம் கூறுகிறது. இதை இம்மட்டில் விட்டுவிடலாம்.

வடமொழியில் உள்ள சகோதரர் என்பதன் நேர் மொழி பெயர்ப்பாக, 'உடன் வயிற்றோர்' என்பது இளங்கோவால் அறிவிக்கப்பட்டுள்ளது. சக என்றால் உடன்; உதரம் என்றால் வயிறு; சக + உதரர் என்றால் உடன்வயிற்றோர் - என்பது பொருளாம். வடமொழியில் இந்தப் புணர்ச்சியைக் குணசந்தி என்பர். புறநானூற்றில் உள்ள

**"பிறப்போ நன்ன உடன் வயிற்றுள்ளும்**
**சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்"** (183-3,4)

என்னும் பாடல் பகுதியில் உள்ள 'உடன் வயிறு' என்பதும் சகோதர நிலையை அறிவிக்கிறது. ஔவையின்

**"உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா**
**உடன்பிறந்தே கொல்லும் வியாதி"** (மூதுரை-20)

என்னும் பாடலில் உள்ளவாறு உடன் பிறந்தார் எனலும் உண்டு. உடன் வயிறு, உடன் பிறப்பு என்பன ஒருபொருள் உடையன. சிற்றூர் மக்கள், உடன் பிறந்தவரை, 'என் பிறப்பு' எனக் குறிப்பிடுவது ஈண்டு எண்ணத் தக்கது. எனவே, இனி, பேசுவோரும் எழுதுவோரும், சகோதரர்கள் என்று கூறாமல், உடன் வயிற்றார் அல்லது உடன்பிறந்தார் என எழுதுவதும் பேசுவதும் நன்று.

இழிமக்கள், கோவலன்-கண்ணகியைப் பற்றி இழிமொழி கூறியதால் சினங்கொண்ட கவுந்தியடிகள், அவர்கள் நரிகள் ஆகுக எனக் கெடுமொழி (சாபம்) இட்டார். அவ்வாறே அவர்கள் நரிகள் ஆகி ஊளையிட்டனர். அந்த ஊளையைக் கேட்டதும், கோவலனும் கண்ணகியும் இப்படி நேர்ந்து

விட்டதற்கு நடுங்கினர்; கவுந்தியை நோக்கி, அவர்கள் அறியாமல் செய்த பிழையைப் பொறுத்து, அவர்களுக்குக் கெடுமொழி நீங்கும் காலம் கூற வேண்டினர். பின்னர்க் கவுந்தியடிகள், உறையூர் மதிலின் வெளிப்புறக் காட்டில் பன்னிரண்டு திங்கள் (ஓராண்டு) காலம் அலைந்து திரிந்து பின்னர்ப் பழைய உருவம் பெறுவாராக எனக் கெடு மொழியை விடுவித்தார். பாடல்:

**"குறுநரி நெடுங்குரல் கூவிளி கேட்டு
நறுமலர்க் கோதையும் நம்பியும் நடுங்கி
நெறியின் நீங்கியோர் நீரல கூறினும்
அறியாமை என்று அறியல் வேண்டும்
செய்தவத்தீர் நும் திருமுன் பிழைத்தோர்க்கு
உய்திக் காலம் உரையீரோ என,
அறியாமையி னின்று இழிபிறப் புற்றோர்
உறையூர் நொச்சி ஒருபுடை ஒதுங்கிப்
பன்னிரு மதியம் படர்நோய் உழந்தபின்
முன்னை யுருவம் பெறுக ஈங்கு இவரெனச்
சாப விடை செய்து..."** (235-245)

என்பது பாடல் பகுதி. கூவிளி = ஊளை. நீரல = நீர்அல = ஒழுங்கற்றவை. உய்திக் காலம் = சாப விமோசன காலம். சாப விடை - விடை = விமோசனம். நொச்சி = மதில். ஒரு புடை = ஒரு பக்கக் காடு. திருமுன் = சந்நிதி.

கண்டம் விட்டுக் கண்டம் பாயும் ஏவுகணைகள் செலுத்தப்படும் இந்தக் காலத்தை விட்டுப் பண்டைக் காலத்திற்குச் செல்வோம். தலைநகருக்குக் காவலாக மதில் அரண், நீர் (அகழி) அரண், மணல் அரண், காட்டு அரண், மலை அரண் முதலியன இருக்கும். இங்கே, 'உறையூர் நொச்சி ஒரு புடை' என்பது எண்ணத் தக்கது. உறையூர் காவிரிக்கரை சார்ந்த சோழரின் தலைநகரம். அதைச் சுற்றி மதில் அரண் - அடுத்து நீரரண் - அடுத்து மரஞ்

செடி கொடிகள் அடர்ந்த காட்டரண் இருந்தன. நரிகள் இருப்பது காட்டில் ஆதலால், நொச்சி ஒரு புடை என்பது, மதில் அரணுக்கு அப்பால் உள்ள காட்டைக் குறிப்ப தாயிற்று.

இந்தப் பகுதியில் கொள்ள வேண்டியது: தாழ்த்திப் பேசியவர்களைப் பொறுத்தருளிப் பழைய உருவம் பெறச் செய்யுமாறு கவுந்தியடிகளை வேண்டிய கோவலனுடைய பண்புடைமை - அதாவது - பிறர் குற்றம் பொறுத்தல் - பிறருடைய துன்பத்தைப் பொறுக்க முடியாமை - அயலாரிடத்தும் இரக்கமும் அன்பும் செலுத்துதல் முதலிய பண்புடைமை கோவலனது பெருமைக்குச் சான்றாக உள்ளமையை அறிதலாகும்.

## ஊர் காண் காதை

### குற்றம் ஒப்புதல்

பலர் தாம் செய்த பிழையை ஒத்துக்கொள்ளாமல் சரியே என்பர். தமது குற்றத்தை உணர்ந்து ஒத்துக் கொள்பவர் மிகவும் சிலரேயாவர் - இவர்களுள் கோவலனும் ஒருவன். மதுரையின் புறஞ்சேரிப் பகுதியிலே மூவரும் இருந்தபோது, கோவலன் கவுந்தியடிகளிடம் தனது குறைபாட்டை - தனது தவறைக் கூறி வருந்துகிறான்.

தவசியாம் அடிகளே! நான் இதற்குமுன், செல்ல வேண்டிய வழியில் செல்லாமல் தீய வழியில் ஒழுகி இளமையையும் செல்வத்தையும் நிலையாமை உடையன வாக்கினேன். மெல்லிய மேனியுடைய கண்ணகியைக் கடிய கொடிய நெடிய வழியில் நடக்கச் செய்து துன்பப் படுத்தினேன். முன்பின் அறியாத இடத்திற்கு அழைத்து வந்து அருந்துயருக்கு வழிப்பாதை யமைத்துச் சிறுமை யடைந்தேன் என்று கூறி நோகிறான்.

**"கோவலன் சென்று கொள்கையின் இருந்த**
**காவுந்தி ஐயையைக் கைதொழுது ஏத்தி**
**நெறியின் நீங்கியோர் நீர்மையேன் ஆகி**
**நறுமலர் மேனி நடுங்குதுயர் எய்த**
**அறியாத் தேயத்து ஆரிடை உழந்து**
**சிறுமை யுற்றேன் செய்தவத்தீர் யான்"** (15-20)

என்பது பாடல் பகுதி. மற்றும் ஒன்று வருக:-

**கனாத் திறம் உரைத்த காதை**

மாதவி பால் வெறுப்பு கொண்ட கோவலன் அவளைப் பிரிந்து கண்ணகியிடம் வந்தான். படுக்கை அறையில் அவளது வாடிய மேனியைக் கண்டு வருந்திக் கூறுகிறான். என் அருமைக் கண்ணகியே! வஞ்சகியாகிய மாதவியோடு இந்நாள் வரை இருந்து என் முன்னோர் ஈட்டிய மலை யத்தனை செல்வத்தையும் இழந்து விட்டேன். எனது இழி செயலால் ஏற்பட்ட வறுமைக்காக இப்போது மிக்க நாணம் கொள்கிறேன் - என்று கூறி வருந்தினான்;

**"காவலன் போலும் கடைத்தலையான் வந்துநம்**
**கோவலன் என்றாள்ஓர் குற்றிளையாள், கோவலனும்**
**பாடமை சேக்கையுள் புக்குத்தன் பைந்தொடி**
**வாடிய மேனி வருத்தம்கண்டு யாவும்**
**சலம்புணர் கொள்கைச் சலதியோ டாடிக்**
**குலம்தரு வான்பொருள் குன்றம் தொலைந்த**
**இலம்பாடு நாணுத் தரும் எனக்கு என்ன"** (65-71)

என்பது பாடல் பகுதி. கவுந்தியடிகளிடம் தன் தவறை ஒத்துக்கொண்டான், தன் மனைவியிடமும் தன் தவறை ஒத்துக்கொண்டுள்ளான்.

தெரியாமல் இன்ன தவறைச் செய்து விட்டேனே - என்று பின்பு வருந்தும் படியான செயலைச் செய்யலாகாது;

அவ்வாறு செய்துவிடின், அதற்கு உய்வழி - கழுவாய் - பிராயச்சித்தம் என்னவெனில், மீண்டும் அத்தகைய செயலைச் செய்யாதிருப்பதுதான் - என்று திருவள்ளுவர் வழி சொல்லிக் கொடுத்துள்ளார்:

**''எற்றென்று இரங்குவ செய்யற்க; செய்வானேல்**
**மற்றன்ன செய்யாமை நன்று''** (655)

என்பது குறள்.

குடிகாரர்களும் சூதாடிகளும் தேவடியாள் தோழர்களும் தாம் கெட்டாலும், மீண்டும் மீண்டும் பழைய பழக்கத்தை விடாமல் தொடரவே முயல்வர். ஆனால், கோவலன், வள்ளுவர் கூறியுள்ளபடி, மீண்டும் பழைய தவறைச் செய்யாமல் உறுதியாகத் திருந்திப் பழைய தவறுக்குக் கழுவாய் தேடிக் கொண்டுள்ளான்.

## அடைக்கலக் காதை

### பணிவுடைமை

பெரியோரைக் கண்டால் செருக்குற்று இராமல் தாழ்ந்து வணங்குவது உயரிய பண்புகளுள் ஒன்று. அவ்வாறே, மாடலன் என்னும் மறையவனைச் சோலையில் கண்டபோது, கோவலன் அருகில் சென்று மாடலனின் அடிகளை வணங்கினான்:

**''மாமறை முதல்வன் மாடலன் என்போன்...**(12)
**கவுந்தி இடவயின் புகுந்தோன் தன்னைக்** (18)
**கோவலன் சென்று சேவடி வணங்க''** (29)

என்பதனால், கோவலனின் பணிவு தெரிகிறது.

### பெயர் சூட்டு விழா

கோவலன் மாதவியுடன் குடியும் குடித்தனமுமாய் இருக்கும் அளவுக்கு வந்து விட்டான். அதாவது, அவனுக்கு

மாதவிபால் ஒரு பெண் குழந்தை பிறந்தது மாதவிக்கு பிள்ளைப் பேற்றுத் தீட்டு கழிந்த பின், முதிய கணிகையர் சேர்ந்துகொண்டு, பெண் குழந்தைக்குப் பெயர் சூட்ட முனைந்தனர்:

**"வேந்துறு சிறப்பின் விழுச்சீர் எய்திய**
**மாந்தளிர் மேனி மாதவி மடந்தை**
**பால்வாய்க் குழவி பயந்தனள் எடுத்து**
**வாலா மைந்நாள் நீங்கிய பின்னர்**
**மாமுது கணிகையர் மாதவி மகட்கு**
**நாம நல்லுரை நாட்டுதும் என்று**
**தாமின் புறூஉம் தகை மொழி கேட்டாங்கு**
... ... ... ... ... ... ... ... ...
**எம்குல தெய்வப் பெயரீங்கு இடுகென**
**அணிமேகலையார் ஆயிரம் கணிகையர்**
**மணிமேகலை என வாழ்த்திய ஞான்று..."** (21-39)

என்பது பாடல் பகுதி. மாதவி, வேந்தனால் தலைக்கோல் விருதும் ஆயிரத்தெட்டுக்கழஞ்சுப்பொன்னும் பெற்றவள் என்பதை, 'வேந்துறு சிறப்பின் விழுச்சீர்' என்னும் பகுதி அறிவிக்கிறது.

இந்தக் காலத்தில் பரத்தமைத் தொழில் தமிழ்நாட்டில் தடுக்கப்பட்டுள்ளது. ஆனால், அந்தக் காலத்தில் இந்தத் தொழில் அரச ஒப்புதலுடன் நடந்துள்ளது என்பதை இதனால் அறியலாம்.

தாய் குழந்தை பெற்ற சிலநாள் கழித்துத்தான் பிள்ளைப் பேற்றுத்தீட்டு (புனிறு) கழியுமாம். இந்தக் காலத்தில் சில குடும்பங்களில் ஒன்பதாம் நாள் தீட்டு கழிப்பார்கள். நாள் கணக்கில் இடத்திற்கு இடம் மாறுதலும் இருக்கலாம்.

இயற்கையாக வாய்த்த மற்றொரு செய்தியும் இங்கே எண்ணத்தக்கது. இக்காலத்தில் பெண் குழந்தையினும் ஆண் குழந்தையே விரும்பப்படுகிறது. எல்லாருக்குமே ஆண் குழந்தைகளே பிறந்தால், அவர்கள் மணம் செய்து கொள்வதற்குப் பெண் வேண்டாவா - என்பதை ஆண் விரும்பிகள் எண்ணிப் பார்ப்பதில்லை. சில இடங்களில் தொடக்கத்திலேயே பல வழிகளில் பெண் குழந்தைகள் கொல்லப்படுவதாகச் செய்திகள் வருகின்றன.

மற்றையோர் பெண் குழந்தையை விரும்பாமல் ஆண் குழந்தையை விரும்பினும், வேசியர் ஆண் குழந்தையை விரும்பாமல் பெண் குழந்தையையே பெரிதும் விரும்புவர் என ஒரு செய்தி சொல்லப்படுகிறது. ஏன் எனில், எதிர் காலத்தில் வேசித் தொழில் நடத்திப் பொருள் ஈட்டுவதற்கு இந்தப் பெண் பிள்ளைகளே முதல் பொருளாகப் (மூல தனமாகப்) பயன்படுத்தப்படுகின்றனர் - அதனால் என்க. மற்ற வேசியர்களின் குழந்தைகளின் தந்தை பெயர் தெரியாது. மாதவி நிலைவேறு. அவள் கோவலனை மட்டுமே கொண்டிருந்ததனால் அவள் குழந்தை தகப்பன் பெயர் தெரிந்த குழந்தையாகும்.

பெண்குழந்தைக்குப் பெயர் சூட்டு விழா நடத்த வேண்டும் என்ற செய்தி கோவலனுடைய செவிக்கு எட்டியது, கோவலனின் முன்னோர்களுள் ஒருவர் நடுக் கடலில் கப்பலோடு அழியக் கூடிய சூழ்நிலை ஏற்பட, அப்போது 'மணிமேகலா தெய்வம்' என்னும் ஒரு பெண் தெய்வம் அவரையும் கப்பலையும் காப்பாற்றியதாம். அதிலிருந்து, கோவலனின் முன்னோர் தலைமுறையினர் மணிமேகலா தெய்வத்தையே தம் குலதெய்வமாகக்கொண்டு வழிபட்டு வந்தனர். இந்தக் காலத்திலும், ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒவ்வொரு குல தெய்வம் கொண்டாடப் படுவதைக் காணலாம். இவ்வாறே, கோவலனும் தன்

குலதெய்வத்தின் பெயராகிய 'மணிமேகலை' என்பதையே தன் பெண் குழந்தைக்கு இடச் செய்தான்.

குழந்தை பிறந்ததும் பெயர் சூட்டு விழா, பின் முதல் முதல் தொட்டிலில் இடும் விழா, பின் முதல் முதலாகச் சோறூட்டும் விழா, பின் காதணி விழா, பின் எழுத்தறி விக்கும் விழா எனப் பல விழாக்கள் நடக்கும். அவற்றுள் முதலாவதாகிய பெயர்சூட்டு விழாவைக் கோவலன் நடத்தினான்.

ஆயிரம் கணிகையர் சேர்ந்து 'மணிமேகலை' எனக் கூறிக் கூறிக் குழந்தையை வாழ்த்தினார்களாம். ஆயிரம் என்பது இங்கே மிகுதியைக் குறிக்கிறது. கணிகையர் தெருக்கள் தனியாக இருந்ததை இலக்கியங்களாலும், இப் போதும் இருப்பதை நேரில் பார்த்தும் அறியலாம். 'தான் பத்தினியாக இருந்தால் தேவடியாள் தெருவிலும்குடியிருக் கலாம்' என்னும் பழமொழியிலும் தேவடியாள் தெரு குறிப்பிடப் பட்டுள்ளது. ஆயிரம் கணிகையர் என்றால், பல கணிகையர் தெருக்களில் உள்ள கணிகையர் பலரும் ஒரு குலத்தார் போல் கூடிக் கொண்டாடியுள்ளனர் என்பது கருத்தாம். அவ்வளவு ஏன்? இளங்கோவே தம் நூலில் இரண்டு இடங்களில் கணிகையர் வீதி தனியே இருப்பதைக் குறிப்பிட்டுள்ளார். அவை:-

**"பண்ணும் கிளையும் பழித்த தீஞ்சொல்**
**எண்ணெண் கலையோர் இருபெரு வீதி"**

(ஊர் காண் காதை - 166, 167)

**"எண்ணான்கு இரட்டி இருங்கலை பயின்ற**
**பண்ணியல் மடந்தையர் பயங்கெழு வீதி"**

(அழல்படு காதை - 138, 139)

எண் எண் = ($8 \times 8 = 64$) அறுபத்து நான்கு. எண் நான்கு இரட்டி = எண் நான்கு ($8 \times 4 = 32$) முப்பத்திரண்டு;

எண்நான்கு இரட்டி (32×2=64) அறுபத்து நான்கு. ஆய கலைகள் அறுபத்து நான்கும் வல்ல கணிகையர் இருக்கும் தெருக்கள் - என்பது கருத்து. எனவே, மணிமேகலையின் பெயர் சூட்டு விழாவில் ஆயிரம் கணிகையர் (மிக்க பலர்) இருந்ததில் வியப்பில்லை.

இங்கே, தற்செயலான வாய்ப்பாக நேர்ந்த ஒரு கருத்தைச் சொல்லாமல் விடுவதற்கு இல்லை. கணிகையர் ஒருவரோடு ஒருவர் பகைகொள்வதே இயற்கையாயிருக்க, ஆயிரவர் எங்ஙனம் ஒன்று சேர்ந்தனர். ஈண்டு, நீதி வெண்பா என்னும் ஒரு நூலில் உள்ள ஒரு பாடலின் கருத்து நினைவைத் தூண்டுகிறது. கணிகையரும் நாய்களும் மருத்துவரும் பார்ப்பனரும் கோழிகளும் ஒருவரை ஒருவர் - ஒன்றை ஒன்று கண்டவுடனே எந்தக் காரணமும் இன்றிப் பகைகொள்வது உண்டாம். இதற்குக் காரணம் பிறவிக் குணமேயாம். பாடல்:

> **"வேசியரும் நாயும் விதிநூல் வயித்தியரும்**
> **பூசுரரும் கோழியும் பொன்னனையாய் - பேசிலொரு**
> **காரணந்தான் இன்றியே கண்டவுடனே பகையாம்**
> **காரணந்தான் அப்பிறப்பே காண்"** (65)

நாய்களும் கோழிகளும் போரிடுவது அறிந்ததே. வேசியர் = கணிகையர். பூசரர் = பார்ப்பனர். கணிகையரும் மருத்துவரும் பார்ப்பனரும் (புரோகிதரும்) தம்வாடிக்கையை மற்றவர் பிடித்துக் கொண்டதாகப் பகை கொள்வர். இங்கே, இதுபோன்ற தெனச் சொல்லப்படும் இந்தக் காலக் கருத்து ஒன்று நினைவுக்கு வருகிறது. அதாவது. "தமிழ்ப் புலவர்கள் இருவர் இருக்கும் இடத்தில் போர்மூளும்; அதனால் பக்கத்தில் ஒரு போலீசுகாரர் இருக்கவேண்டும்" எனப் பெரியார் ஈ வெ. இராமசாமியவர்கள் கூறியதாகச் சொல்லிக்கொண்டு சிலர் தமிழ்ப் புலவர்களைத் தாழ்த்துகின்றனர். ஆனால், நீதி வெண்பா

நூலில் உள்ள பட்டியலில் தமிழ்ப்புலவர்கள் இல்லை என்பதையும், எத்தரத்தினரும் - எத்தொழிலினரும் கருத்து வேற்றுமை கொள்வதுண்டு - அது போர் ஆகாது என்பதையும், தமிழ்ப் புலவர்களைத் தாழ்த்துபவர்கள் நினைவில் கொள்ளல் வேண்டும்.

கண்டவுடனேயே பகைகொள்ளும் ஆயிரம் கணிகையர்கள் எவ்வாறு ஒன்று கூடினர் என எண்ணத் தோன்றும். இதிலிருந்து உய்த்துணர்ந்து கொள்ளக் கூடியது: மாதவி கணிகையர் குழுவின் தலைவியாய் இருந்திருக்கவேண்டும், அவள் அரசனால் சிறப்பிக்கப்பட்டவள் ஆயிற்றே. மற்றும், மிகப் பெரிய செல்வனும் தேவடியாள் தோழனுமாகிய கோவலனைக் குளிரப் பண்ணி வைக்க வேண்டும் - என்பது குறிப்பாய்ப் புலனாகலாம். இக்கால நூலாசிரியர் ஒருவர், மாதவியின் தோழியாகிய வயந்த மாலை என்பவளுடனும் கோவலன் உடலுறவு கொண்டிருக்கக் கூடும் என்று எழுதியுள்ளார். பாதை மாறிச் சென்றதால், இந்தப் பழிச் சொற்களை ஏற்க வேண்டி வந்தது கோவலனின் தலைவிதியோ?

**கருணை மறவன்**

மணிமேகலைக்குப் பெயர் சூட்டு விழா நடத்திய ஞான்று, கோவலன் மாதவியுடன் சேர்ந்து கொண்டு சிவந்த கையால் சிவந்த பொன்மழை பொழிந்தானாம். மழைபோல் பொன்னைப் பொழிவதற்குப் பொன் ஏது? தன் வீட்டிலிருந்து முதல் முதலாக மாதவி வீட்டிற்கு வரும்போதே ஏராளமான செல்வத்தை எடுத்துக் கொண்டு வந்துவிட்டானா? அல்லது, இடையிடையே தன் வீட்டிற்குச் சென்று எடுத்து வந்திருப்பானா? அவ்வாறு போய்ப் போய் எடுத்து வந்திருந்தால் பெற்றோர் கண்டித்திருக்க மாட்டார்களா? இவன் பெயரில் வெளியில் வணிகம் தொடர்பான செல்வங்கள் இருந்திருக்கலாம். வணிக

நிறுவனத்தை வற்றச் செய்திருக்கலாம். வீட்டிலிருந்து கொண்டுவரவும் செய்திருக்கலாம்.

கோவலனிடத்தில் பொருள்பெற வந்தவருள் அகவை முதிர்ந்த அந்தணன் ஒருவன், தளர்ந்த நடையுடன் கோலையே காலாக ஊன்றி (தண்டு கால் ஊன்றி) வளைந்த கூன் உடம்புடன் வந்து கொண்டிருந்தான். மதம் பிடித்த யானை ஒன்று அவனைத் துதிக்கையால் வளைத்து எடுத்துக் கொல்லப் பார்த்தது. அந்தக் காட்சியைக் கண்ட கோவலன், உடனே யானைமீது பாய்ந்து அந்தணனைத் துதிக்கையி லிருந்து விடுவித்து அதன் பிடரித் தலைமீதமர்ந்து அடக்கினானாம். இளங்கோவடிகள் இந்தப் பகுதியைச் சுவையாக அமைத்துள்ளார்: ஈண்டு, 'கோல் காலாகக் குறும்பல ஒதுங்கி' என்னும் புறநானூற்றுப் பாடல் (159) பகுதியும், 'முக்காலுக்கு ஏகா முன்' என்று தொடங்கும் காளமேகத்தின் தனிப் பாடலும், இன்ன பிறவும், இளங்கோவின் 'தண்டு கால் ஊன்றி' என்னும் பகுதியோடு ஒப்புநோக்கத் தக்கன. கோவலனின் கொடையையும், அந்தணக் கிழவன் சாகக் கூடாதே என்ற அருளினால் யானையை அடக்கிய துணிவையும் அடிப்படையாகக் கொண்டு, இளங்கோ, கோவலனை,

**''கடக்களிறு அடக்கிய கருணை மறவன்''** (53)

என்று சுட்டிக் கூறியுள்ளார்.

வீரன் என்னும் வடசொல்லுக்கு நேராக 'மறவன்' எனத் தமிழில் மொழி பெயர்த்த இளங்கோ, கருணை என்னும் வடசொல்லுக்கு நேராக 'அருள்' என்னும் தமிழ்ச் சொல்லைத் தர மறந்துவிட்டார். தொல்காப்பியர் வீரம் என்பதைப் 'பெருமிதம்' என்னும் சொல்லால் குறிப்பிடுகிறார். பெருமிதம் நான்கு வகைப்படும் எனப் பொருளதிகாரம் — மெய்ப்பாட்டியலில் கூறியுள்ளார். அதாவது: கல்வியால்

வருவது, அஞ்சாத் துணிவால் வருவது, புகழால் வருவது, கொடையால் வருவது எனப் பெருமிதம் (வீரம்) நால்வகைப் படுமாம்:

**"கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே"** (9)

என்பது தொல்காப்பிய நூற்பா. தறுகண் = அஞ்சாத துணிவுடைமை. இசைமை = புகழ். கோவலன் யாழ் மீட்டிப் பாடியதைக் கொண்டு கல்வி உடையவன் என அறியலாம். யானையை அடக்கியதால் தறுகணன் என்பது புலப்படும். மண்தேய்த்த புகழினான் — 'இசை போக்கிக் காதலால் கொண்டேத்தும் கிழமையான்' என்னும் மங்கல வாழ்த்துப் பாடல் பகுதியால் இசைமை (புகழ்) உடையவன் என்பது பெறப்படும். மகளது பெயர்சூட்டு விழாவின்போது,

**'செம்பொன் மாரி செங்கையின் பொழிய'** (41)

என்று சொல்லியுள்ளபடி பொன் கொடை கொடுத்ததாலும் இன்னும் சிலர்க்கு உதவி செய்திருப்பதாலும் கொடை என்னும் பெருமிதம் (வீரம்) உடையவன் என்பது அறியப் படும். எனவே, ஆசிரியர் அடிகள், மாடலன் வாயிலாகக் கோவலனைக் கருணை மறவன் எனக் குறிப்பிட்டிருப்பது சாலவும் பொருந்தும்.

**"அறத்திற்கே அன்பு சார்பு என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை"**

என்னும் குறள் ஒப்பு நோக்கத்தக்கது.

**இரட்டைக் காப்பியம்**

சிலப்பதிகாரத்தையும், மணிமேகலையையும் இரட்டைக் காப்பியம் என்பர். அதற்கு ஏற்றாற்போல், சிலம்பிலுள்ள "தளர்ந்த நடையில் தண்டு கால் ஊன்றி வளைந்த யாக்கை மறையோன்" (15-44,45) என்னும் பகுதி மணிமேகலையிலும்,

**"தளர்ந்த நடையில் தண்டுகால் ஊன்றி**
**வளைந்த யாக்கைஓர் மறையோன்"** (14-30,31)

என அமைந்துள்ளது வியக்கத்தக்கது. சிலம்பில், கோவலனிடம் பரிசு பெற வந்த அந்தணன் அவ்வாறு கூறப்பட்டுள்ளான். மணிமேகலையில், இந்திரன் ஆபுத்திரனிடம் தள்ளாத கிழ அந்தணனாக வந்தமை அவ்வாறு கூறப்பட்டுள்ளது. இளங்கோவும் சாத்தனாரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் எழுதியிருக்கக் கூடுமா? அல்லது, இயற்கையாக எழுதியிருக்கக் கூடுமா? என்பது எண்ணத் தக்கது.

### செல்லாச் செல்வன்

தன் குழந்தையை அறியாது கொன்ற கீரிப்பிள்ளையைக் கொன்றுவிட்ட பார்ப்பனியின் கணவன், அவளது கொலைச் செயலைப் பொறுக்க முடியாதவனாய், அவள் கையால் உணவு பெற்று உண்ணவும் உடன்படாதவனாய், வடமொழி வாசகம் ஒன்று எழுதி அவள் கையில் தந்து இதை யாரிடமாவது காட்டுக என்று கூறி அவளைப் பிரிந்து வடநாடு சென்றுவிட்டான். அவள் பல தெருக்களிலும் சுற்றி அலைந்து — பல வீடுகட்கும் சென்று, தன் பழியைத் தீர்க்கும் வழி செய்து தன்னைக் காத்துக் கணவனோடு சேர்த்து வைக்க வேண்டும் எனக் கெஞ்சிக் குறையிரந்து கொண்டிருந்தாள். தெருவில் அவளைக் கண்ட கோவலன், அருகே வரச் செய்து அவளது குறையைக் கேட்டு, அவளது பழி தீர ஏராளமான அறங்கள் புரிந்து, அவளுக்குத் தூய்மை உண்டாகச் செய்து நிறைந்த பொருள் கொடுத்து அவளைக் கணவனோடு சேர்த்து வைத்தான்.

**"தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்**
**தானஞ் செய்து அவள்தன் துயர் நீக்கிக்**
**கானம் போன கணவனைக் கூட்டி**
**ஒல்காச் செல்வத்து உறுபொருள் கொடுத்து**
**நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ"** (15:71-75)

என்பது பாடல் பகுதி. பெரிய அளவில் பொருளுதவி கோவலன் புரிந்ததால், மாடலன் வாயிலாகச் 'செல்லாச் செல்வன்' என்று குறிப்பிடப் பட்டுள்ளான். அழியாத — குறையாத — செல்லாத பெரிய செல்வம், பின்னர்க் கோவலனை விட்டுச் சென்றுவிட, அவன் பிழைப்புக்காக மதுரை ஏகியது இரங்கத் தக்கதாகும். கொடைச் செயலால் புகழ் நிலைத்ததால், அப்புகழே செல்லாச் செல்வமாகும் என்றும் கருத்து கொள்ளலாம். ஈண்டு, 'நத்தம் போல் கேடு' (235) என்னும் திருக்குறள் பகுதி ஒப்பு நோக்கத் தக்கது.

இந்தப் பகுதியில் வடமொழி வாடை மிகுதியாக வீசுகிறது. வடமொழி வாசகம் எழுதிய ஏட்டை அப் பெண்ணிடமிருந்து கோவலன் பெற்றிருக்க வேண்டும். வேதம் வல்ல அந்தணர்கள் எழுதியுள்ள நூல்களில், இன்னின்ன அறச் செயல்கள் புரியின் கொலைப் பழி நீங்கும் என்று எழுதப்பட்டுள்ளபடி கோவலன் செயல்பட்டான்:

**"ஒத்துடை அந்தணர் உரைநூல் கிடக்கையில்**
**தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்**
**தானம் செய்து அவள்தன் துயர்நீக்கி"** (15:70-72)

என்பது பாடல் பகுதி. அந்தக் காலத்திலேயே ஆரியம் தென்னகத்தில் நிலைத்துவிட்டது என்பது தெரிகிறது.

## இல்லோர் செம்மல்

கொடியவன் ஒருவன் ஒரு பெண்ணைக் கற்பு கெட்டவள் எனப் பொய்ச் சான்று புகன்று அவளுடைய கணவனை நம்பச் செய்து அவளது வாழ்க்கையைப் பாழ்படுத்தினான். இதை அறிந்த தெய்வப் பூதம் ஒன்று அவனைக் கொல்வதற்காகக் கைப்பற்றிக் கொண்டது. அதையறிந்த அவனது தாய் பூதத்திடம் ஓடி, என் உயிரை எடுத்துக் கொண்டு என்மகன் உயிரைக் காத்திடுக என வேண்டினாள். அப்பூதம் உடன்படாது அந்தத் தாய் எதிரிலேயே அவனை அடித்துக் கொன்றது.

மகனிழந்த தாய் பிரிவுத்துயராலும் வறுமையாலும் வாடி வருந்தினாள். அவளுடைய சுற்றத்தினரும் அவளைக் காக்க முடியாத அளவுக்கு வறுமை வாய்ப்பட்டு அல்லல் உழந்தனர். இந்த நிலைமையை அறிந்த கோவலன், மகனிழந்த தாய்க்கும் சுற்றத்தார்க்கும் போதிய பொருளுதவி செய்து அவர்கட்குப் பல்லாண்டுகட்கு மறுவாழ்வு தந்தான். இல்லாதவர்க்கு உதவியதால் மாடலன் வாயிலாகக் கோவலன் "இல்லோர் செம்மல்' எனக் குறிப்பிடப் பட்டுள்ளான்.

**"ஒழிகநின் கருத்தென உயிர்முன் புடைப்ப,**
**அழிதரும் உள்ளத் தவளொடும் போந்தவன்**
**சுற்றத் தோர்க்கும் தொடர்புறு கிளைகட்கும்**
**பற்றிய கிளைஞரின் பசிப்பிணி அறுத்துப்**
**பல்லாண்டு புரந்த இல்லோர் செம்மல்"** (15:86-90)

காவிரிப்பூம்பட்டினத்தில் பூத சதுக்கத்தில் உள்ள பூதம், தீமை செய்தவர்களை அடித்துக் கொன்று விடுமாம். சிலம்பில் இந்திர விழவு ஊர் எடுத்த காதையில் பூத சதுக்கம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. சதுக்கம் = நால்சந்தி = நான்கு தெருக்கள் கூடும் இடம். தவக்கோலத்தில் மறைந்து நின்று கூடா ஒழுக்கம் கொள்ளும் பொய்த் தவசிகளையும், கற்பு கெட்டு ஒழுகும் தீய பெண்களையும், முறை தவறும் அமைச்சர்களையும், பிறர் மனைவியை விரும்பிக் கெடுப்போரையும், பொய்ச் சான்று புகல்வோரையும், புறங் கூறுபவரையும் கொல்வேன் என்று சதுக்கப் பூதம் எங்கும் கேட்க எச்சரிக்கைக் குரல் எழுப்பி, அவ்வாறு தவறு செய்பவர்களைக் கொன்று விடுமாம். பாடல் பகுதி:

**"தவமறைந் தொழுகும் தன்மை யிலாளர்**
**அவமறைந் தொழுகும் அலவல் பெண்டிர்**
**அறைபோ கமைச்சர் பிறர்மனை நயப்போர்**
**பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளர்என்**
**கைக்கொள் பாசத்துக் கைப்படுவோர் எனக்**

**காதம் நான்கும் கடுங்குரல் எழுப்பிப்**
**பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்''** (5:128-134)

என்பது பாடல் பகுதி. இந்தப் பூதந்தான், ஒரு நல்ல பெண்ணைக் கற்புக் கெட்டுவிட்டாள் என அவளின் கணவனிடம் கூறி நம்ப வைத்தவனைக் கொன்றது.

அறிவியல் முறைப்படி நோக்கின், இது உண்மையா யிருக்க முடியுமா? உண்மையாயின், ஊர் - உலகத்தில் தீயவர் ஒருவரும் இருக்க முடியாதே. இது உண்மையாயின், இப்போது உலகில் இருக்கும் தீயவர்களைப் புடைத்துக் கொல்ல ஒரு பூதம் போதாதே - ஒரு கோடி பூதமாவது தேவையாயிற்றே. மக்கள் தொகையைக் கட்டுப்படுத்த என்னென்ன விளம்பரமோ செய்கிறார்களே. இந்தப் பூதங்களைத் தேடிப் பிடித்துக்கொண்டு வந்தால் போதுமே!

இது உண்மையோ - பொய்யோ! அந்தக் காலத்தில் இது நடந்திருக்குமோ - இராதோ - இதிலிருந்து நாம் எடுத்துக் கொள்ள வேண்டியதாவது: இந்தக் காலத்தில் இத்தகைய குற்றவாளிகள் ஒறுக்கப்படாமல் எப்படியோ தப்பித்துக் கொள்கிறார்கள். இவர்களை வாளா விடாமல் தேடிப் பிடித்துத் தக்க ஒறுப்பு தரவேண்டும் என்பதாகும்.

**அருங்கலை ஆர்வலன்**

கோவலன் புறஞ்சேரியில் தங்கியிருந்தபொழுது ஆங்கு வந்த பாணர்களுடன் சேர்ந்து கொண்டு, யாழ் மீட்டி இசைக் கலை நுட்பம் வழுவாமல் வாசித்தானாம். இதனால் அவன் அருங்கலை ஆர்வலன் என்பது புலனாகும்.

**''பாடும் பாணரின் பாங்குறச் சேர்ந்து...** (105)
**பாடல் பாணி அளைஇ அவரொடு''** (113)

என்பது பாடல் பகுதி. கோவலன் பாணர்களை நோக்கி, மதுரை இன்னும் எவ்வளவு தொலைவு உள்ளது என்று வினவினானாம். மதுரைக் காற்று வரத் தொடங்கி

விட்டது - இன்னும் சிறிது தொலைவிலேயே மதுரை உள்ளது என்று அவர்கள் கூறினராம். இந்நிகழ்ச்சியால், கோவலன் எவருடனும் கலந்து பழகுபவன் என்பது புலப்படும்.

**ஆறுதல் உரை**

கோவலனை இவ்வாறு பலபடப் புகழ்ந்து பாராட்டிய மாடலன், இறுதியில் அவனுக்கு ஆறுதல் கூறுகின்றான். கோவலனே! யானறிந்த வரையும், நீ இந்தப் பிறப்பில் நல் வினைகளே செய்துள்ளாய். அங்ஙனம் இருக்கவும், வீட்டை விட்டுப் பிரிந்து, தனியொருவனாக நின்று, இந்தத் திருத்தகு மாமணிக் கொழுந்தாகிய கண்ணகியுடன் இங்கே வந்தது பழைய ஊழ்வினைப் பயனாக இருக்கலாம் - வருந்தாதே - என்றான்:

> ''**இம்மைச் செய்தன யானறி நல்வினை**
> **உம்மைப் பயன்கொல் ஒருதனி உழந்துஇத்**
> **திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது**
> **விருத்த கோபால நீ...**'' (14:91-94)

என்பது பாடல் பகுதி.

இளங்கோவடிகள், காப்பியத்தின் தொடக்கத்திலேயே கோவலனைப் புகழ்ந்திருப்பினும்,அவனுடைய வாழ்க்கையின் இடைப் பகுதியில், மனைவியையும் பெற்றோரையும் பிரிந்து கணிகை வீட்டில் காலத்தையும் செல்வத்தையும் கழித்து விட்டானாதலின், காப்பியம் படிப்போர்க்கு, அவன் இறந்தால்கூட அவன்மேல் பரிவு ஏற்படாது. அதனால், கொலைக்களக் காதைக்கு முன்காதையாகிய அடைக்கலக் காதையில் அவனுடைய சிறப்புகளையெல்லாம் மாடலன் வாயிலாக இளங்கோவடிகள் பொழிந்து தள்ளியுள்ளார். இஃது ஒருவகைக் காப்பியக் கலைத்திறனும் காப்பியச் சுவையூட்டலுமாகும்.

**கற்பிக்கும் முறை**

பாடம் கற்பிக்கும் ஆசிரியர், ஒரு மாணாக்கன் ஒரு பாடத்தில் குறைந்த மதிப்பெண் பெற்றால், அவனை மட்டப் படுத்தாமல் அவன் வேறு பாடங்களில் மிக்க மதிப்பெண் பெற்றிருப்பதைக் கூறிப் பாராட்டி, பின்னர், இந்தப் பாடத்தையும் இன்னும் சிறிது நன்றாகப் படித்திருந்தால் இதிலும் மிக்க மதிப்பெண் பெற்றிருக்கலாம் என்று கூறி ஊக்கப்படுத்த வேண்டும். இது ஒருவகைக் கற்பிக்கும் முறை (Method of Teaching) ஆகும். இதே போல் கோவலன் சோர்ந்திருந்தபோது முன் அவன் ஆற்றிய உயரிய செயல்களைக் கூறிக் கூறி மாடலன் ஆறுதல் செய்திருப்பது சுவைக்கத் தக்கது.

**தெய்வம் வெல்லல்:**

காட்டு வழியில், கோவலன் நீர் வேட்கையைத் தீர்க்க, கவுந்தியையும் கண்ணகியையும் ஓரிடத்தில் அமர வைத்து விட்டு ஒரு பொய்கைக் கரையில் போய் நின்றான். அப்போது, அந்தக் காட்டில் உள்ள பெண் தெய்வம் ஒன்று, மாதவியின் தோழியாகிய வயந்த மாலையின் வடிவுகொண்டு வந்து, கோவலனிடம், மாதவியின் துயர நிலையைக் கூறி, அவள் வெறுப்பால் வயந்தமாலையாகிய என்னையும் துரத்தி விட்டாள். எனக்கு வேறு போக்கிடம் இல்லை. நீ காடு நோக்கிச் செல்வதைக் கேள்வியுற்று உன்னை அடையலாம் என்று இங்கு வந்தேன். நீதான் என்னை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறி மயக்கியது. வழியில் ஒரு பெண் தெய்வம் வந்து மயக்கும் என மறையவன் ஒருவன் முன்னரே கூறிய செய்தி கோவலனது நினைவுக்கு வந்தது. உடனே அவன் கொற்றவையின் மறைமொழியை (மந்திரத்தை) உரு வேற்றினான் (செபித்தான்). உடனே அத்தெய்வம் அவ்விடம் விட்டு அகன்று விட்டது. செல்லுமுன், இதைக்

கவுந்திக்கும், கண்ணகிக்கும் தெரிவிக்காதே என்று சொல்லிச் சென்றதாம். இது ஒருவகைப் பெண்மை இயல்புபோலும்!

கானுறை தெய்வத்திற்குக் கோவலன் இளப்பமாய்த் தோன்றியிருக்கிறான். அதாவது - இவன் காமவேட்கை கொண்டவன் - கண்ணகியை விட்டு மாதவி பின்னால் திரிந்தவன் - வயந்த மாலையையும் ஒரு கை பார்த்திருப்பான் - அதனால் நமக்கும் இவன் படிவான் – என அத்தெய்வம் எண்ணியிருக்கிறது. ஒரு முறை கெட்ட பெயர் எடுத்து விடின், அது மறையாது - மறைவதானாலும் நீண்ட காலம் பிடிக்கும் என்பது இதனால் புலப்படும். மறைமொழி உரு வேற்றி வென்றானாம். தெய்வம் வயந்தமாலையின் உரு எடுத்தது - இவனை மயக்கிற்று - இவன் மறைமொழியால் வென்றான் - என்னும் செய்திகளைப் பகுத்தறிவாளர் - அறிவியலார் நம்புவது கடினம். இது அந்தக் காலக் காப்பிய நீரோட்டமாகும். இந்தச் செய்தி காடு காண் காதையில் சொல்லப்பட்டுள்ளது.

தனது நீர் வேட்கையைத் தவிர்த்துக் கொண்ட கோவலன் மனைவியை மறக்கவில்லை. காட்டிலே ஆண் மான், ஓரிடத்தில் சிறிதளவு இருந்த தண்ணீர் தனக்கும் பெண் மானுக்கும் போதாது என்று எண்ணித் தான் பருகி விட்டது போல் நடித்துப் பெண் மானைப் பருகச் செய்த பிணைப்பும் களிறு பிடிக்குச் செய்த உதவியும் தமிழிலக்கியங் களில் தண்ணீர் பட்ட பாடு. மானே அங்ஙன மெனில், கோவலன் மறப்பானா? ஒரு தாமரை இலையைச் சுருட்டி மடக்கிக் குவளை போல் செய்து அதில் தண்ணீர் கொண்டு போய்க் கண்ணகிக்குத் தந்தானாம். இதை எழுதிய இளங்கோவடிகள், கோவலன் கவுந்தியடிகட்குத் தண்ணீர் கொடுத்ததாகச் சொல்லாமையால், கோவலன் குறைபாடு உடையவனா அல்லது கவுந்தியடிகள் தேவையில்லை என்று

சொல்லியிருப்பாரா? துறவி பசி தாகத்தைத் தாங்க முடியும் போலும்!

இங்கே இலக்கிய ஒப்புமை காண்டல் என்ற முறையில், கம்பராமாயணம் - ஆரணிய காண்டம் - அயோமுகிப் படலத்தில் உள்ள ஒரு செய்தி காண்போம்.

நீர் கொணரச் சென்ற கோவலனை ஒரு தெய்வம் காதலித்தது போலவே, காட்டில் இராமனுக்காக நீர் கொணரச் சென்ற இலக்குவனை வழியில் அயோமுகி என்பவள் காதலித்தாளாம். நீர் கொணரப்போன இடத்தில் காதலிக்கப்பட்டமை, இரண்டு காப்பியத்திலும் உள்ள பொதுச் செய்தியாகும்.

**மாதவியின் மடல்கட்கு மயங்காமை:**

மாதவி கோவலனுக்கு இரண்டு மடல்கள் அனுப்பினாள். அவன் ஒன்றுக்கும் மயங்கவில்லை. முதலாவது:- கோவலன் கானல் வரி பாடி மனமாற்றம் ஏற்பட மாதவியை விட்டுப் பிரிந்து வந்து விட்டான் அல்லவா? அவன் திரும்பவும் வர வேண்டும் என வேண்டி மாதவி வயந்த மாலை வாயிலாக ஒரு மடல் அனுப்பினாள். மடல் உருவாக்கப்பட்ட விதம் வியப்பானது. அணிந்திருந்த மாலையில் இருந்த தாழை மடலை எடுத்து விரித்து, பித்திகைப் பூவின் நுனியை எழுத்தாணியாகக் கொண்டு, செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்து எழுதினாள். என்ன என்று எழுதினாள்: இள வேனில் என்னும் இளவரசனும் திங்களாகிய செல்வனும் மன்மதனும் செய்யும் கொடுமைகள் வியப்பில்லை - வெளிப் படை. அன்பு கூர்ந்து வந்தருளுக - என்றெல்லாம் மழலை மொழி பல அமைத்து எழுதி வயந்தமாலையிடம் தந்து, மடலின் உட்பொருளை நன்கு அவருக்கு எடுத்துக் கூறி அழைத்து வருக என்று ஏவினாள். வயந்தமாலை கூல மறுகில் கோவலனைக் கண்டு இன்மொழி கூறி ஈய முயன் றாள். ஆடல் மகள் ஆதலின் இதுவும் செய்வாள் -

இன்னமும் செய்வாள் - என்னவும் செய்வாள் எனக் கருதி மடலை வாங்க மறுத்துவிட்டான் கோவலன். மறுப்பை யறிந்த மாதவி சொல்லொணாத் துயர் உழந்தாள். இந்தச் செய்தி வேனில் காதையில் உள்ளது.

பண்டு மடல்களில் எழுதியதால்தான் கடிதத்திற்கு 'மடல்' என்னும் ஒரு பெயர் தரப்பட்டது போலும்.

இரண்டாவது மடலாவது:–

கோவலன் நடு வழியில் ஒரு நாள் காலையில், ஒழுக்கம் வழுவிய பார்ப்பனர் இருக்கும் பகுதியில் கவுந்தியையும் கண்ணகியையும் தங்கச் செய்து, தான் காலைக்கடன் முடிப்பதற்காக ஒரு நீர்க்கரையை அடைந்தான். அவ் வேளையில், மாதவி தந்த மடலை எடுத்துக் கொண்டு கோசிகன் என்னும் பார்ப்பனன் பல இடங்களிலும் கோவலனைத் தேடிக் காண முடியாமல் இவ்விடத்தை அடைந்தான். கோவலன் அப்பக்கம் இருப்பதை, பல இடங்களிலும் தேடி அலைந்த களைப்பினால் கோசிகன் அறியவில்லை; அருகிலிருந்த ஒரு பந்தரில் மாதவி என்னும் கொடி (குருக்கத்திக் கொடி) வாடியிருப்பதைக் கண்டான். உடனே அவன், ஏ மாதவியே (குருக்கத்திக் கொடியே)! கோவலனைப் பிரிந்ததனால் வாடிக் கிடக்கின்ற மாதவி போல், நீயும் கோடை வெப்பம் தாங்க முடியாமல் வாடி யுள்ளாயோ, என்று ஒரு பேச்சுக்குச் சொன்னான். இது கோவலனின் செவிக்கு எட்டியது. உடனே கோவலன் கோசிகனிடம் விவரம் கேட்டான். கோசிகன் கூறலானான்.

ஐயனே! உன்னைப் பிரிந்த உன் பெற்றோர்கள் அருமணி இழந்த நாகம் போலவும் உயிரை இழந்த உடல் போலவும் பொலிவற்றுக் கிடக்கின்றனர். உன் சுற்றத்தார்கள் துன்பக் கடலில் தோய்ந்து தவிக்கின்றனர். உன் தந்தை உன்னைத்

தேடிக் கொண்டுவரும்படி ஏவலாளரைப் பல இடங்கட்கு அனுப்பியும் பயன் இல்லை. புகார் நகரம் இராமனைப் பிரிந்த அயோத்திபோல் பேதுற்றுக் கிடக்கிறது. இவற்றை வயந்தமாலை வாயிலாக அறிந்த மாதவி வருத்தத்தோடுள்ளாள் என்பதை அறிந்து யான் அவளைக் காணச் சென்றேன். அவள் இந்த மடலை எழுதிக் கூந்தலால் மண் முத்திரையிட்டு உன்னிடம் அளிக்கச் சொன்னாள். அவ்வாறே யான் தேடியலைந்து இங்கே உன்னைக் கண்டேன் என்று கூறி, மாதவி தந்த மடலைக் கோவலனிடம் கொடுத்தான். மாதவியின் கூந்தல் வாடை வீசிய அம்மடலைக் கோவலன் பெற்று விரித்துப் படித்துப் பார்த்தான். அதில் எழுதியிருந்ததாவது: — (புறஞ்சேரி யிறுத்த காதை)

**"அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்**
**வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும்**
**குரவர் பணியன்றியும் குலப்பிறப் பாட்டியோடு**
**இரவிடைக் கழிதற்கு என்பிழைப்பு அறியாது**
**கையறு நெஞ்சம் கடியல் வேண்டும்**
**பொய்தீர் காட்சிப் புரையோய் போற்றி"** (87-92)

என்பது மடலில் எழுதப்பட்டிருந்தது. இதன் கருத்தாவது:

அடிகளே (பெரியோய்)! முதலில் உம் திருவடிகளை யான் வீழ்ந்து வணங்குகிறேன். யான் கூறும் எளிய செய்தியை நீங்கள் மனத்தில் கொண்டு ஏற்க வேண்டும். பெற்றோர்க்குத் தொண்டு செய்யாமல் உயரிய குடியில் பிறந்த கண்ணகியோடு இரவில் புறப்பட்டதற்குக் காரணமாகிய என் பிழையைப் பொருட்படுத்தாது, நெஞ்சம் செயலற்று வருந்துவதை நீக்கல் வேண்டும். குற்றமற்ற நல்லறிவுடைய மேலோய் போற்றி (வணக்கம்) — என்பது இதன் கருத்து, சிறிது மாற்றிப் பொருள் கொள்வாரும் உளர்.

மடலில் முதலிலும் இறுதியிலும் இக்காலத்தில் வணக்கம் தெரிவிப்பது போலவே இந்த மடலிலும் வணக்கம் தெரிவிக்கப்பட்டுள்ளது. முதற்கண் எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன் என இக்காலத்தில் கூறுவது போலவே, இம்மடலிலும் 'முன்னர்' என்னும் சொல் இடம் பெற்றுள்ளது. எனது தாழ்ந்த — எளிய உரையைச் செவி மடுக்க வேண்டும் என இக்காலத்தில் அவையடக்கம் கூறுவது போலவே, ''வடியாக் கிளவி மனக் கொளல் வேண்டும்'' என்பது கூறப்பட்டுள்ளது. ஈற்றில் போற்றி உள்ளது.

இந்த மடலைக் கோவலன் படித்துப் பார்த்ததும், மாதவி ''தன் தீது இலள் எனத் தளர்ச்சி நீங்கிச்'' (95) சொல்லலானான். தன் தீது இலள் எனத் தளர்ச்சி நீங்கினான் என்றால் என்ன? ''மாதவி நம்மை இன்னும் வெறுக்கவில்லை — குல மரபின்படி வேறொருவனை வரித்துக் கொள்ளவும் இல்லை — நம்மேலேயே பித்தாக உள்ளாள்'' என்பதை அறிந்ததனால், அவள் தொடர்பான ஒருவகைத் தளர்ச்சி நீங்கினான் – என்பது கருத்து. ஆனால் மாதவியின் கடிதத்திற்கு மயங்கி அவள் பக்கம் சாய்ந்துவிட வில்லை.

கோவலனின் மூளை இங்கே சிறிது திறமையாகச் செயல்பட்டது. மாதவி தந்த மடலில் உள்ள செய்தியைத் தன் தந்தையார்க்கு அப்படியே அனுப்பினும் அது பொருந்தும்போல் தோன்றியது. எனவே, அந்த மடலைக் கோசிகனிடம் தந்து இதை என் தந்தையாரிடம் சேர்த்து விடுக எனக் கூறினான். மேலும், தன் பெற்றோர்க்குத் தன் வணக்கத்தைத் தெரிவிக்கும்படியும், அவர்களின் மனத் துயரைக் களைந்து ஆறுதல் கூறும்படியும் சொல்லி அனுப்பினான். பெற்றோரைப் பிரிதற்குக் காரணமாயிருந்த மாதவி தந்த மடலே, இப்போது பெற்றோரைப் பற்றி எண்ணத் தூண்டியுள்ளது. சுவையான கற்பனை.

## கோவலனின் கடவுள் கொள்கை

கோவலனின் கடவுள் கொள்கை என்ன? — அவன் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவன்? — என்பதை அறுதியிட்டு உறுதியாகக் கூறக் கூடிய தெளிவான அகச்சான்று சிலப்பதிகாரத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. அவன் கண்ணகியுடன் மதுரைக்குப் புறப்பட்டபோது, இடைகழியைக் கண்ணகியுடன் கடந்து சென்றான். அப்பால், திருமால் கோயில், புத்தன் கோயில், அருகன் கோயில் ஆகியவற்றை வலம் வந்து வழிபட்டானாம். பாடல்:

**''நீள்நில வாயில் நெடுங்கடை கழித்தாங்கு**
**அணிகிளர் அரவின் அறிதுயில் அமர்ந்த**
**மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து''**
**''பணைஐந்து ஓங்கிய பாசிலைப் போதி**
**அணிதிகழ் நீழல் அறவோன் திருமொழி**
**அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்**
**இந்திர விகாரம் ஏழுடன் போகி''** (8-14)
**''ஐவகை நின்ற அருகத் தானத்து .** (18)
**இலகொளி சிலாதலம் தொழுது வலங்கொண்டு''** (25)

என்பது பாடல் பகுதி. பாம்பில் பள்ளி கொண்ட மணிவண்ணன் கோட்டம் என்பது திருமால் கோயில். ''போதி — அறவோன் — இந்திர விகாரம் ஏழ்'' என்பது புத்த விகாரம். ''அருகத் தானத்து - சிலா தலம்'' என்பது அருகன் இருப்பிடம். (நாடு காண் காதை)

வைணவம், பௌத்தம், சமணம் என்னும் முச்சமயத் தெய்வங்களையும் வேறுபாடின்றிக் கோவலன் வழிபட்டுள்ளான். சிவன் கோயில் இங்கே இடம் பெறவில்லை.

முதல்முதல் சமணப் பெண் துறவியாகிய கவுந்தியைக் கண்டபோது, கோவலன் அவரைக் கைதொழுது வணங்கியுள்ளான்.

ஒரு சோலையில் சமணச் சாரணர் வந்தபோது அவர் காலில் விழுந்து கோவலன் வணங்கியுள்ளான்.

மாதரி வீட்டில், இரவு வருவதற்குள், சமணர் வழக்கப்படி உணவு கொண்டான்.

இவற்றையெல்லாம் ஒப்பிட்டு நோக்குங்கால், கோவலன் இன்ன சமயத்தான் எனத் தெளிவாகக் கூற முடியாவிடினும், சமண சமயத்தவன் எனக் குறிப்பாகக் கொள்ள இடமுண்டு. காரணங்கள்?

இந்தக் காலத்தில் அருகன் கோயில் இல்லாத ஊர்களில் எல்லாம் அந்தக் காலத்தில் அருகன் கோயில் இருந்துள்ளது. புகாரிலும் சமணம் பரவியிருந்தது. உடன் வழி கடந்த கவுந்தி சமணர். மதுரையில் உள்ள அருகன் கோயிலை வணங்கக் கவுந்தி சென்றுள்ளார். கோவலன் மதுரையில் பொழுது போவதற்குள் உணவு கொண்டான். மதுரையில் பெரிய அளவில் சமணம் பரவியிருந்தது. இந்த வரலாறு நிகழ்ந்த சில நூற்றாண்டுகட்குப்பின், மதுரையில் ஞான சம்பந்தர் சமணரோடு வாதிட்டு வென்று பாண்டிய மன்னனையும் சைவனாக்கியுள்ளார். தெற்கே இப்படி யென்றால், வட தமிழ் நாட்டில், காஞ்சியில் ஆண்ட மகேந்திரவர்மப் பல்லவன் முதலில் சமணனாய் இருந்தமையும் நாவுக்கரசர் போராடினமையும் அறிந்த செய்தியே. தமிழ்நாடு முழுதும் சமணம் தலைவிரித்தாடிய காலத்தில் கோவலனும் சமணத்தைச் சார்ந்திருக்கலாம்.

மாமுது பார்ப்பான் மறை வழிப்படிக் கோவலனுக்குத் திருமணம் செய்து வைத்தான் எனில், சமணத்தில் மாறியவர் களும் பழைய முறையைப் பின்பற்றுவது உண்டு. புதுச்சேரியில் கத்தோலிக்கக் கிறித்தவர்கள் மாதாகோயிலில் திருமணம் முடித்துப் பின் வீட்டிற்கு வந்து பழங்கால முறைப்படி எல்லாம் செய்கின்றனர். சமணமும் பௌத்தமும்

இந்து மதம் என்னும் குட்டையில் ஊறிய மட்டைகளே. இந்து மதத்திலிருந்தே இவை தோன்றின. இவர்கட்கும் இராமாயணமும் பாரதமும் உண்டு. நன்னூல் எழுதிய சமணராகிய பவணந்தி முனிவர், எழுத்ததிகாரத்தின் தொடக்கத்தில்,

**"பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த**
**நான்முகன் தொழுதுநன்கு இயம்புவன் எழுத்தே"**

என நான் முகனையும் (பிரமனையும்), சொல்லதிகாரத்தின் தொடக்கத்தில்,

**"முச்சகம் நிழற்றும் முழுமதி முக்குடை**
**அச்சுதன் அடிதொழுது அறைகுவன் சொல்லே"**

எனத் திருமாலையும் (அச்சுதனையும்) வணங்கியுள்ளார். இவர்கட்கும் நான்முகன், திருமால் முதலியோர் உண்டு. எனவே, கோவலன் திருமால் கோயிலை வணங்கியதைக் கொண்டு, அவன் சமணன் அல்லன் என்று கூறவியலாது.

### கோவலனின் இறுதி உருக்கம்

கோவலன் மாதரி வீட்டில் கண்ணகி படைத்த விருந்தை உண்டு அவளுடைய சிலம்புகளுள் ஒன்றைப் பெற்றுக் கொண்டு விற்பதற்காகக் கடைத் தெருவிற்குப் புறப்படு முன் கண்ணகியைத் தழுவிக் கொண்டு, அவளைத் தனியாக விட்டுச் செல்வதற்காக மனம் உருகிக் கண்களில் துளிக்கும் கண்ணீரை மறைத்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றான். பாடல்:

**"கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி**
**சீறடிச் சிலம்பின் ஒன்றுகொண் டியான்போய்**
**மாறி வருவன் மயங்காது ஒழிகெனக்**
**கருங்கயல் நெடுங்கண் காதலி தன்னை**
**ஒருங்குடன் தழீஇ உழையோர் இல்லா**
**ஒருதனி கண்டுதன் உள்ளகம் வெதும்பி**

**வருபனி கரந்த கண்ண னாகிப்**
**பல்லான் கோவலர் இல்லம் நீங்கி**
**வல்லா நடையின் மறுகில் செல்வோன்"**

(கொலைக் களக் காதை: 91-99)

என்பது பாடல் பகுதி. ஆற்றாமை காரணமாகக் கோவலன் கண்ணகியை ஒருங்குடன் - அதாவது - மார்போடு இறுக அணைத்துத் தழுவிக் கொண்டானாம். குடி முதல் சுற்றத்தார், குற்றிளையோர், அடியோர் பாங்கினர், ஆயத்தார் முதலியோருடன் இருந்த கண்ணகியை இப்போது தனியே விட்டுச் செல்வதாக உள்ளம் வெதும்பி உருகினானாம். கண்ணீரைக் கண்ணகி கண்டால் மிகவும் வருந்துவாள் என்பதற்காக, என்னவோ துடைப்பவன் போல் துடைத்து மறைத்தானாம். வல்லா நடையின் - அதாவது - நடக்க முடியாத தள்ளாட்டத்துடன் தெருவில் சென்றானாம்.

கண்ணகியைத் தனியாய் விட்டுச் சென்றான் என்பதில் ஒரு கருத்து மறைந்துள்ளது. இப்போது மட்டும் அன்று - இனியும் அவள் தனியாயிருக்கச் செய்து விட்டான் - மீண்டும் அவள் கோவலனோடோ அல்லது - அவர்களுடைய சுற்றத்தாரோடு கூடப்போவதில்லை - என்னும் கருத்து இதில் மறைந்து கிடக்கின்றதல்லவா?

**கோவலன் குழப்பம்**

கோவலன் கண்ணகியை விட்டு மாதவிபால் தாவினான். மாதவியின் கானல் வரிப்பாட்டைக் கேட்டு, அவள் வேறொருவன் மேல் காதல் கொண்டுள்ளாள் எனக் குழப்பம் எய்தி அவளைப் பிரிகிறான். கோவலன் இன்னொருத்தியிடம் உள்ளம் செலுத்தியிருப்பது போன்ற குறிப்பு புலப்படும் பாடலைப் பாடியதால், மாதவியும் இன்னொருவன் மீது எண்ணம் கொண்டவள் போல் பாடினாள். இருவர்

பாடியனவும் உண்மையானவையல்ல. விளையாட்டாகப் பாடியவையே. ஆனால் விளையாட்டு வினையாயிற்று. முன்னர் இந்திர விழாவில் மாதவி ஆடல் பாடல் செய்ததையே பிடிக்காமல் வெறுத்தவன் கோவலன்.

இதில் ஆண்மையின் ஆட்சி புலப்படுகின்றது. ஆடவன் எத்தனைப் பெண்கள் மேலும் விருப்பம் கொள்ளலாம்; ஆணுக்குக் கற்பு தேவையில்லை. ஆனால், பெண் ஒருவனைத்தவிர இன்னொருவனை நினைக்கவும் கூடாது; பெண்ணுக்குக் கற்பு இன்றியமையாதது - என்ற கொள்கை - அதாவது - ஆண் ஆட்சிக் கொள்கை புலப்படுகிறது. கோவலனது குழப்பம் ஆண் ஆட்சியின் அடிப்படையில் ஏற்பட்டதே.

உண்மையிலேயே மாதவிக்கு மாற்றான் எவன்மீதும் எண்ணம் இல்லை என்பதற்குத் தக்க சான்று நூலிலேயே உள்ளது. கோவலன் பிரிந்து சென்ற பின்னர், தோழி வயந்த மாலை வாயிலாக மடல் எழுதிக் கோவலனுக்குக் கிடைக்கச் செய்ததே தக்க சான்றாகும். ஆண் ஆட்சியின் காரணமாகக் கோவலன் மடல் பெற மறுத்து விட்டான். இது கடைத் தெருவிலேயே (கூல மறுகில்) நடைபெற்ற மானக்கேடு.

கோவலன் மாதவியை நம்பாமை தகாதெனினும், அவன் கண்ணகியை அடைய இது வழி வகுத்துக் கொடுத்தது. ஆனால் கண்ணகியை அடைந்தமை, நன்மைக்குப் பதிலாக இறக்கும் அளவுக்குத் தீயதாய் முடிந்தது இரங்கத்தக்கது. எதிரதை யாரறிவார்!

**கோவலனின் குறைபாடுகள்**

கோவலன் பற்பல அறச்செயல்கள் புரிந்திருப்பினும், கலைகளில் ஆர்வமும் பயிற்சியும் உடையவனாய்

இருந்திருப்பினும், பார்ப்பவர் கண்ணுக்கு அவனுடைய குறைபாடுகளே மிகுதியாய்த் தெரியும். முதல் குறை பெற்றோரைப் பிரிந்தமை. பெற்றோர்கள் இவனைத் திருத்தப் பல அறிவுரைகள் கூறினர் - இவன் பொருட் படுத்த வில்லை - பெற்றோர்க்கு அடங்காப் பிள்ளையாகவே இருந்தான் என்பது 'இரு முது குரவர் ஏவலும் பிழைத்தேன்' என இவனே பின்னோரிடத்தில் கூறியிருப்பது கொண்டு தெளியலாம்.

அடுத்தது கண்ணகியைப் பிரிந்த குற்றம், ஒரு பெண்ணின் வாழ்வைக் கெடுத்து 'வாழா வெட்டி' என்னும் பெயர் ஏற்படச் செய்தமை கொடியது. மற்றும், தந்தைக்கு உதவியாக உடனிருந்து வாணிகத்தைக் கவனிக்காமை குற்றம். வாணிகத்தைப் பெருக்கிப் பொருள் ஈட்டா விடினும், இருந்த பொருளையெல்லாம் அழித்தமை இன்னும் பெரிய குற்றமாகும். பெற்றோருக்கும் உற்றார் உறவினர்க்கும் தெரியாமல், இருளில் கண்ணகியை அழைத்துக்கொண்டு தனி வழி சென்றமை குற்றத்தின் மேல் பெருங்குற்றமாகும்.

ஆகக் கோவலன் வாழ்வாங்கு வாழவில்லை. 'சாகிற காலத்தில் சங்கரா - சங்கரா' என்பது போல் இறுதிக் காலத்தில் தன் குறைபாடுகளை உணர்ந்து திருந்தினாலும், முடிவு கொல்லப்பட்டதேயாகும்.

கோவலனின் குறைபாடுகள், ஒரு வளமான காப்பியத்தைத் தமிழ் மொழிக்குத் தந்தது என்ற அளவில் ஆறுதல் கொள்ளலாம்.

# 20. கண்ணகியின் கற்புநிலை

**மங்கல வாழ்த்துப் பாடல்**

*சிலப்பதிகாரக் காப்பியத்தில் தொடக்கத்திலிருந்து இறுதி வரை இடம்பெற்றுள்ள சுதை உறுப்பு (கதைப் பாத்திரம்) கண்ணகியே. அவள் புகார் நகரில் வாழ்ந்த மாநாய்கன் என்பவனின் மகள். மாநாய்கனோ மழையெனப் பொருள்களைப் பொழியும் வளவிய கையை உடையவனாம். கண்ணகி பொற்கொடி போன்ற உருவினள்; தாமரை மலரில் தங்கும் திருமகள் போன்ற திருவினள்; பாராட்டத்தக்க அழகிய - மங்கலமான வடிவழகு உடையவள்; அருந்ததி போலும் கற்பினள்; பெண்டிர் போற்றத்தக்க உயரிய பண்பினள்; அனைவரிடத்தும் அன்பினள்; திருமணத்தின் போது பன்னிரண்டு அகவை உடையவளாய் இருந்தாள். பாடல்:*

> **"போகநீள் புகழ்மன்னும் புகார்நகர் அதுதன்னில்**
> **மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்**
> **ஈகைவான் கொடியன்னாள் ஈராறாண்டு அகவையாள்**
> **அவளுந்தான்,**
> **போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்**
> **தீதிலா வடமீனின் திறம்இவள் திறமென்றும்**
> **மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்**
> **காதலாள் பெயர்மன்னும் கண்ணகிஎன்பாள் மன்னோ"**

(*மங்கல வாழ்த்துப் பாடல்:* 23-29)

*என்பது பாடல் பகுதி. சிறார்க்குக் கதை சொல்பவர்கள், ஒரே ஒரு ஊரிலே அப்பா அம்மாவாம். அவர்களுக்கு ஒரு*

மகளாம் - என்பது போல் கதையைத் தொடங்குவார்கள். இளங்கோவடிகளும் இதே முறையைப் பின்பற்றியுள்ளார். புகார் என்னும் ஊராம்; அங்கே மாநாய்கன் என்று ஒருவர் இருந்தாராம்; அவருக்கு ஒரு மகளாம்; அவள் பெயர் கண்ணகியாம்; அவளுக்குப் பன்னிரண்டு அகவை நிரம்பிய போது திருமணம் செய்து வைத்தாராம் - என இளங்கோ கண்ணகி கதையைத் தொடங்கிச் சொல்லிக் கொண்டு போகிறார்.

கதையில் குலப் பெயரும் கூறுவது உண்டு. இளங்கோ குலப்பெயரை வெளிப்படையாகக் கூறாமல் மறைமுகமாகக் கூறியுள்ளார். கண்ணகியின் தந்தை பெயர் மாநாய்கனாம். கோவலனின் தந்தை பெயர் மாசாத்துவானாம். நாய்கன் என்பதற்கும் சாத்துவான் என்பதற்கும் வணிகன் என்பது பொருள். மாநாய்கன் என்றால் பெரிய வணிகன் - மாசாத்து வான் என்றாலும் பெரிய வணிகன் என்பதே பொருள். கூர்ந்து நோக்குங்கால் இந்தப் பெயர்கள் சாதிப் பெயர் களாகத் தெரிகின்றன. இந்த இரண்டு பெயர்களைத் தவிர, சிலப்பதிகாரக் கதை மாந்தருள் வேறு எவரும் சாதிப் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளதாகத் தெரியவில்லை. மாங் காட்டுமறையவன் என்பது இன்னதன்று எனவே,மாநாய்கன், மாசாத்துவான் என்பன அவர்களின் இயற்பெயர்களா என ஐயுறச் செய்து - குலப்பெயர்களாகத் தோன்றுகின்றன. மாதிரிக்கு இரு பெயர்களைக் கூறுவோம்; அதாவது: முத்தையன் மாநாய்கன் - வடிவேலன் மாசாத்துவான் என்ற பெயர்களாக இருக்கலாம் என்று வைத்துக்கொள்வோம். செட்டியார் குலத்தில் மிகவும் பெயர் பெற்ற பெரியவர் ஒருவரை அவரது இயற்பெயரால் சுட்டாமல், செட்டியார் என்றே கூறுவதுண்டு. குறிப்பிட்ட ஒரு சூழ்நிலையில், செட்டியார் என்றால் அவர் ஒருவரைத்தான் குறிக்கும். இது போலவே, முதலியார் என்றால் மிகவும் பெயர் பெற்ற பெரியவர் ஒருவரையே குறிக்கும். இது உலகியல்,

இந்த முறையிலே மாநாய்கன்-மாசாத்துவான் என்னும் பெயர்கள் குலப்பெயரைக் குறிப்பனவாக இருக்கலாமோ! குலப்பெயர் எனில், இரண்டு பெயர்களுள் ஏதாவது ஒன்று தானே இருக்க முடியும்? இங்கே இரு பெயர்கள் கூறப்பட்டுள்ளனவே என்று கேட்கலாம். ஒரு குலத்தாருக்குள்ளேயே ஒன்றுக்கு மேற்பட்ட பட்டப் பெயர்கள் இருப்பதுண்டு. எடுத்துக்காட்டுகள்: உறவினர்கட்குள்ளேயே, முதலியார் - செட்டியார் என்ற பட்டப்பெயர்கள் உண்டு. உறவினர்கட்குள்ளேயே கவுண்டர், நாயகர், படையாட்சி என்ற பட்டப் பெயர்கள் உண்டு. முக்குலத்தாரிடையே பல்வேறு பட்டப் பெயர்கள் உண்டு. இதுபோல, கண்ணகி - கோவலன் - இவர்களின் உறவினர்கட்குள்ளேயே மாநாய்கன், மாசாத்துவான் என்னும் பட்டப் பெயர்கள் இருக்கலாம். அங்ஙனமெனில், நாய்கன் - சாத்துவான் என்பன போதுமே - 'மா' என்னும் சிறப்பு அடைமொழி சேர்த்து மாநாய்கன் - மாசாத்துவான் என்றது ஏன் எனில், இன்றைய உலகியலில் பெரிய பண்ணை, பெரிய கம்பத்தம், பெரிய இடம், பெரிய தனக்காரர் என்பவற்றில் உள்ள 'பெரிய' என்பது போல 'மா' என்பதைக் கொள்ளலாம்.

இங்கே இத்தகைய குழப்பமான - ஐயத்திற்கு இடமான சூழ்நிலை எனக்கு ஏற்பட்டதற்கு உரிய காரணமாவது: இரண்டு பெயர்களிலும் 'மா' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டிருப்பது இயற்கையான பெயர்களுக்கு உரியதா - அல்லது இருவரும் சமமானவர்கள் என்று அறிவிப்பதற்காகச் செயற்கையாகச் சேர்க்கப்பட்ட அடைமொழியா என்ற ஐயக் குழப்பம் ஏற்பட்டதே. மற்றும், தெருக் கூத்துக் கதையில் கோவலனின் தந்தை பெயர் மாணாக்கன் (மாநாய்கன்) என்றும், கண்ணகியின் தந்தை பெயர் மாச்சோட்டான் (மாசாத்துவான்) என்றும் பெயர்கள் மாற்றித் தரப்பட்டுள்ளன. பெயர்களின்

உருவமும் திரிந்துள்ளது. மேலும், தந்தைமார்களின் பெயர்களைச் சொன்ன இளங்கோ தாய்மார்களின் பெயர் களைச் சொல்லாதது ஒரு குறைபாடாகும். படகு வலிப்பவரின் பாடல்களில், கோவலனின் தாய் பெயர் 'வண்ண மாலை' என்று குறிப்பிடப்பட்டுள்ளதாம்.

1960-ஆம் ஆண்டு யான் 'மலர் மணம்' என்னும் ஒரு புதினம் எழுதி வெளியிட்டேன். அதில், கதைத் தலைவன் - தலைவியரின் தந்தையர்களின் பெயர்களை மட்டும் கூறி யிருந்தேனே தவிர, தாயர்களின் பெயர்களை அறிவிக்க வில்லை. எனது இந்தப் புதினத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த இராமநாத புரத்து அறிஞர் ஒருவர், நான் தாய்மார்களின் பெயர்களையும் அறிவித்திருக்க வேண்டும் என்று என்னிடம் தெரிவித்தார். தந்தையர்களின் பெயர்களே குழப்பமாக இருக்கும்போது, தாய்மார்களின் பெயர்களை இளங்கோ எவ்வாறு அறிந்து கூறியிருக்க முடியும்?

பெயர்கள் பற்றி மேலே யான் வெளியிட்டுள்ள கருத்து முடிந்த முடிபு அன்று. குழப்பமாகவே உள்ளது. தெருக் கூத்துப் பெயர்களையும் சிலப்பதிகாரப் பெயர்களையும் ஒத்திட்டுப் பாராமல் இருந்தால் குழப்பம் இல்லை. மற்றும், இருவர் பெயர்களும் 'மா' அடை பெற்று ஒரே பொருள் உடையனவாய் இல்லாமல், வேறு வேறு பொருள்கள் உடையனவாய் இருந்திருப்பினும் குழப்பத்திற்கு இடம் இல்லை. இதை அறிஞர்களின் ஆய்வு முடிபிற்கு விட்டு விடுகிறேன்.

தன்னை விட்டு நீங்கிய கணவன் கோவலனைக் கண்ணகி கண்டிக்கவோ - கடிந்து பேசவோ இல்லை. கணவன் பிரிந்ததால் தாய் வீட்டிற்குச் சென்று விடவில்லை. கணவன் அழைத்ததும், அவனோடு ஊடல் கொள்ளாமல்

உடனே புறப்பட்டுவிட்டாள் - ஆதலின், வடமீன் (அருந்ததி) அனைய கற்பினள் எனப் பாராட்டப்பட்டுள்ளாள்.

ஈண்டு 'பெயர் மன்னும் கண்ணகி என்பாள்' என்று இளங்கோ குறிப்பிட்டிருப்பது மிகவும் பொருத்தமானது. மன்னுதல் என்னும் சொல்லுக்கு நிலைத்திருத்தல் என்னும் பொருள் உண்டு. இங்கே,

**"மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே"** (165:1, 2)

என்னும் புறநானூற்றுப் பாடல் பகுதி எண்ணத் தக்கது. கண்ணகி என்னும் பெயர் இன்றும் நிலைத்துள்ளது. சிலப்பதிகாரம் உள்ளவரையும் - ஏன் - தமிழ் உள்ள வரையும் இந்தப்பெயர் புகழுடன் நிலைத்திருக்கும். கோயில் எடுத்திருப்பதால் பெயர் நிலைத்திருப்பது உறுதி. கண்ணகியின் வரலாற்றை – அவளுக்குத் தம் தமையன் கோயில் எடுத்த வரலாற்றை இளங்கோ உடனிருந்து அறிந்தவராதலின் 'பெயர் மன்னும் கண்ணகி' என்று தொடக்கத்திலேயே 'பிள்ளையார் சுழி' (தொடக்கக் குறி) போட்டுள்ளார். அருந்ததி மக்கள் உள்ளத்தில் என்றும் இருப்பதுபோல் கண்ணகியும் இருப்பாள் என்பது கருத்து.

**மனையறம் படுத்த காதை**

**கண்ணகியின் நலம் பாராட்டல்**

முதலாவதாகிய மங்கல வாழ்த்துப் பாடல் என்னும் பகுதியில் கோவலன் – கண்ணகி திருமணம் கூறப்பட்டது. இரண்டாவதாகிய மனையறம் படுத்த கதையில் இருவரும் குடும்பம் நடத்தினமை கூறப்பட்டுள்ளது. கண்ணகியும் கோவலனும் காதலில் சிறந்து, திங்களும் ஞாயிறும் ஒன்று சேர்ந்தாற்போல் இணைந்து இருவரின் தாரும் மாலையும் ஒன்றோடொன்று கலக்க அணைத்துக்கொண்டு தம்மை

மறந்து இன்பத்தில் திளைத்தனர். அப்போது கோவலன் தீராக் காதலோடு கண்ணகியின் திருமுகத்தை நோக்கிப் பலவாறு நலம் பாராட்டினான்:

**''கயமலர்க் கண்ணியும் காதல் கொழுநனும்...** (11)
**கண்டு மகிழ்வுஎய்திக் காதலில் சிறந்து** (25)
**கதிர் ஒருங்கிருந்த காட்சி போல...** (31)
**தாரும் மாலையும் மயங்கிக் கையற்றுத்** (35)
**தீராக் காதலின் திருமுகம் நோக்கிக்** (36)
**கோவலன் கூறுமோர் குறியாக் கட்டுரை''** (37)

என்பன பாடல் பகுதிகள். கயமலர்க் கண்ணி = மலர் போன்ற கண்ணுடைய கண்ணகி. காதல் கணவன் = கண்ணகிபால் மிக்க காதலையுடைய கோவலன். காப்பியத் தொடக்கமாகிய மங்கல வாழ்த்துப் பாடல் என்னும் பகுதியில் முதலில் ''திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்'' என்றும், இரண்டாவதாக ''ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்'' என்றும் ஆசிரியர் கூறியுள்ளார். அதே பகுதியில், கண்ணகியை முதலில் அறிமுகப்படுத்திப் பின்னரே கோவலனை அறிமுகப்படுத்தி யுள்ளார்.

இதில் இயற்கையான ஒரு பொருத்தம் உள்ளது. மென்மையான ஒளியுடைய திங்களும் வன்மையான ஒளி யுடைய ஞாயிறும் முன் பின்னாகக் கூறப்பட்டிருப்பது போலவே, கண்ணகியின் அறிமுகமும் கோவலனின் அறிமுகமும் முறையே முன் பின்னாகக் கூறப்பட்டுள்ளன. அதற்கு ஏற்ப, மனையறம் படுத்த காதையிலும், ''கயமலர்க் கண்ணியும் காதல் கொழுநனும்'' (11) எனக் கண்ணகியும் கோவலனும் முறையே முன் பின்னாகக் கூறப்பட்டிருப்பது கருதத்தக்கது. மற்றும், ''கதிர் ஒருங்கிருந்த காட்சி போல'' (31) என்னும் இல்பொருள் உவமையும் எண்ணத்தக்கது.

**கோவலன் காதல்**

கோவலனுக்குக் கண்ணகியிடம் உண்மையான காதல் இல்லை - அவன் அவளை உள்ளுணர்வுடன் - உள்ளத்தால் விரும்பவில்லை - என்றெல்லாம் ஆராய்ச்சியாளர் சிலர் எழுதியுள்ளனர். மனையறம் படுத்த காதையில் 'காதல் கொழுநன்' (11), 'காதலின் சிறந்து' (25), 'தீராக் காதலின் திருமுகம் நோக்கி' (36) என்றும், நாடுகாண் காதையில் 'காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க' (230), என்றும், புறஞ்சேரியிறுத்த காதையில் 'காதலி தன்னோடு கானகம் போந்ததற்கு' (44) என்றும், அடைக்கலக் காதையில் 'கடுங்கதிர் வெம்மையின் காதலன் தனக்கு' (139) என்றும், கொலைக்களக் காதையில் 'கருங்கயல் நெடுங்கண் காதலி தன்னை ஒருங்குடன் தழீஇ' என்றும் அடிகள் பாடியிருப்பதன் உள்ளுறையாது? கோவலனுக்குக் கண்ணகி மீது தீராக் காதல் இருந்தது என்பது தானே கருத்தாகும்?

'தீராக் காதல்' என்றார் - தீராக் காதல் தீர்ந்தது எப்படி? இங்கேதான், மாதவியின் மயக்கும் ஆற்றலை, நூல் படிப்பவர்கள் பின்னர்க் கற்பனை செய்து பார்க்க ஆசிரியர் இடம் வைத்துள்ளார். ஒருவகை நிலையாமைக் கூறை உணர்த்துகிறது இது. ஆனால், இதில் உண்மை இல்லாமலும் இல்லை. கோவலன், இறுதியில் மாதவியைப் பிரிந்து, பின்னர்த் தீராக் காதலுடன் கண்ணகிபால் வந்து சேர்ந்தான் அல்லவா? அகமுடையான் - பெண்டாட்டி சண்டை என்பர் - அந்தச் சண்டை நீடிக்காது என்றும் மக்கள் சொல்வர். அவ்வாறே கோவலனும் கண்ணகியும் கூடிக் கொண்டனர். எனவே, தீராக்காதல் என்பது பொருத்தமே.

**கண்ணகிக்குப் புகழ்மாலை**

கோவலன் கண்ணகியை நோக்கிப் பாராட்டுகிறான்:- என் அருமைக் கண்ணகியே! நீ திருமகள் ஆவாய்.

திருமகளோடு திங்கள் (நிலா) கடலில் பிறந்ததால், சிவன், தன் திருமுடியில் உள்ள பிறை நிலவை உனது நெற்றி யாகும்படிச் செய்துள்ளார். மன்மதனது கரும்புவில் இரண்டாகப் பிளந்து உன் இரு புருவங்களாக ஆக்கப்பட்டுள்ளது. இந்திரனின் வச்சிரப்படையின் இடைப்பகுதி உனது இடையாக ஆக்கப்பட்டுள்ளது. முருகனின் வேல் இரண்டாகப் பிளக்கப்பட்டு உன் இரு கண்களாக ஆக்கப்பட்டுள்ளது என்று பாராட்டியுள்ளான்.

மற்றபுலவர்கள் பெண்ணின் நெற்றிக்குப் பிறையையும், புருவத்திற்கு வில்லையும், இடைக்கு ஒரு பொருளின் இடையிலுள்ள (உடுக்கையின் இடைப்பகுதி போன்ற) பகுதியையும், கண்ணுக்கு வேலையும் உவமையாகக் கூறுவது மரபு. அதே உவமைகளைப் புதுமுறையில் - புதிய கோணத்தில் இளங்கோ கூறியிருப்பது சுவையாயுள்ளது. அதாவது - சிவன் பிறையை இவள் நெற்றிக்குத் தந்தானாம்; மன்மதன் கரும்புவில்லைப் புருவத்திற்குக் கொடுத்தானாம்; இந்திரன் இடைப்பகுதி ஒடுங்கியிருக்கும் தன் வச்சிரப் படையின் (வச்சிராயுதத்தின்) இடைப்பகுதியை இவளது இடைக்கு ஈந்தானாம்; முருகன் தன் வேலை இவள் கண்ணிற்குத் தந்தானாம். உவமையை இந்த விதமாகப் புதுமைப்படுத்துவது சிறந்த புலவர்களின் மிக்க புலமைக்கு அறிகுறியாகும். (38-52-ஆம் அடிகள்)

இளங்கோ அடிகள் கையாண்டுள்ள இந்தப் புதிய முறையைப் புதுவைப் பாவேந்தர் பாரதிதாசனும் கையாண்டுள்ளார். எப்போது? தாம் இளைஞராய் ஆசிரியரிடத்தில் பாடம் பயின்ற தொடக்கக் காலத்திலேயே இவ்வாறு பாடியுள்ளார். பாவேந்தரின் ஆசிரியர் புதுவைப் பெரும்புலவர் (மகாவித்துவான்) பு. அ. பெரியசாமிபிள்ளை என்பவர். இவர் இறுதி எய்தியபோது, மாணாக்கர்

பலரும் இரங்கல்பா பாடினர். பாரதிதாசனும் பாடினார். எவ்வாறு பாடினார்?:-

எங்கள் அன்பான ஆசானே! எமக்குப் போக்கிடம் இல்லாதவாறு மண்ணுலகை மறந்து மறைந்து விட்டீரே. எங்கள் சிற்றறிவை மேலும் விளக்கி ஒளி பெறச்செய்யும் உம்ஆட்சி உரிமையை (அதிகாரத்தை) ஞாயிற்றுக்கு அளித்துப் போய்விட்டீர். நும் அன்பை எங்கள் தாய்மார்களிடம் கொடுத்துச் சென்று விட்டீர். கடல் மடை திறந்தாற்போலும் - விரைந்து கவிபாடும் ஆற்றலை என்றும் ஒலி எழுப்பும் கடலுக்குத் தந்து ஏகினீர். உமது புகழை இமயமலைக்கும் பொறுமையை நிலத்திற்கும் நீங்கள் பேசும் இன்சொல்லைக் குயிலுக்கும் விட்டளித்துப் பெரிய பெயருடன் தெய்வமாகிவிட்டீரே - என்னும் கருத்தமைத்துப் பாடியுள்ளார். இலக்கிய ஒப்புமை காண்டல் என்ற முறையில் அந்தப் பாடல் வருமாறு:-

(பதினான்கு சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

''பூமியை மறந்துவிட் டீரே எமக்கிங்கோர்
போக்கிலா தாக்கி னீர்எம்
புன்மதி விளக்குமதி காரத்தை நீரிங்குப்
பொற்கதிர்க் கீந்தி ரேனும்
யாமதைப் புதுமையாக் கொள்வதுண் டோதினம்
எங்கள்பால் காட்டும் அன்பை
ஈன்றதாய்க் கீந்துசென் றீரெனினும் அன்னதால்
இதயத்தில் அமுதம் உறுமோ
தாமத மிலாதுகவி பாடிடுந் தன்மையைச்
சமுத்திரற் கீந்திர் அதுதான்
சாற்றுவது மற்றோர்முறை சாற்றுமோ கீர்த்தியைச்
சாரிமய மலையில் வைத்துச்

**சாமிஉம் பொறுமையைப் பூமிக் களித்தின்சொல்**
**சந்தக் குயிற்கண் இட்டுச்**
**சகக்கடை வரைப்பெரிய சாமியாம் பெயர்நிறுவித்**
**தாணுவடி வெய்தி னீரே"**

என்பது பாடல். மதி விளக்கும் திறமைக்கு ஞாயிற்றையும், ஆசானின் அன்புக்குத் தாயின் அன்பையும், மிகுந்த கவிபாடும் ஆற்றலுக்குக் கடலையும், புகழுக்கு (அளவில்) இமய மலையையும், பொறுமைக்கு அகழ்வாரைத் தாங்கும் நிலத்தையும், அவரது இன்சொல்லுக்குக் குயிலையும் உவமையாகக் கூற வந்த பாரதிதாசன், அந்த உவமை களையே வேறொரு கோணத்தில் நின்று விளக்கியுள்ளார். இந்த முறை ஏறத்தாழ இளங்கோ கையாண்டுள்ள முறை போன்றுள்ளதல்லவா? இனி, மீண்டும் சிலம்புக்கு வருவோம்.

கோவலன் மீண்டும் கண்ணகியின் நலம் பாராட்டு கிறான்: கண்ணகியே, உன் சாயலைக் கண்டு வெட்கி மயில் காடேகியது. உன் நடையைக் கண்டு நாணி அன்னம் மலர்ச் செறிவுக்குள் மறைந்து கொண்டது. ஆனால், இரக்கத்திற்கு உரிய கிளி, குழலும் யாழும் அமிழ்தும் கலந்த உன் இனிய பேச்சைக் கேட்டுச் சிறுமையடைந்த தாயினும், உனது பேச்சினிமையைக் கற்றுக் கொள்வதற்காக உன்கையிலேயே உள்ளது-என்று கூறிய கோவலன் மேலும் பாராட்டுகிறான். (53-61-ஆம் அடிகள்)

கண்ணகியே! உனக்கு மங்கல நாண் அணி உள்ளபோது, வேறு அணிகலன்களை உன் தோழியர் ஏன் உனக்கு அணிகின்றனர்? உனக்குச் சில மலர்கள் அணிந்தாலே போதுமே! அங்ஙனமிருக்க, ஏன் பெரிய மாலையைச் சூட்டுகின்றனர்? அந்த மாலைக்கும் இவர்கட்கும் இடையே ஏதாவது தொடர்பு (பேரம்) உண்டா? உன் மார்பகத்தில் தொய்யில் எழுதியதே போதுமே! மேலும் முத்து

மாலையை அணிவித்தது ஏன்? அந்த முத்து மாலையோடு இடையில் ஏதேனும் தொடர்பு (பேரம்) இவர்கட்கு உண்டா? உனது இடை வருந்த இவ்வளவு அணிகலன் ஏன்? என்று வினவிப் பாராட்டுகிறான். (62-72)

**"பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு**
**அணிஎவனோ ஏதில தந்து"** (1089)

என்னும் திருக்குறள் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. மலர் மாலையோடும் முத்து மாலையோடும் தோழியர்க்கு ஏதேனும் தொடர்பு உண்டா? - என்று கேட்பது போன்ற அமைப்பு, புதிய முறையில் சுவை பயக்கின்றது. மேலும் பின்வருமாறு விளித்துப் பாராட்டுகிறான்:

**',மாசறு பொன்னே வலம்புரி முத்தே**
**காசறு விரையே கரும்பே தேனே"** (2:73, 74)

என்றான். இதில் ஐம்பொறிகளின் தூண்டல் துலங்கல் குறிப்பாய் அமைந்துள்ளன. பொன் கண்ணுக்கு இனியது. வலம்புரி முத்து, உடம்பின் உறுப்புகளில் படும்போது வழவழப்பாக மென்மையாயிருந்து தொடுபுலனாகிய ஊற்றின்பம் அளிக்கிறது. காசறு விரை எனப்படும் நறுமணப் பொருள் மூக்கின் வாயிலாக நறுமண இன்பம் துய்க்கச் செய்கின்றது. கரும்பு = நாக்கிற்கு (வாய்க்கு) இனிப்புச் சுவை நல்குகிறது. பெண்கட்குத் 'தேன்மொழி' என்னும் பெயர் இருப்பதற்கு ஏற்ப, தேன் மொழி இன்பம் தருகிறது. இவ்வாறாக, ஐம்பொறி - புலன்கட்கும் இன்பம் தருகிறது. இவ்வாறாக, ஐம்பொறி - புலன்கட்கும் இன்பம் அளிக்கத் தக்கவளாய்க் கண்ணகி உள்ளாளாம். ஈண்டு,

**"கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்தொடி கண்ணே உள"** (1101)

என்னும் குறள் ஒப்புநோக்கத் தக்கது.

பாராட்டு மேலும் தொடர்கிறது:

பெறலரும் பெண்ணே! ஆருயிர் மருந்தே! உன்னை யான் என்னென்று புகழ்வேன்! மலையில் பிறவாத மணி என்பேனா - அலை கடலில் பிறவாத அமிழ்தம் என்பேனா - யாழினின்றும் பிறவாத இன்னிசை என்பேனா- என்றெல்லாம் அழியாத கட்டுரை பல கூறிப் பாராட்டினான்:

**"அரும்பெறல் பாவாய் ஆருயிர் மருந்தே**
**பெருங்குடி வாணிகன் பெருமட மகளே**
**மலையிடைப் பிறவா மணியே என்கோ**
**அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ**
**யாழிடைப் பிறவா இசையே என்கோ**
**தாழிருங் கூந்தல் தையால் நின்னையென்று**
**உலவாக் கட்டுரை பல பாராட்டி..."** (75-81)

என்பது பாடல் பகுதி. கோவலன் கண்ணகியை நோக்கிக் கூறியதாக இளங்கோ பாடியுள்ள இந்தப் பகுதி 'உலவாக் கட்டுரை' எனப்பட்டுள்ளது. உலவாக் கட்டுரை என்றால், அழியாத அணிந்துரையாகும். ஆம்! இப்பகுதி எக்காலத்திலும் பலராலும் எடுத்தாளப்படக் கூடிய தன்றோ?

கண்ணகி மாமியாரால் மகிழ்வெய்தப் பெற்று விருந்தோம்பும் பெருமையுடன் சில்லாண்டு காலம் கணவனோடு வாழ்ந்தாள். இவ்விதமாகக் கோவலனது பாராட்டையும் மாமியின் ஒத்துழைப்பையும் கண்ணகி பெற்றமை மனையறம் படுத்த காதையில் கூறப்பட்டுள்ளது.

கோவலன் கண்ணகியோடு உடலுறவு கொண்டிருக்க மாட்டான் என்பதாக ஓர் ஆராய்ச்சியாளர் எழுதியுள்ளார். கோவலன் படுக்கை அறையில்தான் இவ்வளவு பாராட்டி யிருக்கமுடியும். கண்ணகி குழம்பு வைக்கப் புளி கரைத்துக் கொண்டிருந்த போதா இவ்வாறு பாராட்டியிருக்க

முடியும்? இருவரும் உடலுறவு கொண்டே சில்லாண்டுகள் மனையறம் நடத்தினர்.

## அந்திமாலைச் சிறப்புச் செய்காதை

சில்லாண்டு உடனுறை வாழ்க்கை புரிந்து பின்னர் மாதவியிடம் கோவலன் சென்று விட்டபிறகு, கண்ணகியின் நிலை பின்வருமாறு இருந்தது:

கண்ணகி காலில் சிலம்பு அணிந்திலள். இடையில் மேகலை இல்லை. மார்பகத்தில் குங்குமம் எழுதிலள். காதில் குழை இல்லை. முகத்தில் வியர்வை இல்லை. கண்கட்கு மை தீட்டிலள். நெற்றியில் பொட்டு வைத்திலள். சிரிக்கும் அழகை இனிக் கோவலன் பெறமுடியாதபடி முகம் வாடினாள். கூந்தலுக்கு நெய்யணி பூசி அணி செய்திலள். மங்கல நாணாகிய தாலியைத் தவிர, வேறெதையும் பூண்டிலள். துயரமே உருவாயிருந்தாள். பாடல்:

**''அஞ்செஞ் சீறடி அணிசிலம்பு ஒழிய**
**மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்**
**கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்**
**மங்கல அணியின் பிறிதணி மகிழாள்**
**கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்**
**திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்**
**செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்**
**பவள வாள்நுதல் திலகம் இழப்பத்**
**தவள வாள்நகை கோவலன் இழப்ப**
**மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்**
**கையறு நெஞ்சத்துக் கண்ணகி''** (47-57)

என்பது பாடல் பகுதி, கணவனைப் பிரிந்த கண்ணகி ஏறத் தாழக் கைம்பெண்வாழ்க்கையே வாழ்ந்தாள் என்று சொல்லுமளவில் இருந்தாள். அவள் அணிந்திருந்த மங்கல

நாண் (தாலி) ஒன்றே அவள் நன்மங்கலி என்பதை அறிவித்துக் கொண்டிருந்தது. 'தவள வாள் நகை' என்பது, கோவலன் எதிரில் மட்டும் சிரிக்கக் கூடியவள் என்பதை அறிவிக்கிறது. புணர்ச்சியின்போது முகத்தில் வியர்வை தோன்றும்; இப்போது புணர்ச்சி இன்மையின் முகம் வியர்வையை அறியவில்லை. அந்தக் காலத்தில் கணவன் பிரிந்த கற்புடைய மங்கைக்கு உரிய இலக்கணமாக இந்த நிலை மதிக்கப்பெற்றது. இக்காலத்தில் இதை எதிர்பார்க்க முடியாது.

## நாடு காண் காதை

### கண்ணகியின் மென்மை

கோவலனும் கண்ணகியும் புகாரை விட்டு மதுரை நோக்கிப் புறப்பட்டுச் சென்ற வழியில், ஒரு காதத் தொலைவு கடந்த அளவிலேயே, கண்ணகி கோவலனை நோக்கி 'மதுரை இன்னும் எவ்வளவு தொலைவிலுள்ளது' என்று கேட்டாளாம். இன்னும் அண்மையில் தான் மதுரை உள்ளது - ஆறைங்காதத் தொலைவில் உள்ளது எனச் சிரித்துக் கொண்டே கூறினானாம். பாடல்

**"இறுங் கொடி நுசுப்போடு இனைந்து அடிவருந்தி**
**நறும்பல் கூந்தல் குறுஃம்பல உயிர்த்து**
**முதிராக் கிளவியின் முள்ளெயிறு இலங்க**
**மதுரை மூதூர் யாதென வினவ**
**ஆறைங் காதம்நம் அகல் நாட்டும்பர்**
**நாறைங் கூந்தல் நணித்தென நக்கு"** (38-43)

என்பது பாடல் பகுதி. மிகவும் மெல்லிய ளாகிய கண்ணகி, முப்பது காதம் போக வேண்டிய வழியில் ஒரு காதம் சென்ற அளவிலேயே, ஒடிந்து விடுமோ என ஐயுறும் படியான மெல்லிய இடையும் அடியும் நொந்தவ ளானாள். இரைப்பு மூச்சு விட்டாள். இயலாமையால் பொய்ச்சிரிப்பு

பல்லிலே தோன்ற, குழந்தையின் மழலை போன்ற சொற்களால், வழியில் காணும் ஒவ்வோர் ஊரையும் பார்த்து இது தானா மதுரை - இது தானா மதுரை - இது இல்லையெனில் எவ்வளவு தொலைவில் மதுரை உள்ளது என்று வினவினாளாம். இதோ அண்மையில் உள்ளது - ஆறைங்காதத் தொலைவே - என்று கோவலன் இரக்கச் சிரிப்பு (அசட்டுச் சிரிப்பு) சிரித்துக் கொண்டே கூறினானாம். முப்பது காதம் என்றால் மலைப்பா யிருக்கும் என்று ஆறு ஐங்காதம் (ஆறு அல்லது ஐந்து என்னும் பொருள் படும் படியும்) எனக் கூறினானாம். இளங்கோ இந்தக் காட்சியை (சீனை) அமைத்ததில் ஒரு குறிப்பு உண்டு. அது பின்னர் விளக்கப் பெறும். கண்ணகி கோவலனது தோள்மேல் கையைப் போட்டுக் கொண்டு நடந்தாள் என்பதை அறியின், மேலும் அவளது மென்மை விளங்கும்.

இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் முறையில் கம்ப ராமாயணச் செய்தி ஒன்று இங்கே நினைவிற்கு வருகிறது. சீதையைத் தேடப் புறப்பட்ட அனுமனிடம், இராமர், சீதையைக் காணின் முன்பு நிகழ்ந்த சில செயல்களை அவளிடம் அடையாளமாகத் தெரிவிக்கும் படிச் சொல்லி யனுப்புகிறார். அவற்றுள் ஒன்று:- முடி துறந்து சீதையுடன் காடு நோக்கிப் புறப்பட்டபோது, நகரின் கடை வாயிலைக் கடக்கும் முன்பே, 'காடு எங்கே உள்ளது - இன்னும் எவ்வளவு தொலைவில் உள்ளது?' என்று கேட்ட சீதையின் பெண்மைத் தன்மையையும் நினைவு செய் - என்று சொல்லியனுப்பினார்:

**"நீண்ட முடிவேந்தன் அருளேந்தி நிறை செல்வம்**
**பூண்டதனை நீங்கி நெறி போதலுறு நாளின்**
**ஆண்டநகர் ஆணையொடு வாயில் அகலாமுன்**
**யாண்டையது கானென இசைத்ததும் இசைப்பாய்"**

(உருக் காட்டுப் படலம்-61)

என்பது பாடல். சீதையைப் போலவே கண்ணகியும் மெல்லியளாக இருந்தாள். பெண்மைக்கும் சிறு பிள்ளைமைக்கும் இவ்வாறு வினவுவது இயல்பு.

**கண்ணகியின் நடுக்கம்**

ஒரு சோலையில் கவுந்தியடிகளுடன் கண்ணகியும் கோவலனும் அமர்ந்திருந்தபோது, தீயோன் ஒருவனும் பரத்தை ஒருத்தியும் அங்கு வந்தனர்; காமனும் இரதியும் போன்ற இவர்களைக் கண்டதும், இவர்கள் யார் எனக் கவுந்தியை வினவினர். இவர்கள் என் பிள்ளைகள் என்று கவுந்தி கூறினார். உடனே, அத்தீயோர், அண்ணனும் தங்கையும் அகமுடையானும் . பெண்டாட்டியுமாய் இருப்பதுண்டோ எனக் கேட்டுக் குறும்புடன் கிண்டல் செய்தனர். இந்தத் தீய மொழியைக் கேட்டதும், கண்ணகி தன் காதுகளைப் பொத்திக்கொண்டு தன் கணவனாகிய கோவலன் முன்னே நடுங்கிக் கொண்டிருந்தாளாம். பாடல்:

**"தீ மொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்**
**காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க"**

என்பது பாடல் பகுதி. தீய சொற்களைக் கேட்டால், அந்தோ எனக் காதைப் பொத்திக் கொள்வது உலகியல். இங்கே கண்ணகி செவி புதைத்தாள் என்று கூறவில்லை. செவியகம் புதைத்தாள் எனக் கூறப்பட்டுள்ளது. அகம் என்றால், உள்ளிடம். உள் காதை மூடிக் கொண்டாள் என்றால் காதை மிகவும் இறுக்கமாக மூடிக்கொண்டாள் என்பது பொருள். மேலோடு மூடின், தீச் சொல் கேட்டாலும் கேட்டுவிடும் அல்லவா? மற்றும், பொத்தி என்று சொல்லவில்லை - 'புதைத்து' என்று சொல்லப் பட்டுள்ளது. அதாவது, ஒரு பொருளை மண்ணிற்குள் புதைத்து மறைப்பது போல், காதைமுற்றிலும் இறுக மூடி மறைத்துக் கொண்டாளாம்,

கோவலன் நடுங்கவில்லை-கண்ணகி மட்டும் நடுங்கியது ஏன்? ஆடவன் ஒருவன் பிறர் மனைவியுடன் தொடர்பு கொண்டால் அவனுக்குக் கிடைக்கும் கெட்ட பெயரைவிட, பெண்ணொருத்தி தன் கணவனல்லாத பிறனொருவனுடன் தொடர்பு கொள்ளின் உண்டாகும் கெட்ட பெயர் மிகவும் இழிவாய் நாணத்தக்கது என்பது உலகியலாயுள்ளது. தீய சொல்லைக் கேட்ட கவுந்தியடிகள் கோவலனை இழித் துரைத்ததாகக் கொள்ளாமல், கண்ணகியை இழித்துரைத்த தாகவே கொண்டு தீயோர் இருவரையும் நரிகளாகும்படிச் செய்தார்.

**"எள்ளுநர் போலும் இவர்என் பூங்கோதையை**
**முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகெனக்**
**கவுந்தி யிட்ட தவந்தரு சாபம்"** (231-233)

என்னும் பாடல் பகுதியில், பூங்கோதையாகிய கண்ணகியை எள்ளியதால் கவுந்தி சாபமிட்டதாகக் கூறியிருப்பது ஈண்டு எண்ணத்தக்கது. இவ்வாறு, ஆண் நடுங்காமல் பெண் மட்டும் நடுங்கும்படியான சூழ்நிலை பெண்ணை எள்ளிய தாகவே கவுந்தி எடுத்துக் கொண்ட சூழ்நிலை, பெண் தொடர்பான தாழ்வு மனப்பான்மைக்கு உரிய சான்றாகும்.

**கண்ணகியின் இரக்கம்**

தீயவர் இருவரும் நரியாகி ஊளையிட, கேட்ட கண்ணகி கோவலனோடு சேர்ந்து,' நரியான இருவரும் மீண்டும் பழைய உரு எய்தும்படிக் கேட்டுக் கொண்டாள். இத்தகைய சூழ் நிலையில் ஆண்களினும் பெண்கள் இரக்கம் காட்டுவது மிகுதி. ஏதேனும் துன்பச் செய்தியைக் கேட்கின் 'ஐயோ பாவம்' என்று பெண்கள் இரங்கிக் கூறுவர். இங்கேயும், நரிக்குரல் கேட்டு இருவரும் நடுங்கினர் எனச் சொல்லு மிடத்தில், ஆசிரியர்,

**"நறுமலர்க் கோதையும் நம்பியும் நடுங்கி"** (236)

எனக் கண்ணகியையே முதலில் குறிப்பிட்டுள்ளார். இங்கே கண்ணகியின் நடுக்கத்தை அச்சக் குறிப்பாகக் கொள்ளாமல் இரக்கக் குறிப்பாகக் கொள்ளல் வேண்டும்.

**கண்ணகியின் கடவுள் கொள்கை**

**கனாத்திறம் உரைத்த காதை**

கணவனைப் பிரிந்து தீய கனாக் கண்டு வருந்திக் கொண்டிருந்த கண்ணகியை நோக்கி, அவளுடைய பார்ப்பனத் தோழியாகிய தேவந்தி என்பவள் பின்வருமாறு கூறினாள்: கண்ணகியே! நீ உன் கணவனால் வெறுக்கப்பட வில்லை. முன் பிறப்பில் கணவனைக் காப்பதற்காகச் செய்ய வேண்டிய நோன்பைச் செய்யத் தவறினாய். அதன் விளைவே இது. இதினின்று தப்ப வேண்டுமாயின், 'காவிரியின் கூடல் (சங்கமத்) துறையை அடுத்தாற் போல் உள்ள சோம குண்டம், சூரிய குண்டம் என்னும் இரு பொய்கைகளிலும் முறையே நீராடிப் பின்பு காமவேள் கோட்டம் சென்று வணங்கின், இம்மையில் கணவனைப் பிரியாது கூடி வாழ்ந்து, மறுமையிலும் இன்ப உலகம் சென்று கணவனுடன் கூடி இன்பம் துய்க்கலாம். கணவனைப் பிரிந்த மகளிர் இவ்வாறே செய்வர். அதனால், நாமும் அப்பொய்கைகளில் நீராடிக் காமவேள் கோட்டம் தொழலாம் என்று சூழ்வுரை (ஆலோசனை) கூறினாள். உடனே கண்ணகி, அவ்வாறு நீராடிக் கடவுளைத் தொழுதல் எம் வழக்கம் அன்று என்றாள்.

**''ஆடுதும் என்ற அணியிழைக்கு அவ்வாயிழையாள்**
**பீடன்று என இருந்த பின்னரே...''** (63, 64)

என்பது பாடல் பகுதி. (அணியிழை = தேவந்தி. ஆயிழையாள் - கண்ணகி) அவ்வாறே நீர் ஆடி வணங்குதல் பீடு (பெருமை - மேன்மை) ஆகாது என்பது கருத்து.

இங்கே பலருக்குமே ஒரு திருக்குறள் நினைவுக்கு வரலாம். தெய்வத்தைத் தொழாமல் கணவனையே தெய்வமாகக் கொண்டு தொழுபவள் பெய் என்று ஆணையிடின் மழை பெய்யும் - என்னும் கருத்துடைய

**"தெய்வம் தொழாஅள் கணவற் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை"** (55)

என்பது தான் அந்தக் குறள். இந்தக் காலத்தில் பகுத்தறிவாளர்கள் இந்தக் கருத்தை ஒத்துக் கொள்வதில்லை. தெய்வம் தொழாமல் கணவனைத் தொழுபவள், பெய் என்று சொன்னால் பெய்யக் கூடிய மழை ஒன்று இருந்தால் எப்படியோ - அப்படிப் போல் பயன் தரக்கூடியவள் - என்று புதிய பொருள் கூறுகின்றனர் அவர்கள். இந்தப் பொருளில், கணவனைத் தொழுபவள் மழையாக உருவகப்படுத்தப் பட்டுள்ளாள். அப்படி ஒரு பெண் இருந்தால் நல்லதே யாகும் - யாரும் மறுக்கவில்லை. ஆனால், பகுத்தறிவாளர்கள் கூறும் பொருளில் திருவள்ளுவர் இந்தக் குறளை இயற்ற வில்லை. முதலில் தெரிவிக்கப்பட்டுள்ள பொருளில்தான் இந்தக் குறளை இயற்றியுள்ளார்.

பெண்கள் கணவரைத் தொழுதல் பற்றித் திருத்தக்க தேவரும் சீவக சிந்தாமணி - கனக மாலையார் இலம்பகத்தில் தெரிவித்துள்ளார். பாடல்:

**"சாமெனிற் சாத னோத**
**றன்னவன் தணந்த காலைப்**
**பூமினும் புனைத லின்றிப்**
**பொற்புடன் புலம்ப வைகிக்**
**காமனை யென்றுஞ் சொல்லார்**
**கணவற் கைதொழுது வாழ்வார்**
**தேமலர்த் திருவோ டொப்பார்**
**சேர்ந்தவன் செல்லல் தீர்ப்பார்"** (32)

என்பது பாடல்.

எத்தகைய உயர் பண்புடைய பெண்ணும் பெய் என்று சொன்னதும் மழை பெய்து விடாது என்னும் கருத்து திருவள்ளுவர்க்கும் தெரியும். அவர் இவ்வாறு சொன்னதின் கருத்து, கடவுளைக் கட்டி அழுது கொண்டிருக்காதீர்கள் - குடும்பத்தைக் கவனியுங்கள் என்ற புரட்சி உடையதாகும். 'பெய் யெனப் பெய்யும் மழை' என்பதை உயர்வு நவிற்சி அணியாகக் கொள்ளல் வேண்டும்.

**"இலன்என்று அசைஇ இருப்பாரைக் காணின்**
**நிலன்என்னும் நல்லாள் நகும்"** (1040)

**"குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந் துறும்"** (1023)

என்னும் குறள்களில், சோம்பேறிகளைக் கண்டால் நில மகள் சிரிப்பாள் என்றும், குடியை உயர்த்த முயல்பவனுக்குத் தெய்வமும் துணியைக் கீழ்ப்பாய்ச்சி கட்டிக் கொண்டு முந்தி வந்து பணி புரியும் என்றும் கூறியுள்ள கருத்துகள் உண்மை யானவையா? அல்லது இலக்கியக் கற்பனையா? தெய்வம் சிரிக்காது - தெய்வம் துணியை இழுத்துக் கட்டிக் கொண்டு வராது - என்பன திருவள்ளுவர்க்கும் தெரியும். இவை இலக்கியக் கற்பனை நயச்சுவையாகும். 'தெய்வம் தொழா அள்' என்னும் குறளும் இத்தகையதே. கணவன் மனைவியைத் தொழ வேண்டும் என்று எங்கும் கூறாமல், மனைவி கணவனைத் தொழவேண்டும்என்று கூறியிருப்பதை மட்டும் பகுத்தறிவாளர்கள் ஒத்துக் கொள்ளலாமா? யானும் ஒரு வகைப் பகுத்தறிவாளனே. யாராயிருப்பினும், நடு நிலைமையோடு எழுத வேண்டும் - பேசவேண்டும்.

இது தொடர்பான சிலப்பதிகாரப் பகுதியால், கண்ணகி யின் தெய்வக் கொள்கை விளங்கும். அவள் கணவனைத் தெய்வமாகப் போற்றி வந்தாள்.

இளங்கோவடிகள் பொருத்தமான சூழ்நிலையில் பொடி வைத்து ஊதுவதில் வல்லவர். அத்தகைய சூழ்நிலையை உருவாக்கிக் கொள்வதிலும் வல்லவர்.

கணவனைத் தவிரத் தெய்வம் தொழுவது எனக்கு வழக்கமில்லை என்று கண்ணகி தேவந்தியிடம் சொல்லிக் கொண்டிருந்த போதுதான், கோவலன் மாதவியைப் பிரிந்து கண்ணகி இருக்கும் தங்கள் வீட்டு வாயிலுக்குள் வந்து கொண்டிருந்தானாம். அவனது வருகையைப் பணிமகள் ஒருத்தி கண்ணகிக்குத் தெரிவித்தாள். பாடல்:

**"ஆடுதும் என்ற அணியிழைக்கு அவ்வாயிழையாள்**
**பீடன்றுஎன இருந்த பின்னரே நீடிய**
**காவலன் போலும் கடைத்தலையான் வந்துநம்**
**கோவலன் என்றாள் ஓர் குற்றிடையாள்"** (63-66)

என்பது பாடல் பகுதி.

இந்த உரையாடலின் போதுதான், கோவலனால் நீ வெறுக்கப்படவில்லை என்னும் பொருளில் 'கைத்தாயும் அல்லை' என்று தேவந்தி கண்ணகியிடம் கணி (சோதிடம்) சொல்வதுபோல் சொன்னாள். காக்கை அமர்வதற்கும் பனம்பழம் விழுவதற்கும் பொருத்தமாயிருந்தது என்பது போல், தேவந்தி கூறிய சிறிது நேரத்தில், கோவலன் மாதவியை வெறுத்துக் கண்ணகியை விரும்பி வந்து விட்டான். இளங்கோவின் இந்த இலக்கியக் கலையும் சுவைத்து இன்புறத்தக்கது.

## வேட்டுவ வரி

### கண்ணகியின் கூச்சம்

கவுந்தியடிகளும் கண்ணகியும் கோவலனும் உறையூரைக் கடந்து மதுரை செல்லும் வழியில் ஓர் ஐயை கோட்டத்தில் தங்கி இளைப்பாறினர். அப்போது, வேட்டுவக்குடியில்

தெய்வப் பூசனை செய்யும் சாலினி என்பாள் தெய்வம் ஏறப்பெற்றுக் (சாமிஆடிக்) கண்ணகியை நோக்கிப் பின் வருமாறு பாராட்டலானாள்.

**"இவளோ, கொங்கச் செல்வி குடமலையாட்டி**
**தென் தமிழ்ப்பாவை செய்த தவக்கொழுந்து**
**ஒருமா மணியாய் உலகிற்கு ஓங்கிய**
**திருமா மணியெனத் தெய்வமுற்று உரைப்ப"** (47-50)

என்பது பாடல் பகுதி. கண்ணகி இன்னும் சிறிது காலத்தில் தெய்வமாகப் போகிறாள் என்ற குறிப்பை, தெய்வம் ஏறிய சாலினி வாயிலாக இளங்கோ உணர்த்தியுள்ளார். தெய்வம் ஏறப்பெற்றவர்களே எதிர்காலம் பற்றி உரைக்க முடியுமாதன், இங்கே இளங்கோ சாலினியைப் பயன் படுத்திக்கொண்டார்.

சாலினியின் பாராட்டுரையைக் கேட்ட கண்ணகி மிகவும் கூச்சம் அடைந்து, இந்தப் பேரறிவு உடைய முதியவள், ஒன்றுக்கும் பற்றாத என்னை ஏதோ மயக்கத்தால் இவ்வாறு பாராட்டினாள் என்று கூறிக் கணவன் கோவலன் பின்னால் சென்று ஒடுங்கி மறைந்து புதிதாய்ச் சிறு நகை செய்தாள்;

**"பேதுறவு மொழிந்தனள் மூதறிவாட்டி என்று**
**அரும்பெறல் கணவன் பெரும்புறத்து ஒடுங்கி**
**விருந்தின் மூரல் அரும்பி நிற்ப"** (51-53)

என்பது பாடல் பகுதி. சிலர் பிறரைப் பேசவிடாமல் தாங்களே பேசிக்கொண்டிருப்பர் - தங்கள் பெருமை களையே சொல்லிக் கொண்டிருப்பர். பிறர் தங்கள் பெருமைகளைச் சொல்லின் பூரித்துப்போவர். ஆனால், உயர் பண்பாளர் தங்கள் பெருமைகளைத் தாங்களே சொல்லார்; தங்கள் பெருமைகளைப் பிறர் கூறினும், கூசி, இந்தப் பெருமைகட்கு உரிய தகுதி எனக்கு இல்லை என்று அடக்கமாகக் கூறுவர். இந்த இனத்தைச் சேர்ந்தவள்

கண்ணகி. எண்சாண் உடம்பும் ஒரு சாண் உடம்பாயிற்று என்பார்களே - அதுபோல - கண்ணகி கணவனின் பெரிய முதுகின் பின்னே ஒடுங்கியிருந்தாள். அரியனாகிப் பிரிந்திருந்த கணவனை இப்போது பெற்றிருப்பதால் 'அரும் பெறல் கணவன்' என்றார் ஆசிரியர். விருந்து என்றால் புதுமை; மூரல் = புன்னகை. பல்லாண்டுகளாகச் சிரித்தறியாதவளாதலின், இப்போது வெளிக்காட்டிய மூரலை 'விருந்தின் மூரல்' என்றார். 'பெண் சிரித்தால் போயிற்று - புகையிலை விரித்தால் போயிற்று' என்னும் அந்தக் காலப் பழமொழிப்படி, புன் முறுவல் பூத்ததாகச் சொல்லவில்லை - மொக்குப்போல் அரும்பியதாகவே கூறியுள்ளார் இளங்கோ. நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு பெண்கட்கு வேண்டும் என்றது கண்ணகி போன்றோரைக் கருதியே போலும்.

## பொற்புடைத் தெய்வம்

கவுந்தியடிகள் மாதரியிடம் கண்ணகியை அடைக்கலப் படுத்திய போது, பின்வருமாறு கண்ணகியைப் புகழ்ந்து அறிமுகப்படுத்தினாள்.

இந்தப் பெண்ணின் காலடியை மண்மகள் அறியாள். அத்தகையவள் கடுமையான ஞாயிற்றின் வெப்பத்தைத் தாங்கிக் கொண்டு, காதலனுக்காகப் பல இன்னல்களை ஏற்று, நாக்கு நீரின்றி வறள வாட்டமுற்றுப் பரல் நிறைந்த தரையில் நடந்து வந்தாள். தனது துன்பத்தைப் பொருட் படுத்தாது, பூங்கொடி போன்ற இவள் கணவனின் நன்மைக்காக வதங்கிச் செயல்படுகின்றாள். மகளிர்க்கு இருக்கவேண்டிய கற்புக்கடமை நிரம்பப் பெற்ற தெய்வ மகளாவாள். பொலிவுடைய இந்தத் தெய்வத்தைத் தவிர வேறு தெய்வத்தை யாங்கள் கண்டதில்லை - என்று பாராட்டி அறிமுகம் செய்தாள். பாடல் - அடைக்கலக் காதை:

**''என்னொடு போந்த இளங்கொடி நங்கைதன்**
**வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்**
**கடுங்கதிர் வெம்மையிற் காதலன் தனக்கு**
**நடுங்கு துயரெய்தி நாப்புலர வாடித்**
**தன்துயர் காணாத் தகைசால் பூங்கொடி**
**இன்துணை மகளிர்க்கு இன்றி யமையாக்**
**கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது**
**பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலம்''** (137-144)

*காலடியை மண்மகள் அறியாள் என்றால், கண்ணகி வீட்டை விட்டு வெளியில் நடந்தறியாள் - வெளியில் செல்ல வேண்டுமாயின் ஊர்தியில் செல்வாள் - என்பது கருத்து. இதனால், கண்ணகியின் மென்மையும் செல்வ வளமும் அறிவிக்கப்பட்டன.*

**''தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண்''** (56)

*என்பது திருக்குறள். இதன்படி, கண்ணகி தன்னைக் கொண்டவனாகிய கோவலனின் நன்மையைப் பேணினாள்; ஆனால் தன்னைக் காத்துக் கொள்ளவில்லை. கணவனுக் காகத் தன்னலத்தை விட்டுக் கொடுத்தாள். மனைவிக்கு வள்ளுவனார் 'வாழ்க்கைத் துணை' என்ற பெயர் கொடுத் துள்ளார். இதைத்தான் இளங்கோ 'இன் துணை' என இங்கே கூறியுள்ளார். 'மகளிர்க்கு இன்றியமையாக் கற்புக் கடம்' என்பதில் உள்ள 'இன்றியமையா' என்னும் வழக்காறு இன்றியமையாதது. அதாவது' 'முக்கியமான' என்னும் வடசொல்லின் பொருளில் இது உள்ளது. இந்தியில், முதலமைச்சரை முக்கிய மந்திரி என்று கூறுகின்றனர். தனித் தமிழாளர்கள் முக்கியம் என்பதற்கு இன்றியமையாமை என்னும் சொல்லைப் பயன்படுத்துகின்றனர். இதை இளங்கோ அடிகளும் இங்கே கற்றுத் தந்துள்ளார்.*

இளங்கோ கண்ணகியை ஓரிடத்தில் "முளைஇள வெண் பல் முதுக்குறை நங்கை" (15:202) எனக் குறிப்பிட்டுள்ளார். முதுக்குறை நங்கை என்பதற்குக் 'குறைந்த வயதிலேயே பேரறிவு பெற்றுள்ள பெண்' என்பது பொருளாகும்.

**கண்ணகியின் கடைசிக் குடும்ப வாழ்க்கை**

மதுரையில் மாதரி வீட்டில் கண்ணகியும், கோவலனும் அடைக்கலம் புக்குள்ளனர். உணவு ஆக்கி உண்பதற்காக உயர்ந்த சாலி அரிசியும், பலவகைக் காய்கறிகளும் கண்ணகிக்குக் கொடுக்கப்பட்டன.

கண்ணகி காய்கறிகளை அரிவாள்மணையில் அரிந்து திருத்தினாள். இதனால் மெல்லிய கைவிரல்கள் சிவந்து போயினவாம். முகத்திலிருந்து வியர்வை சொட்டிற்றாம். அடுப்பு மூட்டி உணவு ஆக்கியதால் புகை தாங்காமல் கண்கள் சிவந்தனவாம். மாதரியின் மகளாகிய ஐயை என்பாள் வைக்கோலால் முதல் முதலாக அடுப்பு மூட்டிக் கொடுத்தது முதல் ஆக்கி முடிக்கும்வரை கண்ணகியின் கூடமாடே இருந்து உதவி செய்திருக்கிறாள். ஐயை மேல்வேலைக்குத் துணை புரிந்தாளே தவிர, மற்றபடி கண்ணகிதான் தனக்குத் தெரிந்த அளவுக்குக் கைப் பாகம் செய்து ஆக்கினாளாம். பாடல்: கொலைக் களக் காதை:

> **"மெல்விரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்**
> **கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்யத்**
> **திருமுகம் வியர்த்தது செங்கண் சேந்தன**
> **கரிபுற அட்டில் கண்டனள் பெயர**
> **வையெரி மூட்டிய ஐயை தன்னொடு**
> **கையறி மடைமையின் காதலற்கு ஆக்கி"** (29-34)

என்பது பாடல் பகுதி. கண்ணகியின் கைவிரல்கள் மெல்லிய வாகலின், காய்கறி திருத்தியதால் சிவந்து விட்டன. இத்தகைய மெல்லிய விரல்களைப் பார்த்துத்தான்

வெண்டைக்காய்க்கு Lady's Finger (பெண்ணின் விரல்) என்ற பெயரை ஆங்கிலேயர் வழங்கினர் போலும். காய்கறி நறுக்கியதால் கைவிரல்கள் சிவந்தன. அடுப்பின் கரிந்த புகையால் கண்கள் சிவந்தன. கொடு வாய்க் குயம் = வளைந்த அரிவாள்மணை. விடுவாய் செய்தல் = அரிதல். மடைமை = சமையல் கலை. உணவு ஆக்குதலை எளிமையாய் எண்ணிவிடக் கூடாது. அந்தக் கலை பற்றிய நூலே உள்ளது. மணிமேகலை என்னும் நூலில் 'மடை நூல் செய்தி' (2-22) என மடை நூல் (சமையல் கலை நூல்) இருப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது. கண்ணகி அவள் அறிந்த அளவு ஆக்கினாளாம்.

இந்த அமைப்பை நோக்குங்கால், கண்ணகியின் பிறந்தகமும், புக்ககமும் பெருஞ் செல்வக் குடும்பமாகலின் உணவு ஆக்குதற்குப் பணியாட்கள் இருந்திருப்பர் என்பது புலனாகிறது. கண்ணகி முன்பே பயின்றிருப்பாளானால் கைவிரல்களும் கண்களும் சிவக்கா. பெரிய விறகை வைத்துக் கொளுத்தினால் உடனே தீ பற்றாது. முதலில் சிறிய சுள்ளிகளைக் கொளுத்திப் பின்பு அவற்றோடு பெரிய கட்டைகளை இணைத்து எரியச் செய்வது வழக்கம். ஈண்டு நாவுக்கரசரின் தேவாரப் பாடல் பகுதி ஒன்று நினைவுக்கு வருகிறது. திருவானைக்காப் பதிகத்தின் முதல் பாடலில்,

> **''செத்தால் வந்து உதவுவார் ஒருவர் இல்லை**
> **சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்''**

என்று கூறியுள்ளார். ஈமச் சிதையில் பெரிய விறகுக் கட்டையைத்தான் அடுக்குவது வழக்கம். அங்ஙனமிருந்தும், நாவரசர் 'சிறு விறகால் தீ மூட்டி' என்று கூறியிருப்பது ஏன்? கொளுத்தப்படுகின்ற உடம்பு பெரிய விறகு - விறகுக் கட்டையினும் நீளத்தாலும், பருமனாலும் பெரியது உடம்பு. அதனால்தான் 'சிறு விறகால் தீ மூட்டி' என்றார். இங்கே, கண்ணகிக்கு உதவியாக ஐயை வைக்கோலால் விறகு பற்றச்

செய்துள்ளாள். இதில் ஒரு பொருத்தம் உள்ளது. ஐயை-மாதரி ஆயர் குடியினர்; ஆ (பசு) காத்து ஓம்புபவர்; அவர்களிடத்தில் வைக்கோல் நிரம்ப இருக்கும். அதனால் வைக்கோலின் உதவியால் நெருப்பு பற்றச் செய்யப்பட்டது.

'காதலற்கு ஆக்கி' என்னும் பகுதியும் சுவைக்கத் தக்கது. அவள் தனக்காக ஆக்கவில்லை; தன் காதலன் கோவலனுக்காக ஆக்கினாளாம். கணவனுக்குத் தன் கையாலேயே ஆக்கவேண்டுமெனத் தானே ஆக்கினாள். தனக்குத் தெரிந்த வரையும் ஆக்கினாள்.

உணவு ஆக்கி முடிந்த பின், மாதரி வீட்டார் தந்த வேலைப்பாடு மிக்க ஒரு பனந் தடுக்கில் கண்ணகி கோவலனை அமரச் செய்தாள்; ஒரு மண்பாண்டத்தில் நீர் கொண்டு வந்து கணவரின் காலடிகளைத் தடவித் தூய்மை செய்தாள். பின்னர் அவன் எதிரில் தரையில் தண்ணீர் தெளித்துத் தடவி, குமரி வாழையின் குருத்து இலையை விரித்துப் போட்டு உணவு படைத்து அடிகளே உண்பீர்களாக என்று கூறி உண்பித்தாள்:

**''தாலப் புல்லின் வால்வெண் தோட்டுக்**
**கைவல் மகடூஉக் கவின்பெறப் புனைந்த**
**செய்வினைத் தவிசில் செல்வன் இருந்தபின்,**
**கடிமலர் அங்கையின் காதலன் அடிநீர்**
**சுடுமண் மண்டையில் தொழுதனள் மாற்றி**
**மண்ணக மடந்தையை மயக்கு ஒழிப்பனள்போல்**
**தண்ணீர் தெளித்துத் தன்கையால் தடவிக்**
**குமரி வாழையின் குருத்தகம் விரித்தீங்கு**
**அமுதம் உண்க அடிகள் ஈங்கென''** (35-43)

என்பது பாடல் பகுதி. ''தால......தவிசு'' – கைதேர்ந்த பெண் பின்னிய பனையோலைத் தடுக்கு. அந்தக் காலத்திலேயே, பெண்கள் சிறு குடிசைத் தொழிலாகத் தடுக்கு பின்னி வந்தனர் என்பது தெளிவு. கணவன் கால்களைக்

கண்ணகி தூய்மை செய்தது ஓரளவு பெண்ணடிமைக் கொள்கைதான். அது காலத்தின் கோலம். தூய்மை செய்த நீர் இருந்த பாண்டம் 'சுடுமண் மண்டை' எனப்பட்டுள்ளது. மண்டை = பாண்டம் (பாத்திரம்), சுடுமண் மண்டை = சூளையில் சுட்டு உருவாக்கிய மண் பாண்டம். மண் பாண்டத்தால் தூய்மை செய்தாள் என்று சொல்லியிருப்பதில் உள்ள குறிப்பு, கண்ணகி தங்கள் வீட்டில் பொன்-வெள்ளிப் பாண்டங்களைப் பயன்படுத்தியிருப்பாள் என்பது. மாதரியின் வீட்டுப் பாண்டம் மண் பாண்டமே. 'சுடுமண் மண்டையின் தொழுதனள் மாற்றி' என்பது சிறிது குழப்பமாயுள்ளது. இந்தப் பாண்டத்திலிருந்து நீர் எடுத்துக் கணவன் கால் அடிகளைத் தடவித் தூய்மை செய்தாள் என்றும் பொருள் கொள்ளலாம். கையால் தடவினால் தானே நீர் உண்ணு மிடத்தில் கீழே சிந்தாமல் இருக்கும்? அல்லது மற்றொரு விதமாகவும் பொருள் கொள்ளலாம். அதாவது: மண் பாண்டத்திற்கு மேலே கணவனின் கால்களை வைக்கச் செய்து நீர் ஊற்றி அந்த நீர் மண்பாண்டத்தில் விழும்படி மாற்றினாள் — என்பதுதான் இரண்டாவது பொருள். யான் ஒரு வீட்டில் மேசைப் பக்கத்தில் நாற்காலியில் அமர்ந்து சிற்றுண்டி உட்கொண்டபின், என் எதிரில் மேசை மேல் அகலமான ஒரு பித்தளைத் தட்டை வீட்டினர் வைத்தார்கள்; அதற்குமேலே என் கையை நீட்டச் சொல்லி நீர் ஊற்றினார்கள்; நான் கைகழுவிய நீர் பித்தளைத் தட்டில் விழுந்தது; பிறகு அதை எடுத்துக் கொண்டுபோய் விட்டார்கள். இந்தச் சொந்தப் பட்டறிவைக் கொண்டு, "சுடுமண் மண்டையில்... மாற்றி" என்பதற்கு மேலுள்ள இரண்டாவது பொருளை யான் கூறியுள்ளேன்.

உண்ணுமுன் கால்களைத் தூய்மை செய்துவிடும் செயலுக்கு, இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் முறையில், கம்பராமாயணத்திலும் பெரிய புராணத்திலும் ஒத்துள்ள செயல்களை இவண் காணலாம்.

கம்பராமாயணம் - கிட்கிந்தா காண்டம் - பிலம்புக்கு நீங்கு படலம்: காட்டில் ஒரு பிலத்தில் தவம்செய்து கொண்டிருந்த சுயம்பிரபை என்பவள், அனுமன் முதலிய வானரர்கள் ஆங்கு வந்து, இராமனுக்காகச் சீதையைத் தேட வந்துள்ளோம் என்று கூற, என்தவம் கைகூடியது - வீடுபேறு கிடைக்கும் என மகிழ்ந்து வானரர்களின் கால்களைத் தூய்மைசெய்து அவர்கட்கு விருந்தளித்தாளாம். பாடல்:

**"கேட்டவளும் என்னுடைய கேடில்தவம் இன்னே**
**காட்டியது வீடுஎன விரும்பிநனி கால்நீர்**
**ஆட்டிஅமிழ் தன்னசுவை இன்னடிசில் அன்போடு**
**ஊட்டிமனன் உள்குளிர இன்னுரை உரைத்தாள்"** (56)

என்பது பாடல். அடுத்தது, பெரிய புராணத்தில் அப்பூதி நாயனார் வரலாற்றுப் பகுதியில் உள்ளது. அப்பூதி நாயனார் திருநாவுக்கரசரைத் தம் மனைக்கு அழைத்து வந்து விருந்து அளிக்குமுன், நாவுக்கரசரின் கால்களை நீரால் தூய்மை செய்து அந்தத் தண்ணீரைக் குடும்பத்தினர் உட்படத் தலைமேல் தெளித்துக் கொண்டனராம்:

**"முனைவரை உள்எழுந் தருளுவித்து**
**அவர்தாள் முன்விளக்கும்**
**புனைமலர்நீர் தங்கள்மேல் தெளித்து**
**உள்ளம் பூரித்தார்"** (1807)

என்பது பாடல் பகுதி, சுயம்பிரபையும் அப்பூதி நாயனாரும் பிறருக்குச் செய்தனர்; கண்ணகி தன் கணவனை உயர்வாகப் போற்றிச் செய்தாள்.

அடுத்தது 'மண்ணக மடந்தையை மயக்கு ஒழிப்பனள் போல்' என்பது. இன்றும் இலைபோடுவதற்கு முன் கீழே தண்ணீர் தெளிக்கும் வழக்கம் உண்டு. கண்ணகி கையால் தடவித் தரையைத் தூய்மை செய்தாளாம். தூய்மைப் பயனோடு மேலும் இரண்டு பயன்கள் உள்ளன. ஒன்று:

எறும்பு போன்றன தண்ணீர் பசையைத் தாண்டி இலைக்கு வரா; மற்றொன்று: இலை அப்பால் இப்பால் திடீரென நழுவாது - இடம் பெயராது. சிலர் உண்ணும்போது அவர் களின் இலைகள் அடுத்தவர் இலைமீது திடீரெனப் பாய்ந்து விடுவது இங்கே நினைவு கூரத்தக்கது.

ஒருவர்க்கு மயக்கம் வந்து விடின், மயக்கம் நீக்க முகத்தில் தண்ணீர் தெளிப்பதுண்டு. இங்கே நிலமகளின் மயக்கத்தை நீக்கத் தெளிக்கப்பட்டதாகப் புலவர் தாமாக ஒரு குறிப்பை ஏற்றிச் சொல்லியிருப்பது தற்குறிப்பு ஏற்ற அணியாகும். நிலமகளின் மயக்கத்தின் காரணம், இன்னும் சிலமணி நேரத்தில் கோவலன் கொலை செய்யப்படுவான் என்பதை அறிந்ததாய் இருக்கலாமோ!

குமரி வாழை என்பது, குலைபோடாத வாழை. இதன் குருத்து இலையின் உட்பகுதியை நன்றாக விரித்து அகலம் உடையதாக்கினாள். குருத்து இலையில் காகமோ வேறு பறவையோ எச்சம் இட்டிராது. தூய்மையாகவும் - பார்ப்ப தற்குப் பொன்னிறமாய் அழகாகவும் அகலமாகவும் இருக்கும். உலகியலில் இத்தகைய வாழை இலையைத் 'தலை வாழை இலை' என்பர்.

இலையின் வளப்பத்தைக் கொண்டு விருந்தின் சிறப்பைக் கணிப்பதுண்டு. வேடிக்கையாக ஒரு கதை சொல்வதுண்டு. ஒருவர் மற்றொருவரிடம், யான் பெரிய செல்வர் வீட்டு விருந்திற்குப் போயிருந்தேன். இலை மிகவும் பெரியது. இலையின் எதிர் ஓரத்தில் பரிமாறப்பட்டிருக்கும் காய் கறிகள் கைக்கு எட்டாமையால் ஓர் அகப்பை போட்டிருந் தார்கள்; அந்த அகப்பையால் காய்கறிகளை இழுத்து இழுத்து உண்டோம் - என்றாராம். உடனே இரண்டாமவர் முதலாமவரை நோக்கி, யான் ஒரு சமீன்தார் வீட்டு விருந்திற்குப் போயிருந்தேன். மிகவும் பெரிய இலை போட்டிருந்தார்கள். காய் கறிகளை இழுத்து உண்ண ஓர்

அகப்பையும் போட்டிருந்தார்கள் - ஆனால் காய்கறிகள் அகப்பைக்கும் எட்டவில்லை - அவ்வளவு பெரிய இலை. அதனால், யான் எழுந்துபோய் எழுந்துபோய்க் காய்கறி களை எடுத்துக்கொண்டு வந்து உண்டேன் என்றாராம். இலையைக் கொண்டு விருந்தின் தரத்தைக் கணிக்க உதவும் கதையாகும் இது. எனவேதான், கோவலனுக்குக் குமரிக் குருத்துத் தலைவாழை இலை போடப்பட்டது. மாதரி வீட்டார் பெரிய இலை தந்திருந்தனர்.

கண்ணகி எல்லாம் முறையாகச் செய்து கணவனை நோக்கி அடிகளே அமுதம் உண்க என வேண்டினாள். அந்தக் கால நாடகத்தில் – அதாவது வடமொழி வழக்கு தமிழகத்தில் மலியத் தொடங்கிய காலத்து நாடகத்தில், மனைவி கணவனைப் பிரபோ - பிராண நாயகா என்று அழைப்பாள். இந்தக் கால நாடகத்தில் 'அத்தான்' என்கிறாள். ஆனால், கண்ணகி, 'அடிகள்' என்னும் மிக உயர்ந்த சொல்லால் குறிப்பிட்டுள்ளாள். 'உண்க' என்பது வேண்டிக் கோடல் பொருளில் வந்த வியங்கோள் வினை முற்று. கண்ணகியின் கடைசிக் குடும்ப வாழ்க்கை இதுதான்.

இங்கே, பெரிய புராணத்திலுள்ள செய்தி ஒன்று நினைவிற்கு வருகிறது. அப்பூதி அடிகள் திருநாவுக்கரசருக்கு உணவு படைப்பதற்காகத் தம் மூத்த மகனாகிய மூத்த திருநாவுக்கரசு என்னும் பெயர் உடையவனை அழைத்து நீ போய், பொன்னிறமான வாழைக் குருத்து இலையை அறுத்துக்கொண்டு வருக என்றார். தன்னை அரவம் தீண்டியதைப் பொருட்படுத்தாமல் அவன் கொய்த குருத்து இலையைக் கொண்டு வந்தானாம். இதனைப் பெரிய புராணம் - அப்பூதி அடிகள் வரலாற்றுப் பகுதியில் உள்ள -

**"தூயநற் கறிகளான அறுவகைச் சுவையால் ஆக்கி**
**ஆயஇன் அமுதும்ஆக்கி அமுதுசெய் தருளத் தங்கள்**

**சேயவர் தம்மில் மூத்த திருநாவுக்கரசை, வாழை**
**மேயபொற் குருத்துக் கொண்டுவா எனவிரைந்து**
**விட்டார்** (23)

**"வெய்ய வேகத்தால் வீழா**
**முன்னம் வேகத்தால் எய்திக்**
**கொய்தஇக் குருத்தைச் சென்று**
**கொடுப்பன் என்றோடி வந்தான்"** (25)

என்னும் பாடல்களால் அறியலாம். பெரிய புராணத்தில் குருத்து வாழை இலை குறிப்பிடப்பட்டிருப்பது சிலம்போடு ஒப்பு நோக்கத்தக்கது. நிற்க.

**கண்ணகியின் மாற்றா உள்ளம்**

கோவலன் உணவு கொண்ட பின், கண்ணகி வெற்றிலை பாக்கு மடித்துச் சுருட்டித் தந்தாள். அப்போது, கோவலன், பெற்றோர்க்கும் கண்ணகிக்கும் தான் இழைத்த பிழையைக் கூறி வருந்தினான். யான் உனக்கு ஒரு நலமும் செய்ய வில்லை - துன்பமே உண்டாக்கினேன். என் பிழையை மறந்து, மதுரைக்குப் போவோம் - வருக என்று சொன்னதும் வந்து விட்டாயே கண்ணகி! - என்று கோவலன் வருத்தம் தெரிவித்ததும், கண்ணகி கூறியதாவது:-

நீங்கள் என்னைப் பிரிந்திருந்த காலத்தில், எனக்கு எந்த இன்பமும் கிடைக்காததற்காக நான் வருந்தவில்லை. அற வோர், அந்தணர், துறவோர், விருந்தினர் இவர்களை உம் முடன் இருந்து போற்ற முடியாது போனமைக்கே வருந்தி னேன். உம் பெற்றோர்களின் முன்னே, யான் எனது வெறுப்பைச் சிறிதும் வெளிப்படுத்தவில்லை. நம் மகன் விட்டுச் சென்றதால் கண்ணகி வருந்துகிறாளே என்று நும் பெற்றோர் எண்ணி, என்னிடம் அன்பு உள்ளத்தோடு அருள் மொழி கூறி ஆறுதல் செய்து வந்தனர். அவர்களை மகிழ் விப்பதற்காக யான் பொய்ச் சிரிப்பு சிரிப்பேன், அந்தச்

சிரிப்பில் என் உள நோயும் துன்பமும் மறைந்திருப்பதை அவர்கள் அறிந்து உள் மனம் வருந்தினர். இந்த நிலை ஏற்படும்படிச் செய்துவிட்டீர்களே என்பதுதான் எனது கவலை. யான் உம்மிடத்தில் சிறிதும் மாறுதல் கொள்ளாத உள்ளம் - உண்மையான பற்றுள்ளம் கொண்டவள் ஆதலின், வருக என நீங்கள் கூறியதும் வந்துவிட்டேன் - எனக் கண்ணகி நயவுரை மொழிந்தாள்:

**"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்**
**துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்**
**விருந்தெதிர் கோடலும் இழந்த என்னைநும்**
**பெருமகள் தன்னொடும் பெரும்பெயர்த் தலைத்தாள்**
**மன்பெருஞ் சிறப்பின் மாநிதிக் கிழவன்**
**முந்தை நில்லா முனிவு இகந்தனனா**
**அற்புளம் சிறந்தாங்கு அருள்மொழி அளைஇ**
**எற்பாராட்ட யான் அகத்து ஒளித்த**
**நோயும் துன்பமும் நொடிவது போலுமென்**
**வாய்அல் முறுவற்கு அவர்உள் ளகம்வருந்தப்**
**போற்றா ஒழுக்கம் புரிந்தீர் யாவதும்**
**மாற்றா உள்ள வாழ்க்கையே னாதலின்**
**ஏற்றெழுந் தனன்யான் என்று அவள்கூற"** (71-83)

என்பது பாடல் பகுதி. கண்ணகி தன்னலம் இழந்ததற்காக வருந்தவில்லை - பிறர் நலம் புரிய முடியாது போனமைக் காகவே வருந்தியுள்ளாள்.

**உலகியல்**

இதுபோன்ற சூழ்நிலையில் உலகியலில் என்னென்னவோ நடந்திருக்கலாம். கோவலனின் பெற்றோர்கள், என் மகன் இந்த மூதேவி கண்ணகியைத் தொட்டதுமே அவனைச் சனியன் பிடித்துக்கொண்டது. இவளை எந்த நேரத்தில் தொட்டானோ? இவள் மூஞ்சைப் பாரேன் - ஏன், இவள் தாய் வீட்டில் போய் இருப்பதுதானே? என்று சொல்லலாம்.

அல்லது - கண்ணகியின் பெற்றோர்கள், தெரியாமல் அந்தத் தேவடியாள் தோழனாகிய கோவலனுக்கு நம் பெண்ணைக் கட்டிக் கொடுத்து விட்டோமோ - நம் பெண் அங்கே இருந்து கொண்டு சீரழிவது போதும் - நம் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வந்துவிடுவோம் - என்று எண்ணிக் கண்ணகியைத் தம் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வந்து விட்டிருக்கலாம். அல்லது - கண்ணகி, நான் என் அம்மா வீட்டிற்குப் போகப் போகிறேன் என்று சொல்லித் தானாகவே தாய் வீட்டிற்குப் போயிருக்கலாம் - உள்ளூர் தானே!

ஆனால் இப்படியெல்லாம் எதுவும் நடவாதபடி அனை வரும் பெருந்தன்மையோடும் உயரிய பண்போடும் நடந்து கொண்டிருக்கிறார்கள். கோவலனின் பெற்றோர்கள் தம் மகளைப் போலவே கண்ணகியை நடத்தியிருக்கிறார்கள். கண்ணகியும் அவர்கள் முன்னே தன் வருத்தம் தெரியாத படிப் பொய்யாகச் சிரித்துள்ளாள். "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்", "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்" (குறள் - 706) என்ற படி அவளது சிரிப்பு அவளது துன்பத்தை வெளிப்படுத்தி விட்டது. கண்ணகியைப் பாராட்டி வந்த அவர்கள் அவளது பொய்ச் சிரிப்பின் பொருளைப் புரிந்து கொண்டு மனம் வருந்தினார்களாம். மேல் மனம் வருந்தினால் அவள் தெரிந்து கொள்வாள் என்பதற்காக, அவர்களும், மேலுக்கு இயற்கையாயிருப்பது போல் காட்டி உள்மனம் (Inner mind) வருந்தினார்களாம். 'உள்ளகம் வருந்த' என்னும் பகுதி ஈண்டு எண்ணத்தக்கது.

துன்பமான நேரத்தில் கண்ணகி பொய்ச் சிரிப்பு சிரித்தாளே - இதுதான், "இடுக்கண் வருங்கால் நகுக" என வள்ளுவர் பரிந்துரைத்துள்ள நகைப்பாயிருக்குமோ!

இளங்கோ அடிகள் இவ்வாறு பாடியிருப்பது உலகியலுக்கு மாறாயுள்ளது. கோவலனின் பெற்றோர்களும் வெளிப்படையாக வருந்தியிருக்கலாம் - கண்ணகியும் வெளிப்படையாக வருந்தியிருக்கலாம் - கண்ணகியின் பெற்றோர்களும் வருந்தி அவளைத் தம் வீட்டிற்கு அழைத்திருக்கலாம். அவளுடைய மாமன் மாமியும் அவளது தாய் வீட்டில் போய் இருக்கச் சொல்லியிருக்கலாம். கண்ணகி தாய் வீட்டிற்குப் போகாமல், கணவன் வீட்டிலேயேதான் இருப்பேன் எனத் துணிந்து கூறியிருக்கலாம். அப்போது நடந்தது இப்போது யாருக்குத் தெரியும்?

எது எப்படியிருந்தாலும், இளங்கோ இவ்வாறு எழுதி இருப்பது பொருத்தமே. இளங்கோ வரலாற்று ஆசிரியர் அல்லர் - இலக்கிய ஆசிரியர் அவர். வரலாற்று ஆசிரியரது கடமை, சிறிதும் ஐயத்திற்கு இடமின்றி - சிறிதும் கற்பனை கலவாது - நடந்ததை நடந்தபடியே - உள்ளதை உள்ளபடியே எழுத வேண்டியதாகும். ஆனால் இலக்கிய ஆசிரியர் கற்பனை கலப்பார்; நடந்ததை அடிப்படையாக வைத்துக் கொண்டு, நடக்க வேண்டியதை - மக்கள் குழு பின்பற்ற வேண்டியதை அறிவிப்பார். இங்கே இளங்கோ அவ்வாறு என்ன அறிவித்துள்ளார்? ஒரு குடும்பத்தில் மகன் தன் மனைவியைப் பிரிந்து போய்விடின், அவனுடைய பெற்றோர் தம் மருமகளைத் திட்டலாகாது - துன்புறுத்தலாகாது – மருமகளை நோக்கி, நீ கவலைப்படாதே - உன் கணவன் வந்து விடுவான் - நாங்கள் இருக்கிறோம் - அஞ்சாதே - கடைசி வரையும் உன்னைக் காப்பாற்றுவோம் - என்று ஆறுதல் கூறி அன்பாக நடத்தவேண்டும். மருமகளும் அமைதியாக இருக்கவேண்டும் - என்பதை, இந்த வரலாற்று நிகழ்ச்சி வாயிலாக இளங்கோ மக்கள் குழுவுக்குக் குறிப்பாக அறிவித்துள்ளார். இதைப் பின்பற்றுவதே சிறந்ததாகும்.

**நீள் நில விளக்கு**

கோவலன் உணவு கொண்டு உரையாடிக் கண்ணகியை விட்டுப் பிரிந்து கடைத் தெருவுக்குப் புறப்படுவதற்கு முன், பின்வருமாறு தன் ஆவல் தீரக் கண்ணகியைப் பாராட்டு கிறான்:

**"குடிமுதல் சுற்றமும் குற்றிளை யோரும்**
**அடியோர் பாங்கும் ஆயமும் நீங்கி**
**நாணமும் மடனும் நல்லோர் ஏத்தும்**
**பேணிய கற்பும் பெருந்துணை யாக**
**என்னொடு போந்துஈங்கு என்துயர் களைந்த**
**பொன்னே கொடியே புனைபூங் கோதாய்**
**நாணின் பாவாய் நீள்நில விளக்கே**
**கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி**
**சீறடிச் சிலம்பின் ஒன்றுகொண்டு யான்போய்**
**மாறி வருவன் மயங்கா தொழிக"** (84-93)

என்பது பாடல் பகுதி. புகாரில் வீட்டில் இருந்துபோது இருந்த நால்வகைத் துணைகளைத் துறந்து வேறு நால்வகைத் துணைகளைக் கைக்கொண்டு கண்ணகி கோவலனுடன் வந்தாளாம்.

முதல் நால்வகைத் துணை- 1: குடி முதல் சுற்றம் = குடியின் முதன்மையான பெற்றோர் - மாமன் மாமியார் முதலிய சுற்றம். 2: குற்றிளையோர் = குற்றேவல் செய் வோர். 3: அடியோர் பாங்கு = ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓதலுறுத்துவாள், நொடி பயிற்றுவாள், கைத்தாய் என்போர். 4: ஆயம் = தோழியர் குழாம்.

இப்போது உடன் கொண்டு வந்துள்ள நான்கு துணை கள் - 1: நாணம், 2: மடன், 3: நல்லோர் ஏத்து = நல்லோர் போற்றும் புகழ், 4: பேணிய கற்பு: தன்னைக் காக்கின்ற கற்பு. தனது துயர் போய் விட்டதாகக் கோவலன் கருது

கின்றான் – இல்லை - துயர் பெருகப் போகிறது. மனம் வந்தவாறு பொன்னே, கொடியே என்றெல்லாம் மெய்ம் மறந்து புகழ்கின்றான். நில விளக்காக - அதாவது - உலகில் தெய்வமாக வழிபடப் போகின்ற விளக்காகப் போகிறாள். பெண்களை வீட்டின் விளக்காகக் கூறுதல் இலக்கிய மரபு.

**"மனைக்கு விளக்காகிய வாள்நுதல்"**

(புறநானூறு - 314)

**"மனைக்கு விளக்கம் மடவார்"**

(நான்மணிக்கடிகை - 105)

மனை விளக்காக இருந்த கண்ணகி உலக விளக்காக (தெய்வமாக) ஆகப் போகிறாள் என்னும் குறிப்பை நீள் நில விளக்கு' என்பது கோடிட்டுக் காட்டுகிறது. மாறி வருவன் என்பதற்கு விற்று வருவேன் என்பது பொருள். மாறுதலாய் (பிணமாக) வருவேன் என்ற குறிப்பும் உள்ளது. 'மயங்காது ஒழிக' என்பதில் பெரிதும் மயங்கப் போகிறாள் என்னும் குறிப்பு அடங்கியுள்ளது.

**கண்ணகியின் மறம்**

சிலப்பதிகாரத்தில் உள்ள துன்ப மாலை, ஊர் சூழ் வரி, வழக்குரை காதை, வஞ்சின மாலை என்னும் நான்கு காதைகளிலும் கண்ணகியின் மற உணர்ச்சியையும் மறச் செயலையும் காணலாம். துன்ப மாலையில் கணவன் இறந்த செய்தியைக் கேட்ட கண்ணகியின் மறத் துன்பம் கூறப்பட்டுள்ளது. ஊர் சூழ் வழியில், கண்ணகி ஊரிலே தெருத் தெருவாகச் சூள் உரைத்துக் கொண்டு சுற்றித் திரிந்தது இடம் பெற்று உள்ளது. வழக்குரை காதையில், கண்ணகி பாண்டியனிடம் வழக்கு உரைத்து வென்று அரசனும் அரசியும் இறக்கும் அளவுக்கு மறச் செயல் புரிந்தது தெரிவிக்கப்பட்டுள்ளது. வஞ்சின மாலையில் கண்ணகி தனது இடப் பக்க மார்பகத்தைத் திருகி எறிந்து ஊரைக் கொளுத்தினமை உரைக்கப் பட்டுள்ளது.

கதைக்குக் கால் இல்லை - தலை இல்லை என்பர். அவ்வாறே, சிலப்பதிகாரக் கதைச் செய்தி முழுவதையும் நம்புவதற்கு இல்லை. இடப் பக்க மார்பைத் திருகி எறிந்தால் ஊர் எரியாது. கண்ணகிபால் பரிவு கொண்டவர்கள், கோவலன் கொலையுண்டதற்குக் காரணமான பொற்கொல்லன் இருந்த பகுதியைத் தீயிட்டுக் கொளுத்தியிருக்கலாமோ - என்னவோ - எதையும் உறுதியாகச் சொல்வதற்கில்லை. குற்றம் பெரியதுதான் - அதற்காக ஊரைக் கொளுத்துவது என்பது பொருந்தாது. கண்ணகியை மறக் கடவுளாக ஆக்கப் புனைந்த கற்பனையாகவும் இருக்கலாம் இது.

**கண்ணகியின் குறைபாடு**

இதுகாறும் கண்ணகியின் சிறப்புகள் - உயரிய பண்புகள் விளக்கப்பட்டன. கண்ணகியின் குறைபாட்டையும் கருதாமல் இருக்க முடியாது. கணவன் மாதவிபால் செல்லாமல் - சென்றாலும் அங்கேயே தொடர்ந்து நீண்ட நாள் தங்காமல் இருக்கும்படியாக அவனை ஈர்க்கும் ஆற்றல் கண்ணகியிடம் இல்லை.

சிலர் காலையில் தம் வீட்டுச் சிற்றுண்டி பிடிக்காமல், உணவுக் கடைக்குச் சென்று, இட்டலி, வடை, பூரி, கிழங்கு, பொங்கல், சாம்பார், சட்னி, கடப்பா, அடை கறி முதலியவற்றை மேய்வார்கள். கோவலனின் செயலும் இது போன்றதே. மாரியம்மன் கோலம் புனைந்த பெண்ணைப் போல் கண்ணகி இருந்திருப்பாள் போலும்! கவர்ச்சியை விரும்பிய கோவலன், மாதவியின் ஆடல் பாடல்களிலும், தளுக்கு - குலுக்கு - மினுக்குகளிலும் உள்ளத்தைப் பறி கொடுத்து விட்டான். அந்தோ! கண்ணகியின் வாழ்வு இதனால் சீரழிந்தது.

மற்றும் ஒரு குறை கூறப்படுகிறது சிலரால். மாதவியை விட்டுக் கோவலன் தன்னிடம் வந்ததும், கண்ணகி ஊடல்

கொண்டவள் போல் நடித்திருக்க வேண்டும். அதாவது பிகுவு - கிராக்கி பண்ணியிருக்க வேண்டும். அதை விட்டு, அவன் வந்ததும், மாதவிக்குக் கொடுக்க ஒன்றுமில்லை போலும் என்றெண்ணி, சிலம்புகள் உள்ளன - கொண்டு போய்க் கொடுங்கள் என்று சொன்னதும், அவன் மதுரைக்குப் போகலாம் வா என்றதும் - யாரும் அறியாவண்ணம் அவனோடு புறப்பட்டதும் அறியாமையாகும். இது கண்ணகி யின் திறமை இன்மையைக் காட்டுகிறது - என்றெல்லாம் கண்ணகி குறை கூறப்படுகின்றாள். ஆனால், கண்ணகி, வா என்றதும் உடனே கணவனுடன் மதுரைக்குப் புறப்பட்டு விட்டதில் ஒருவகைப் பொருத்தம் உள்ளது என்பதைப் புறக்கணித்துவிட முடியாது. அது என்ன என்று காண வேண்டும். இதற்கு, ஒருபுடைக் கருத்து ஒப்புமை காண்டல் என்ற முறையில் மணிமேகலைக் காப்பியத்தில் உள்ள ஒரு மாலைக் காட்சிப் புனைவு துணை செய்கிறது. அது வருமாறு:-

**ஒரு மாலைக் காட்சி**

ஒரு நாள் ஒரு சேவல் அன்னமும் அதன் பெடை அன்னமும் ஒரு தாமரைத் தடாகத்தில் அமர்ந்து விளையாடிக் கொண்டிருந்தன. தாமரை மலரில் இருந்த பெடை அன்னத்தை, மாலை நேரம் வந்ததும், அம்மலர் குவிந்து மூடி மறைத்துவிட்டது. அதை அறிந்த அன்னச் சேவல், அம்மலரின் இதழ்களைக் கிழித்துப் பெடையை அழைத்துக்கொண்டு ஓர் உயரமான தென்னை மரத்தில் ஏறிக்கொண்டதாம். பாடல்: மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை:-

**''அன்னச் சேவல் அயர்ந்து விளையாடிய**
**தன்னுறு பெடையைத் தாமரை அடக்கப்**
**பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண்டு**
**ஓங்கிருந் தெங்கின் உயர்மடல் ஏற''** (123 - 126)

என்பது பாடல் பகுதி. அன்னங்கள் தடாகத்தை விட்டு அகன்றதற்குக் காரணம், தடாகத்தின் மேலும் தாமரை மேலும் உள்ள அச்சமாகும். தடாகத்தின் கரையிலுள்ள ஒரு செடியின் மீது அமராமல் தென்னைமேல் அமர்ந்ததற்குக் காரணம், தங்களை அச்சுறுத்திய தண்ணீருக்கு வெகு தொலைவுக்கு அப்பால் போய்விட வேண்டும் என்ற தற்காப்பு முயற்சியாகும். வேறு மரத்தில் ஏறலாகாதா எனின், மற்ற மரங்களினும் தென்னையே உயரமானது - ஆதலின் என்க. தென்னைகளுள்ளும் 'ஓங்கு இரும் தெங்காம்' - மிக உயர்ந்த தென்னையாம், மிக உயர்ந்த தென்னையில் பக்க வாட்டத்தில் கைகாட்டிபோல் நீட்டிக் கொண்டிருக்கும் மடலில் அமரக் கூடாதா எனில், தண்ணீருக்கும் தங்களுக்கும் உள்ள இடைவெளி மிகுதி யாயிருக்க வேண்டும் என்பதற்காக, நெட்ட நெடுகமேல் நோக்கிக் கொண்டுள்ள உயர்மடலில் ஏறின என்க. மற்றும், 'அமர' என்று கூறவில்லை - 'ஏற' என ஏறுமுகத்திலேயே உள்ளதாகக் கூறப்பட்டிருப்பதும் சுவைக்கத்தக்கது.

தங்களை அச்சுறுத்திய தண்ணீர்ப் பகுதியை விட்டு வெகு தொலைவிற்கு அப்பால் போய் விடவேண்டும் எனச் செயல்பட்ட அன்னங்கள் போலவே, கண்ணகியும் செயல் பட்டிருக்கிறாள். அதாவது, தனது நல்வாழ்விற்கு இடையூறாக உள்ள மாதவியை விட்டு வெகு தொலைவிற்கு அப்பால் கணவனைக் கொண்டு சென்று விடவேண்டும் என்ற குறிக்கோளுடன், கணவன் அழைத்ததும் மறாமலும் எவருக்கும் தெரியாமலும் உடனே புறப்பட்டு விட்டாள். புகாரிலேயே இருப்பின் மீண்டும் வேதாளம் முருக்க மரத்தில் ஏறிக்கொள்ளலாம் - அதாவது- மீண்டும் ஒருகால் கோவலன் மாதவிபால் சென்று விடலாம்; ''தின்னு ருசி கண்டவரும் பெண்ணு ருசி கண்டவரும் சும்மா இருக்கமாட்டார்கள்'' என்பது ஒரு

பழமொழி. எனவே, இந்த அச்சம் கண்ணகிக்கு உண்டானது இயற்கையே. மற்றும், பிறர்க்குத் தெரிந்தால் போவதைத் தடுத்து விடுவார்கள் என்ற அச்சம் காரணமாகவும் தெரியாமல் கணவனுடன் புறப்பட்டு விட்டாள்.

எனவே, கண்ணகி கணவனோடு ஊடாமலும் உடன் வர மறுக்காமலும் செயல்பட்டதைக் கண்ணகியின் குறை பாடாகக் கூறுவதற்கு இல்லை. ஒரு தடவைதான் ‘கோட்டை’ விட்டு விட்டாள் - மறுபடியும் ஏமாறுவாளா என்ன! ஆனால் பின்பு மதுரையில் நேர்ந்ததை அவள் முன் கூட்டி அறிய முடியுமா என்ன! அது தற்செயலாய் நேர்ந்ததாகும். இயற்கையின் கட்டளைக்கு அவள் பொறுப்பாகாள்.

ஆனால், தொடக்கத்தில் கணவன் மாதவிபால் செல்லாமல் இருக்கச் செய்ய அவளால் இயலாது போனது வருந்தத்தக்கதே. கண்ணகி எவ்வளவோ முயன்றும் இருக்கலாம் - ஆனால் கோவலன் முரட்டுத்தனமாய்த் திருந்தாமலும் இருந்திருக்கலாம் அல்லவா?

# 21. கவுந்தியடிகளின் கடமையுணர்வு

**துணை**

'துணையோ டல்லது நெடுவழி போகேல்' என்பது அதிவீர ராம பாண்டியனின் வெற்றி வேற்கைப் (78) பாடல்: புகாரிலிருந்து ஒரு முப்பது காதம் (முந்நூறு கல்) தொலைவு கடந்து மதுரைக்கு யாருக்கும் தெரியாமல் இருட்டில் புறப் பட்டுச் சென்ற கோவலனுக்கும் கண்ணகிக்கும் கிடைத்த அரிய பெரிய துணை கவுந்தியடிகள்.

**அடிகள்**

கவுந்தி ஒரு சமண சமயப் பெண் துறவி. புகாருக்கு மேற்கே ஒரு காவதத் தொலைவில் இருந்த கவுந்திப் பள்ளி என்னும் இடத்தில் தங்கியிருந்தார். ஆணாயினும் பெண்ணாயினும் உயர்ந்தவர்களை அடிகள் என்று சொல்லும் மரபு உண்டு. கோவலன் தீயொழுக்கம் புரிந் திருப்பினும், கண்ணகிக்கு அவன் உயர்ந்தவனாகத் தோன்றியதால் 'அமுதம் உண்க அடிகள்' எனக் கூறினாள். (கொலைக் களக் காதை-43).

**உண்மையா?**

கவுந்தி யடிகள் துணையாகச் சென்றது உண்மையிலேயே நடந்திருக்கக் கூடிய வரலாற்றுச் செய்தியா அல்லது,-கதை போகிற போக்குக்கு வாய்ப்பாக இளங்கோ அடிகள் படைத்துக்கொண்ட கற்பனைச் செய்தியா என்பது ஒருவகை ஆராய்ச்சிக்கு உரியது. இருவரும் புகாரைக் கடந்து - காவிரியைக் கடந்து ஒரு காவதம் சென்றதுமே கிடைத்து

மதுரை செல்லும் வரையும் உடனிருந்த துணை கவுந்தி யாதலின், இது இட்டுக்கட்டிச் சொல்லி வைத்தாற்போல் நடந்திருக்கிறதே எனச் சிலருக்கு ஐயம் எழலாம். இளங்கோ, இந்தத் துணையைக் கண்ணகிக்காகப் பெண்ணாக்கினார் - கோவலனுக்காகத் துறவி யாக்கினார்-என்பதாக ஓர் அறிஞர் தெரிவித்துள்ளார். பெண்பாலாகிய கவுந்தி துறவியா யில்லாவிடின், 'பெண் ருசி' கண்ட கோவலன் வழியில் கவுந்தியையும் ஒரு கை பார்த்து விடுவான் என்று இவர் எண்ணினாரோ!

**நம்பலாம்**

நெடுவழி செல்பவர்கள், வழியில் ஒரு துணை கிடைப்பின், அவரோடு உரையாடிக் கொண்டு வழி கடப்பது நிகழக் கூடியது தானே. இருவரும் கவுந்தி தங்கியிருந்த இடத்தின் வழியாகச் சென்றனர். கவுந்தி இவர்களைப் பார்த்து, நீங்கள் யார்? எங்கே செல்கிறீர்கள்? ஏன் செல்கின்றீர்கள்? என வினவினார். கோவலன் உள்ளவற்றை உரைத்தான். உடனே கவுந்தி அவன் சொன்னதை ஒத்துக் கொள்ளவில்லை. உங்கள் குறிக்கோள் சரியில்லை; இந்தப் பெண்ணால் கடிய கொடிய காட்டு வழியைக் கடக்க முடியாது என்று சொல்லிப் பார்த்தார். கோவலன் அசைந்து கொடுக்கவில்லை. பின்னர், கவுந்தி சரி செல்லுங்கள். மதுரைக்குச் செல்வதாகச் சொல்கிறீர்கள்; யானும் மதுரைக்குச் சென்று, பெரியோர்களின் நூல்களைக் கேட்டு அருகனை வணங்க வேண்டும் என நெடுநாளாக எண்ணி யிருந்தேன்; யானும் வருகிறேன் என்று உடன் புறப்பட்டு விட்டார். மூவரும் மதுரை நோக்கிச் செல்லலாயினர். எனவே, இது இளங்கோவின் கற்பனையன்று - உண்மை யாகவே நடந்திருக்கும் என நம்பலாம்.

**பயணப் பொருத்தம்**

கணவனும் மனைவியுமான ஓர் ஆணும் ஒரு பெண்ணும் ஆக இருவர் மட்டும் நெடுந்தொலைவு பயணம் செய்வது பாதுகாப்பானதன்று. தேன் நிலவுக்குச் செல்வதை இங்கே எடுத்துக் கொள்ளக் கூடாது. வெளிப்படையாகவே சொல்லலாம் என எண்ணுகிறேன். பெண் வழியில் சிறுநீர் கழிக்க ஒதுங்க வேண்டுமெனில், அவளுடன் ஆடவன் துணை போதல் நமது மரபு அன்று – ஒரு பெண் அவளுடன் துணை போவதே பொருத்தமானது. அதற்கு ஏற்பப் பெண் கவுந்தி கிடைத்தார். மற்றும், கணவன் அப்பால் சென்று ஒரு செயல் முடித்துவர, மனைவிக்கு ஒரு பெண்ணைத் துணையாக விட்டுச் செல்வதே மரபும் பொருத்தமும் ஆகும். இதன்படி, வழியில், கோவலன் நீர் அருந்த ஒரு முறையும், காலைக் கடன் கழிக்க ஒரு முறையும் கண்ணகியை கவுந்தியோடு விட்டுச் சென்றதாகச் சிலம்பு சொல்கிறது. கோவலன் கால்களைத் தொட்டுக் கும்பிடும் அளவுக்குப் பெருமையும் அகவையும் (வயது முதிர்வும்) உடைய கவுந்தியுடன் ஒரு பெண்ணை வழி நடத்திச் செல்வது தக்க வாய்ப்பாகும். எனவே, இம்மூவரும் சேர்ந்து செய்யும் பயணம் பொருத்தமானதும், பயனுள்ளதும், பாதுகாப்பானதும் ஆகும்.

**கவுந்தியின் சீற்றம்**

மதுரை செல்லும் வழியில் மூவரும் ஒரு சோலையில் தங்கியிருந்தபோது, இழிமகன் ஒருவனும் பரத்தை ஒருத்தியும் வந்து, கவுந்தியிடம் கண்ணகியையும் கோவலனையும் சுட்டிக்காட்டி இவர்கள் யார் என்றனர். என் மக்கள் எனக் கவுந்தி கூறினார். உன் மக்கள் எனில், தமையனும் தங்கையும் கணவன் மனைவியாக ஆவதுண்டோ என எள்ளி நகையாடினர். அவர்கள் மேல் சீற்றம் கொண்ட கவுந்தி அவர்களை நரியாகும்படிச் செய்தார். பின்பு,

கோவலனும் கண்ணகியும் கேட்டுக் கொண்டதால் மீண்டும் அவர்கள் பழைய உருக்கொள்ளச் சாப நீக்கம் செய்தார்.

இதனால், கவுந்தியின் சீற்றத் தன்மையும் கெடுமொழி (சாபம்) இட்டுப் பின் விடுதலை செய்யும் ஆற்றலும் விளங்கும். நரிகளாக்கிப் பின்பு பழைய உருக்கொள்ளச் செய்தார் என்பதை நம்பாவிடினும், கவுந்தி அவ்விழிமக்கள் இருவர்மீதும் சீற்றம் கொண்டு கடிந்து பேசியுள்ளார் என்பதையாவது ஒத்துக்கொள்ளலாம்.

இந்நிகழ்ச்சியின் அடிப்படையில், துறவிக்கு ஏற்ற பெருந்தன்மை கவுந்திக்கு இல்லை - அவரை ஒரு மெய்த் துறவியாகக் கொள்ளவியலாது எனக் கவுந்தியின் பண்பைத் திறனாய்வு செய்துள்ளனர் சிலர். அவர் துறவியாதலால் தான் அடிகள் என்னும் சிறப்பு மொழி அவர் பெயருடன் இணைக்கப்பட்டுள்ளது. இங்கே, திருக்குறள் - 'நீத்தார் பெருமை' என்னும் தலைப்பில் உள்ள

**''குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது''** (29)

என்னும் குறட்பாவை ஆழ எண்ணிப் பார்க்கின், இந்தச் சிக்கலுக்கு நல்ல தீர்வு கிடைக்கும்.

**கவுந்தியின் மறுப்புரை**

மாங்காட்டு மறையவன் ஒருவன் அவனது நம்பிக்கையின் படிக் கூறியவற்றையெல்லாம், கவுந்தியடிகள் தம் அருக சமயக் கொள்கையைக் கூறி மறுத்துரைத்தார். இதனால், கவுந்தி வாதிடும் வல்லமையும் உடையவர் என்பது புலனாகும்.

**கவுந்தியின் கவர்ச்சி மொழி**

**''விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது**
**சொல்லுதல் வல்லார்ப் பெறின்''** (648)

என்பது குறள் பா. தக்கவர்கள் நேர்ந்து நிரவி இனிமை யாகவும் திறமையாகவும் பேசி அறிவுறுத்துவாராயின், மக்கள் ஏற்றுக்கொண்டு செயல் புரிவர். சிலம்பில் ஊர் காண் காதையில், கவுந்தி கவர்ச்சியாகப் பேசிக் கோவலனுக்கு ஆறுதல் உண்டாக்கிய செய்தி அறிவிக்கப்பட்டுள்ளது.

கோவலன் கவுந்தியை வணங்கிச் சொல்கிறான்: யான் நெறிமுறை தவறி ஒழுகிச் செல்வம் இழந்து, கண்ணகி துயருற்று வருந்தும்படி அறியாத புது ஊருக்கு அழைத்து வந்து விட்டேன். யான் மதுரை மாநகருக்குள் சென்று என் இனத்தவரைக் கண்டு எதிர்காலத்தில் செய்ய வேண்டியதற்கு உரிய ஏற்பாடுகளை ஆயத்தப்படுத்தி வரும்வரை கண்ணகி உங்கள் திருவடிப் பாதுகாப்பில் இருப்பாளாக - அதனால் உங்கட்குத் துன்பம் ஒன்றும் இருக்காதே - என்று நொந்து வினவினான். அப்போது கவுந்தி பின்வருமாறு அவனுக்கு ஆறுதல் கூறித் தேற்றலாயினார்:

கோவலா! எல்லாம் ஊழ்வினைப் பயன். வாய் பறை யாகவும் நாக்கு பறையடிக்கும் குறுந்தடியாகவும் கொண்டு பெரியோர்கள் எவ்வளவோ அறிவுரைகளும் அறவுரைகளும் கூறியுள்ளனர். கற்றறிந்த நல்லோர் நல்வினையே புரிவர். வாழ்க்கையில் வழுக்கியோரே பிரிதல் துன்பம், புணர்தல் துன்பம், மன்மதன் செய்யும் துன்பம் முதலியவற்றால் வருந்துவர். எல்லாம் வினைப் பயனே. எனவே நடந்து போனதற்கு வருந்தலாமா? இன்னும் கேள்! உன்னைப்போல் வருந்தியவர் மிகப் பலராவார். இராமன் காட்டில் சீதையைப் பிரிந்து தேடி வருந்தினான். நளன் சூதாடித் தோற்று மனைவியோடு காடேகி, இரவில் அவளைக் காட்டிலேயே விட்டுப் பிரிந்து சென்று விட்டான். இவர்கள் இருவரும் மனைவியரைப் பிரிந்து வருந்தினர். நீயோ மனைவியைப் பிரியாமல் இங்கே இருக்கிறாய். மனைவியைப் பிரிந்து வருந்திய இராமனையும் நளனையும் நோக்க, மனைவியோ

டிருக்கும் நீ எவ்வளவோ கொடுத்து வைத்துள்ளதாகவே தெரிகிறது. எனவே, வருந்தற்க எனக் கவர்ச்சியாகவும் திறமையாகவும் பேசி ஆறுதல் செய்தார்.

கவுந்தியின் கவர்ச்சி மொழியான மற்றொன்றையும் காணலாம்: மதுரையின் புறஞ்சேரியில் இயக்கிக்குப் பால் படையல் செய்து திரும்பிய வழியில் மாதரி கவுந்தியைக் கண்டு வழிபட்டாள். அப்போது, கோவலனையும் கண்ணகியையும் புறஞ்சேரியை விட்டு இருட்டுவதற்குள் மதுரைக்கு அனுப்பி வைத்துவிட வேண்டுமென்று எண்ணினார் கவுந்தி. இவர்களை எப்படி அனுப்புவது? - யாருடன் அனுப்புவது? - எங்கே தங்கவைப்பது? - என்றெல்லாம் கவலை கொண்டிருந்த கவுந்திக்கு ஓர் எண்ணம் தோன்றியது. தீங்கு இல்லாத ஆ காத்து ஓம்பும் தொழில் புரியும் இந்த ஆயர் குல மடந்தையாகிய மாதரி அடைக்கலப் பொருளை ஏற்பதற்குத் தகுதியானவள் எனத் திறமையுடன் தேர்ந்தெடுத்தார். தேர்வு சரியே. கவுந்தி மாதரியிடம் கூறுகிறார்:

மாதரியே! இங்கே உள்ள இருவரும் வணிக குலத்தார்கள். கோவலன் - கண்ணகி என்பன இவர்களின் பெயர்கள். கோவலனின் தந்தை மாசாத்துவான் என்பவர் புகாரிலே மிகப் பெரிய செல்வராவார். இவரது புகழ் நாடு முழுவதும் பரவியுள்ளது. மதுரைக்காரர்கள் இவரை நன்கறிவர். இந்த மாசாத்துவானின் மகன்தான் கோவலன் என்பதை மதுரை வணிகர்கள் அறியின், பெறுதற்கு அரிய புதையல் பெற்றவர்போல் மகிழ்ந்து இவர்கட்கு விருந்தோம்பி நல்ல மாளிகையில் தங்கச் செய்வர். அந்த வணிக குலத்தாரின் இருப்பிடத்தை இவர்கள் அடையும் வரையும், இடைக்குல மடந்தையாகிய உன்னிடம் இவர்களை அடைக்கலமாகத் தருகிறேன் - ஏற்றுக் கொள்க - என்று கவுந்தி கூறினார். பாடல்: (அடைக்கலக் காதை)

**"மாதரி கேள் இம்மடந்தைதன் கணவன்**
**தாதையைக் கேட்கில் தன்குல வாணர்**
**அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு**
**கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவர்**
**உடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவும்**
**இடைக்குல மடந்தைக்கு அடைக்கலம் தந்தேன்"**

(125-130)

என்பது பாடல் பகுதி.

கவுந்தியின் தேர்ந்தெடுப்பு மிகவும் சிறந்ததே. மாசாத்துவானைக் குறிப்பிடுவதற்கு, "இவன் என் பெண்ணின் பேர்த்தி நாத்தனாரின் ஓரகத்தியின் தங்கை மகன்" என்று வேடிக்கையாகச் சொல்வது போல், கண்ணகியைக் காட்டி, இவளுடைய கணவனின் தந்தை மாசாத்துவான் என்று கவுந்தி கூறியிருப்பதில் சில நுட்பங்கள் உண்டு.

கோவலனைக் காட்டி இவன் தந்தை மாசாத்துவான் என்று கூறாமல், கண்ணகியைக் காட்டி இவள் கணவனின் தந்தை எனக் கவுந்தி கூறியதாக இளங்கோ பாடியிருப்பது, காப்பியக் கதைத் தலைவி கண்ணகி என்னும் அவளது முதன்மையைக் குறிப்பாக அறிவிக்கிறது. இந்தப் பெண்ணின் மாமனார் என நேராகச் சொல்லிவிடின், கோவலனைக் குறைவு படுத்திய தாகும். மற்றும் கோவலனும் கண்ணகியும் கணவன் மனைவியர் என்ற அறிமுகமும் செய்ததாயிற்று.

சில குடும்பங்களில் தந்தையால் பிள்ளைக்கு மதிப்பு வரும். இன்னாருடைய மகன் இவன் என்று பிள்ளையை அறிமுகப் படுத்தல் வேண்டும். வேறு சில குடும்பங்களில் பிள்ளையால் தந்தைக்கு மதிப்பு ஏற்படும். இன்னாருடைய தந்தை இவர் என அறிமுகம் செய்தல் வேண்டும். ஆனால் கோவலன் நிலைமையோ இரங்கத் தக்கது! கோவலன்

மாசாத்துவானின் மகன் என்று குறிப்பிடப்பட்டிருப்பதோடு, கண்ணகியின் கணவன் என்றும் குறிப்பிடப்பட் டிருக்கிறான்.

உலகியலில், வேடிக்கையாக ஒருவனைக் குறிப்பிட்டு, 'அவன் அப்பன் மகன்' என்று சிலர் கூறுவதுண்டு. எல்லாரையும் 'அப்பன் மகன்' என்று வேடிக்கைக்காகக் கூடச் சொல்லிவிட முடியாது. தன் அப்பனைப் போலவே செயல் புரிபவனையே - அப்பனைப் போன்ற இயல்பு உடையவனையே அவ்வாறு கூறுவர். நக்கீரர் என்னும் புலவர் தலைசிறந்த புலவர். அவருடைய தந்தையும் தலைசிறந்த புலவர். மிக உயர்ந்த நக்கீரரைக் குறிப்பிடு வதற்கேகூட, 'மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்' என்று குறிப்பிட்டுள்ளனர் முன்னோர். மாசாத்துவான் - கோவலன் ஆகியோரைப் பொறுத்த மட்டில்,

**"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்"** (67)
**"மகன் தந்தைக்காற்றும் உதவி இவன்தந்தை**
**என்னோற்றான் கொல்லெனும் சொல்"** (70)

என்ற குறள் பாக்களுக்கு இங்கே வேலை இல்லை. மற்றும் கவுந்தி இங்கே வீராப்பு - பிகுவு (கிராக்கி) காட்டும் திறமை தெரிகிறது. மாதரியே! இவர்களை நீ ஏளனமாக எண்ணி விடாதே - மாசாத்துவானின் மகனும் மருமகளும் வந்திருக் கிறார்கள் என்று தெரிந்தால், மதுரை வணிகப் பெருமக்கள் இவர்களைக் கொத்திக் கொண்டு (விரைந்து அழைத்துக் கொண்டு) போய்விடுவார்கள். இந்த அளவுக்குச் சிறந்த பெருமையுடைய உயர் குலத்தாராகிய இவர்களை, உயர்வு தாழ்வு கருதாமல், இடைக் குலத்தாளாகிய நின்னிடம் ஒப்படைக்கின்றேன் - இது உனக்குப் பெரிய வாய்ப்பு - என்று ஒருவகைப் பிகுவுடன் அடைக்கலம் தந்தார் கவுந்தி.

மாதரியின் மனத்தைக் கவரக் கவுந்தி மேலும் கூறுகிறார்: கண்ணகியை நீராட்டிப் பொட்டிட்டுப் பூச்சூட்டித் தூய உடை உடுத்து, ஆயமும் காவலும் தாயும் இவளுக்கு நீயே யாகிக் காப்பாற்றுக. காலடி மண்ணில் பட்டறியாத கண்ணகி கணவனின் நன்மைக்காக மிகவும் வருந்தி வழி கடந்து வந்துள்ளாள். கற்புடைய இத்தெய்வம் அல்லது வேறு தெய்வம் நாங்கள் கண்டதில்லை. இத்தகைய பத்தினிப் பெண்டிர் இருந்த நாட்டில் மழை பொய்க்காது பெய்யும் - வளம் குறையாமல் கொழிக்கும். அரசனுடைய வெற்றியும் செங்கோலும் தவறுவதில்லை - என்பதை மாதரியே நீ அறியாயோ - என்றார்.

**"கற்புக்கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது**
**பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்**
**வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது**
**நீள்நில வேந்தர் கொற்றம் சிதையாது**
**பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு"** (143-147)

என்பது பாடல் பகுதி. பத்தினிப் பெண்டிர் இருக்கும் நாட்டில் மழை தவறாது பெய்யும் - வளம் பெருகும் என்பது அறிவியலின்படி ஒத்துக் கொள்ள முடியாதது. கவுந்தி மாதரியின் மனங் கவர உயர்வு நவிற்சியாக இதைச் சொல்லி யிருக்கலாமல்லவா? இதனை, "தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழு தெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை" என வள்ளுவர் கூறியிருப்பது போல் கொள்ளலாம். உரை பெறு கட்டுரையிலும் இவ்வாறு மழை பெய்ததாகக் கூறப்பட்டுள்ளது வியப்பாயுள்ளது.

மேலும் கவுந்தி தொடர்கிறார். மாதரியே! அடைக்கல மாக வந்தவரைக் காப்பதால் கிடைக்கும் பயனை விளக்க ஓர் எடுத்துக்காட்டு தருகிறேன்: காவிரி சார்ந்த பட்டினத்துப் பொழில் ஒன்றில் சாரணர் சாவகர்க்கு அறம் உரைத்துக்கொண் டிருந்தார். அப்போது அவ்விடத்தே,

ஒரு கருவிரல் குரங்குக் கையோடு வானவன் ஒருவன் தோன்றினான். அவனது வரலாற்றைச் சாவகர்கள் வினவச் சாரணர் கூறலானார்:

எட்டிப் பட்டம் பெற்ற சாயலன் என்பவன் மனைவி வந்தவர்க்கெல்லாம் விருந்து படைத்தாள். ஒரு நாள் ஒரு தவசி வந்தார். அவருக்கு உணவு படைத்தாள். அவர் உண்டு மிகுந்த எச்சில் உணவையும் கழுவிய நீரையும் பசியால் வாடிய ஒரு குரங்கு உட்கொண்டு சிறிது பசி ஆறி அத் தவசியை ஏக்கத்துடன் பார்த்தது. அதன்பால் இரக்கம் கொண்ட அத்தவசி, அக்குரங்கை ஒரு பிள்ளைபோல் கருதிக் காக்கும்படிச் சாயலன் மனைவியிடம் அடைக்கலம் தந்து ஏகினார். அதன்படி அவள் அக்குரங்கை நன்கு பேணி வந்தாள். அக் குரங்கு இறந்த பின் அதன் பெயரால் தானம் செய்தாள். அந்தக் குரங்கு, மத்திம நாட்டிலே வாரணவாசி என்னும் ஊரில் உத்தர கௌத்தன் என்னும் அரசனுக்கு மகனாகப் பிறந்தது. குரங்கு உருமாறிய அந்த அரச குமரன் சிறப்புடன் பல தானங்கள் செய்து முப்பத்திரண்டாம் வயதில் இறுதி எய்தித் தேவன் ஆயினான். அவனே இப்போது வந்த வானவன் ஆவான். அவன் குரங்காக இருந்தபோது அடைக்கலம் தந்து காத்த நல்வினையால் சாயலனும் அவன் மனைவியும் பேரின்ப வீடுபேறு எய்தினர். இதனால், அடைக்கலம் காத்தலின் சிறப்பை நீ அறிவாயாக. இனிக் கண்ணகியைக் கோவலனோடு விரைந்து நின் இல்லத்திற்கு அழைத்துச் செல்வாயாக என்று அறிவுறுத்தினார்.

'இரயில் சினேகம்' என்பார்களே - அதுபோலின்றி, வழியில் சேர்ந்த கண்ணகியையும் கோவலனையும் காக்கக் கவுந்தி மேற்கொண்ட பொறுப்புள்ள முயற்சியை - கடமை உணர்வை எவ்வளவு பாராட்டினும் தகும்.

**கவுந்தியின் கடவுள் கொள்கை**

கவுந்தி வணங்கும் கடவுள் அருகனே. அவர் சமண சமயத்தைச் சேர்ந்தவரே. இளங்கோ அடிகள் சமண சமயக் கொள்கைகளைப் பரப்புவதற்காகத் தம் காப்பியத்தில் கவுந்தியடிகளைப் பயன்படுத்திக் கொண்டார் என்று கூறவும் இடம் உண்டு. அதற்கு உரிய அகச்சான்றுகள் சில வருமாறு:-

கோவலனும் கண்ணகியும் மதுரைக்குப் போவதை அறிந்த கவுந்தி, யானும், மேலான (சாரணப்) பெரியோர்கள் அருளும் அறவுரைகளைக் கேட்டு அருகதேவனை வணங்கு வதற்காக மதுரைக்குச் செல்லவேண்டும் என நெடுநாளாக விரும்பியிருந்தேன். எனவே. இப்போது யானும் உம்முடன் மதுரைக்கு வருவேன் - என்றார். அருகனை வணங்க மதுரைக்குச் செல்பவர் சமண (ஜைன) சமயத்தைச் சார்ந்தவர் தானே?

**"மறவுரை நீத்த மாசறு கேள்வியர்**
**அறவுரை கேட்டாங்கு அறிவனை ஏத்தத்**
**தென்தமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்கு**
**ஒன்றிய உள்ளம் உடையே னாகலின்**
**போதுவல் யானும்"** (நாடுகாண் காதை 56-60)

என்பது பாடல் பகுதி. 'நன்னாடு' (நல்+நாடு), 'தீதுதீர் மதுரை' என்பன உள்பொருள் உடையன. இது பின்னர் விளக்கப்படும். கவுந்தி இங்கே மதுரையைப் புகழ்ந்துள்ளார்.

கவுந்தி ஒரு கையில் பிச்சைப் பாண்டமும் மற்றொரு கையில் மயில் தோகையும் தோளில் உறியும் கொண்டு மதுரைக்குப் புறப்பட்டாராம்.

**"தோமறு கடிஞையும் சுவல்மேல் அறுவையும்**
**காவுந்தி ஐயை கைப்பீலியும் கொண்டு"** (98, 99)

கடிகை = பிச்சைப் பாத்திரம். சுவல் = தோள். அறுவை = உறி. சமணத்துறவிகள் இவற்றைக் கொண்டு செல்லுதல் மரபு.

ஒரு சோலையில் சமணச் சாரணர் வந்து அறவுரை வழங்கியபோது, கவுந்தி உள்ளிட்ட மூவரும் சாரணரின் காலடியில் விழுந்து வணங்கினர். சாரணர், அருகனை வணங்கினால் பிறவி அறும் என்று அறிவுரை கூறினார். அப்போது, அருகக் கடவுளின் பெயர்கள் பலவற்றைப் பின்வருமாறு அவர் கூறினார்:

**"அறிவன் அறவோன் அறிவுவரம்பு இகந்தோன்**
**செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்**
**தரும முதல்வன் தலைவன் தருமன்**
**பொருளன் புனிதன் புராணன் புலவன்**
**சினவரன் தேவன் சிவகதி நாயகன்**
**பரமன் குணவதன் பரத்தில் ஒளியோன்**
**தத்துவன் சாதுவன் சாரணன் காரணன்**
**சித்தன் பெரியவன் செம்மல் திகழொளி**
**இறைவன் குரவன் இயல்குணன் எங்கோன்**
**குறைவில் புகழோன் குணப்பெருங் கோமான்**
**சங்கரன் ஈசன் சயம்பு சதுமுகன்**
**அங்கம் பயந்தோன் அருகன் அருள்முனி**
**பண்ணவன் என்குணன் பாத்தில் பழம்பொருள்**
**விண்ணவன் வேத முதல்வன்"** (10:176-189)

இவ்வளவு அருகதேவனைக் குறிக்கும் பெயர்களையும் சாரணர் கூறினார். அவற்றைக் கவுந்தி கேட்டார் எனில், அவர் சமயம் சமணமே என்பது விளங்கும். சாரணர் வாயிலாக அருகனை இவ்வாறு பெரிய அளவில் புகழ்ந்திருக்கும் இளங்கோவடிகளின் சமயம் என்ன என்பதையும் உய்த்துணரலாம்.

சாரணரின் அறவுரையைக் கேட்டதும் கவுந்தியடிகள் தலைமேல் கைகுவித்துக் கொண்டு பின்வருமாறு அருகனைப் போற்றினார்: அருகனின் திருமொழிகளைத் தவிர, வேறு மொழிகளை என் செவிகள் கேளா. அவன் திருப் பெயர்களைத் தவிர, வேறு பெயர்களை என் நாக்கு நவிலாது. அவன் திருவடிகளைத் தவிர, வேறு எவர் அடிகளையும் என் கண்கள் காணா. அவனைத் தவிர, வேறு எவரையும் கீழே விழுந்து வணங்கேன். அவனுக்குத் தவிர வேறு எவர்க்காகவும் என் இருகைகளும் வணங்கக் குவியா. அவன் அடிகளைத் தவிர, வேறு எவர் அடிகளையும் என் தலை சூடித் தாங்காது. அவன் இறைமொழிக்குத் தவிர, வேறு எம்மொழிக்கும் என் மனம் இடம் தராது - என்றெல்லாம் கவுந்தி புகழ்ந்து போற்றினார்.

இதனாலும் கவுந்தியின் சமயப் பற்று புலனாகும். சாரணர் கூறிய அறிவுரைகளை யெல்லாம் கவுந்தியடிகளும் பிறருக்கு அறிவுறுத்தி யருளினாராம்.

மூவரும் உறையூரினின்றும் புறப்பட்டுச் சென்று வழியில் உள்ள ஓர் இளமரக் காவினுள் தங்கினர். அப்போது மாங்காட்டு மறையவன் எனப்படுபவன் வந்து இவர்கட்குச் சில செய்திகள் தெரிவித்தான். செல்லவேண்டிய வழித்தடம் பற்றியும் அறிவித்தான். புண்ணிய சரவணம், பவ காரணி, இட்ட சித்தி ஆகிய பொய்கைகளில் குளித்தால் இன்னின்ன பயன் கிடைக்கும் என்றெல்லாம் அறிவுறுத்தினான். கேட்ட கவுந்தி மறுத்துரைக்கலானார். மறையவரே! புண்ணிய சரவணத்தில் புகாமலேயே, அருகன் அருளியுள்ள அறநூல்களைக் கொண்டு எல்லாம் தெரிந்து கொள்ளலாம் - பவகாரணியில் மூழ்கித்தான் முற்பிறப்புச் செய்திகளை அறியவேண்டும் என்பது கட்டாயம் இல்லை - இட்ட சித்தியில் குளித்தால் பெறக்கூடிய நன்மைகளை, அறநெறியின் ஒழுகி, மன்னுயிர்களைக் காக்கும் அருட்

செயலினாலேயே பெறலாம் - என்றெல்லாம் கவுந்தி அவனை மறுத்துக் கூறி அனுப்பிவிட்டார்.

கவுந்தி கண்ணகியை மாதரியிடம் அடைக்கலம் தந்தபோது கூட, சாரணர் தொடர்பான வரலாறு கூறியுள்ளார்.

**எளிய சிக்கல்**

இங்கே ஓர் எளிய சிக்கல் உள்ளது. அது எளிதில் சரிசெய்யக் கூடியதே. அருகனுக்கு மட்டுமே தன் உடலும் உறுப்புகளும் மனமும் வாக்கும் போற்றுதற்கு உரியன என்ற கவுந்தியடிகள், அடைக்கலக் காதையில், கண்ணகியை மாதரியிடம் அடைக்கலம் தந்தபோது, கண்ணகியைக் குறிப்பிட்டு,

> **"இன்துணை மகளிர்க்கு இன்றி யமையாக்**
> **கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது**
> **பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்"** (142-144)

எனப் போற்றிப் புகழ்ந்துள்ளார். இது முன்னுக்குப்பின் முரணாயில்லையா? - என்ற சிக்கல் எழுகிறது. அருகன் கண் காணாத தெய்வம்; எனவே, கண்ணகியைக் கண்கண்ட தெய்வம் என்றார். மற்றும், சூழ்நிலையையும் கவனிக்க வேண்டும். மாதரியிடம் அடைக்கலம் தருகின்ற பெண்ணை உயர்த்திக் கூறினால்தானே மாதரியின் மனம் நிறைவு பெறும்? மிக்க நெடுந்தொலைவு - ஒரு நாளைக்கு ஒரு காவதம் வீதம் - பல நாள் கலந்து பழகி வழிவந்தபோது கண்ணகியின் உயரிய பண்பு கவுந்திக்குத் தெரிந்திருக்கு மாதலானும் பொற்புடைத் தெய்வம் என்றார். கவுந்தி கண்ணகியை இவ்வாறு பொற்புடைத் தெய்வம் என்று கூறியதாக அறிவிப்பவர் ஆசிரியர் இளங்கோ அடிகள். கண்ணகி பின்னால் தெய்வமாகக் கோயில் எடுத்து வழிபடப் பட்டவள். இதன்பின் ஆசிரியர் நூல் எழுதினார்.

ஆகவே, பின்பு தெய்வமாகப் போகிறாள் என்ற குறிப்பு கவுந்தியடிகளின் வாயிலாக இளங்கோவால் அறிவிக்கப் பட்டுள்ளது.

மற்றும், உலகியலில், வீர வைணவர் ஒருவரோ அல்லது - வீர சைவர் ஒருவரோ, மிகவும் உயர்ந்தவர் ஒருவரைக் குறிப்பிடும்போது, ஐயோ அவரா – அவர் ஒரு தெய்வமாயிற்றே! ஐயோ அந்த அம்மாவா - அவர் ஒரு தெய்வமாயிற்றே - என்று கூறுவதுண்டு என்பதும் ஈண்டு ஒப்பிட்டு எண்ணத்தக்கது.

இறுதியில், கோவலன் இறந்த செய்தி அறிந்ததும் கவுந்தி உண்ணா நோன்பு கொண்டு உயிர் துறந்தார். இப்போது கூடச் சிலர் இவ்வாறு செய்கின்றனர். கவுந்தி துறவியாதலின் இவ்வாறு செய்தார். இக்காலத்தார்க்கு இது தேவையில்லை.

# 22. மாதவியின் மன உறுதி

சிலப்பதிகாரத்தில் கோவலன், கண்ணகி ஆகியோருக்கு அடுத்த இடம் மாதவிக்கு உரியது. நாடகங்களில் முதன்மை உறுப்பினர்கட்குத் (பாத்திரங்கட்குத்) துணை உறுப்பினர்கள் இருப்பர். அதன்படி, சிலம்புக் காப்பியத்தில் மாதவி துணை உறுப்பாக உள்ளாள். ஆனால், கதைப் போக்கின்படிப் பார்த்தால், கோவலன் கண்ணகியோடு இருந்த கால அளவினும், மாதவியுடன் இருந்த கால அளவே மிகுதியாகத் தெரிகிறது. காப்பியத்தின் முற்பகுதியில், கண்ணகி தனது இடத்தை மாதவி பற்றிக் கொள்ளத் தான் துணை உறுப்பினர் போல் ஆகிவிடுகிறாள். நாடகங்களில் கதைத் தலைவர்கட்கு எதிராளிகள் (Villains) இருப்பர். இங்கே, கோவலனுக்குப் பொற்கொல்லன் எதிராளியாயிருந்தா னென்றால், கண்ணகிக்கு மாதவி எதிராளியா யிருந்தாள். மனம்விட்டுச் சொல்லலாம் என்றால், கோவலனின் நல்வாழ்வையும் கெடுத்த எதிராளியாக மாதவி இருந்தாள் என்றும் சொல்லலாம்.

தன் ஆடல் பாடல் அழகு ஆகியவற்றால் கோவலனைக் கவர்ந்து ஈர்த்துக் கொண்டவள் மாதவி. காப்பியத்தில் கலையரசியாக நடைபோடும் அவள், மன்னன் எதிரில் ஆடல் பாடல் நிகழ்த்தித் 'தலைக்கோல்' விருதுடன் ஆயிரத்தெட்டுக் கழஞ்சுப் பொன் விலைப் பெறுமானம் உடைய பசும்பொன் மாலையும் தட்டிக் கொண்டவள்.

சேற்றில் முளைக்கும் செந்தாமரையைப் போல், இழிதொழில் புரிந்த சித்திராபதி என்னும் பரத்தையின்

மகளாகப் பிறந்த மாதவி கோவலன் ஒருவனையே இறுதி வரையும் கணவனாக வரித்துக் கொண்டவள். கோவலன் இறந்தபிறகு, தன் தாய் சித்திராபதியின் விருப்பப்படி பரத்தமைத் தொழிலில் ஈடுபட மறுத்துவிட்டாள்.

ஐந்தாம் அகவையில் தண்டியம் பிடிக்கச் செய்து ஏழாண்டு ஆடல் பாடல் கலைகளிலே பயிற்சி கொடுத்துப் பன்னிரண்டாம் அகவையில் அரசன் முன் ஆடல் செய்வித்த தாய் சித்திராபதியின் கனவுக்குக் கல்லறை கட்டி, இந்த இழி தொழிலே இனிக் கூடாது என்னும் உயர்ந்த கோட்பாட்டைச் சமுதாயத்தில் நிலைநாட்டப் பாடுபட்டவள் மாதவி.

ஒப்புயர்வு அற்ற தன் ஆடலாலும் பாடலாலும் மேனி மினுமினுப்பாலும் கோவலனுக்கு ஊடலும் கூடலும் தந்து உள்ளம் உவக்கச் செய்து வந்த மாதவி, இந்திர விழாவில் ஆடலாலும் பாடலாலும் பொது மக்களை மெய்ம்மறக்கச் செய்ததைப் பொறுக்க முடியாத கோவலனால் முதல் முதலாக நீறு பூத்த நெருப்புப்போல் உள்ளத்துள் வெறுப்பு தோன்றச் செய்தாள்.

ஒரு நாள் கடற்கரைச் சோலையிலே கோவலன் யாழ் மீட்டி, மற்றொருத்தி மீது நாட்டம் உடையவன் போன்ற குறிப்புப் பொருளமைத்து வரிப்பாட்டு இசைத்தான். அவன் அவ்வாறு பாடியது விளையாட்டாகத்தான். அதே போல் மாதவியும் மற்றொருவன்மேல் மனம் கொண்டவள் போன்ற குறிப்புப் பொருளமைத்து விளையாட்டாய் வரிப் பாட்டு இசைத்தாள். இதை உண்மை என எண்ணிய கோவலன், இவள் பரத்தை - பரத்தைதானே என்று இழி வாய்த் தப்புக் கணக்கு செய்து மாதவியைப் பிரிந்து விட்டான்.

அன்றே மாதவி வயந்த மாலை என்னும் தோழி வாயிலாகக் கோவலனை வருமாறு வேண்டி மடல் கொடுத்தனுப்பினாள். கோவலன் மடலை வாங்க மறுத்து மாதவிப் படலத்துக்கு முற்றுப் புள்ளி வைத்து, மீண்டும் திறக்க முடியாதபடி மூடு விழா செய்து விட்டான்.

அன்றிரவு கோவலனது பிரிவைப் பொறுக்க முடியாமல் நிலா முற்றத்தில் மாதவி சொல்லொணாத் துயருழந்தாள். அவள் மீட்டிய யாழும் பாடிய இசையும், மாதவிக்கு மறுப்பு தெரிவிப்பனபோல் திரிந்து மயங்கின.

கோவலனைக் காட்டு வழியில் கண்டு தந்து அழைத்து வரும்படிச் செய்யுமாறு கோசிகன் என்னும் அந்தணனிடம் மடல் எழுதிக் கொடுத்தனுப்பினாள். கோவலன் மாதவிக்கு எட்டாக் கனியாகி விட்டான்.

கோவலனிடம் குன்றாத அன்புடைய குலமகள் போலவே ஒழுகி வந்த மாதவி, கோவலனுக்குத் தன்னிடம் பிறந்த செதுக்காத சிற்பமாகிய மணிமேகலை என்னும் மகளையும் பிஞ்சிலே பழுத்த பழமாகத் துறவு பூணச்செய்து தானும் துறவு பூண்டு உண்மைத் துறவுக்குப் பெருமை அளித்தாள்.

**மாதவியின் குறைபாடுகள்**

மாதவி கோவலனின் அழகிலோ உயரிய பண்புகளிலோ மயங்கி அவனை ஏற்றுக் கொள்ளவில்லை. வாணிகம் செய்தே அவனை அடைந்தாள். அதாவது, அரசன் அளித்த ஆயிரத்தெட்டுக் கழஞ்சுப் பொன்னின் பெறுமானமுள்ள பசுமணி மாலையை அத்தொகையினை அளித்துப் பெறுபவரே தன்னை அடையலாம் என நடுக்கடைத் தெருவில் விலை பேசச் செய்ய, ஐயோ - பாவம் - அப்பாவி - காமுகனாகிய கோவலன் அத்தொகையளித்து மாலையை வாங்கிய பின்னரே மாதவியை அடைய முடிந்தது.

விலை தந்து பெற்ற மாலையுடனேயே கோவலன் மாதவியின் வீட்டிற்குள் நுழைந்திருக்கிறான். அதிலிருந்து மாதவியின் மனையிலேயே தங்கிவிட்டான் என்று சொல்லப் படுகிறது. இதன் பொருள்; கோவலன் இடையிடையே பொருள் கொண்டுவரத் தங்கள் வணிக நிலையத்திற்கும் கண்ணகியிருக்கும் தங்கள் வீட்டிற்கும் செல்லாமல் மாதவியின் வீட்டிலேயே ஆணியடித்துக் கொண்டு - வேர் பாய்ந்து தங்கி விட்டான் - என்பது இதன் பொருள் இல்லை. இடையிடையே கடைக்கும் வீட்டிற்கும் சென்று, அங்குள்ளார் சொன்ன அறிவுரையை மதிக்காமல் பொருள் கொண்டு வந்தே யிருப்பான். இறுதியாக மாதவியை வெறுத்துக் கண்ணகியை அடைந்தபோது, பொருள் தீர்ந்து விட்டதால் கணவன் வந்திருப்பதாக எண்ணிச் "சிலம்பு உள கொண் மின்" என்று கண்ணகி கூறினாள்.

இதிலிருந்து தெரிவதாவது:- கண்ணகி இதற்கு முன்பே ஒவ்வொரு நகையாகக் கணவனிடம் தந்து இழந்திருக்கிறாள் என்பது விளங்கும். கோவலன் கண்ணகியிடம் வந்ததும், அவளது வாடிய மேனியைக் கண்டு வருந்திக் கூறுவான்; வஞ்சனையுடைய மாய்மாலக்காரியுடன் சேர்ந்து ஆட்ட பாட்டம் செய்து, முன்னோர் தேடி வைத்த மிகப் பெரிய மலையத்தனைச் செல்வத்தை யிழந்து, வறுமையால் நாணம் அடைந்துள்ளேன் என்று கூறினான். இதனாலும் கண்ணகியின் நகைகளும் வீட்டுச் செல்வமும் தொலைந்தன என்பது புலனாகும்; (கனாத்திறம் உரைத்த காதை)

> **"வாடிய மேனி வருத்தம்கண் டியாவும்**
> **சலம்புணர் கொள்கைச் சலதியோடு ஆடிக்**
> **குலம்தரு வான்பொருட் குன்றம் தொலைந்த**
> **இலம்பாடு நாணுத்தரும் எனக்கு என்ன"** (68-71)

என்பது பாடல் பகுதி. இந்தச் செல்வம் தொலைந்த

தெனில், ஆயிரத்தெட்டுக் கழஞ்சுப் பொன் கொடுத்து பெற்ற பசுமணி மாலையும் தொலைந்திருக்கு மல்லவா?

இவ்வளவு செல்வம் எவ்வாறு தொலைந்தன. பிறர்க்குத் தானம் கொடுத்ததனால் மட்டுமா தொலைந்திருக்கும்? மாதவியோடு ஆரவார வாழ்க்கை நடத்தியதினால்தான் தொலைந்திருக்கக் கூடும். மகள் மணிமேகலைக்குப் பெயர் சூட்டு விழா நடத்தியபோது மாதவியும் கோவலனும் தானமாகப் பொன்மழை பொழிந்தார்களாம். "மாதவி தன்னொடு செம்பொன் மாரி செங்கையின் பொழிய" என்பது பாடல் பகுதி. மாதவி மழையாகப் பொழிவதற்கு யார் வீட்டுப் பொன்னாயிருக்க முடியும்? "சலம் புணர் கொள்கைச் சலதியோடு ஆடி" என்பதில் உள்ள சலதி என்பது மாதவியைக் குறிக்காது எனச் சிலர் கூறுகின்றனர். 'சலதி' என ஒருமையில் கூறியிருப்பது மாதவியைத் தவிர வேறு யாரைக் குறிக்க முடியும்?

கோவலனின் மனைவி கண்ணகியை விட்டுத் தன்பால் வந்து தங்கியிருப்பது தகாது - கண்ணகி வருந்துவாள் என்பதும், கோவலனின் பெற்றோரும் மற்றோரும் கோவலனது செய்கையால் வருந்துவர் என்பதும் மாதவிக்குத் தெரியாமலா இருக்கும்? மனைவியை விட்டுத் தன்னிடம் வந்து தங்கியிருப்பது தகாது என்று மாதவி எண்ணியிருந்தால், அவன் அவளை விட்டுப் பிரிந்ததும், வயந்த மாலை ,என்னும் தோழியின் வாயிலாக, கோவலன் தன்னிடம் வரும்படி வேண்டி மடல் எழுதித் தந்து அனுப்பியிருப்பாளா? கோவலன் மடலை மறுத்து, வயந்த மாலையை விரட்டினதும், "மாலை வாரா ராயினும் காலை காண்குவம்" என்று கூறியிருப்பாளா? பின்னரும் கோசிகன் வாயிலாக மடல் அனுப்பியிருப்பாளா?

இதுகாறும் கூறியவற்றால், கோவலன் வணிகத்தைக் கவனித்துப் பொருள் ஈட்டாமைக்கும் கண்ணகியைப்

பிரிந்தமைக்கும் ஆரவாரச் செயல்கட்கும் மாதவி காரணமாயிருந்தாள் என்ற குறைபாடு - குற்றச்சாட்டு மாதவிக்கு உரியது என்பது புலப்படும்.

ஆனால், இதை நடுநிலைமையோடு வேறொரு கோணத்திலும் நோக்கவேண்டும். அதாவது:- ஒருவன் மது அருந்திக் கெடுவானானால் அது மதுவின் குற்றமா? ஒருத்தி நஞ்சு உண்டு இறப்பாளானால் அது நஞ்சின் குற்றமா? இல்லை - இல்லவே யில்லை. கெட்டது மது அருந்தியவனின் குற்றம் - மது என்ன செய்யும்! இறந்தது நஞ்சு உண்டவளின் குற்றம் - நஞ்சு என்ன செய்யும். இவ்வாறே, மாதவியோடு சேர்ந்து கோவலன் கெட்டு விட்டான் எனில், அது மாதவியின் குற்றமா? இல்லை - கோவலனின் குற்றமே அது. ஆனால், மதுவும் நஞ்சும் தீயனபோல், மாதவியையும் தகாதவள் என்று கூறவேண்டி வரும். கண்ணகியைப் பொறுத்தவரையும் - குடும்பத்தாரைப் பொறுத்தவரையும் - ஏன், கோவலனைப் பொறுத்தவரையுங்கூட மாதவி தகாதவளே.

**மாதவியின் நிறை**

ஆனால், நாம் மாதவியை இப்படியே தகாதவளாக்கி விட்டுவிட்டு அப்பால் சென்று விடமுடியாது. மாதவியிடம் இருந்த நல்ல இயற்கூறுகளையும் சொல்லித்தான் தீர வேண்டும். அவள் பின்னால் பெற்ற நிறையினால் முன்னால் இழைத்த குறை மறைந்தது.

> **“கைப்பிடி நாயகன் தூங்கையிலே**
> **அவன் கையை எடுத்து**
> **அப்புறம் தன்னில் அசையாமல்**
> **முன்வைத்து அயல் வளவில்**
> **ஒப்புடன் சென்று துயில்நீத்துப்**
> **பின்வந்து உறங்கு பவளை**
> **எப்படி நான் நம்புவேன்**
> **இறைவா கச்சி ஏகம்பனே”**

என்னும் பட்டினத்தாரின் பாடலின் படி, பரத்தையர் குலத்தில் பிறவாமல் நல்ல குடியிலேயே பிறந்தும், கைக்குக் கை மாறும் சில கடை மகளிர் இருப்பதுண்டு. இது எங்கோ சிலவேயாகும். நல்ல குடியில் பிறந்த பெண்களுள், ஒருவனை அவன் மனைவியினின்றும் பிரித்துத் தன்பால் ஈர்த்துக்கொண்டு, அவனுடன் இறுதிவரையும் கற்புடைய மனைவியாக ஒழுங்காக இல்லறம் நடத்தும் மகளிரும் அங்கொன்றும் இங்கொன்றும் உண்டு.

மாதவியின் நிலை இதனினும் வேறு. காசு பெற்று, உடலை விற்பவர் அல்லர் - உடலைச் சிறிது நேரம் இரவலாகத் தருகின்ற - சிறிது நேரம் வாடகைக்கு விடுகின்ற பரத்தையர் குலத்தினைச் சேர்ந்த சித்திராபதியின் மகளாகிய மாதவி, எப்படியோ தன்னிடம் வந்து அகப் பட்டுக்கொண்ட கோவலனை, அவன் மனைவியிடம் அனுப்பாவிடினும், பிள்ளை பெறும் அளவுக்குக் குடும்பம் நடத்திக் கற்புடைய மங்கையாகவே வாழ்ந்து வந்திருக்கிறாள். விளையாட்டு வினையாதலைப் போல விளையாட்டாகப் பாடிய கானல் வரிப் பாட்டினால் கோவலன் பிரிந்ததும், குலத்தொழிலின் படி வேறு எவரையும் நாடாமல், மீண்டும் அவனுடனேயே இருந்து குடும்பம் நடத்த எவ்வளவோ முயற்சி செய்தாள். ஆனால் கை கூடவில்லை. வருந்தினாள் - வருந்தினாள் - வருந்திக் கொண்டேயிருந்தாள். கோவலன் இறந்த செய்தி கேட்டதும் கடுந் துறவியாகி விட்டாள். மழலை மகள் மணிமேகலையை யும் அவ்வாறே ஆக்கிவிட்டாள். இதுதான் மாதவிக்கு உரிய பெருஞ்சிறப்பாகும்.

**மாதவியின் குலம்**

மாதவி பரத்தையர் குலத்தைச் சார்ந்தவள் அல்லள் எனச் சிலரும், அவள் பரத்தையர் குலத்தினளே என வேறு சிலரும் கூறுகின்றனர்.

இந்த இருவகைக் கொள்கையினருள் முதல் கொள்கையினர் தம் கொள்கைக்கு அரணாக முன்னிறுத்தும் சான்றுகள் சில:-

> **"மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்**
> **சிறப்பிற் குன்றாச் செய்கையொடு பொருந்திய**
> **பிறப்பிற் குன்றாப் பெருந்தோள் மடந்தை"** (3:4-6)

இந்தப் பாடல் பகுதியில், "பிறப்பில் குன்றாப் பெருந்தோள் மடந்தை" என மாதவி குறிப்பிடப்பட்டுள்ளாள். அதனால், இழி தொழில் செய்யும் பரத்தையர் குலத்தினள் என்று அவளைக் கூறமுடியாது.

மாதவி கோவலனைப் பொருள் கொண்டு வரச் சொல்ல வில்லை. கோவலன் வேறுவழியில் பொருளை விரயம் பண்ணியிருப்பான்.

கோவலனை அடைந்த மாதவி இறுதிவரையும் அவனை விட்டுப் பிரியவில்லை.

கோவலனுக்குப் பிள்ளை பெற்று நற்குடி மகளாகவே மாதவி வாழ்ந்திருக்கிறாள்.

அரசனால் சிறப்பிக்கப்பெற்றுத் தலைக்கோல் விருதும் ஆயிரத்தெட்டுக் கழஞ்சுப் பொன் மதிப்புடைய பசுமணி மாலையும் பெற்றிருக்கிறாள். இழி தொழில் புரிபவளா யிருப்பின் அரசன் மதிப்பானா?

கோவலன் தன்னைவிட்டுப் பிரிந்தபின், அவனைத் திரும்ப வருமாறு வேண்டி இருமுறை மடல் அனுப்பி யுள்ளாள்.

கோவலன் இறந்த செய்தியைக் கேட்டதும், தலையை மழித்து மொட்டையடித்துக் கொண்டு துறவு பூண்டாள்.

அரசவையிலும் விழாக் காலங்களிலும் ஆடல் பாடல் செய்யும் மாதவி குலம் வேறு - பரத்தையர் குலம் வேறு.

இவ்வாறாகச் சில காரணங்கள் கூறி மாதவியை நல்ல குலத்தவளாக உயர்த்துகின்றனர்.

மாதவி பரத்தையர் குலத்தவள் என்னும் கொள்கையினர் தம் கொள்கைக்கு அரணாக வலியுறுத்து பவை:-

'பிறப்பில் குன்றாப் பெருந்தோள் மடந்தை' என்பது புராணக் கதையை அடிப்படையாகக் கொண்டது. இந்திரன் அவையில் அகத்தியர் முன்னிலையில் உருப்பசி (ஊர்வசி) நடனம் ஆடுகையில், அவளும் இந்திரன் மகனாகிய சயந்தனும் ஒருவர்க்கொருவர் காமக் குறிப்போடு நோக்கிக் கொண்டனராம். அதனால், ஆடல் - பாடல் - இயங்கள் எல்லாம் நெறிதவறித் திரிந்தனவாம். இதனையறிந்த அகத்தியர் முனிவு கொண்டு மண்ணுலகில் சென்று பிறக்கும் படி உருப்பசிக்குக் கெடுமொழி (சாபம்) இட்டாராம். உருப்பசி மாதவி என்னும் பெயருடன் மண்ணுலகில் வந்து பிறந்தாளாம். அந்த மாதவியின் மரபில் இந்த மாதவி வந்தவளாம். அதனால் தான், 'பிறப்பில் குன்றாப் பெருந்தோள் மடந்தை' என்று இளங்கோ மாதவியைக் குறிப்பிட்டுள்ளாராம். இந்தப் புராணக் கதையை நம்ப முடியுமா? தெருக் கூத்துக் கதையின் படி நோக்கின் மாதவியின் நிலை நன்கு புரியும்.

மாதவியாக வந்து பிறந்த உருப்பசியின் தராதரம் யோக்கியதை என்ன? இந்திரன் அவையில் நடனம் ஆடியபோது, தன்னைப் பார்த்துக் கண்ணடித்த சயந்தனை நோக்கிப் பதிலுக்குக் கண்ணடித்தவள் தானே? விசுவாமித்திரர் போன்றோரின் தவத்தைக் கலைத்துக் காம வலையில் சிக்க வைக்க உருப்பசி, மேனகை போன்றோர் இந்திரனால் அனுப்பப்பட்டவர்கள்தாமே? இதனால், உருப்பசியும் மேனகையும் பொதுச் சொத்து என்பது புரிய

வரும். உருப்பசி மாதவியாகப் பிறந்த காலத்தில் அந்தக் குடும்பம் நன்றாயிருந்திருக்கலாம். பின்னர்ச் சித்திராபதி காலத்தில் இழிதொழிலில் இறங்கியிருக்கலாம். இதற்குரிய அகச்சான்று, இளங்கோவுக்குக் கண்ணகி வரலாறு கூறிய சாத்தனார் இயற்றிய மணிமேகலை என்னும் காப்பியத்தில் உள்ளது. அப்படியிருந்தும், இளங்கோவடிகள் 'பிறப்பில் குன்றாப் பெருந்தோள் மடந்தை' என்று கூறியிருப்பது வியப்பாயுள்ளது. இனி மணிமேகலையில் சென்று பார்க்கலாம்:

சித்திராபதி ஆடல் பாடலுக்காக மாதவியையும் மணி மேகலையையும் அழைத்து வரும்படி மாதவியின் தோழி யாகிய வயந்த மாலையை அனுப்பினாள். வயந்தமாலை மாதவியிடம் சென்று வந்த காரணத்தைக் கூறியதும் மாதவி சொல்கிறாள்: என் மகள் மணிமேகலை மாபெரும் பத்தினி. அவள் தவம் மேற்கொள்வதன்றிக் குலத்தொழிலாகிய பொருந்தாத தீய காமத்தீநெறியில் ஈடுபடமாட்டாள் என்றாள். பாடல்:

> **"மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை**
> **அருந்தவப் படுத்தல் அல்லது யாவதும்**
> **திருந்தாச் செய்கைத் தீத்தொழில் படாஅள்"** (2:55-57)

திருந்தாச் செய்கைத் தீத்தொழில் என்பது, சித்திராபதி குலத்தினர் பின்பற்றி வந்த பரத்தமைத் தொழிலாகும்.

மற்றும் ஓரிடம் வருமாறு:- சோழன் மனைவி இராச மாதேவி தன் மகன் உதயகுமரன் இறந்ததும் மணி மேகலையைச் சிறையில் அடைத்து விட்டாள். சிறை வீடு செய்யும்படி வேண்டுவதற்காக மணிமேகலையின் பாட்டி சித்திராபதி இராசமாதேவியை நோக்கிக் கெஞ்சுகிறாள். அரசியாரே! கோவலன் இறந்ததும் என் மகள் மாதவி பரத்தமைத் தொழில் புரியாமல் துறவு பூண்டுவிட்டாள்,

இது மிகவும் வருத்தமாயிருக்கிறது. என் பேர்த்தி மணிமேகலையை விடுதலை செய்து என்னோடு என் வீட்டிற்கு அனுப்புங்கள் என்று வேண்டினாள்.

**''பூவிலை ஈத்தவன் பொன்றினன் என்று**
**மாதவி மாதவர் பள்ளியுள் அடைந்ததும்''** (24:19, 20)
..........................................
**''நன்மனம் பிறந்த நாடகக் கணிகையை**
**என்மனைத் தருக என...''** (24:75, 76)

மேலுள்ள முதல் இரண்டு அடிகட்கும் உ.வே. சாமிநாத ஐயர் தரும் பொருளாவது:- 'மாதவி தனது பரத்தமைத் தொழிலை நீத்துத் தவச் சாலையை அடைந்ததும்' என்பதாகும். பூவிலை ஈத்தவன் கோவலன். பூவிலை என்றால் அற்றைப் பரிசம் (அன்றாடம் தரும் பொருள்). இந்த வழக்காறு சிலப்பதிகாரத்திலும் 'பூவிலை மடந்தையர்' (5:51) என வந்துள்ளது. புணர்ச்சிக்கு அன்றாடம் பொருள் வாங்குவர் பொது மகளிர் என்பது இதன் பொருள்.

சிலம்பிலும் இப்படி ஒரு செய்தி உள்ளது: சேரன் செங்குட்டுவனிடம் மறையவன் மாடலன், கோவலன், கண்ணகி, மாதவி, மணிமேகலை ஆகியோரின் நிலை பற்றிக் கூறுகிறான்: மாதவி தன் தாய் சித்திராபதியிடம், மணி மேகலையைக் கணிகையர் கோலம் பூணச்செய்து மிக்க துன்பம் தரும் இழி தொழிலான பரத்தமைத் தொழிலில் விடாதே - யான் இழி தொழிலில் ஈடுபடாமல் நல்ல நெறியைப் பின்பற்றுவேன் என்று கூறினாளாம் - என்று மாடலன் கூறினான்.

**''மற்றது கேட்டு மாதவி மடந்தை**
**நற்றாய் தனக்கு, நல்திறம் படர்கேன்**
**மணிமே கலையை வான்துயர் உறுக்கும்**
**கணிகையர் கோலம் காணாது ஒழிக''** (27:103-106)

என்பது பாடல் பகுதி. மாதவி தான் 'நல்திறம் படர்கேன்' எனக் கூறியிருப்பது எண்ணத்தக்கது. அதாவது - குலத் தொழில் செய்யேன் என்றாள். மணிமேகலையையும் அத் தொழிலுக்கு விடக்கூடாதென அறிவுறுத்தியுள்ளாள்.

மணிமேகலையிலிருந்து இன்னும் ஒரு சான்று பார்க்க லாமா? கோவலனின் மறு பதிப்புபோல் மணிமேகலையில் சாதுவன் என்பவன் குறிப்பிடப்பட்டுள்ளான். அவன் வரலாறாவது:- சாதுவன் என்னும் வணிகன் பெருந்தன்மை யின்றி, தன் மனைவியாகிய ஆதிரையை விட்டுப் பிரிந்து, கணிகை ஒருத்தியைச் சார்ந்து அவள் தந்த உணவை உண்டு அவளுக்கு நிரம்பப் பொருள் ஈந்ததாலும் வட்டும் சூதும் ஆடியதாலும், தன் செல்வம் முழுவதையும் இழந்துவிடவே, அந்தக் கணிகை, இவன் பொருள் இல்லாதவனாகி விட்டான் என இவனை விரட்டிவிட்டு, பொருளீயும் வேறொருவனை மடக்கிக் கொண்டாள் - என்பது அவன் வரலாறு.

> **"ஆதிரை கணவன் ஆயிழை கேளாய்**
> **சாதுவன் என்போன் தகவில னாகி**
> **அணியிழை தன்னை அகன்றனன் போகிக்**
> **கணிகை ஒருத்தி கைத்துஊண் நல்க**
> **வட்டினும் சூதினும் வான்பொருள் வழங்கிக்**
> **கெட்ட பொருளின் கிளைகேடு உறுதலின்**
> **பேணிய கணிகையும் பிறர்நலம் காட்டிக்**
> **காணம் இலியெனக் கையுதிர்க் கோடலும்"** (16:3-10)

என்பது மணிமேகலைப் பாடல் பகுதி. இதைக் கொண்டு கணிகையர் இயல்பு புரிய வரும். மற்றும், சிலப்பதிகாரத்தில் உள்ள

> **"சலம்புணர் கொள்கைச் சலதியோ டாடிக்**
> **குலம்தரு வான்பொருள் குன்றம் தொலைந்த**
> **இலம்பாடு நாணுத் தரும்"** (9:69-71)

"குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபின் கோவலன்" (5:200, 201)

"நெறியின் நீங்கியோர் நீர்மையே னாகி
நறுமலர் மேனி நடுங்குதுயர் எய்த
அறியாத் தேயத்து ஆரிடை யுழந்து
சிறுமை யுற்றேன்"
(இது கோவலன் கூற்று - 14:17-20)

"வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு
குறுமொழி கோட்டி நெடுநகை புக்குப்
பொச்சாப் புண்டு பொருள் உரையாளர்
நச்சுக் கொன்றேற்கும் நன்னெறி உண்டோ"
(16:63-66)

என்னும் பகுதிகள் மீண்டும் எண்ணத் தக்கன.

உலகியலில், நல்ல குடும்பத்தில் பிறந்த கணவனும் மனைவியும் உரையாடிக் கொண்டிருக்கும்பொழுது, கணவன் மனைவியை நோக்கி, நான் ஓர் அழகான பெண்ணைப் பார்த்தேன் - அவளோடு காதல் தொடர்பு வைத்துக்கொள்ளப்போகிறேன் என விளையாட்டாகச் சொன்னாலுங்கூட, நானும் ஓர் அழகான ஆண்மகனைப் பார்த்தேன் - அவனோடு காதல் தொடர்பு வைத்துக்கொள்ளப் போகிறேன் என்று மனைவி விளையாட்டாகக் கூடச் சொல்வதில்லை. இன்னும் இந்த ஒருதலை நாகரிகம் நம் நாட்டில் உள்ளது. ஆனால், கானல் வரிப் பாடல்களில் நடந்திருப்பது என்ன? வேறொரு பெண்மேல் காதல் உடையவன் போன்ற குறிப்பமைத்துக் கோவலன் விளையாட்டாகப் பாடினான். மாதவியும் வேறோர் ஆடவன்மேல் காதல் உடையவள் போன்ற குறிப்பமைத்துப் பதிலுக்குப் பாடினாள். ஆனால், நற்குடிப் பெண்ணாயின் இவ்வாறு பாடியிருக்கமாட்டாள். கணிகையர் குலத்தில் பிறந்தவளுக்கு எந்தக் கணக்கும் கிடையாது;

எப்படி வேண்டுமானாலும் பாடுவாள். இந்தக் குறிப்பும் ஈண்டு கருதத்தக்கது.

மேலும் ஒரு குறிப்பு சிலப்பதிகாரத்திலேயே உள்ளது. அதாவது - கோவலன் காட்டு வழியில் ஒரு நாள் காலைக் கடன் கழிப்பதற்காக ஒரு நீர் நிலையை அடைந்தான். அங்கே, மாதவி தந்த மடலை எடுத்துக்கொண்டு கோசிகன் என்பவன் கோவலனிடம் கொடுத்தான். மடலைக் கோவலன் படித்துப் பார்த்து மாதவி 'தன் தீது இலள்' (13: 94) என்று எண்ணித் தளர்ச்சி நீங்கினானாம். தன் தீது இலள் என்பதற்கு, மாதவி மனமும் உடம்பும் துன்பம் இன்றி நலமாயிருக்கிறாள் என்று பொருள் செய்தல் பொருந்தாது; ஏனெனில், இப்போது துன்பத்துடனேயே மடல் அனுப்பியுள்ளாள். மற்றும் இதற்கு, மாதவிமீது ஒரு குற்றமும் இல்லை என்று பொருள் செய்தலும் பொருந்தாது; ஏனெனில், மாதவியோடு இருந்த காலத்தில் செல்வம் தொலைந்து விட்டது - அவளும் மற்றொருவன் மீது காதல் உடையவளாகப் பாடினாள் - என்ற காரணத்தினால்தானே பிரிந்தான் - எனவே, அவள் குற்றம் உடையவள் என்பதே கோவலன் கருத்தாக இருக்க முடியும். அங்ஙனம் எனில், 'தன் தீது இலள்' என்பதற்கு உரிய உண்மைப் பொருள் யாது?

கைக்குக் கை மாறும் கணிகையர் குலத்தில் பிறந்த மாதவி, நான் பிரிந்த பிறகும், கானல் வரியில் பாடியபடி வேறொருவனை விரும்பாமல் - நம்மை மறவாது - நம்மை விடாமல் நமக்கு மடல் அனுப்பியதிலிருந்து, அவள் தீய செயல் இல்லாது - கற்புடையவளாகவே உள்ளாள் எனக் கோவலன் எண்ணியதாகப் பொருள் கொள்ளல் வேண்டும். இதனாலும், மாதவி கணிகையர் வகுப்பைச் சேர்ந்தவள் என்ற குறிப்பு கிடைக்கலாம்.

மாதவி தன் தீதிலள் என்று கூறிய கோவலன் தொடர்ந்து இது 'என்தீது' (13:95) என்று கூறினானாம். அதாவது, மாதவி மற்றொருவன்மேல் காதல் கொண்டிருப்பதாக எண்ணி அவளைப் பிரிந்தது என்னுடைய தவறு என்று கூறினானாம். இவனது மனை வாழ்க்கையை மண் தோண்டிப் புதைத்த மாதவியின்மேல் குற்றம் இல்லை - இது என்னுடைய குற்றமே எனக் கோவலன் எண்ணியது, அவனுடைய பழைய மட்ட அறிவை (பெண் ருசிப் புத்தியைக்) குறிப்பாகக் காட்டுகிறது.

மாதவி கற்புடையவளானாலும், அவள் பிறந்த தாய்க்குலம் - அதாவது - தாய் சித்திராபதியின் குலம் பரத்தையர் குலம் என்பதற்கு மற்றும் ஒரு சான்று மணிமேகலையில் உள்ளது. மணிமேகலையைச் சிறையிலிருந்து விடுதலை செய்யுமாறு சித்திராபதி சோழன் மனைவி இராசமாதேவியிடம் வேண்டிய பொழுது, அரசமாதேவி பின்வருமாறு கூறினாள்:

> **"கள்ளும் பொய்யும் காமமும் கொலையும்**
> **உள்ளக் களவும் என்று உரவோர் துறந்தமை**
> **தலைமையாக் கொண்டநின் தலைமையில் வாழ்க்கை**
> **புலைமையென்று அஞ்சிப் போந்த பூங்கொடி**
> **நின்னொடு போந்து நின்மனைப் புகுதாள்"** (24:77-81)

என்பது பாடல் பகுதி. சித்திராபதியே! பெரியோர்கள் துறந்த கள், பொய், காமம் முதலியவற்றைத் தலைமையாகக் கொண்டுள்ள - தலைமையிலலாத - உன் இழிதொழில் வாழ்க்கைக்கு அஞ்சி மணிமேகலை இங்கு வரநேர்ந்தது. இனி உன்னுடன் வாராள் - என்பது கருத்து.

'தலைமையில் வாழ்க்கை' என்பதற்கு, கடையான பரத்தமைத் தொழில் என உ. வே. சா. பொருள் எழுதியுள்ளார். இதற்கு ஒப்பச் சிலம்பிலும் ஒரு சான்று

உள்ளது. கோவலன் வழியில் ஒருநாள் நீர் அருந்த ஒரு பொய்கையை அடைந்தபோது, மயக்கும் கானுறை தெய்வம் ஒன்று வயந்தமாலை வடிவுடன் வந்து கோவலனிடம் பின்வருமாறு கூறிற்று:

ஐயனே! நீங்கள் என் தலைவி மாதவியைப் பிரிந்ததும், கடிதம் கொண்டு வந்த நான் உங்களைத் திறமையாக அழைத்து வரவில்லை என்று என்மேல் சினந்து வெறுப் படைந்து, மேலோராயினும் நூலோராயினும் தீயது என்று ஒதுக்கும் கணிகையர் வாழ்க்கை இழிந்தது - கடைப் பட்டது - அதனால்தான் கோவலன் நம்மை ஒதுக்கி விட்டான் என்று கூறி என்னையும் துரத்தி விட்டாள். அதனால் உன்னிடம் வந்துள்ளேன் - என்று தெய்வம் கூறி மயக்க முயன்றது. கோவலன் கொற்றவை மந்திரத்தை உருவேற்றி அந்தப் போலி வயந்தமாலை வடிவில் வந்த தெய்வத்தை விரட்டி விட்டான். இங்கே, சிலம்பில், மாதவி கூறியதாகச் சொல்லப்பட்டனவற்றுள் உள்ள

**"மேலோ ராயினும் நூலோ ராயினும்**
**பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும்**
**பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியும்**
**கணிகையர் வாழ்க்கை கடையே போன்ம்"**

(11:180-183)

என்னும் நமக்கு வேண்டிய பாடல் பகுதியை மட்டும் எடுத்துக் கொள்வோம் 'கணிகையர் வாழ்க்கை கடையே' (கடையான பரத்தமைத் தொழில்) என மாதவி சொன்னதாகக் கானுறை தெய்வம் கூறிற்று. கானுறை தெய்வம் கூறியதாகத் தெரிவித்திருப்பவர்யார்? - அவர் இளங்கோவடிகளே. இதனாலும் மாதவியின் குலம் அறிய வரும்.

தேவடியார் என்பது தெய்வத்திற்கு அடியவர் - தெய்வ பூசனைக்கு உரியவர் என்னும் பொருளைக்

குறிக்கும். இப்பெயர் நாளடைவில் பரத்தமைத் தொழில் செய்பவரைக் குறிக்கலாயிற்று. எனக்குத் தெரிந்த ஓர் ஊர்க்கோயிலில் பூசனை நடைபெறும்போது நாள் தோறும் தேவடியார் பெண் ஒருவர் வந்து பாடுவார். விழாக் காலங்களில் தேவடியார் பெண் ஒருவர், ஒப்பனை செய்யப் பெற்ற கடவுள் திருமேனி முன் ஒருவகை இசைக் கருவியுடன் நடனம் ஆடுவார். இது இப்போது நடை பெறவில்லை. (ஊர்ப்பெயர் தேவையில்லை.)

அந்த ஊரில் கோயிலில் பாடுபவரும் ஆடுபவரும் இருக்கும் தெருவிற்குத் தேவடியார் தெரு என்பது பெயர். அங்கே நடந்தது இந்தத் தொழிலே. இப்போது இல்லை. பரத்தமைத் தொழில் செய்து வந்த குடும்பங்களுள் பெரும்பாலான குடும்பத்தினர், இப்போது திருந்தி நல்ல கற்புடைய குடும்பத்தினராக மாறியுள்ளனர். மாதவியின் மாற்றமும் இது போன்றதே.

யான் (சு.ச.) 'தேடக் கிடைக்காத செல்வம்' என்னும் பெயரில் ஒரு கதை எழுதினேன். அது அச்சிட்டு வெளி வந்துள்ளது. கதைச் சுருக்கம்:- சித்திராதேவி என்னும் பரத்தை தன் மகள் கோதையைப் பரத்தமைத் தொழிலில் ஈடுபட வற்புறுத்தினாள். கோதை உடன்படவில்லை. தாயின் தொல்லை தாங்க முடியாமையால், முதலில் உடலுறவு கொள்பவரையே கணவராக வரித்துக் கொள்வது என்ற முடிவுடன் ஈடுபட்டாள். கோதையை முதலில் சுவைத்தவர் சேதுநாதன் என்னும் செல்வர். கோதை கருவுற்றாள். கோதையை மணந்து கொள்வதாகச் சொல்லியிருந்த சேதுநாதன் அவளை மணக்காமல் ஏமாற்றி விட்டார். கோதைக்குக் குழந்தை பிறந்தது. குழந்தையின் பெயர் கலா. மீண்டும் பரத்தமைத் தொழில் செய்யுமாறு கோதையைத் தாய் வற்புறுத்தினாள். அதற்கு உடன்படாத கோதை, குழந்தை கலாவை விட்டுவிட்டுத்

தற்கொலை செய்து கொண்டாள். சித்திராதேவி கலாவை அருமை பெருமையுடன் வளர்த்து வந்தாள். கலா பெரியவள் ஆனதும், பரத்தமைத் தொழிலில் ஈடுபடுத்தப் பாட்டி எவ்வளவோ முயன்றாள் - இறுதியாகக் கலா ஈடுபடாமல் ஒருவரை மணஞ்செய்து கொண்டு கற்புடைய பெண்ணாக மனையறம் நடத்தினாள்.

இது யான் எழுதிய கதையின் சுருக்கம். எனது கதையில் வரும் கோதையாகவும் கலாவாகவும் மாதவி நடந்து கொண்டாள். எனவே, மாதவிமேல் குற்றம் இல்லையெனினும், அவள் குலம் பரத்தமைக் குலமே.

மாதவி கடுமையாகத் துறவு பூண்டதற்கு முதன்மையான காரணமாகக் கோவலனும் கண்ணகியும் வேறு சிலரும் முடிவுற்றமை இருக்கலாம். நம்மால்தானே அவர்களின் குடும்ப வாழ்க்கை கெட்டது - வழி நடந்து கடந்து இடர்ப் பட்டு மதுரை அடைந்தனர் - அங்கே நிகழ்ந்த செயலால், கோவலன், பாண்டியன், பாண்டியன்தேவி, கண்ணகி, பொற்கொல்லர் பலர், கோவலன் தாய், கண்ணகியின் தாய் ஆகியோர் இறந்தனர் - மதுரை எரியுண்டது. இவற்றிற் கெல்லாம் நாம்தானே காரணம் என்று மாதவி ஆழ உணர்ந்து எண்ணியதால் கடுமையாகத் துறவு பூண்டாள் - தன் மகளையும் இழிதொழிலில் ஈடுபடுத்தாமல் இளமையிலேயே துறவு பூணச் செய்தாள்.

மற்றும், கோவலன் இறந்த பின்னர், கணிகையர் குலத்தவளாகிய மாதவி, தரக்குறைவான ஆடவர் சிலரின் கழுகுக் கண்களிலிருந்து தப்புவதற்கு உதவும் படைக்கலமு மாகும் அவள் கொண்ட துறவு. அவளது மன உறுதி மெச்சத்தக்கது.

**மாதவியின் மதம்**

இந்தக் காலத்தில் உறவினர்கட்குள்ளேயே, ஒரு குடும்பத்தினர் சைவராகவும் மற்றொரு குடும்பத்தினர்

வைணவராகவும் இருக்கக் காண்கிறோம். உறவினர் கட்குள்ளேயே இப்படியெனில், ஒரு குலத்தாருக்குள்ளேயே இப்படி இருப்பது வியப்பில்லை. வேளாளராகிய நம்மாழ்வார் வைணவர்; வேளாளராகிய நாவுக்கரசர் சைவர். இங்ஙன மெனில், வேறு வேறு குலத்தாரிடையே சமய வேறுபாடு இருப்பதும் வியப்பில்லை, சமணமும் புத்தமும் பேரரசு செலுத்திய அந்தக்காலத்தில், உறவினர்கட்குள்ளேயோ - ஒரு குலத்தாருக்குள்ளேயோ - வெவ்வேறு குலத்தாருக் குள்ளேயே சமணமும் புத்தமும் தனித்தனியாகப் பின் பற்றப்பட்டன. கோவலனும் கண்ணகியும் சமணத் துறவி கவுந்தியுடன் சென்று, சமணச் சாரணர்களையெல்லாம் வழிபட்டிருக்கின்றனர் - சிலம்பில் இது. மணிமேகலையிலோ, மாதவியும் மணிமேகலையும் புத்தத்தைச் சார்ந்த துறவிகளாகி, புத்தமத ஆசானாகிய அறவணரிடம் அறவுரை கேட்டதாகப் பரக்க வெளிப்படையாய்ப் பேசப் பட்டுள்ளது. எனவே, மாதவி பின்பற்றிய மதம் புத்தம் என்பது போதரும்.

# 23. பார்ப்பன உறுப்பினர்களின் பங்கு

**பார்ப்பனர்**

சிலம்பில், தேவந்தி என்னும் பார்ப்பனப் பெண் ஒருத்தியும், மாங்காட்டு மறையவன், கோசிகன், மாடலன் என்னும் பார்ப்பன ஆடவர் மூவரும் ஆகப் பார்ப்பன உறுப்பினர்கள் நால்வர் இடம் பெற்றுள்ளனர்.

இந்த அமைப்பைக் கண்ணுற்ற ஒருவர் தம் சொற் பொழிவில், இளங்கோ ஆரியத்திற்கு (பார்ப்பனர்கட்கு) நிரம்பத் தம் நூலில் இடம் கொடுத்துள்ளார் என்று சாடினார், இவருக்குப் பதில் தரவேண்டும்.

பிராமணர் என்ற குலத்தினர், தங்களை யாராயினும் பார்ப்பான் – பார்ப்பனர் என்று குறிப்பிட்டால், வருத்தமும் சினமும் கொள்கின்றனர். பார்ப்பனீயத்தைப் பிடிக்காத வர்கள் பார்ப்பான் என்கின்றனர். ஆரிய அடிமைகள் பிராமணர் என்கின்றனர். நடுநிலைமையாளர் பார்ப்பான் – பிராமணர் என்ற இரண்டையுமே இடத்திற்கு ஏற்றவாறு மாற்றி மாற்றிப் பயன்படுத்துகின்றனர் – இரண்டுங் கெட்டான் நிலையுடைய இவர்கள் காரியவாதிகள் – பிழைக்கத் தெரிந்தவர்கள்.

தொல்காப்பியம் உட்பட்ட கழக (சங்க) நூல்களில் எழுபத்தைந்து இடங்கட்குமேல், பார்ப்பனர், பார்ப்பார், பார்ப்பான், பார்ப்பனி என்னும் சொற்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கலந்து ஆளப்பட்டுள்ளன. இவர்கள் அனைவருமே ஆரியப் பார்ப்பனர் அல்லர்; தமிழகத்தில் பண்டைக் காலத்திலேயே தமிழ்ப் பார்ப்பனர்கள் – தமிழ்

அந்தணர்கள் உண்டு. இதற்கு ஆணித் தரமான சான்று பார்க்கலாமா?

தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - குற்றியலுகரப் புணரியலில் "உயிரும் புள்ளியும்" என்று தொடங்கும் (77-ஆம்) நூற்பாவின் இடையில் உள்ள

**"உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்**
**ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும்"** (77:4,5)

என்னும் பகுதிக்குப் பார்ப்பனராகிய நச்சினார்க்கினியர் வரைந்துள்ள உரைப்பகுதி வருமாறு:

"இனிக் கரும்பார்ப்பான், கரும் பார்ப்பனி, கரும் பார்ப்பார், கருங் குதிரை, கருங் குதிரைகள் எனவரும் இவற்றுள் கரியனாகிய பார்ப்பான், கரியளாகிய பார்ப்பனி, கரியராகிய பார்ப்பார், கரியதாகிய குதிரை, கரியனவாகிய குதிரைகள் என ஐம்பாலினையும் உணர்த்தும் பண்புகொள் பெயர் தொக்கவாறு காண்க" - என்பது உரைப்பகுதி. இங்கே கருமை என்னும் அடைமொழி கொடுத்துக் குறிக்கப் பட்டிருப்பவர்கள் தமிழ்நாட்டு அந்தணராகிய பார்ப்பனர். சைவத் திருக்கோயில்களிலே குருக்கள் என்னும் பெயருடன் பூசனை புரிபவர்கள், ஆதி சைவப் பிராமணர்கள் என்று அழைக்கப்படுவர்.

தமிழ்ப் பார்ப்பனர்கள் உண்டு என்பதற்குச் சிலப்பதிகாரத்திலேயே கட்டுரை காதையில் அகச்சான்று உள்ளது:

**"வண்தமிழ் மறையோர்க்கு வானுறை கொடுத்த**
**திண்திறல் நெடுவேல் சேரலன் காண்க"** (23:63,64)

என்பது பாடல் பகுதி. 'தமிழ் மறையோன்" என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது.

சைவ சமயக் குரவர் நால்வருள், சுந்தரர் கோயில் பூசனை புரியும் ஆதிசைவப் பார்ப்பனர் என்பது அனைவ ராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மையான முடிபாகும். நாவுக்கரசர் வேளாளர். மற்ற சம்பந்தரும் மாணிக்க வாசகரும் தமிழ் அந்தணர் ஆவர். பெரிய புராணத்தில் சம்பந்தரைப் பற்றிக் கூறுமிடத்தில் என்னதான் வேத வேள்விகள் இணைக்கப்பட்டிருப்பினும் சம்பந்தர் தமிழ் அந்தணரே; மாணிக்கவாசகரும் அத்தகையோரே. ஆரியர் வழிவந்த பார்ப்பனர்களுள் யாராவது, சம்பந்தர் - ஞான சம்பந்தர் - மாணிக்கவாசகர் - திருவாதவூரர் என்னும் பெயர்களை வைத்துக் கொண்டுள்ளனரா? எனக்குத் தெரிந்தவரைக்கும் இல்லை. ஒருவேளை எங்கேயாவது குறைந்த அளவில் - ஒரு சிலர் மட்டுமே இருக்கலாம். குருக்கள் என்னும் ஆதி சைவத் தமிழ் அந்தணர் வகுப்பைச் சேர்ந்தவர்கள் சம்பந்தன் என்னும் பெயரை வைத்துக் கொள்வதுண்டு. பார்ப்பனர்கள் திருநாவுக்கரசர் என்னும் பெயரின் பக்கம் திரும்பியே பார்க்க மாட்டார்கள். குருக்கள் மரபினராகிய அப்பூதி அடிகளே, தம் வீட்டுப் பொருள்கள் பிள்ளைகள், தண்ணீர்ப் பந்தல் முதலிய உயர்திணை - அஃறிணையாம் அனைத்துப் பொருள்கட்கும் திருநாவுக்கரசர் என்னும் பெயர் சூட்டினார்.

மற்றும், பண்டு, பார்ப்பனர்கள் தமிழர்க்குத் தோழர் களாயிருந்து செயலாற்றியுள்ளனர் என்றும் தெரிகிறது.

தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியலில், பார்ப்பனத் தோழர்க்கு உரிய கிளவிகள் கூறப்பட்டுள்ளன.

**"காமநிலை உரைத்தலும் தேர்நிலை உரைத்தலும்**
**கிழவோன் குறிப்பினை எடுத்துக் கூறலும்**
**ஆவொடு பட்ட நிமித்தம் கூறலும்**
**செலவுறு கிளவியும் செலவழுங்கு கிளவியும்**
**அன்னவை பிறவும் பார்ப்பார்க்கு உரிய"** (36)

என்பது நூற்பா. இதே கற்பியலில், தலைவனிடமிருந்து தலைவியின் ஊடல் தீர்க்கத் தூதாகப்போகும் வாயில்களின் பட்டியல் தரப்பட்டுள்ளது.

**"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்**
**பாணன் பாட்டி இளையர் விருந்தினர்**
**கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்**
**யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப"** (52)

என்பது நூற்பா. பரவை நாச்சியாரின் ஊடலை நீக்கச் சுந்தரரிடமிருந்து ஓர் அந்தணர் (சிவன் என்கின்றனர்) ஒரு முறைக்கு இருமுறை தூது போனதாகச் செல்லப்படும் வரலாறு ஈண்டு எண்ணத்தக்கது. (பெரியபுராணம்)

மற்றும் 'நம்பி அகப்பொருள்' என்னும் நூலின் அகத்திணையியல் என்னும் பகுதியில் உள்ள ஒரு நூற்பாவும் அதன் பழைய உரையும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கன. அதாவது:-

**"இளமையும் யாக்கையும் வளமையும் ஏனவும்**
**நிலையாத் தன்மை நிலையெடுத் துரைத்தலும்**
**செலவழுங்கு வித்தலும் செலவுடன் படுத்தலும்**
**பிறவும் எல்லாம் மறையோர்க்கு உரிய"** (100)

இதன் பொருள்: இருவகைப் பாங்கரில் பார்ப்பனப் பாங்கர்க்கு உரியன எல்லாம் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று. இளமை முதலாகச் சொல்லப்பட்டனவெல்லாம் பார்ப்பனப் பாங்கர்க்கு உரியனவாம் என்றவாறு. பிறவும் என்றதனால் வாயில் வேண்டல் முதலாயினவும் கொள்க. - என்பன நூற்பாவும் உரையுமாகும்.

சிலப்பதிகாரத்தில் கண்ணகிக்குத் தேவந்தி என்னும் பார்ப்பனி தோழியாயிருந்தாள். கோசிகன் என்னும் அந்தணன் மாதவிக்கு அறிமுகமாயிருந்ததால், கோவலனைப் பிரிந்து வருந்திக்கொண்டிருந்த மாதவியைக் காணச்

சென்றான். அவன் வாயிலாக மாதவி கோவலனுக்கு மடல் கொடுத்தனுப்பினாள். எனவே, சிலம்பில் இடம்பெற்றுள்ள பார்ப்பனர்கள் அனைவருமே ஆரியப் பார்ப்பனர் எனச் சாடலாகாது.

ஆரியப் பார்ப்பனரும் தமிழ்ப் பார்ப்பனரும் பின் பற்றும் முறைகளுள் சில ஒத்திருக்கலாம். அவர்களைப் பார்த்து இவர்களோ - அல்லது - இவர்களைப் பார்த்து அவர்களோ சிலமுறைகளைப் பின்பற்றியிருக்கலாம். இரு சாராரும் மறையவர் என்னும் உயரிய பெயருக்கு உரியராவர். சிலம்பில் இடம் பெற்றிருப்பவருள் ஒவ்வொருவராக இனிக் காணலாம்.

### 1. தேவந்தி

தேவந்தியைப் பற்றி வேறு தலைப்புகளில் சில சிறு குறிப்புகள் இருப்பினும், இங்கே ஒரு சிறிது விரிவாகக் காண்பாம். தேவந்தி கண்ணகியின் பார்ப்பனத்தோழி.

மாலதி என்னும் பார்ப்பனி தன் மாற்றாள் குழந்தைக்குப் பால் புகட்டுகையில் பால் விக்கிக் குழந்தை இறந்துவிட்டது. குழந்தையை உயிர்ப்பித்துக் தரும்படி மாலதி பாசண்டச் சாத்தன் கோயிலில் பாடு கிடந்தாள். இந்த நேரத்தில் இடாகினி என்னும் பேய் குழந்தைப் பிணத்தை விழுங்கி விட்டது. மாலதியின் துயர் நீக்கப் பாசண்டச்சாத்தன் அக் குழந்தை வடிவாக வந்து கிடந்தான். மாலதி குழந்தையை மாற்றாளிடம் ஒப்படைத்தாள். குழந்தை பெரியவனானான்; தேவந்தியை மணந்து கொண்டான். எட்டு ஆண்டுகள் அவளோடு வாழ்ந்து மறைந்து விட்டான். கைம்பெண்ணான தேவந்தி பாசண்டச் சாத்தன் கோயிலைச் சுற்றிக்கொண்டு கிடந்தாள். இது தேவந்தியின் வரலாறு.

பாசண்டச் சாத்தனாகிய கணவனும் தேவந்தியும் உடல் உறவு கொள்ளவில்லை என்பதாக ஆராய்ச்சியாளர்

சிலர் 'சோதிடம்' கூறுகின்றனர். தெய்வம் மக்கள் உருவில் வந்து தேவந்தியை மணந்து கொண்டது என்பதை நம்ப முடிந்தால்தான், இருவரும் உடல் உறவு கொள்ளவில்லை என்பதையும் நம்ப முடியும். ஒருவகைக் காப்பியக் கற்பனையே இது.

தேவந்தி ஒருநாள் மாலை வந்து, நீ கணவனை அடைவாயாக என்று வாழ்த்தினாள். கண்ணகி பின்னால் நடக்க இருப்பதைக் குறிப்பாக அறிவிப்பது போலத் தான் கண்ட தீய கனவைத் தேவந்தியிடம் கூறினாள். தேவந்தி கண்ணகியை நோக்கி, இது பழைய ஊழ்வினைப்பயன் - சோம குண்டம், சூரியகுண்டம் என்னும் இரு குளங்களிலும் குளித்துக் காமவேளின் கோயில் சென்று வணங்கினால் கணவனை மீண்டும் பெறலாம் என்று சூழ்வுரை (ஆலோசனை) கூறினாள். கேட்ட கண்ணகி, குளங்களில் முழுகிக் கடவுளைத் தொழுதல் எனக்குத் தகாது என மறுத்துரைத்து விட்டாள்.

பின்னாளில் கோவலன் கொலையுண்ட செய்தியறிந்து மதுரைக்குச் சென்றாள் தேவந்தி. பின் அங்கிருந்து, ஐயையுடன் சேரநாட்டில் உள்ள கண்ணகி கோயிலுக்குச் சென்று அரற்றினாள். தன்மேல் கடவுள் (சாமி) ஏறிப் பல கூறினாள். கண்ணகியின் தாயும் கோவலன் தாயும் பிள்ளைகளின் இறப்பைப் பொறாது தாங்கள் இறந்து போனதையும், இருவரின் தந்தைமார்களும் மாதவியும் துறவு பூண்டதையும் தெய்வமாக உள்ள கண்ணகிக்குக் கூறினாள். மணிமேகலையின் துறவு பற்றிச் சேரனிடம் விவரித்தாள்- கண்ணகி முன், காவல் பெண்டு, அடித்தோழி என்னும் இருவருடன் சேர்ந்து தேவந்தி மாறி மாறிப் பாடினாள். தன்மேல் தெய்வம் ஏறியபின், அங்கிருந்த சிறுமியர் மூவர்மீது தண்ணீர் தெளிக்கச் செய்து அவர்களின் முன் பிறப்பை அறியச் செய்தாள். சிறுமியர்

மூவருள் ஒருத்தி கண்ணகியின் தாய் - மற்றொருத்தி கோவலனின் தாய் - மூன்றாமவள் மாதரி. இம் மூவரும் இறந்ததும் இச்சிறுமியராக மறு பிறவி எடுத்து ஆங்கு வந்திருந்தனர். பின்னர்க் கண்ணகி தேவந்தியின் மீது ஏறி, இளங்கோவின் துறவு பற்றிக் கூறச்செய்தாள்.

**பூசாரினி**

இத்தகைய தேவந்தி இறுதியில் கண்ணகி கோயிலின் பூசாரினியாக அமர்த்தப் பட்டாளாம்:

**"பத்தினிக் கோட்டப் படிப்புறம் வகுத்து**
**நித்தல் விழாவணி நிகழ்க என்று ஏவிப்**
**பூவும் புகையும் மேவிய விரையும்**
**தேவந்திகையைச் செய்க என்றருளி"** (30:151-154)

என்பது பாடல் பகுதி. செங்குட்டுவன், கோயில் செலவிற்கு வேண்டிய நிலம் கொடுத்து, நாள்தோறும் நடைபெற வேண்டிய விழா அணிப் பூசனைக்கு ஏற்பாடு செய்தான்; பின்னர், நறுமணச் சாந்திடுதல், மலர் வழிபாடு (அர்ச்சனை செய்தல்), நறும்புகை எடுத்தல் (தூபம்) முதலிய அன்றாடப் பூசனையைச் செய்யும் பூசாரினியாகத் தேவந்தியை அமர்த்தினானாம்.

கண்ணகிக் கோட்டம் பெண்தெய்வக் கோயில் ஆதலாலும், தேவந்தி கண்ணகிக்குத் தோழியாய் இருந்ததனாலும், பாசண்டச் சாத்தன் கோயிலில் இருந்து பழக்கப்பட்டவள் ஆதலாலும், குடும்பப் பொறுப்போ வேறுவேலையோ இல்லாத கைம்பெண் ஆதலாலும், பார்ப்பனி யாதலாலும், பலமுறை தன்மேல் கடவுள் ஏறிச் சாமியாடியவள் ஆதலாலும், இவளைக் கண்ணகியின் கோயிலுக்குப் பூசாரினியாகச் சேரன் செங்குட்டுவன் அமர்த்தியது பொருத்தமான பேரறிவுச் செயலேயாகும். பெண் தெய்வக் கோயிலுக்கும் ஆடவரே பூசனை செய்யும்

இந்நாட்டில், தேவந்தியைப் பூசாரிணியாக்கியது புதுமைப் புரட்சியாகும்.

## 2. மாங்காட்டு மறையவன்

மாங்காட்டு மறையவனுக்குச் சிலம்பில் பெயர் தெரிவிக்கவில்லை. ஏதாவது ஒரு பெயர் இல்லாமலா போகும்? பெயர் வேண்டா மறையவன் போலும் இவன். சேரநாட்டுக் குடகுமலைப் பகுதியில் உள்ள மாங்காடு என்னும் ஊரினனாகிய இவன், கோவூர் கிழார், ஆலத்தூர் கிழார் முதலிய பெயர்களைப் போல ஊர்ப்பெயராலேயே குறிப்பிடப்பட்டுள்ளான். உறையூர் இளம்பொன் வணிகனார் என்பது போல் குலப்பெயராலும் குறிப்பிடப்பட்டுள்ளான். இதனால், அந்தக் காலத்தில், ஊர்ப் பெயராலும் குலப்பெயராலும், இரண்டன் பெயராலும் ஒருவரின் பெயர் குறிப்பிடப்பட்டதும் உண்டென அறியலாம். இவன் வைணவ அந்தணன்; ஊர் சுற்றிப் பார்க்கும் ஆர்வம் உடையவன்.

கவுந்தி, கோவலன், கண்ணகி ஆகிய மூவரும் உறையூரைக் கடந்து செல்லும் வழியில் ஓர் இளமரக்காவில் தங்கி இளைப்பாறிக் கொண்டிருந்தனர். அப்போது, பாண்டியனையும் அவன் நாட்டையும் புகழ்ந்து வாழ்த்திக் கொண்டு மாங்காட்டு மறையவன் அங்கு வந்தான். அவனைக் கண்டு, கோவலன், நின் ஊர்-பேர் விவரம் சொல்லுக என்று வினவினான். அதற்கு மறையவன், நான் குடகுமலைப் பகுதியில் உள்ள மாங்காடு என்னும் ஊரினன். திருவரங்கத்தில் அறிதுயில் கொள்ளும் அரங்கனையும், திருவேங்கடத்து எழுந்தருளியுள்ள வேங்கடத்தானையும் காட்டுக என்று என் கண்கள் வற்புறுத்தியதால் புறப்பட்டு ஊர் சுற்றி வருகிறேன் என்றான். மதுரைக்குச் செல்லும் வழி அறிவிக்கும்படிக் கோவலன் வினவப் பின்வருமாறு மறையவன் அறிவிக்கலானான்;

நீங்கள், முதுவேனில் காலத்தில் பயணம் தொடங்கியமை மிகவும் இரங்கத் தக்கது. நீங்கள் இவ்வழியே காடு மலை கடந்து செல்லின், சிவனது சூலம் போல் மூன்று வழிகள் பிரிந்து காணப்படும். மூன்றனுள் வலப்பக்க வழியில் செல்லின் எதிர்ப்படும் பாண்டியன் சிறுமலையைக் கடக்க வேண்டும். மூன்றனுள் இடைப்பட்ட (நடுவில் உள்ள) வழியாகச் செல்லின் எளிதாய்ச் செல்லலாம்; ஆயினும், வழியில் மயக்கும் தெய்வம் ஒன்று உண்டு; அதனிடமிருந்து தப்பித்துச் செல்லல் வேண்டும்.

இடப்பக்க வழியாகச் சென்றால் திருமால் இருஞ்சோலை மலை அகப்படும். ஆங்கு ஒரு பிலம் உண்டு. பிலத்தில் புக வேண்டுமாயின் திருமால் திருவடியை நினைத்துக் கொண்டு மலையை மும்முறை வலம்வர வேண்டும். வரின் ஒரு பெண் தெய்வம் தோன்றிச் சில வினவுவாள். பதில் இறுப்பின் வாயில் திறப்பாள். உள்ளே சென்று சில வாயில்களைக் கடப்பின், இரட்டைக் கதவு உள்ள ஒரு வாயில் தெரியும். ஆங்கு உள்ள ஒரு பெண் தெய்வம் சில வினவுவாள். தக்க விடையிறுப்பின், மூன்று பொய்கைகளைக் காண்பிப்பாள். அவற்றின் பெயர்கள் புண்ணிய சரவணம், பவ காரணி, இட்ட சித்தி என்பன. புண்ணிய சரவணத்தில் மூழ்கின் ஐந்திற வியாகரண நூல் அறியலாம். பவ காரணியில் மூழ்கின் பழம் பிறப்பு உணரலாம். இட்ட சித்தியில் மூழ்கின் நினைத்தன எய்தலாம் - என இன்னும் பல தொடர்ந்து கூறினான்.

மறையவன் கூறியனவற்றைக் கேட்டதும், சமண சமயச் சார்புடைய கவுந்தி, திருமால் சார்பாகச் சொல்லிய மறையவன் கூற்றை மறுத்துரைத்தாள். அதாவது, நீ சொல்கிறபடியெல்லாம் செய்ய வேண்டுவது இல்லை. நீ கூறும் ஐந்திர வியாகரணத்தை எங்கள் அருகன் நூலைக் கொண்டே அறிந்து கொள்ளலாம். பழம் பிறப்பை

இப்பிறவி கொண்டே உய்த்துணர்ந்து அறியலாம். வாய்மையுடன் ஒழுகின், இட்டசித்தியில் மூழ்காமலேயே எதிர்பார்ப்பதை அடையலாம் என மறையவனுக்கு விடையளித்து அவன் போக விடையளித்தார்.

இளங்கோவடிகள், மாங்காட்டு மறையவனை வைணவ விளம்பரம் செய்ய வைத்து, பின்பு, கவுந்தியடிகளைக் கொண்டு அதைத் தட்டிக் கழிக்கச் செய்து சமணம் பரப்ப இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டுள்ளார் என்று எண்ணத் தோன்றுகிறது.

### 3. கோசிகன்

கோசிகன் என்பவன் ஓர் அந்தணன். கோசிக குலத்தில் பிறந்ததால் இவன் கௌசிகன் என்றும் பெயர் வழங்கப் படுகிறான். சிலப்பதிகாரத்தில் கௌசிகனின் பங்கு (Role) சிறியதே. அஞ்சல்காரர் (Post man) வேலையே இவன் செய்திருக்கின்றான். மாதவி கோவலனிடம் சேர்க்குமாறு தந்த மடலை இவன் எடுத்துக்கொண்டு காட்டு வழியில் சென்று கோவலனைத் தேடிக் காண முயன்று கொண் டிருந்தான்.

கோவலன் வழியில் ஒருநாள் காலைக் கடனைக் கழிக்க ஒரு நீர்நிலையின் பாங்கர் சென்றிருந்தான். கௌசிகன் வழிநடந்த களைப்பால் கோவலன் அந்தப் பக்கம் அருகில் இருப்பதை அறியாமல், வாடிய ஒரு மாதவிக் கொடியைக் கண்டு இரங்கி ஏதோ சொன்னான். மாதவி என்று அவன் கூறிய சொல்லைக் கேட்டதும் கோவலன் அவனை அணுகி விவரம் கேட்டான். கௌசிகன் பின்வருமாறு நிகழ்ந்தது கூறலானான்:

கோவலனே! நீ ஊரைவிட்டுப் பிரிந்ததும், உன் தாய் தந்தையர் சொல்லொணத் துயர் உழந்தனர். உன்னைத் தேடிக் கண்டுபிடிக்கப் பல இடங்கட்கும் ஆட்களை

அனுப்பினர். பயன் யாதும் இல்லை. இந்தச் செய்தியை வயந்தமாலை வாயிலாகக் கேள்விப்பட்ட மாதவி மிகவும் வருந்திப் பாயும் படுக்கையுமாய்க் கிடந்தாள். அவளைப் பார்க்கச் சென்ற என்னிடம் இந்த மடலை எழுதித் தந்து, நின்னைத் தேடிக் கண்டு நின்னிடம் சேர்க்கச் சொன்னாள் – என்று கூறி மடலைக் கோவலன் கையில் கொடுத்தான். இதுதான் கௌசிகனின் பங்கு. இவன் மாதவிக் குடும்பத்தின் உதவியாளனாகக் காணப்படுகிறான்.

இந்தப் பகுதியில் உள்ள காப்பியச் சுவையாவது: குருக்கத்தி என்னும் (தாவரக்) கொடிக்கு மாதவி என்ற பெயரும் உண்டு. அந்தப் பெயர்தான் மாதவிக்கு வைக்கப் பெற்றிருந்தது. சில பெண்கட்குச் செந்தாமரை, தில்லை, துளசி, அல்லி, குமுதம், செங்கழுநீர் (செங்கேணி), மருக் கொழுந்து, (வடமொழிப் பெயராகிய) அம்புஜம், பங்கஜம், சரோஜா, வனஜா, கமலம், மல்லிகா (மல்லிகை) முதலிய மலர்ப் பெயர்கள் இடப்பட்டிருப்பதை அறியலாம். மற்றும் சில பெண்கட்கு மாலதி, சண்பகம், காஞ்சனா என்ற பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன. இம்மூன்று பெயர்களும் ஓரே மலருக்கு உரியன. சிலருக்குப் புஷ்பா எனப் பூவின் வடமொழிப் பெயர் வைக்கப்பட்டிருப்பதை அறியலாம். இந்தக் காலத்தில் சில பெண்கட்கு 'மலர்' என்னும் தனித் தமிழ்ப் பெயர் இடப்பட்டுள்ளது. இந்த அடிப்படையிலேயே, குருக்கத்தியின் மற்றொரு பெயராகிய மாதவி என்னும் பெயர் மாதவிக்கு அக்காலத்தில் வைக்கப்பட்டிருந்தது.

கௌசிகன் மாதவிக் கொடியின் வாடிய நிலையைக் கண்டு, 'வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம் வாடிய' வடலூர் இராமலிங்க வள்ளலாரைப் போல் மனம் வாடி உரைத்துள்ளான். அம்மாதவி என்ற பெயரைக் கேட்டதும் கோவலன் கௌசிகனோடு தொடர்பு கொள்ளலானான்.

கௌசிகன் குருக்கத்தியின் வாட்டத்தைக் கண்டு மாதவி என்னும் சொல்லால் அதைக் குறிப்பிட்டான் என்பது உண்மையா யிருக்குமா? இது ஐயத்திற்கு உரியது. காப்பியத்திற்கு மெருகு ஊட்டிச் சுவையுண்டாக்குவதற்காக, இளங்கோவடிகள் தான், இருபொருள் அமையச்செய்து விளையாடியுள்ளார் என்று சொல்லக் கூடாதா?

## 4. மாடலன்

சிலப்பதிகாரத்தின் இடையிலே, அதாவது - முதல் காண்டமாகிய புகார்க்காண்டம் கடந்ததும் இரண்டாம் காண்டமாகிய மதுரைக் காண்டத்தின் இடையிலே இடம் பெற்று, மூன்றாவது காண்டமாகிய வஞ்சிக் காண்டத்தின் இறுதிவரை நடைபோடுபவன் மாடலன் என்பவன்.

இவன் மறை வல்ல அந்தணர்க்கு முதல்வன்; புகாரின் அருகில் உள்ள தலைச்செங்காடு என்னும் ஊரினன்; தெற்கே சென்று குமரி ஆற்றிலே நீராடி, பொதிய மலையை வலம் வந்து, மதுரை கண்டு, கோவலன் - கண்ணகியுடன் கவுந்தி யிருக்கும் சோலைப் பள்ளியில் இளைப்பாற வந்து அமர்ந்தான். கோவலன் மாடலனை வணங்கி அவனது வருகை குறித்து வினவியறிந்தான்.

இந்த இடத்திலே, மாடலன் கோவலனை, கருணை மறவன், செல்லாச் செல்வன், இல்லோர் செம்மல் என்றெல்லாம் அவனுடைய பெருமைக்கு உரிய வரலாறுகளை எடுத்துக் கூறிப் புகழ்ந்து பாராட்டினான். கோவலனைச் சிலப்பதிகாரத்தின் கதைத் தலைவனாக (Hero) ஆக்கிய பெருமை மாடலனுக்கே உரியது.

கோவலா! நீ இப்பிறவியில் யான் அறிந்த வரைக்கும் நன்மையே செய்துள்ளாய் - ஆனால் நீ கண்ணகியுடன் இவ்வாறு வந்து துயர் உறுவது பழைய தீ ஊழ்ப் பயனே

என்று கூறிக் கோவலனுக்கு ஆறுதல் கூறிய உயர்ந்த உள்ளத்தன் மாடலன். இந்த மாடலன் புகாரின் அருகில் உள்ள தலைச்செங்காடு என்னும் ஊரினன் ஆதலின், கோவலன் செய்த நல்வினைகளை நன்கு அறிந்திருந்தான். கோவலன் பெற்றோரையும் கண்ணகியையும் பிரிந்து மாதவி வயப்பட்டுச் செல்வத்தை இழந்தவன் என்பதும் மாடலனுக்குத் தெரிந்துதான் இருக்கும். ஆனால், அதை இப்போது நினைவுபடுத்திக் கோவலனது உள்ளத்தை உடைக்க விரும்பாமையால், நீ நல்வினையே செய்தாய் எனக் கூறி ஆறுதல் செய்தான். அத்தகைய அறிவாளி மாடலன்; அதாவது - சூழ்நிலைக்கு ஏற்பச் செயல்படுபவன்; பேசத் தெரிந்தவன். இவன் தனது கூற்றுக்கு உறுதுணையாக இடையிடையே ஊழ்வினையைப் பயன்படுத்திக் கொள்பவன். ஊழ்வினை நம்பிக்கையால் ஒரு சிறந்த பயன் இருக்கிறதெனில், அது, ஆறுதல் உண்டாக்குகிற - அமைதி செய்கின்ற இதைத்தவிர வேறு என்ன இருக்க முடியும்?

மாடலனும் கவுந்தியும் கோவலனை நோக்கி, மதுரையின் புறஞ்சேரியில் இனியும் இருத்தல் தகாது; மதுரை நகருக்குள் சென்று உங்கள் இனத்தவர் இருக்கும் இடம் சேரின், மாசாத்துவான் மகன் எனப் பெரிதும் வரவேற்பர் என அறிவுரை கூறினர். இவ்வாறு உய்வழி கூறும் உயரியோனாகவும் மாடலன் விளங்கினான்.

மாடலன் ஆறுதல் உரையும் அறிவுரையும் கூறுவது அல்லாமல், பழிக்கு அஞ்சுபவனாகவும் பொறுப்புணர்ச்சி உடையவனாகவும் திகழ்ந்துள்ளான். கோவலனும் கண்ணகியும் இறந்த செய்தியை மாடலன் அவ்விருவரின் தாயர்க்கு அறிவித்தான். அஃதறிந்த தாயர் இருவரும் உள்ளம் உடைந்து உயிர் துறந்தனரல்லவா? தாயர் இருவரும் நாம் அறிவித்ததனால்தானே உயிர் துறந்தனர் என்று மாடலன் மாழ்கிப் பழிக்கு அஞ்சி, அவர்களின் இறப்புக்குத் தான்

பொறுப்பேற்று, அப்பழியைத் துடைப்பதற்காக வடபுலம் போந்து கங்கையில் நீராடி அமைதி பெற்றான்.

மாடலன் கங்கையில் நீராடியபின், அங்கே, வடவரை வென்று, கங்கையின் தென்கரையில் பாசறையில் தங்கியிருந்த சேரன் செங்குட்டுவனைக் கண்டு வாழ்த்திப் பின் மதுரையில் நிகழ்ந்தனவற்றையும் மற்றும் சில செய்திகளையும் கூறலானான்:

மாதவியின் கானல்வரிப் பாட்டு கனகவிசயரின் முடித் தலையை நெரித்தது. கோவலன் மாதவியைப் பிரிந்து கண்ணகியுடன் மதுரை போந்து கொலைக் குற்றம் சாற்றப் பட்டு உயிர் துறந்தான். கண்ணகி உமது சேரநாட்டு எல்லையில் வந்து உயிர் நீத்தாள். இச்செய்தியறிந்ததும் கண்ணகிக்கு அடைக்கலம் ஈந்த மாதரி தீக்குளித்து இறந்தாள். இச்செய்தியை யான் புகார் அடைந்து சொன்னேன். கேட்ட மாசாத்துவான் புத்தத் துறவியானான்: மாநாய்கன் ஆசீவகர் பள்ளியடைந்து துறவு மேற்கொண்டான். கோவலன் - கண்ணகி ஆகியோரின் தாய்மார்கள் உள்ளம் உடைந்து உயிர் துறந்தனர். மாதவியும் மணிமேகலையும் துறவு பூண்டனர். பாண்டிய நாட்டில் நெடுஞ்செழியனும் கோப்பெருந்தேவியும் உயிர் துறந்தனர். நெடுஞ்செழியனின் இளவல் வெற்றிவேல் செழியன் பொற்கொல்லர் ஆயிரவரைப் பலி கொடுத்து மதுரையை ஆள்கிறான். புகார் நகரில் சோழ மன்னன் நலமாயுள்ளான் - என்றெல்லாம் மாடலன் தெரிவித்தான்.

மாடலன் கூறியவற்றைக் கேட்டதும், செங்குட்டுவன் தன் உடம்பின் நிறையாகிய ஐம்பது துலாம் பொன்னை மாடலனுக்குத் தானமாக அளித்தான்.

தனது வடபுல வெற்றியைப் பாண்டியனும் சோழனும் தாழ்த்திப் பேசியதாக அறிந்த செங்குட்டுவன் வெகுண்டு

எழுந்தபோது மாடலன் அவனை அமைதியுறச் செய்தான். செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை முதலியவற்றைச் சேரனுக்கு அறிவித்து இனிப் போர் புரியாமல், நன்னெறி செலுத்தும் வேள்வி புரியத் தூண்டினான்.

தெய்வம் ஏறிய தேவந்தி தந்த நீரை மாடலன் சிறுமியர் மூவரின் மீது தெளித்தான். அவர்களின் பழம் பிறப்பு அறியப்பட்டது. இருவர் கோவலனின் தாயும் கண்ணகியின் தாயுமாவர்; மூன்றாமவள் மாதரியாவாள். இம்மூவரின் விவரங்களை மாடலன் சேரனுக்கு அறிவித்தான். பின்னர்ச் சேரன் மாடலனுடன் வேள்விச் சாலையை அடைந்தான்.

மாடலன் ஆற்றிய பல்வேறு பணிகளை எண்ணுங்கால், சேக்சுபியர் As you like it ('நீ விரும்பிய வண்ணமே') என்னும் நாடகத்தில் அறிவித்துள்ள ஒரு கருத்து நினைவைத் தூண்டுகிறது. அது:

"All the world's a stage
And All men and women are merely players
They have their exits and their entrances
One man in his time plays many parts"

இந்த உலகம் முழுவதும் ஒரு நாடக மேடை. அனைத்து ஆண்களும், பெண்களும் வெற்று (வெறும்) நடிகர்கள். அவர்கள் மேடையினின்றும் போதலும்(சாதலும்) மேடைக்கு வருதலும் (பிறத்தலும்) உடையவர்கள். ஒருவன் அவனது வாழ்நாளில் பல பாகங்களில் நடிக்கிறான் – என்பது இதன் கருத்து.

ஒருவன் பல பாகங்களில் நடிக்கிறான் என்பதற்கு ஏற்ப, மாடலன் சிலம்பில் பல்வேறு பணிகள் புரிந்துள்ளான்.

கதைச் செயல்களின் இணைப்பிற்கும் கட்டுக்கோப்பிற்கும் இளங்கோவுக்கு இப்படி ஒருவன் தேவைப்பட்டான். அதற்கு இளங்கோ மாடலனைத் தக்க முறையில் படைத்துப் பயன் படுத்திக் கொண்டார்.

ஒருவர் தம் சொற்பொழிவில், இளங்கோ ஆரியத்திற்கு (பார்ப்பனர்கட்கு) நிரம்பத் தம் நூலில் இடம் கொடுத் துள்ளார் என்று சாடினார் - என்பது இந்தத் தலைப்பின் தொடக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தப் பார்ப்பன உறுப்பினர்கள் உண்மையிலேயே கண்ணகி வரலாற்றில் இடம் பெற்றவர்கள் என்று கொள்ளினும் - அல்லது - இவர்கள் இளங்கோவால் இந்த முறையில் படைக்கப் பட்டவர்கள் என்று கொள்ளினும், சிலம்பில் வரும் இந்த விதமான கதைச் செயல்கட்குப் பொருத்தமானவர்கள் பார்ப்பனர்களே என்பதை நினைவில் கொள்ளின் எல்லாம் சரியாகிவிடும்.

மற்றும், சிலம்புக் கதையோடு தொடர்பில்லாத பராசரன், வார்த்திகன், தக்கிணாமூர்த்தி, கார்த்திகை என்பவரின் வரலாறு நூலிலே இழையோடுகிறது. பராசரன் என்னும் சோழநாட்டுப் பார்ப்பான் சேரனையடைந்து வேண்டிப் பெரும் பொருள் பரிசாகப் பெற்றான். தான் பெற்ற செல்வத்தைப் பாண்டிய நாட்டில் இருந்த வார்த்திகன் என்னும் பார்ப்பனனின் மகனாகிய சிறுவன் தக்கிணாமூர்த்திக்குத் தந்தான். அச்சிறுவனின் ஆரவாரச் செயலைக் கண்டவர்கள், அவனுடைய தந்தை வார்த்திகன் களவாடி வந்து மகனுக்குக் கொடுத்துள்ளான் எனப் பழி கூற, வார்த்திகன் சிறை செய்யப் பட்டான். வார்த்திகன் மனைவி கார்த்திகை மிகவும் வருந்தி வேண்டினாள். பின்னர் உண்மையறிந்த பாண்டியன் அவனைச் சிறைவீடு செய்ததோடு, சிறையிலிருந்த மற்றவரையும் விடுவித்தான்.

இப்படியொரு கதை பார்ப்பனர் தொடர்பாகச் சிலம்பில் கட்டுரை காதையில் இடம் பெற்றுள்ளது.

இது, பாண்டியரது பெருமையை விளக்குவதற்காக மதுராபதி என்னும் தெய்வத்தால் கண்ணகிக்கு அறிவிக்கப் பட்ட கதையாகும்.

# 24. மாதரியின் மாண்பு

கதையின் இடையில் - அடைக்கலக் காதையில் இளங்கோவால் மாதரி அறிமுகப்படுத்தப்பட் டுள்ளாள். அவள் ஆயர் குல மடந்தை. திருமாலைப் (கண்ணனைப்) போற்றுபவள். சிறு தெய்வ வழிபாடும் செய்பவள். அரண்மனைக்கு ஆப்பயன் அளிக்கும் உரிமையள். அவளுக்கு ஐயை என்னும் மகள் உண்டு.

கவுந்தியும் கோவலனும் கண்ணகியும் மதுரையின் புறஞ்சேரிப் பகுதியில் தங்கியிருந்தபோது, மாதரி அப்பக்கம் உள்ள இயக்கி என்னும் சிறு தெய்வத்திற்குப் பால் படையல் செய்துவிட்டுத் திரும்பிய வழியில், கவுந்தி அவளைக் கண்டு எண்ணுகிறாள்: இவள் ஆயர் குலத்தினளாகத் தெரிகிறாள்; ஆ காத்து ஆப்பயனைப் பிறர்க்கு அளிக்கும் ஆயரின் வாழ்க்கையில் எந்தக் குற்றச் செயலும் இல்லை; எனவே, இவளும் ஒரு தீமையும் செய்யாள்; அகவை முதிர்ந்த பட்டறிவாளி (அனுபவசாலி); இவளைப் பார்க்குங்கால், நேர்மையும் இரக்கமும் உடையவளாகத் தோன்றுகிறாள். எனவே, கண்ணகியை இவளிடம் அடைக்கலமாக விடுவது தகும் - என்றெல்லாம் கவுந்தி எண்ணலானார். பாடல்:

**''புறஞ்சிறை மூதூர்ப் பூங்கண் இயக்கிக்குப்**
**பால்மடை கொடுத்துப் பண்பின் பெயர்வோள்**
**ஆயர் முதுமகள் மாதரி என்போள்**
**கவுந்தி ஐயையைக் கண்டடி தொழலும்**
**ஆகாத்து ஓம்பி ஆப்பயன் அளிக்கும்**
**கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்பா டில்லை**

**தீதிலள் முதுமகள் செவ்வியள் அளியள்**
**மாதரி தன்னுடன் மடந்தையை இருத்துதற்கு**
**ஏதம் இன்றென எண்ணினள்''** (116-124)

என்பது பாடல் பகுதி. யார் யாருக்கு என்னென்ன சிறப்பாகக் கிடைக்கிறதோ அதை - அதைக் கடவுளுக்குப் படைப்பர். ஆயர் மகளிடம் பாலுக்குக் குறைவு இல்லை. பால் பேறு (பால் பாக்கியம்) அவளுக்கு இருந்ததால் பால் படையல் செய்தாள். பண்பினள் ஆதலின், கவுந்தியின் அடியைத் தொட்டு வணங்கினாள். ஆயர் முதுமகள் - தீதிலள் முதுமகள் என இரண்டிடங்களில் இளங்கோ முதுமகள் என்று கூறியுள்ளாரே! ஆம்! முதலில் கூறிய ஆயர் முதுமகள் என்பது, ஆயர் குலத்தில் பெருமை பெற்றவள் (பெரிய மனுஷி) என்பதைக் குறிக்கிறது. தீதிலள் முதுமகள் என்பது, தீது அறியாத அகவை (வயது) முதிர்ந்த பெண் – இவளிடம் அடைக்கலம் தரலாம் என்பதைக் குறிக்கிறது. கவுந்தி தன் அடியை அவள் தொழுததுமே, இவள் செவ்வியள் - அளியள் என்ற முடிவுக்கு வந்து விட்டார். இவள் வீட்டில் அடைக்கலமாக விடலாமா? ஆயர்கள் ஒரு தீமையும் அறியாதவர்கள் - அவர்களின் தொழில் வஞ்சகம் உடையதன்று – ஆக்களைப் பிணி, துன்பம் இல்லாமல் காப்பவர்கள் – அதற்கு நல்ல தீனி தந்து பேணுபவர்கள் (ஓம்புபவர்கள்). எனவே, அவர்கள் வீட்டில் கண்ணகியை ஒப்படைக்கலாம். இதில் ஒரு தவறும் இல்லை - என்பது கவுந்தியின் முடிவு. (இங்கே, ஆயர்கள் சிலர் பாலில் தண்ணீர் கலப்பதைக் குற்றம் எனக் கொள்ள லாகாது. எல்லாரும் கலப்பதில்லை. வேறு பொருளைக் கலந்தாலே நோய் வரும் – தண்ணீர் கலப்பதனால் எந்தப் பிணியும் வராது. எவ்வளவு நீர் கலந்தாலும் வெள்ளையாய் இருப்பது, பால் கொடுத்துவைத்த பேறு ஆகும்). இவ்வாறாகக் கவுந்தியடிகளின் வாயிலாக மாதரியின் மாண்பை இளங்கோ நமக்கு அறிமுகப்படுத்தியுள்ளார்.

## மாதரியின் செல்வப் பெருக்கு

ஆயர்குலத்து முதுமகள் (பெரிய மனுஷி) என்பதிலிருந்தே மாதரி மிகுந்த செல்வமும் செல்வாக்கும் உடையவள் என்பது புலனாகும். மற்றும், கோவலன் மாதரி வீட்டிலிருந்து மதுரைக் கடைத்தெருவிற்குப் புறப்பட்ட செய்தியை, கொலைக்களக் காதை - 98 'பல்லான் கோவலர் இல்லம் நீங்கி' என்னும் தொடரால் இளங்கோ குறிப்பிட்டுள்ளார். பல் + ஆன் = பல் ஆன். பல ஆனிரைகளை (மாடுகளை) உடையவர் மாதரி குடும்பத்தினர் என்பது இதன் கருத்து. பண்டைக் காலத்தில் பல மாடுகள் வைத்திருந்தவரே பெரிய செல்வராக மதிக்கப்பட்டார்கள். மாடு என்னும் சொல்லுக்குச் செல்வம் என்னும் ஒரு பொருள் உண்டு. இதற்குப் பல இலக்கியச் சான்றுகள் காண்பிக்கலாம்.

**"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**
**மாடுஅல்ல மற்றை யவை"** (400)

என்னும் குறள் ஒன்று போதுமே. இங்கே மாடு என்பதற்குச் செல்வம் என்பது பொருள். கன்னட மொழியிலும், 'தன' என்னும் சொல்லுக்கு மாடு, செல்வம் என்ற பொருள்கள் உண்டு. இலத்தீன் மொழியிலும், Pecunia என்னும் சொல்லுக்கு மாடு, செல்வம் என்னும் பொருள்கள் உள. இதனால், மாடுகள் மிகுதியாக உடைமையே செல்வமாகக் கருதப்பட்டது என்பது தெளிவு. எனவேதான், 'பல் ஆன் கோவலர்' என்பதில் உள்ள 'பல் ஆன்' என்பது, அக்குடும்பத்தின் (மாதரியின்) செல்வ மிகுதியை அறிவித்து நிற்கிறது. மற்றும், மாதரி கண்ணகியை அழைத்துக் கொண்டு, ஆயர்களும் ஆய்ச்சியர்களும் புடைசூழ்ந்துவரத் தன் இல்லம் ஏகினாளாம். இதைக் கொண்டும் மாதரியின் செல்வாக்கை அறிய இயலும்.

கவுந்தியடிகள் கண்ணகியைத்தான் அடைக்கலமாகத் தந்தார் - கோவலனை அடைக்கலமாக்கவில்லையே எனின்,

ஆணுக்கு அடைக்கலம் என்று சொல்லத் தேவையில்லை - கண்ணகிக்கு அடைக்கலம் என்பதிலேயே கோவலனும் அடங்குவான்.

**மாதரி விருந்தோம்பல்**

கண்ணகியை அடைக்கலமாகப் பெற்ற மாதரி, தம் இனத்தவர் இருக்கும் தன் வீட்டில் தங்க வைக்காமல், மரப்பந்தல் செறிந்ததும் செம்மண் பூசிப் புதுமைப்படுத்தப் பட்டிருப்பதும் காவல் மிக்கதுமாகிய ஒரு சிறிய வீட்டில் இருக்கச் செய்தாள்; புதிய நீரால் குளிக்க வைத்தாள்; என் மகள் ஐயை உனக்குத் தோழியாக இருந்து துணை புரிவாள்; கவுந்தி உங்களை நல்ல இடத்தில் சேர்த்ததால் உன் கணவர்க்கும் கவலை இல்லை - என்று கூறினாள்.

பின், கோவலன் சாவக நோன்பி ஆதலின், நாத்தூண் நங்கையோடு மற்ற பெண்களும் சேர்ந்து பகலிலேயே உணவு ஆக்குதற்கு வேண்டிய நல்ல கலங்களைக் (பாத்திரங் களைக்) காலம் தாழ்த்தாது விரைவில் கொடுங்கள் என்றாள் மாதரி. பாடல்:

**"சாவக நோன்பிகள் அடிகள் ஆதலின்**
**நாத்தூண் நங்கையொடு நாள்வழிப் படூஉம்**
**அடிசில் ஆக்குதற்கு அமைந்தநற் கலங்கள்**
**நெடியாது அளிமின் நீர்எனக் கூற"** (18-21)

என்பது பாடல் பகுதி. நாத்தூண் நங்கை = நாத்தனாள் - கணவனுடன் பிறந்தவள் - இங்கே ஐயை. தம் வீட்டிற்கு வந்த புதிய ஆடவரைத் தம் வீட்டுப் பெண்ணுக்கு அண்ணனாகக் கூறுவது ஒருவகை உலகியல் மரபு. இங்கே ஐயைக்குக் கோவலன் அண்ணனாகிறான். கண்ணகி அண்ணியாகிறாள். கண்ணகிக்கோ ஐயை நாத்தூண் நங்கையாகிறாள். இவ்விதம் உறவுமுறை கொள்ளுதல் நாகரிகமான முறையாகும். அடிகள் என்றது கோவலனை,

சாவக நோன்பிகள் = இல்லறத்தில் இருந்தபடியே நோன்பு கொள்பவர்கள். கோவலனை நோன்பிகள் எனப் பன்மையில் குறிப்பிட்டது, 'கோவலன் அவர்கள்' என்று கூறுவது போன்ற சிறப்பு வழக்காறாகும். கண்ணகியையும் சேர்த்துக் கூறாமல் கோவலனை மட்டும் குறித்திருப்பது, உணவு ஆக்கப் போகிறவள் கண்ணகி ஆதலின் என்க.

நாள் வழிப் படூஉம் உணவு = (நாள் = பகல்) பகலில் ஆக்கும் உணவு. சாவக நோன்பிகள் அடிகள் ஆதலின் நாள்வழிப் படூஉம் அடிசில் ஆக்குதல் எனப்பட்டுள்ளது. சாவக நோன்பிக்கும் பகலிலே உணவு ஆக்குதலுக்கும் இடையே உள்ள பொருத்தம் என்ன? கோவலன் சமணன். சமண சமயத்தினர் இரவில் விளக்கு ஏற்ற மாட்டார்கள். விளக்கில் விட்டில் பூச்சி விழுந்து இறந்துவிடும் ஆதலின், கொல்லா நோன்பு காக்க இவ்வாறு செய்வர். பொழுது சாய்ந்து இருட்டு வருவதற்குள் உண்டுவிடுவர். புதுச்சேரிக்கு மேற்கே பத்துக்கல் தொலைவில் நல்லாற்றூர் என்னும் ஒரு சிற்றூர் உள்ளது. அவ்வூரார் விளக்கு வைப்பதற்கு முன் பொழுதோடு உண்டுவிடுவர் - அவ்வூருக்கு இருட்டினபின் விருந்தினர் சென்றால் உண்பது அரிது - எனக் கடலூரார் நல்லாற்றூரினரைக் கிண்டல் செய்வது உண்டு. இது இந்தக் காலத்தில் நடக்கவில்லை. முன்பு எப்போதோ நடந்திருக்க வேண்டும். கடலூர்ப் பகுதியில்தானே நாவுக்கரசர் சமண மதத்தில் சேர்ந்திருந்தார். கடலூர்த் தேர்தல் தொகுதியில் தான் நல்லாற்றூர் உள்ளது. எனவே, நல்லாற்றூரில் சமண சமயம் பரவியிருந்த காலத்தில் இது நடந்திருக்கலாம். பன்னூல்கள் இயற்றிய கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச அடிகளாரின் அடக்கம் (சமாதி) அமைந்துள்ள சிறப்பு இவ்வூருக்கு உண்டு.

கோவலன் சமண சமயத்தவன் – அதனால்தான் நாள் (பகல்) உணவு ஆக்கப்பட்டது என்னும் எனது கருத்து ஓர்

உய்த்துணர்வேயாகும். ஏலாதார் விட்டு விடலாம். நாள் அங்காடி (Day Bazaar), அல்லங்காடி (Night Bazaar) என்னும் வழக்காற்றில் நாள் என்பது பகலைக் குறிப்பது காண்க.

மற்றும் 'நற் கலங்கள் அளிமின்' என்பதும் குறிப்பிடத் தக்கது. பெண்கட்கு எவ்வளவு பாத்திரங்கள் வீட்டி லிருப்பினும் மனம் நிறைவு கொள்ளாது. அலுமினியம், பித்தளை, செம்பு, எவர்சில்வர், வெள்ளி முதலிய இனங் களில் பலவகைப் பாத்திரங்கள் இருப்பினும், குயவர் அடுக்கி வைத்திருக்கும் மண் சட்டி - குடம் முதலியவற்றைக் கண்டு விட்டால், 'ஆ! எவ்வளவு அழகு சாமான்கள்' என்று வாய் பிளப்பர். இங்கே மாதரி வீட்டிலும் பலவகைக் கலங்கள் இருக்கலாம். அவற்றுள் தாங்கள் பயன்படுத்தாத புதிய உயர்வகைக் கலங்களைத் தரவேண்டும் என்பதற்காக 'நற் கலங்கள்' எனப்பட்டது.

'நெடியாது அளிமின்' என்றது, அவர்கள் மிக்க பசி யோடு வந்துள்ளார்கள் என்பது ஒரு புறம் இருக்க, இரவு வருவதற்குமுன் ஆக்கி உண்ணவேண்டும் என்பதற்காகவும் காலம் தாழ்த்தாது விரைந்து கொடுங்கள் என்பதைக் குறிப்பிடுகின்றது. பின்னர், உணவு ஆக்குதற்கு வேண்டிய அரிசி - காய்கறிகள் - பால், நெய், தயிர் முதலியன கொடுக்கப்பட்டனவாம். பாடல்:

**"மடைக்கலம் தன்னொடு மாண்புடை மரபின்**
**கோளிப் பாகல் கொழுங்கனித் திரள்காய்**
**வாள்வரிக் கொடுங்காய் மாதுளம் பசுங்காய்**
**மாவின் கனியொடு வாழைத் தீங்கனி**
**சாலி அரிசி தம்பால் பயனொடு**
**கோல்வளை மாதே கொள் கெனக் கொடுப்ப"**

(23 - 28)

என்பது பாடல் பகுதி. ஆக்கும் கலங்கள், உயர்வகைச்சாலி அரிசி, பால், பாலிலிருந்து கிடைக்கும் நெய், தயிர் ஆகிய வற்றுடன் கொழுமையாய்த் திரண்டிருக்கும் முதிர்ந்த பலாக்காய், வெள்ளரிக்காய், மாதுளங்காய், மாம்பழம், வாழைப்பழம் என்பனவும் கொடுக்கப்பட்டன. பலா, வாழை, மா என்னும் மூன்றும் இடும் உணவை 'முப்பழமும் சோறும்' என்று கூறுவர். இந்த மூன்றும் கண்ணகிக்குக் கொடுக்கப்பட்டன. கோளிப்பாகல் என்பது பலாக்காய். 'கொழுங்கனித் திரள்காய்' என்பதிலுள்ள 'கனி' என்பது காய் முதிர்ந்துள்ள நிலையைக் குறிக்கிறது. சுளையாகப் பழுப்பதற்கு முன், பலாக்காயைக் கொடுவாள் கத்தியால் கொத்திக் கொத்தித் தூளாக்கிக் கறி பண்ணுவார்கள். இந்த நிலையிலுள்ள காயைக் கொத்துக்காய் என்பர்.

இங்கே, 'மாண்புடை மரபின் கோளிப் பாகல்' என்பதில் ஒரு சிறந்த கருத்து மறைந்துள்ளது. இந்தப் பகுதிக்கு ந. மு. வேங்கடசாமி நாட்டார் எழுதியுள்ள உரைப்பகுதி அதிலுள்ளாங்கு வருக:-

"மாண்புடை மரபிற் கோளிப் பாகல் கொழுங் கனித் திரள் காய் = மாட்சிமையுடையோர் கொடுக்கும் தன்மை போலப் பூவாது காய்க்கும் பலாவினுடைய கொழுவிய திரண்ட முதிர்ந்த காய் பெரியோர் சொல்லாமலே செய்தல் போலத் தான் பூவாதே காய்த்தலின், மாண்புடை மரபிற் கோளிப் பாகல் எனப்பட்டது. கோளி = பூவாது காய்க்கும் மரம். பாகல் = பலா, கோளிப் பாகல்" - என்பது உரைப் பகுதி. இக்கருத்தோடு ஒத்த பாடல் ஒன்று சிறுபஞ்சமூலம் என்னும் நூலில் உள்ளது;

**"பூவாது காய்க்கும் மரமுமுள; நன்றறிவார்**
**மூவாது மூத்தவர் நூல்வல்லார்"** (22)

என்பது பாடல் பகுதி. பூவாமலேயே காய்க்கும் மரம் போல, நல்லதறிவாரும் நூல் வல்லவரும், அகவை முதிராத

இளைஞராயிருப்பினும் அகவை முதிர்ந்த பெரியோராக மதிக்கப் பெறுவர் - என்பது கருத்து. பூவாது காய்க்கும் மரம் கோளி எனப்படும் என்பதை,

**"கோளி பூவாது காய்க்கும் குளிர்மரம்"** (4 - 80)

என்னும் திவாகர நிகண்டு நூற்பாவாலும் அறியலாம்.

அத்தி, அரசு, ஆல், அன்னாசி, பலா ஆகியவை பூவாது காய்க்கும் மரங்கள் ஆகும். பூவாது காய்ப்பது என்றால் என்ன? எப்போதே ஒரு முறை வருபவரைப் பார்த்து உங்கள் வருகை 'அத்தி பூத்தாற் போல்' உள்ளது என்பது உலகியல். அத்தி முதலியவை பூக்காமலேயே காய்க்கும் என மக்கள் எண்ணிக் கொண்டுள்ளனர். அத்தி, அரசு, அன்னாசி, ஆல், பலா ஆகியவற்றிற்கும் பூக்கள் உண்டு. இவற்றில், பல பூக்கள் ஒன்றாய்ச் சேர்ந்து புற இதழால் மூடப்பட்டு உருண்டை வடிவம் பெறுகின்றன. உள்ளேயே மகரந்தச் சேர்க்கை பெற்றுக் காய்த்துக் கனியாகின்றன. ஒவ்வொரு காயும் பல பூக்களின் திரட்சி என்று கொள்ளல் வேண்டும். இந்தக் கோளி இனங்களுள் அளவாலும் சுவையாலும் தலைமை தாங்குவது பலாதான். இதைப் பெரும்பாணாற்றுப் படை என்னும் நூலில் உள்ள

**"கொழுமென் சினைய கோளி யுள்ளும்**
**பழம் மீக் கூறும் பலாஅப் போல்"** (407, 408)

என்னும் பாடல் பகுதியாலும் அறியலாம். இது பட்டறிவு (அனுபவம்) வாயிலாகவும் மக்கள் அறிந்ததேயாகும். இதனால்தான் இளங்கோவடிகள், "மாண்புடை மரபின் கோளிப் பாகல்" என்றார்.

**கண் கொள்ளாக் காட்சி**

கண்ணகி உணவு அளிக்கக் கோவலன் உண்ண இவ்விதம் அவ்விருவரும் அளவளாவியது, மாதரிக்கும் மகள் ஐயைக்கும் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. "இந்தக் கோவலன்,

வடக்கே ஆயர்பாடியில் அசோதை பெற்றெடுத்த பூவைப்பூ நிறமுடைய கண்ணனாக இருப்பானோ! இந்தக் கண்ணகி, தொழுனையாற்றின் பக்கம் கண்ணனது துயர் நீங்கச் செய்து அவனை மணந்து கொண்ட நம் குலத்தைச் சேர்ந்த வளாகிய நப்பின்னையாக இருப்பாளோ! இவர்களின் கண் கொள்ளாக் காட்சியை என்னென்று வியந்து மகிழ்வது! என்று மாதவியும் ஐயையும் தம்முள் பேசிக் கொண்டு மகிழ்ந்தனர்:

**"ஆயர் பாடியில் அசோதை பெற்றெடுத்த**
**பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ**
**நல்லமு துண்ணும் நம்பி, ஈங்குப்**
**பல்வளைத் தோளியும் பண்டுநம் குலத்துத்**
**தொழுனை யாற்றினுள் தூமணி வண்ணனை**
**விழுமம் தீர்த்த விளக்குக் கொல்லென**
**ஐயையும் தவ்வையும் விம்மிதம் எய்திக்**
**கண்கொளா நமக்குஇவர் காட்சி ஈங்கென"** (46-53)

என்பது பாடல் பகுதி. ஒவ்வொருவருக்கும் சில நேரங்களில் அவரவர் குலத்திற்கு ஏற்ற சூழ்நிலை - அவரவர் வணங்கும் தெய்வத்திற்கு ஏற்ற சூழ்நிலை உருவாகும் போலும். சிலம்பு - வேட்டுவ வரி என்னும் பகுதியில், கண்ணகி வேட்டு வர்க்கு ஏற்றவாறு புகழ்ச்சியாக உருவகிக்கப் பட்டாள். இங்கே, ஆயர்குல மாதரியும் ஐயையும் தம் ஆயர் குலத்தைச் சேர்ந்த கண்ணன் உருவிலும் நப்பின்னை உருவிலும் கோவலனையும் கண்ணகியையும் கண்டுள்ளார்கள்.

ஈண்டு, கருத்து ஒப்புமை காண்டல் என்னும் முறையில், சேக்கிழாரின் பெரிய புராணத்தில் சொல்லப்பட்டுள்ள ஒரு காட்சியைக் காணலாம். திருவாரூரில் முதல் முதலாகச் சுந்தரரைக் கண்ட பரவை நாச்சியார், இவர் யாராக இருக்கலாம் என்று வியக்கிறார்:

"முன்னே வந்து எதிர்தோன்றும்
முருகனோ பெருகொளியில்
தன்னேரில் மாரனோ
தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர் செஞ்சடை அண்ணல்
மெய்யருள்பெற் றுடையவனோ
என்னே என்மனம் திரித்த
இவன்யாரோ என நினைந்தார்" (290)

என்பது பாடல். இவர் முருகனாக இருப்பாரோ! அல்லது, மன்மதனாகவாவது - விஞ்சையனாகவாவது இருப்பாரோ! அல்லது, சிவனடியாராக இருப்பாரோ! என்று பரவையார் வியக்கிறார். இந்தப் பாடல் சைவ சமயச் சூழ்நிலையை அறிவிக்கிறது. இவ்வாறே, மாதரியும் ஐயையும் தம் குலத்திற்கும் சமயத்திற்கும் ஏற்றவாறு கற்பனை செய்து பார்த்துள்ளனர். நம்பி = கோவலன். பல்வளைத் தோளி - கண்ணகி, புதுமலர் வண்ணன், தூமணி வண்ணன் = கண்ணன். விளக்கு = நப்பின்னை. வேடிக்கை பார்ப்பது பெண்களின் வழக்கம் போலும்!

**நப்பின்னை வரலாறு**

மிதிலைப் பக்கத்தில் கும்பகன் என்னும் ஆயர் அரசன் இருந்தான். அவன் மகள் நப்பின்னை. அரக்கர்கள் ஏழு எருமைக் கடாக்களாக வந்து தொல்லை கொடுத்துக் கொண்டு இருந்தனர். இந்தக் காளைகளை அடக்கிக் கொல்பவருக்குத் தன் மகளை மண முடித்துத் தருவதாகக் கும்பகன் அறிவித்தான். அவ்வாறே கண்ணன் (கிருஷ்ணன்) காளைகளை அடக்கிக் கொன்று நப்பின்னையை மணந்தான். இது தொழுனையாற்றங் கரையில் நடந்தது. இந்த நப்பின்னை போலும் கண்ணகி என ஐயையும் மாதரியும் பூரித்துப் போயினர்.

## குல வேற்றுமை

மாதரி அடைக்கலமாகப் பெற்றுக் கொண்டு வந்த கண்ணகி மிகவும் ஓய்ந்து சோர்ந்து இருந்திருப்பாள். இந்த நிலையில் உணவு ஆக்கும் வேலையை அவளிடம் விடலாமா? மாதரியும் ஐயையுமல்லவா உணவு ஆக்கி விருந்து படைத்திருக்க வேண்டும்? உணவு ஆக்குதலைக் கண்ணகியிடமே விட்டிருக்கும் காரணம் என்ன?

ஆயர்குலம் தாழ்ந்த குலம் - வணிகர் குலம் உயர்ந்தது; எனவே, தாழ்ந்த குலத்தினர் ஆக்கியதை உயர் குலத்தினர் உண்ண மாட்டார்கள் - என்பதைத் தவிர வேறு என்ன காரணம் கூறமுடியும்? ஆயர் குலத்தினர் அரிய பெரிய அடைவுகள் (சாதனைகள்) புரியினும் அவற்றை அவர்கள் செய்ததாகக் கொள்ளாமல் வேறு யாரோ செய்ததாக அந்தக் காலத்தில் கூறி வந்தனர். ஓர் இடையன் செய்ததாக நாம் ஒத்துக் கொள்வதா என்னும் தருக்கு உயர் குலத்தினர் எனப்படுபவர்க்கு இருந்தது. இதற்குச் சில எடுத்துக் காட்டுகள் காணலாம்:

ஆயர் குலத்தவராகிய திருமூலர் அரிய மூவாயிரம் பாடல் கொண்ட திருமந்திரம் என்னும் நூலை இயற்றினார். ஆனால் உண்மை மறைக்கப்பட்டது. மூலன் என்னும் இடையன் மாடு மேய்த்துக் கொண்டிருந்தான். திடீரென வழியில் விழுந்து இறந்துவிட்டான். மாடுகள் கதறின. கைலாயத்திலிருந்து அவ்வழியே வந்த தவயோகி ஒருவர் இதைக் கண்டு இரக்கமுற்று, கூடுவிட்டுக் கூடுபாயும் ஆற்றலின்படி, தன் உயிரை மூலன் உடம்பில் புகுத்தி எழுந்து, தன் உடலை ஓரிடத்தில் மறைத்து வைத்துவிட்டு மாடுகளை உரிய இடத்தில் கொண்டு சேர்த்தார். பின்னர் தன் உடலைத் தேடினார். இவர் இங்கேயே தங்கித் தொண்டு செய்ய வேண்டும் என்று சிவன் இவர் உடலை

அழித்துவிட்டார். எனவே யோகி இடையனாகிய மூலன் உடலோடு இருந்தபடியே மூவாயிரம் பாடல்கள் பாடினார் – என்பது கதை. இது உண்மையா? இல்லை - கற்பனை. இடையனுக்கு இவ்வளவு ஆற்றல் உண்டு என்னும் பெருமை வெளிவராதவாறு இவ்வாறு வரலாறு மாற்றப்பட்டது. மற்றொன்று காணலாம்:

மாடு மேய்த்த இடைச் சிறுவன் ஒருவன், சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? – என்று கேட்டு ஒளவையாரை மடக்கி விட்டான். இந்தப் பெருமையையும் இடைக் குலத்திற்குக் கொடுக்க மனமின்றி, முருகன்தான் இடைச் சிறுவனாக வந்தான் எனக் கதையை மாற்றி விட்டனர் உயர் குலத்தினர். மற்றும் ஒன்று வருக:

வடமொழிப் புலவனாகிய காளிதாசன் உலக மா கவிகளுள் ஒருவன். இவன் இடைக் குலத்தினன் - ஆடு, மாடு மேய்த்தது உண்டு. இந்த இடையனின் நாக்கில் காளி ஏதோ எழுதினாள்; அதனால்தான் இவன் பெரிய கவிஞனானான் - என்று கதை கட்டி விட்டனர். காளிதாசன் பார்ப்பனன் - ஆனால் ஆடுமாடு மேய்த்தான் என்று இமாலயப் புளுகு புளுகி வைத்துள்ளனர் உயர் குலத்தினர். பார்ப்பனன் ஆடு மேய்ப்பதில்லை. ஒருவேளை, ஆரியர்கள் ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு கைபர் கணவாய் வழியாக இந்தியாவிற்குள் நுழைந்தனர் என்று சிலர் கூறும் வரலாற்றுச் செய்தியின் நினைவில் இவ்வாறு உயர்குலத்தினர் உளறி வைத்துள்ளார்களோ?

இங்கே ஓர் அணுகுண்டு விழப்போகிறது. அதாவது, வடக்கே ஆயர்பாடியில் வளர்ந்ததாகக் கூறப்படும் கண்ணனும் (கிருஷ்ணனும்) ஆயர் குலத்தில் பிறந்தவனே. வசுதேவருக்கும் தேவகிக்கும் பிறந்த குழந்தை, ஆயர்பாடியில் நந்தகோபன் - அசோதை ஆகியவரின் வீட்டில் கொண்டு

போய்ப் போடப்பட்டது. அந்தக் குழந்தைதான் கண்ணன் என்பது கதை. இது கற்பனையாக இருக்கலாம். வசுதேவர் கண்ணனாகிய ஆண் குழந்தையைப் போட்டுவிட்டு, மாற்றாக, அசோதை பக்கத்தில் கிடந்த பெண் குழந்தையை எடுத்துப் போனாராம். பெண் குழந்தை எங்கே என்று அசோதையோ - மகப்பேறு (பிரசவம்) பார்த்த மகளிரோ தேட மாட்டார்களா? பிறந்தது பெண் குழந்தையாயிற்றே - ஆண் குழந்தை எப்படி வந்தது என்று ஐயுற மாட்டார்களா? இதைச் சரி செய்ய (அட்ஜஸ்ட்மெண்ட்) மாயை பெண் குழந்தையாக வந்தது என்று கதை கட்டப்பட்டுள்ளது. எனவே இது கற்பனையாகத்தான் இருக்க வேண்டும். கண்ணன் ஆயர்குலச் சூழ்நிலையிலேயே இருந்தான். ஆயர் குல நப்பின்னையை மணந்து கொண்டான். கண்ணனும் பலராமனும் யாதவ (ஆயர்) குல மன்னர்கள் என வரலாற்றாசிரியர்கள் கூறியுள்ளனர். இதற்கு நேரான சான்றாக, சிலம்பில் இளங்கோவடிகளால் குறிப்பிடப் பட்டுள்ள "ஆயர்பாடியில் அசோதை பெற்றெடுத்த" என்னும் பகுதி ஒன்றே போதுமே! இதை ஏலாதார் தள்ளி விடலாம். அறிஞர்களின் ஆய்வுக்காக இந்தக் கருத்து விடப்படுகிறது. இதுவே முற்ற முடிந்த முடிபன்று.

**ஆய்ச்சியர் குரவை**

கோவலன் கடைத்தெரு நோக்கிச் சென்றதும், ஆயர்பாடியில் பலவகைத் தீய நிமித்தங்கள் தோன்றியதை மாதரி ஐயைக்குக் கூறுகின்றாள். பின்னர் ஆய்ச்சியர்கள் குரவைக் கூத்து ஆடச்செய்தாள். இந்தக் காதையில் திருமால் போற்றப்பட்டுள்ளார்.

**மாதரியின் வைணவம்**

மாதரி வைணவ சமயக் கோட்பாடுடையவள். குரவைக் கூத்து முடிந்ததும், பூவும் நறுமணப் புகைப்பொருளும்

சந்தனமும் மாலையும் எடுத்துக் கொண்டு வையை ஆற்றின் கரையிலுள்ள திருமால் கோயிலுக்கு வழிபடச் சென்றாள். பாடல்:

**"ஆயர் முதுமகள் ஆடிய சாயலாள்**
**பூவும் புகையும் புனைசாந்தும் கண்ணியும்**
**நீடுநீர் வையை நெடுமால் அடியேத்தத்**
**தூவித் துறைபடியப் போயினாள்"**

(துன்ப மாலை : 1-5)

என்பது பாடல் பகுதி. மாதரி இயக்கி என்னும் சிறு தெய்வத்தை வணங்கினும், பெரிய அளவில் வைணவ சமயக் கோட்பாடு உடையவள் என்பது விளங்கும். முல்லை நில ஆயர்களின் கடவுள் திருமாலே அல்லவா? "மாயோன் மேய காடுறை உலகமும்" என்பது, தொல்காப்பிய - அகத்திணையியல் (5) நூற்பா அல்லவா?

அடுத்த பிறவியிலும் மாதரி வைணவர்க்கு மகளாகப் பிறந்ததாக இளங்கோ அடிகள் கூறியிருப்பது வியப்புச் சுவை தருகிறது.

கோவலனும் கண்ணகியும் இறந்த செய்தியறிந்ததும் கோவலன் தாயும் கண்ணகியின் தாயும் உயிர் துறந்தனராம். அடைக்கலப் பொருளையிழந்த மாதரி தீக்குளித்து உயிர் நீத்தாளாம்: இம்மூவருள் கோவலன் தாயும் கண்ணகியின் தாயும், வஞ்சி நகரில் அரட்டன் செட்டி என்பவனின் மனைவி வயிற்றில் இரட்டைப் பிறவிப் பெண்களாகப் பிறந்தனராம். மாதரியோ, திருவனந்தபுரத்தில் பாம்புப் படுக்கையில் அறிதுயில் கொள்ளும் திருமாலுக்குத் தொண்டு புரியும் குடும்பத்தில் பிறந்தாளாம்.

முன்னவர் இருவரும் செட்டி குலத்தைச் சேர்ந்தவ ராதலின் மறு பிறவியிலும் (அரட்டன் என்னும் செட்டியின்

மக்களாகச்) செட்டி குலத்தில் பிறந்ததும் வியப்புச் செய்தி. மாதரி, முன்பிறவியில் திருமாலைப் பணியும் ஆயர் குலத்தில் பிறந்து திருமாலை வழிபட்டு வந்ததாலும், குரவைக் கூத்து (ஆய்ச்சியர் குரவை) ஆடியதாலும் மறுபிறவியில் வைணவக் குடும்பத்தில் பிறந்தாளாம்.

இவ்வாறாக, மாதரி சிலப்பதிகாரத்தில் ஒரு சிறந்த உறுப்பாக ஒளி விசுகிறாள்.

# 25. பொற் கொல்லனின் பொய்மை

கோவலனைக் கொல்லச் செய்த பொற்கொல்லன் அரண்மனைப் பொற்கொல்லன் என்னும் தகுதி பெற்றவன்; அதற்கேற்ற மெய்ப்பையும் (சட்டையும்) கைக்கோலும் உடையவன்; கோவலனுக்கு எம தூதனானவன்; பொற் கொல்லர்கள் நூற்றுவருடன் வந்தவன்.

சிலம்பை மதிப்பிடுவாயா எனக் கேட்ட கோவலனைத் தொழுது, காலணியை மதிக்க இயலாதவனாயினும் வேந்தர்க்கு முடி செய்வேன் யான் என அடக்கமாகப் பதிலிறுத்தான் அந்தப் பொய்யன்.

கோவலன் காட்டிய வேலைப்பாடும் விலை மதிப்பும் மிக்க சிலம்பைக் கண்டு, தான் திருடிய அரசியின் சிலம்புக்கு இதை ஈடு கட்ட எண்ணிக் கோவலனைத் தன் இல்லத் தயலே இருக்கச் செய்து அரசனைக் காணச் சென்றான்.

**கள்வர் திறன்**

அரசியின் ஊடலைத் தணிக்கும் காம நோக்குடன் அரசியை நோக்கிச் சென்று கொண்டிருந்த பாண்டியனிடம் சிலம்பு திருடிய கள்வன் என் இல்லத்தருகே உள்ளான் எனக் கூறினன். அவனைக் கொன்று சிலம்பைக் கொணர்க என்று மன்னன் ஆணையிட்டான். அவ்வாறே சென்று, உடன் வந்தவரிடம் கோவலனைக் காட்டினான். கோவலனது தோற்றத்தைக் கண்ட சிலர், இவன் கள்வனாக இருக்க முடியாது என்றனர். அதை ஒவ்வாத பொற் கொல்லன், கள்வர்கள், மந்திரம், தெய்வம், மருந்து, நிமித்தம், தந்திரம், இடம், காலம், கருவி ஆகிய எட்டையும் படையாகக்

கொண்டு திருடுவதில் வல்லவர். இன்ன இன்னதால் இன்னின்னவாறு ஏமாற்றி விடுவர் என்றெல்லாம் கூறினன். மேலும், முன்னொருநாள் இரவில் இளவரசன் உறங்கிக் கொண்டிருந்தபோது அவனது மார்பு மாலையைக் கள்வன் ஒருவன் திருடினான். உடனே இளவரசன், உறையிலிருந்து வாளை உருவினான். கள்வன் வாள் உறையை இளவரசனிட மிருந்து பிடுங்கிக் கொண்டான். இளவரசன் வாளால் குத்தியபோதெல்லாம், கள்வன் அந்தக் குத்துகள் உறைக்குள் செருகிக் கொள்ளும்படிச் செய்துகொண்டேயிருந்து பின் மறைந்து விட்டான். எனவே, இவர்களை நம்ப முடியாது என்றான்.

இதைக் கேட்டிருந்தவர்களுள் ஒருவன், முன்னொரு நாள் இரவில் ஒரு கள்வன் எதிர்ப்பட்டான் - அவனைக் கொல்ல யான் வாளை ஓங்கியபோது அவன் வாளைப் பறித்துக் கொண்டு ஓடிவிட்டான் - எனவே, இவர்களை நம்ப முடியாது என்றான். இவ்வாறு பேசிக்கொண்டிருந்த சூழ்நிலையில், கல்லாக் களிமகன் ஒருவன் கோவலனை வெட்டி வீழ்த்தினான்.

கண்ணகி வழக்குரைக்க, பாண்டியன் நெடுஞ்செழியன் இறந்ததும் முடிசூடிக்கொண்ட அவன் இளவலாகிய வெற்றி வேல் செழியன் ஆயிரம் பொற்கொல்லரைப் பலி கொடுத் தானாம்;

பொற்கொல்லன் ஒருவனது கொடுஞ் செயலால், கோவலன், பாண்டியன், நெடுஞ்செழியன், கோப்பெருந் தேவி, கண்ணகி, கண்ணகியின் தாய், கோவலன் தாய், கவுந்தி, மாதரி ஆகியோர் இறந்து பட்டனர். இதற்கு ஈடாக ஆயிரம் பொற்கொல்லரைப் பலியிட்டதால் இறந்த வர்கள் வந்துவிட்டார்களா?

எந்தத் தொழிலிலும் மறைவு உண்டு. பொல்கொல்லத் தொழிலில் இது சிறிது கூடுதலாக இருக்கலாம் என மக்கள்

ஐயுறுவது உலகியலாயுள்ளது. இதனால் அந்த இனத்தையே பூண்டோடு அழிக்கும் முறையில் ஆயிரவர் பொற் கொல்லரைக் கொன்றதும் கொடுங்கோலேயாகும். ஒருவனால் ஒரு குலமே கெட்ட பெயர் எடுக்கிறது.

மகாத்மா காந்தியண்ணலை நாதுராம்விநாயக கோட்சே என்னும் பிராமணன் கொன்றதனால், மற்ற பிராமணர் களையும் மக்கள் 'கோட்சே' என்னும் பெயரால் சிறிது காலம் குறிப்பிட்டுக் கொண்டிருந்தது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. இதுவும் முறையன்று.

இந்தக் கதைப் பகுதியிலிருந்து தெரிவதாவது:- களவு நூல் இருந்திருக்கிறது - களவு செய்வதற்குப் பயிற்சி கொடுக்கப்பட்டது - இதில் கைதேர்ந்தவர்கள் இருந்தனர் - என்னும் செய்தியாகும். இந்தக் காலத்திலும், களவு செய்வதற்காக இளைஞர்கட்குச் சில இடங்களில் பயிற்சி தரப்படுவதாகக் கூறப்படுகிறது.

கள்வருக்குக் கொலை ஒறுப்பு தரின் படிப்படியாக இது குறையலாம். 'கள்வனைக் கொல்லுதல் கடுங்கோல் அன்று - வெள்வேல் கொற்றம்' என்ற பாண்டியன், அக்காலச் சட்டப்படி, கள்வனாகக் கருதப்பட்ட கோவலனைக் கொல் வித்தான். இந்தச் சட்டம் இருந்த அந்தக் காலத்திலேயே களவு நூலும் பயிற்சியும் இருந்தன - பொற்கொல்லன் போன்ற கள்வர்கள் இருந்தனர் - என்றெல்லாம் எண்ணுங் கால் தலை சுற்றுகிறது. தெருக்கூத்தில், இப்பொற் கொல்லனுக்கு 'வஞ்சிப் பத்தன்' என்பது பெயர்.

சிலம்பில் இளங்கோ, கள்வன் ஒருவனைக் குறிப்பிட்டுக் ''கல்வியில் பெயர்ந்த கள்வன்'' (16:199) எனக் கூறியுள்ளார். தனது களவு நூற்கல்விப் பயிற்சியினால் இடம் விட்டுப் பெயர்ந்து மறைந்து விட்ட கள்வன் - என்பது இதன் கருத்தாகும். களவு நூல் பயிற்சி இல்லாமலே, A-B. C. D-

இருபத்தாறு எழுத்துகளையும் தம் பெயருக்குப் பின்னால் போட்டுக் கொண்டிருக்கும் மேதைகள் சிலர், களவு - கை யூட்டு பெறல் - கையாடல் செய்யும்போது, களவு நூல் பயிற்சி பெற்றவர்கள் களவு செய்வது பற்றிச் சொல்லவா வேண்டும்!

**ஒற்றைச் சிலம்பு**

களவைக் கண்டிக்கும் யான், களவு செய்வதற்குத் துணை புரியும் வழி ஒன்றை அறிமுகப் படுத்துவதைப் பொறுத்தருள வேண்டும். அதாவது:- பொற்கொல்லன் பாண்டியனிடம் இன்னொரு சான்றுக் கருத்தும் கூறியதாக இளங்கோ எழுதியிருக்க வேண்டும் - ஆனால் அவர் விட்டு விட்டார். இணையான - இரட்டையான நகையை விற்ப வர்கள் ஒரே நேரத்தில் இரண்டையுமே விற்பது பெரும் பான்மையான வழக்கு. இரண்டுக் காதுக் கம்மல்களுள் ஒன்றை மட்டும் விற்றால், விற்கும் கம்மலுக்கும் மதிப்பு குறைவு - விற்கப் படாமல் வீட்டில் இருக்கும் ஒற்றைக் கம்மலுக்கும் மதிப்பு குறைவு. பின்னொருகால் ஒற்றைக் கம்மலுக்கு இணையாகும்படி ஒரு புதிய கம்மல் வாங்கினால், இரண்டும் தோற்றத்தில் ஒத்திருப்பது அரிது - ஈடு தாழ்த்தி யாகவே இருக்கும். ஒற்றைக் கம்மலை மட்டும் விற்பவன் எங்கோ திருடிக் கொண்டு வந்துவிட்டான் என ஐயுற இடம் உண்டு. சிலம்புக்கும் இதே கதைதான். அவன் (கோவலன்) எங்கிருந்தோ திருடிக் கொண்டு வந்திருக்கிறான் என்பதற்கு, அவன் ஒற்றைச் சிலம்பு கொண்டு வந்திருப்பதே போதிய சான்றாகும் எனப் பொற்கொல்லன் பாண்டியனிடம் கூறி மேலும் மெய்ப்பிக்கச் செய்திருக்கலாம். அடியேனுக்குத் தோன்றிய இந்தச் சூதுவாதுக் கருத்து இளங்கோவுக்கும் தோன்றியிருப்பின் இன்னும் சிறப்பாயிருக்கும். அடுத்து மேற் செல்லலாம்.

எல்லாச் சாதியினரையும் இழிவுபடுத்தும் சொற்றொடர்களும் பழமொழிகளும் கதைகளும் உலகியலில் உண்டு. நான் கைக்கோளர் இனத்தைச் சேர்ந்தவன். எங்கள் இனத்தைக் குறைவு படுத்தும் சொற்கள் உண்டு எங்கள் இனத்தவருள் சிலர் நெசவு நூல் திருடுவதுபோல், பொற்கொல்லர்கள் சிலர் பொன் திருடுகின்றனர். வேறு தொழிலாளர் சிலரும் தம்மால் இயன்றவரையும் ஒரு கை பார்க்கிறார்கள்.

எனவே, எல்லாத் தொழிலாளரும் பெருந்தன்மையுடனும் நேர்மையுடனும் நடந்து கொள்ள வேண்டும் என்னும் வேண்டுகோளுடன் இந்தத் தலைப்பை நிறைவு செய்யலாம்.

# 26. புகார் - சோழர் சிறப்புகள்

நூலின் தொடக்கத்திலேயே - பத்தாம் அடியிலேயே 'பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்' என இளங்கோ புகாரைப் போற்றியுள்ளார். காவிரிப்பூம் பட்டினத்தின் மற்றொரு சுருக்கமான பெயர் புகார். இந்தக் காலத்தில் பட்டணம் போகிறேன் என்றால் சென்னைக்குப் போகிறேன் என்று சொன்னதான பொருள் படும். அந்தக் காலத்தில் பட்டணம் போகிறேன் என்று சொல்லியிருந் தால் புகாருக்குப் போகிறேன் என்று சொன்னதான பொருள் கொள்ளப்பட்டிருக்கலாம்.

**இளங்கோவின் ஏமாற்றம்**

பொதிய மலையிலும், இமய மலையிலும், குடிமக்கள் என்றும் வேறிடத்துக்குப் பெயர்ந்து செல்ல வேண்டாத அளவுக்கு வாய்ப்பு வசதிகள் நிறைந்ததும் தனக்கென்று தனிச்சிறப்பு உடையதுமாகிய புகாரிலும் சான்றோர்கள் இருப்பதால், இந்த மூன்று இடங்களும் என்றுமே அழிவு என்பதின்றி நிலை பெற்றிருக்கும் என்று - முற்ற முடிந்த நூலறிவும் பட்டறிவும் உடைய சான்றோர் கூறுவர் - என இளங்கோ நம்பிக்கை தெரிவித்துள்ளார்.

> **''பொதியி லாயினும் இமய மாயினும்**
> **பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய**
> **பொதுவறு சிறப்பின் புகாரே யாயினும்**
> **நடுக்கின்றி நிலைஇய என்ப தல்லதை**
> **ஒடுக்கம் கூறார் உயர்ந்தோர் உண்மையின்**
> **முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே''** (1:14 - 19)

என்பது பாடல் பகுதி. ஆனால், இளங்கோவின் நம்பிக்கைக்கு மாறாகப் புகார் கடல் கொள்ளப்பட்டு விட்டது. புகார் நகரம் இருந்த நிலப் பகுதி, தன் இரு பக்கமும் உள்ள நிலப் பகுதியைவிடக் கடலுக்குள் ஓரளவு துருத்திக் கொண்டிருந்திருக்கும்; அதனால் புயல் அடிக்கக் கடலில் கொந்தளிப்பு ஏற்பட அலை மலைபோல் மேலெழுந்து புகாரை விழுங்கி விட்டிருக்க வேண்டும். 1952 ஆம் ஆண்டு தனுஷ்கோடியைக் கடல் ஏப்பம் விட்டதைப் போன்றதுதான் புகாரின் நிலையும்.

**"பொதியி லாயினும் இமய மாயினும்**
**பொதுவறு சிறப்பின் புகாரே யாயினும்"**

என்று மட்டும் இளங்கோ பாடியிருந்தால் நல்லது. ஆனால், புகார் நகரம், பதியெழு வறியாப் பழங்குடி நிலவியது என்று பாடியிருப்பதுதான் பெரிய ஏமாற்றத்தைத் தந்துள்ளது.

புகாரில் இருந்த பழங்குடி மக்கள் வேறிடத்திற்குக் குடிபெயர்ந்துள்ளதாகக் கருத இடமுண்டு. புதுக்கோட்டை மாவட்டத்திலும் இராமநாதபுரம் மாவட்டத்திலும் நாட்டுக் கோட்டைச் செட்டிமார்கள் உள்ளனர். இவர்கள் உள்ள பகுதியைச் செட்டிநாடு என்று அழைப்பர் சிலர். இங்கே உள்ள செட்டிமார்கள் சிலரின் வீடுகள் உயரமான அடித்தளத்தின் மேல் கட்டப்பட்டிருக்கும்.

1962 ஆம் ஆண்டு, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் உயர்திரு டாக்டர் ச. மெய்யப்பன் அவர்களுடன் மற்றொரு செட்டியார் எங்கள் வீட்டிற்கு வந்தார். அவரும் எனக்கு நண்பராகி விட்டார். பெயர் நினைவில்லை. நான் அவரை நோக்கி, உங்கள் ஊர்ப் பக்கங்களில் வீட்டின் கீழ்த்தளமே - அதாவது முதல் தளமே உயரமான அடித்தளத்தின் மேல் கட்டப்

பட்டிருப்பது ஏன்? - என்று கேட்டேன். அதற்கு அவர் இறுத்த விடை விளக்கமாவது:-

எங்கள் இனத்தவர்கள் காவிரிப்பூம் பட்டினமாகிய புகாரிலிருந்து வந்தவர்கள். புகாரைக் கடல் கொண்டு விட்டதாலும், எஞ்சியிருந்த பகுதியில் வீடுகளில் இருந்த பொருள்கள் நனைந்து கெட்டு விட்டதாலும், நீர் அச்சம் மிகுந்த கடற்கரைப் பகுதியில் வசிப்பதை வெறுத்து, நீர் அச்சம் இல்லாத மேட்டுப் பாங்கான இப்போதுள்ள இடத்திற்கு வந்து விட்டனர். வெள்ளம் வரலாம் என்ற தண்ணீர் அச்சத்தால், பல படிகள் அமைத்த அடித்தளத்தின்மேல் வீடுகளைக் கட்டினர் - என்பது அவர் தந்த விளக்கம். இந்தக் கருத்தைப் பற்றி மற்ற செட்டிமார்கள் என்ன எண்ணுவார்களோ - தெரியாது. எதுவோ - எப்படியோ? பதியெழு வறியாப் பழங்குடி நிலைஇய புகார்' என்னும் இளங்கோவின் கூற்று ஏமாற்றத்திற்கு இடமாகி விட்டது. ஆனால் இயற்கையின் திருவிளையாடலுக்கு இளங்கோ பொறுப்பாளர் ஆகார்.

தேவர் (சொர்க்க) உலகத்தையும் நாக நாட்டையும் ஒத்த இன்பமும் புகழும் பொருந்தியதாம் புகார்.

**"நாகநீள் நகரொடு நாகநா டதனொடு**
**போகம்நீள் புகழ்மன்னும் புகார் நகர்"** (1:21,22)

என்பது பாடல் பகுதி. புகார், அரசரும் விரும்பும் மிக்க செல்வம் உடைய வணிகர் மிக்கது: உலகம் முழுவதும் வரினும் விருந்தோம்பி வேண்டியதைத் தரக்கூடிய வளம் உடையது. கப்பல் வாயிலாகவும் கால்நடை முதலிய வேறு வகையிலும் பல நாட்டுப் பொருள்களும் வந்து குவிவதால் பல நாடுகள் ஒன்று சேர்ந்திருப்பது போன்றது.

கோடிபல அடுக்கிய கொழுநிதிக் குவியல் நிறைந்த புகார் நகரில் மாலை கழிந்தும் வாணிகம் நடக்கும் வாணிகத்

தெருவில், வண்ணம் சாந்து மலர் கம்மியரின் பொருள் மோதகம் மீன் முதலியன விற்போர் வைத்திருக்கும் விளக்குகளும், கலங்கரை விளக்கமும், பரதவரின் படகு விளக்குகளும் அயல் நாட்டவர் பயன்படுத்தும் விளக்குகளும் காவலர் கையாளும் விளக்குகளும் ஒளி பொழிந்தனவாம்.

புகாரில் கற்பகக் கோட்டம், வெள்யானைக் கோட்டம், நாகர் கோட்டம், ஞாயிறு கோட்டம், வேல் கோட்டம், வச்சிரக் கோட்டம், நிக்கந்தர் கோட்டம், நிலாக் கோட்டம், முதலிய கோட்டங்கள் இருந்தன.

புகார் நகரம் இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. கிழக்கே கடற்கரைப் பக்கமாக இருந்தது மருவூர்ப் பாக்கம் எனவும், மேற்குப் பக்கம் இருந்த மறுபாதி பட்டினப் பாக்கம் எனவும் பெயர் வழங்கப்பட்டன.

மருவூர்ப் பாக்கத்தில் இருந்தவை வருமாறு: அணிகல மாளிகை, சரக் கறைகள், மிலேச்சர் இருப்பிடம், பிற நாட்டார் இருப்பிடம், தொய்யில்குழம்பு சுண்ணம் சாந்து மலர்கள் ஆரம் அகில் விற்பவர் தெருக்கள், பலவகை உலோகம் மரம் ஆகியவற்றால் பொருள்கள் செய்து உண்டாக்கும் கம்மியர் தெருக்கள், தையல்காரர் - தோல் வேலை புரிபவர் - பூக்கட்டுவோர் தெருக்கள், பல் இயங்கள் கொண்டு பாடும் பாணர் தெரு, ஒழுக்கமற்ற சிறு தொழிலோர் தெரு - முதலிய பகுதிகள் மருவூர்ப் பாக்கத்தில் இருந்தவை. வாணிகம் என்னும் தலைப்பிலும் பாடலுடன் இச்செய்தி இந்நூலில் இடம் பெற்றுள்ளது.

அடுத்து, பட்டினப் பாக்கத்தில் இருந்தவை: மன்னர், அமைச்சர், படைவீரர், அந்தணர், வணிகர், சூதர், மாகதர், மருத்துவர், சோதிடர், முத்துக் கோப்பவர், சங்கு அறுப்பவர், நாழிகை அறிவிப்பவர், படைத் தலைவர்கள், கூத்தர், பதியிலார், நகை வேழம்பர், திருவிழா முழவு கொட்டுவோர்

முதலியோர் வாழ்ந்த தெருக்கள் முதலியன பட்டினப் பாக்கப் பகுதியில் இருந்தன. அரண்மனை வட்டாரம் இந்தப் பகுதியில்தான் இருந்தது.

இந்த இருவேறு பாக்கங்களைப் பற்றி எண்ணுங்கால், எங்கும் பிரிவினை - எதிலும் பிரிவினை இருக்கும்போலும் என எண்ணத் தோன்றுகிறது.

மாறுபட்ட இரு வேந்தர்களின் பாசறைகளுக்கு நடுவே போர்க்களம் இருப்பதுபோல், இந்த இரண்டு பாக்கங்கட்கும் இடையே நாளங்காடி என்னும் பகுதி இருந்தது. அங்கே, முசுகுந்தச் சோழனுக்கு உதவிய பூதத்தின் கோயிலும் பலி பீடிகையும் இருந்தன. பலிபீடிகையில் பலியிடலும், ஆடல் பாடலும் நிகழ்ந்தது உண்டு. மற்றும் புகாரில் உள்ளனவும் நடந்தனவும் வருமாறு:

**உயிர்ப் பலி மேடை**

முசுகுந்தச் சோழன் காலத்திலிருந்தே மறவர்கள் (வீரர்கள்) தம் உயிர்ப்பலி கொடுத்து வந்தனர். மருவூர்ப் பாக்கத்து மறவர்களும் பட்டினப் பாக்கத்து மறவர்களும் ஒருவருக்கு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு, அரசன் வெல்க என வாழ்த்தித் தம் தலையைத் தாமே அரிந்து பலி கொடுத்துக் கொள்வார்களாம். தற்கொலைப் படையினர் அந்தக் காலத்திலேயே இருந்தனர் என்பது இதனால் உய்த்துணரக் கிடக்கிறது. இது போன்றதோர் உயிர்ப்பலி கலிங்கத்துப் பரணியில் சொல்லப்பட்டுள்ளது:

மறவர்கள் தலையை அடிக்கழுத்தோடு அரிந்து கொற்றவையின் கையில் கொடுப்பராம். தலை கொற்றவையைத் துதிக்குமாம். குறையுடலும் கொற்றவையைக் கும்பிட்டு நிற்குமாம். (பாடல்: கோயில் பாடியது-15)

**"அடிக்கழுத்தின் நெடுஞ்சிரத்தை அறிவ ராலோ**
**அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்ப ராலோ**
**கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவு மாலோ**
**குறையுடலம் கும்பிட்டு நிற்கு மாலோ**

சிலப்பதிகார உயிர்ப்பலியைவிட, கலிங்கத்துப்பரணி உயிர்ப்பலி கடுமையாகத் தெரிகிறதே!

கரிகாலன் பகைவரிடமிருந்து பெற்ற முத்துப் பந்தரும் பட்டி மண்டபமும் வாயில் தோரணமும் உள்ள மண்டபம் ஒரு பகுதியில் இருந்தது.

வெள்ளிடை மன்றம்: பரசரக்குப் பொதிகள் உள்ள இடம். திருடியவர் ஊர் சுற்ற வைக்கப்படுவர்.

இலஞ்சி மன்றம்: நோயுற்றோர் குளித்தால் நோய் போக்கும்.

நெடுங்கல் மன்றம்: பித்து மருந்து உண்டவர், நஞ்சு அருந்தியவர், பேய் கோட்பட்டவர் ஆகியோர் இந்த மன்றத்தைச் சுற்றிவரின் நோய் போக்கும். இதில் உள்ள கல் ஒளி உமிழும்.

பூத சதுக்கம்: பொய் வேடத்தார், கற்பு கெட்டவர், தீய அமைச்சர், பிறன்மனை விரும்புபவர், பொய்ச் சான்று புகன்றவர் ஆகியோரைப் புடைத்து உண்ணும் பூதத்தின் இருப்பிடம் அது.

**பாவை மன்றம்**

அரசன் கோல் கோடினும், நீதி மன்றத்தார் நடுநிலை தவறினும் வாய் பேசாமல் நீர் சொரியும் பாவையுள்ள மன்றம் இது.

இந்திர விழாவின்போது, பல தெய்வங்களின் கோயில் களிலும் தீ வளர்த்தனர். முப்பத்து மூவர் முதலியோர்க்கு

விழா எடுத்தனர். சமணப் பள்ளிகளிலும் புத்தப் பள்ளி களிலும் பல சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பல்வேறு இசை வல்லுநர்களின் இசை நிகழ்ச்சிகள் இடம் பெற்றன. அரச வினைஞர் பலரும் சேர்ந்து இந்திரனை எழுந்தருளச் செய்து விழா நடத்தினர்.

விழாக் காலத்தில், தெருவில் கோவலன் முதலிய காமுகர்கள் களித்துத் திரிந்தனர். தெருவில் பொது மகளிர் பலர் திரிந்தனர். அவர்களின் மார்புகள் தெருவில் ஆடவர்களின் மார்புகளோடு உரசின. அதனால், பொது மகளிரின் மார்புத் தொய்யில் குழம்பு ஆடவர் மார்பில் தோய்ந்தன. இந்த மார்போடு வீடு செல்லின் மனைவி நம் மேல் ஐயங்கொண்டு கடிவாள் என எண்ணி ஆடவர் விருந்தினரோடு சென்றனராம். ஊடல் தீர்ப்பவரின் பட்டியலில் விருந்தினர்க்கும் இடம் உண்டல்லவா?

திருநீலகண்ட நாயனாருக்கும் இந்த விதமான இடையூறு (விபத்து) நேர்ந்தது. அவர் விருந்தினரோடு செல்லவில்லை போலும். அவர் மனைவி அவர் மேல் ஐயங் கொண்டு எம்மைத் தொடாதீர் என்றார். அதிலிருந்து மாற்று சேலை கட்டிய திருமேனிகளைத் திரும்பியும் பாராராயினார். அதனால், பட்டினத்தார், "மாது சொன்ன சூளால் இளமை துறக்க வல்லேன் அல்லேன்" என்று அவரை உள்ளத்தில் குறிப்பிட்டுக் கொண்டு பாடினார்.

சிலம்பில் இளங்கோவடிகள், இலக்கியச் சுவைக்காக இப்படியொரு காட்சியைப் படைத்துள்ளார். வேண்டு மென்றே உரசிக் கொண்டு போதல் நடக்கலாம்; ஆனால், விருந்தினரோடு போகும் அளவிற்கு நிலைமை முற்றியிராது.

புகாரின் சிறப்புப் போலவே சோழர் குடியின் சிறப்பும் பாராட்டத் தக்கது. மதுராபதி கண்ணகிக்குப் பல கூறிய போது, புறாவுக்காகத் தசையை அரிந்து கொடுத்த சோழன்

பெருமையையும், கன்றுக்காகத் தன் மகன்மேல் தேரோட்டி முறைசெய்த மனுநீதி சோழனின் பெருமையையும் கூறிற்று.

சோழ நாட்டுக் கற்புடைய மங்கையரின் புகழ் மிக்க வரலாறுகள் கண்ணகியால் கூறப்பட்டன.

சிலம்பில் சோழரின் வெற்றிகள் சில குறிப்பிடப்பட்டு உள்ளன: தெற்கிலும் மேற்கிலும் பகை இல்லையாதலின் கரிகாலன் வடக்கே படையெடுத்துச் சென்று வென்றது, இமயத்தைச் செண்டால் அடித்தது, புலி பொறித்தது ஆகியவை அறிவிக்கப்பட்டுள்ளன.

மற்றும், முசுகுந்தச் சோழன் இந்திரனுக்கு உதவி செய்தமை, தொடித்தோட் செம்பியன் தூங்கெயில் எறிந்தமை முதலிய சோழர் குடியின் சிறப்புகள் பல பெரிது படுத்திப் பேசப்பட்டுள்ளன.

அரசன் நன்முறையில் செங்கோல் செலுத்தினாலேயே பெண்களின் கற்பு காக்கப்பட்டுச் சிறப்பெய்தும் என்னும் தமிழ் உரையை மெய்ப்பிக்கும் வகையில் கண்ணகி தன் கற்பின் திண்மையால், கிடைத்த புகழைச் சோழ மன்னனுக்கு உரிய தாக்கினாளாம்.

**''அருந்திறல் அரசர் முறைசெயின் அல்லது**
**பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாதெனப்**
**பண்டையோர் உரைத்த தண்தமிழ் நல்லுரை**
**பார்தொழு தேத்தும் பத்தினி யாகலின்**
**ஆர்புனை சென்னி அரசர்க்கு அளித்து''** (28:207-211)

என்பது பாடல் பகுதி. மணிமேகலைக் காப்பியத்திலும் இந்தக் கருத்து இடம் பெற்றுள்ளது:

**''மாதவர் நோன்பும் மடவார் கற்பும்**
**காவலன் காவல் இன்றெனின் இன்றால்''** (23:208-9)

என்பது பாடல் பகுதி. இவ்வாறாகப் புகாரின் சிறப்பும் சோழர் குடிச் சிறப்பும் உரிய முறையில் சிலம்பில் இடம் பெற்றுள்ளன.

# 27. மதுரை - பாண்டியன் சிறப்புகள்

**"பாடல் சால் சிறப்பின் பாண்டியன் பெருஞ்சீர்**
**மாட மதுரை"** (பதிகம் - 19, 20)

என மதுரையும் பாண்டியனும் சிறப்பிக்கப் பெற்றிருப்பதைச் சிலம்பின் பாயிரப் பகுதியில் காணலாம். மதுரையின் சிறப்புகள் பாண்டியனுக்கும் உரியன - பாண்டியன் சிறப்புகள் மதுரைக்கும் உரியன – இரண்டையும் ஒரு சிறிது காணலாம்:

புறஞ்சேரி யிறுத்த காதையில் கோவலன் கவுந்தியிடம் கூறுகிறான்: பகலில் கொடிய வெயிலில் கொதிக்கும் பரல் கல் நிறைந்த பாதையில் கண்ணகியின் கால்கள் நடக்க மாட்டா. ஆதலின், இனி நாம் இரவில் பயணம் செய்யலாம். பாண்டியனது ஆட்சியிலே இரவில் பயணம் செய்ய எந்த விதமான அச்சத்திற்கும் இடமில்லை. கண்டாரைக் கொல்லும் கரடியும் எந்தப் புற்றையும் அகழாது. வரிப் புலியும் மான் கூட்டத்தைக் கொல்ல நினையாது. முதலையும் பாம்பும் பேயும் இடியும் எவ்வுயிர்க்கும் இன்னல் விளைக்கமாட்டா. செங்கோலனாம் பாண்டியன் காக்கும் நாடு இத்தகையது என்ற பெரும் புகழ் எங்கும் பரவியுள்ளது; ஆதலின் நாம் இரா வழி நடக்கலாம் என்று கோவலன் கூறினான்.

**"கோள்வல் உளியமும் கொடும்புற்று அகழா**
**வாள்வரி வேங்கையும் மான்கணம் மறலா**
**அரவும் சூரும் இரைதேர் முதலையும்**
**உருமும் சார்ந்தவர்க்கு உறுகண் செய்யா**
**செங்கோல் தென்னவன் காக்கும் நாடென**
**எங்கணும் போக்கிய இசையோ பெரிதே"** (13:5 - 10)

என்பது பாடல் பகுதி. அறவோர், தவசியர், முனிவர் முதலிய நல்லோர் இருக்கும் பகுதியில் ஓநாயும் ஆட்டுக் குட்டியும் ஒரு துறையில் நீர் அருந்தும், புலியும் மானும் ஓரிடத்தில் உறங்கும் என்பன போன்ற கற்பனைகளைப் புலவர்கள் புகல்வது இலக்கிய மரபு. இந்த மரபைப் பல நூல்களில் காணலாம். இவ்வாறு இங்கே, இளங்கோ கோவலன் வாயிலாகக் குரல் கொடுத்துள்ளார். தக்க குறிக்கோளுடனேயே ஆசிரியர் இங்கே இச்செய்தியைக் கூறியுள்ளார். அது பின்னர் விளக்கப்படும்.

கோவலன் நடைவழியில் வந்த பாணர்களோடு எளிமை யாய்ப் பழகித் தானும் பாடினான். மதுரை இன்னும் எவ்வளவு தொலைவில் உள்ளது என அவர்களை வினவி னான். அவர்கள் இறுத்த விடையாவது:-

மதுரையில் உள்ள பலவகை நறுமணக் குழம்புகளிலும் நறுமண மலர்களிலும் நறுமணப் புகைகளிலும் தோய்ந்த மதுரைக் காற்று இதோ நம்மேல் வீசுகின்றது. புலவர்களால் போற்றப்பட்டிருப்பினும் நறுமணப் பொருள்களுடன் கல வாமையால் தென்றல் காற்று இந்த மதுரைக் காற்றிற்கு ஒப்பாகாது. மதுரைக் காற்று நம்மேல் வீசத் தொடங்கி விட்டதால், பாண்டியனது மதுரை மிகவும் அண்மையில் உள்ளதென அறியலாம். தனியாகப் பயணம் செய்யினும் யாரும் மறித்துத் தொல்லை தர மாட்டார்கள். அத்தகைய பாதுகாப்பானது வழி. நீங்கள் இரவிலும் செல்லலாம் என்று அவர்கள் கூறினர்.

> **''புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பின்**
> **பொதியில் தென்றல் போலாது ஈங்கு**
> **மதுரைத் தென்றல் வந்தது காணீர்**
> **நனிசேய்த் தன்று அவன் திருமலி மூதூர்**
> **தனிநீர் கழியினும் தகைக்குநர் இல்''** (13:130 - 134)

என்பது பாடல் பகுதி. பொதியத்திலிருந்து வரும் தென்றல் காற்றினும் மதுரையிலிருந்து வரும் காற்று சிறந்ததாம். பாண்டியனது நாட்டுப் பகுதியில் தனியாகச் செல்லினும் அச்சம் இல்லையாம். எவ்வளவோ சுவையான செய்தி இது!

நாகரிகம் மிக்க - அறிவியல் வளர்ச்சி பெற்றுள்ள இன்றைய இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் (கி.பி. 1992) தனியாகச் செல்ல முடியாதது மட்டுமன்று; கூட்டாகச் செல்லவும் முடியவில்லையே. மக்கள் மந்தை இனித் திருந்துவது என்ஞான்றோ!

மூவரும் மதுரையை நெருங்கினர். அப்போது, கோயில்களின் முரசொலி, அந்தணர் மறை ஓதும் ஒலி, மறவரின் முரசொலி, யானைகளின் பிளிற்றொலி, குதிரைகள் கனைக்கும் ஒலி, மள்ளர் கொட்டும் பறை ஒலி முதலிய ஒலிகள் கடல் ஒலிபோல் ஆர்த்து இம்மூவரையும் எதிர் கொண்டு வரவேற்பதுபோல் கேட்கப்பட்டன.

**"கார்க்கடல் ஒலியின் கலிகெழு கூடல்**
**ஆர்ப்பு ஒலி எதிர் கொள"** (13: 149, 150)

என்னும் பாடல் பகுதியில் உள்ள 'எதிர் கொள' என்பது எண்ணத்தக்கது. 'எதிரே ஒலிக்க' என்றும் பொருள் கொள்ளலாம் எனினும், எதிரேற்றதாக - வரவேற்றதாகப் பொருள் கொள்ளல் சுவையுடைத்து. மதிப்பிற்கு உரிய சிலர் ஊருக்குள் புகும்போது மேளதாள முழக்கத்துடன் வரவேற்பது உண்டு. அது போன்றது இது என்று கொள்ளலாம். இது உண்மையன்று. இது ஒரு தற்குறிப் பேற்றமே. இதற்கு இன்னொரு விதமாகவும் பொருள் கொண்டு பார்க்கின் படிப்பவர்கள் ஒத்துக்கொள்வார்களா? அதாவது - இம்மூவரும் மதுரையில் வாழப்போவதில்லை - மூவருமே இறக்கப் போகின்றனர் என்ற குறிப்பில் 'எதிர்

மாறாக' ஒலிக்க என்பது தான் அந்தப் பொருள். இது ஒரு வேடிக்கைப் பொருளே.

பின்னர் மூவரும் வையை ஆற்றை அடைந்தனர். ஆற்றில் தண்ணீர் தெரியவில்லை. கண்ணகிக்குப் பின்னால் நிகழவிருக்கும் இறப்பினை முன் கூட்டி அறிந்தவள் போலவும் வருத்தத்துடன் இவர்களைப் பார்க்க விரும்பாதவள் போலவும் வையை என்னும் நல்லாள் தன் உடல் முழுவதையும் போர்வையால் மறைத்துக் கொண்டாள். போர்வை எது? பல்வேறு மண மலர்கள் தண்ணீரில் அடித்துக் கொண்டு மிதந்து வருவதால், அந்தத் தோற்றம் போர்வையால் மறைத்துக் கொண்டதுபோல் தோன்றுகிறது. மேலும், வையை நல்லாள் கண்ணீரை வெளிக்கொணராமல் அடக்கிக் கொண்டாளாம்:

**''வையை என்னும் பொய்யாக் குலக்கொடி**
**தையற்கு உறுவது தான் அறிந்தனள் போல்**
**புண்ணிய நறுமலர் ஆடை போர்த்துக்**
**கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி''** (13:170-173)

என்பது பாடல் பகுதி. 'கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி' என்பதற்கு இருபொருள் தந்துள்ளார் இளங்கோ. கண் என்பதற்கு இடம் என்னும் பொருள் உண்டு. வையை தன் இடத்தில் நிறைந்துள்ளதும் நெடுந்தொலைவிலிருந்து வந்து கொண்டிருப்பதுமாகிய தண்ணீரை, கரையைக் கடந்து மேலேறி எதையும் அழிக்காமலும் இவர்களையும் அச்சுறுத்தாமலும் அடக்கிக் கொண்டதாம். இந்தத் தொடரில் இரு பொருள் (சிலேடை) அணியும் தற்குறிப் பேற்ற அணியும் உள்ளன. வையை இயற்கையாக மலர்களால் மூடப்பட்டுக் கரை கடக்காமல் செல்வதற்கு, இவர்கட்காக அவ்வாறு செய்வதாக ஆசிரியர் தாமாக ஒரு காரணம் குறித்து ஏற்றியிருப்பதால் இது தற்குறிப்பு ஏற்ற அணி அமைந்துள்ளதாகிறது.

பின்னர் மூவரும் மரப்புணையில் ஏறி வையையைக் கடந்து அதன் தென்கரையை அடைந்து மதுரையை ஒரு சுற்றுச்சுற்றி மதுரையின் புறஞ்சேரியில் ஓரிடத்தில் தங்கினர்.

வழியில் இவர்களைக் கண்ட குவளை, ஆம்பல், தாமரை ஆகிய மலர்கள் இவர்கட்கு வரப்போகும் துன்பத்தை ஐயம் இல்லாமல் அறிந்தனபோல, வருத்தமான இசையுடன் ஏங்கிக் கண்ணீர் கொண்டு காலுற நடுங்கினவாம்.

> **"கருநெடுங் குவளையும் ஆம்பலும் கமலமும்**
> **தையலும் கணவனும் தனித்துறு துயரம்**
> **ஐயம் இன்றி அறிந்தன போலப்**
> **பண்ணீர் வண்டு பரிந்து இனைந்து ஏங்கிக்**
> **கண்ணீர் கொண்டு காலுற நடுங்க"** (13:184-188)

~~என்பது இசையின் தன்மை~~என்பது பாடல் பகுதி. பண் நீர் என்பது இசையின் தன்மை. பச்சையாக எழுதவேண்டுமெனில், மலர்கட்காக வண்டுகள் கூலிக்கு மாரடித்துக் கொண்டு இரங்கல் இசை (சோககீதம்) பாடின என்று எழுதவேண்டும். மலர்கள் தங்களுக்காக இரங்கல் இசைக்கும் வண்டுகட்குக் கொடுக்கும் கூலி தேனாகும். மற்றும் மலர்கள் கண்ணீர் சிந்தினவாம். கண்ணீர் என்பதற்கு மற்றொரு பொருள் கள்நீர் - தேன் என்பதாம். மலர்கள் கால் உற நடுங்கின என்பது, காற்று (கால்) அடிப்பதால் ஆடி அசைந்தன என்னும் மற்றொரு பொருளைத் தரும் இதுவும் தற்குறிப் பேற்றமே.

மற்றும், மதில்களின் மேல் பறக்கும் நீண்ட துணிக் கொடிகள், இவர்களை நோக்கி நீங்கள் மதுரைக்கு வராதீர்கள் என்று கை நீட்டித் தடுப்பது போல் இவர்கள் பக்கம் நீட்டிக் கொண்டு பறக்கின்றனவாம்.

**"போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி**
**வாரல் என்பதுபோல் மறித்துக் கை காட்ட"**
(13:189-190)

என்பது பாடல் பகுதி. இதுவும் தற்குறிப் பேற்றமே.

காற்றில் பறக்கும் கொடிகளைக் குறிப்பிட்டு, வராதே எனத் தடுப்பது போலவோ வருக என வரவேற்பது போலவோ சில இலக்கியங்களில் தற்குறிப் பேற்றம் செய்யப்பட்டுள்ளது. வில்லி பாரதத்திலிருந்து இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் முறையில் ஒன்று காண்பாம்:

கிருட்டிணனிடம் துணைவேண்ட வந்த துரியோதனனை நோக்கி, நீ வேண்டினும் கண்ணன் பாண்டவர்க்குத் தவிர, உனக்குப் படைத்துணையாக வரமாட்டான் - நீ திரும்பிப் போகலாம் என்று கைகளால் தடுப்பது போல் மதில்மேல் உள்ள துணிக்கொடிகள் அசைந்தனவாம் பாடல்:

**"ஈண்டு நீ வரினும் எங்கள் எழிலுடை**
**எழிலி வண்ணன்**
**பாண்டவர் தங்கட் கல்லால் படைத் துணை**
**யாக மாட்டான்**
**மீண்டு போகென்று அந்த வியன்மதில்**
**குடுமி தோறும்**
**காண்டகு பதாகை ஆடை கைகளால்**
**தடுப்ப போன்ற"** (உத்தியோக பருவம் - 2-6)

என்பது பாடல். இது வராதே எனத் தடுக்கும் பாடல். அடுத்து, வருக என வரவேற்கும் பாடல் ஒன்றைக் கம்பராமாயணம் - மிதிலைக் காட்சிப் படலத்திலிருந்து காண்பாம்: தாமரை மலரினளாகிய திருமகள், நாம் செய்த தவத்தால் சீதையாக நம்மிடம் வந்து தோன்றியுள்ளாள் என்று மிதிலை நகரம் மகிழ்ச்சியுற்று, அவளை மணக்கப் போகும் திருமாலாகிய இராமன் வந்த

போது, துணிக் கொடிகளாகிய கைகளை நீட்டி விரைவில் வருக என அழைப்பதுபோல் கொடிகளின் அசைவு இருந்ததாம். பாடல்:

**''மையறு மலரின் நீங்கி யான்செய் மாதவத்தின்வந்து**
**செய்யவள் இருந்தாள் என்று செழுமணிக் கொடிகள் என்னும்**
**கைகளை நீட்டி அந்தக் கடிநகர் கமலச் செங்கண்**
**ஐயனை ஒல்லை வா என்று அழைப்பது போன்ற தம்மா''** (1)

என்பது பாடல். ஒல்லை வா என்பதற்கு விரைவில் வருக என்பது பொருள். கொடிகள் மிகவும் படபடப்புடன் காற்றில் அசைந்தாடுவது ஒல்லை வா என அழைப்பது போலத் தெரிகிறதாம்.

கண்ணகியைக் கவுந்தியுடன் தங்க வைத்து மதுரை மூதூரைச் சுற்றிப் பார்க்கச் சென்ற கோவலன் மதுரையில் கண்டவை: நறுமணப் பொருள்கள் விற்கும் தெரு, பொது மகளிர் தெரு, பல்பொருள் அங்காடித் தெரு, ஒன்பான் மணிகள்விற்கும் தெரு, துணிக்கடைத் தெரு, கூலக் கடைத் தெரு, பல்வேறு குலத்தினர்களின் தெருக்கள், முச்சந்தி, நாற்சந்தி, கோயில், அங்காடி, பலிமன்றம், கவர்க்கும்வழிகள், கொடியாலும் பதாகையாலும் வெயில் தெரியாமல் பந்தல் போட்டது போன்ற தெருக்கள் முதலியவற்றைக் கண் கொள்ளாக் காட்சியாகக் கண்டான்.

மதுரையில் சிவன், திருமால், பலதேவன், முருகன் ஆகியோர் கோயில்கள், அறவோர் இருப்பிடங்கள், மன்னவன் கோயில் ஆகிய இடங்களில் காலையில் முழவு, சங்கு, கொம்பு முதலியவை முழங்கும்.

அங்காடித் தெருவில், வண்டி வகைகள், அங்குசம், சாமரம், தோற்கடகம், கவசம், குத்துக்கோல், செம்பாலும்

வெண்கலத்தாலும் செய்யப்பட்ட பொருட்கள், படைக்கல வகை, மாலை வகை, ஆனைக் கொம்பு, தொழில் கருவிகள், சாந்து வகைகள் முதலியவை மயங்கிக் கிடக்கும்.

பொன் கடைகளில் சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் ஆகிய நால்வகைப் பொன்கள் விற்கும்.

அறுவைக் கடைகளில் பருத்தி, பட்டு, எலிமயிர் முதலியவற்றாலான ஆடைகள் ஒவ்வொரு வகையிலும் நூற்றுக்கணக்கில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும்.

கூலக் கடைத் தெருவில் துலாக்கோலுடனும் மரக்காலுடனும் தரகர் திரிவர். மிளகு, பாக்கு முதலியவற்றின் பொதிகள் நிறைந்திருக்கும். பதினாறு வகைக் கூலங்கள் விற்கும்.

கோட்டை மதில்களின்மேல் தாமே இயங்கும் எந்திரப் பொறிப் படைக்கலங்கள் இருக்கும். அவை: வில் பொறி, குரங்குப் பொறி, கவண்கல் பொறி, காய்ச்சிய நெய்யும் செம்பு உருக்கும் உள்ள பொறிகள், கல் கூடை, தூண்டில் பொறி, கழுத்தை முருக்கும் பொறி, மூளையைக் கடிக்கும் பொறி, மதில்மேல் ஏறுவோரைக் கீழே தள்ளும் பொறி, கழுக்கோல், அம்புக்கட்டுப் பொறி, ஊசிப்பொறி, கண்ணைக் கொத்தும் சிச்சிலிப் பொறி, பன்றிப் பொறி, அடிக்கும் மூங்கில் பொறி, களிற்றுப் பொறி, பாம்புப் பொறி, கழுகுப் பொறி, புலிப் பொறி, சகடப் பொறி, தகர்ப் பொறி, முதலியவை உள்ளன. இவை எதிரிகளைத் தாமே தாக்கும்.

**திங்கள் குலம்**

அந்திவானத்தில் பிறைநிலா என்பவன் தோன்றி மாலையாகிய குறும்பர்களை வென்று வெண்கதிர் பரப்பி மீனரசு ஆள்கின்றானாம். எதனால் இதைச் செய்ய முடிகின்றதென்றால், இளையவராயினும் பகைவர்களை

வெல்லும் பாண்டியர் குலத்திற்கு முதல்வனாயிருத்தலி னாலாம். பாண்டியர்கள் மதி குலத்தவர் எனப்படுவர்.

**"இளைய ராயினும் பகையரசு கடியும்**
**செருமாண் தென்னர் குலமுத லாகலின்**
**அந்தி வானத்து வெண்பிறை தோன்றிப்**
**புன்கண் மாலைக் குறும்பெறிந்து ஓட்டிப்**
**பான்மையின் திரியாது பால்கதிர் பரப்பி**
**மீனர சாண்ட வெள்ளி விளக்கத்து"** (4:21-26)

என்பது பாடல் பகுதி. பாண்டியர்கள் இளம்பருவத்திலே பகைவர்கள் எதிர்த்துவரினும் அவர்களை வெல்பவராம். இந்தக் கருத்து புறநானூற்றுப் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளது. பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடியுள்ளார். இடி சிறிய அளவினதாயினும் பெரிய பாம்புக்குலத்தைப் பூண்டோடு அழித்தல்போல், பகைவரை அழிக்கக் கூடிய பஞ்சவர் (பாண்டியர்) ஏறு எனப் பாடி யுள்ளார்.

**"இளைய தாயினும் கிளைஅரா எறியும்**
**அருநரை உருமின் பொருநரைப் பொறாஅச்**
**செருமாண் பஞ்சவர் ஏறே நீயே"** (58:6-8)

அளவில் சிறிய இடி என்னும் உவமையால் பாண்டியர் சிறு பருவத்திலேகூடப் பகை வெல்வர் என்னும் பொருள் அறியவரும். மற்றும் ஒன்று:- பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை இடைக்குன்றூர் கிழார் பாடியுள்ளார். நெடுஞ்செழியன் சிறுவனாம்; காலில் குழந்தைகட்குரிய கிண்கிணி அணிந்திருந்தானாம். குழந்தைக்குக் காப்பளிக்கும் ஐம்படைத் தாலி கழுத்தில் பூண்டிருந்தானாம். இந்த நிலையில், பகைவர்கள் வந்து விட்டார்கள். உடனே சிறுவன் பாண்டியன் காலில் கிண் கிணியைக் களைந்து மறக்கழல் கட்டிக் கொண்டானாம்;

ஐம்படைத் தாலியைக் கழற்றி எறிந்தானாம்; பால் அருந்துவதை விட்டுச் சோறு உண்டு போருக்குப் புறப்பட்டுப் போய் வெற்றி பெற்றானாம்:

**"கிண் கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டு.....**
**பால்விட்டு அயினியும் இன்று அயின்றனனே...**
**உடன்று மேல்வந்த வம்ப மள்ளரை....**
**கவிழ்ந்து நிலஞ் சேர அட்டதை**
**மகிழ்ந்தன்றும் மலிந்தன்றும் அதனினும் இலனே"** (77)

என்பது பாடல் பகுதி. இந்த வரலாறுகளைப் பின்னணியாகக் கொண்டு "இளைய ராயினும் பகையரசு கடிவர் தென்னர்" என்று இளங்கோ பாடியுள்ளார். திங்களுக்கு 'உடு பதி' என்னும் பெயர் உண்மையைக் கம்பராமாயணம் முதலிய நூல்களில் காணலாம். உடுபதி என்றால் விண்மீன்களின் தலைவன் என்பதாம். இந்தக் கால அறிவியல் நிலையில் பார்க்காமல் அந்தக் காலச் சூழ்நிலையில் நின்று இதை நோக்க வேண்டும். இரவில் விண்மீன்களினும் திங்கள் பெரியதாய்த் தெரிதலின் உடுபதி என்றனர். (உடு = விண்மீன்; பதி = தலைவன்). அசுவனி முதல் இரேவதி வரையிலான இருபத்தேழு விண்மீன்களையும் பெண்கள் என்பதும், அவற்றின் கணவன் திங்கள் என்பதும் புராணச் செய்தி, இந்த வகையில் நோக்கின், விண்மீன்களின் கணவன் என்று பொருள் கொள்வர். இந்த உடுபதி என்பதைத்தான் 'மீன் அரசு' என்று இளங்கோ கூறியுள்ளார்.

**நெடியோன்**

நாடுகளைக் கொண்டு நன் முறையில் செங்கோல் செலுத்தி, கொடுந்தொழில்களை அறவே களைந்து வெற்றியும் புகழும் நிலையாகக் கொண்டு உலகு புரக்கும் சிறப்பினை உடையவன் பாண்டியன் என அழற்படு காதையில் அறிவிக்கப்பட்டுள்ளது,

**"மண்ணகம் கொண்டு செங்கோல் ஓச்சிக்**
**கொடுந்தொழில் கடிந்து கொற்றம் கொண்டு**
**நடும்புகழ் வளர்த்து நானிலம் புரக்கும்**
**உரைசால் சிறப்பின் நெடியோன்"** (22:57-60)

என்பது பாடல் பகுதி. நெடியோன் என்பது பாண்டியனைக் குறிக்கும். வடிம்பலம்ப நின்ற பாண்டியனுக்கு இது சிறப்பாக உரியது. புறநானூற்றில், 'முந் நீர் விழவின் நெடியோன்" (9:10) எனப்பட்டுள்ளான். மதுரைக் காஞ்சியில்

**"நிலம்தந்த பேருதவிப்**
**பொலந்தார் மார்பின் நெடியோன்"** (60, 61)

**"புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்**
**நிலந்தரு திருவின் நெடியோன் போல"** (62, 63)

என நெடியோன் என்னும் ஆட்சி உள்ளது. நெடுஞ்செழியன் என்னும் பெயரிலுள்ள நெடுமை என்னும் பண்பு, நெடியோன் என்னும் பெயரிலிருந்து பெறப் பட்டதாயிருக்கலாம். மேலே எடுத்துக் காட்டியுள்ள சிலம்புப் பகுதியின் நான்கு அடிகளில், திரும்பத் திரும்பப் பல கோணங்களில் பாண்டியனைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் இளங்கோ.

**மதுராபதி புகழ்ந்தமை**

மதுரை நகர்த் தெய்வமாகிய மதுராபதி என்பவள், நகரை எரித்த கண்ணகியிடம் பாண்டியனது புகழைக் கூறுகிறாள்: பாண்டியனது ஆட்சியிலே மறை ஓசையல்லது ஆராய்ச்சி மணியின் ஓசை இதுவரை கேட்டதில்லை. பாண்டியனின் அடிகளைத் தொழாத பகைவரைத் தவிர, குடிகள் பழிக்கும் கொடுங்கோலன் பாண்டியன் என்ற இகழை அவன் எய்திய தில்லை - என்பது மதுராபதியின் கூற்று:

**"மறைநா ஓசை யல்லது யாவதும்**
**மணிநா ஓசை கேட்டதும் இலனே**
**அடிதொழு திறைஞ்சா மன்ன ரல்லது**
**குடிபழி தூற்றும் கோலனும் அல்லன்"** (23;31-34)

என்பது பாடல் பகுதி. மேலும் கூறுகிறாள்: பாண்டியர் குடி பெண் பழி இல்லாதது. கீரந்தை என்னும் பார்ப்பனனின் மனைவி தொடர்பான பழி வரக் கூடாது எனத் தன் கையைக் குறைத்துக் கொண்ட பொற்கைப் பாண்டியனது மரபில் வந்தது பாண்டியர் குடி. தன் ஏவலர் தவறாகச் சிறையில் அடைத்த வார்த்திகன் என்னும் பார்ப்பனனைச் சிறை விடுத்ததுமன்றி, சிறையிலுள்ள அனைவருக்கும் விடுதலை தந்த பாண்டியர் வழி வந்த குடி இது.

எனவே, நின்னால் குற்றம் சுமத்தப்பட்ட பாண்டியன் நெடுஞ்செழியன் "ஒழுக்கொடு புணர்ந்த விழுக்குடிப் பிறந்தோன்" (23:40) என்றெல்லாம் பாண்டியனைப் பாராட்டிப் புகழ்ந்தாள் மதுராபதி.

பாண்டியர், வடக்கே உள்ள பொன்மலையை (மேரு மலையைத்) தம் வட எல்லை யாக்கியவர்களாம். இதை, "பொற் கோட்டு வரம்பன்" (23:12) என்னும் தொடரால் இளங்கோ குறிப்பிட்டுள்ளார்.

**"தென்னவன் தீதிலன் தேவர்கோன் தன்கோயில்**
**நல்விருந் தாயினான்"** (29:10)

என்று, தெய்வமாகி விட்ட கண்ணகி கூறியதாக இளங்கோ இயம்பியுள்ளார்.

வளைந்த கொடுங்கோலைத் தன் உடலினின்றும் பிரிந்த உயிரினால் நிமிர்த்திய பெருமை பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு என்றும் உண்டு.

**பாண்டியன் பழி**

தெருக் கூத்திலோ அல்லது மேடை நாடகத்திலோ, பாண்டியனோடு வாதிடும் கண்ணகி, "பழிக்குப் பழி கொடடா பழிகாரப் பாண்டியனே" என்று பாடியதை இளம் பருவத்தில் கேட்டதாக ஒரு நினைவு இருக்கிறது.

ஆனால், மேலே இந்தத் தலைப்பில் பாண்டியனது சிறப்புகள் பரக்க விளக்கப்பட்டுள்ளன. 'பழியொடு படராப் பஞ்சவ வாழி' எனப் பாண்டியனது வாயில் காவலன் பாண்டியனை வாழ்த்தும்படி இளங்கோவின் எழுத்தாணி செய்திருக்கிறது.

ஆராய்ச்சியாளர் சிலர் இளங்கோவடிகளுடன் சேர்ந்து கொண்டு, பாண்டியனைப் பழியினின்றும் மீட்க எவ்வளவோ முயற்சி செய்துள்ளனர். இதற்கு ஆதரவாக,

> **"வல்வினை வளைத்த கோலை மன்னவன்**
> **செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது"**
>
> (25:98, 99)

என்று மாற்று வேந்தனாகிய சேரன் செங்குட்டுவனே இரங்கிக் கூறியுள்ளதை முன் வைக்கினர். செங்கோல் வளைவது ஏன்? - பின் நிமிர்த்துவது ஏன்? வளைத்ததனால் தானே பின் நிமிர்த்த வேண்டியதாயிற்று. பாண்டியனைப் பழியினின்றும் காப்பாற்றுவதற்காக, 'வல்வினை வளைத்தது' என ஊழ் வினையின் மேல் பழி போடுகின்றனர். அங்ஙன மெனில் கொலைகாரனும் ஊழ் வினையால்தான் கொலை செய்தான் - அவனுக்கு இறப்பு ஒறுப்பு கொடுப்பது ஏன்?

மனைவி தன்மேல் ஊடல் கொண்டு கூடாதேகினாள். அவளது ஊடலைத் தீர்ப்பதற்காகப் பாண்டிய மன்னன் விரைவாக அவள் இருந்த மாளிகைப் பகுதிக்குச் சென்று கொண்டிருந்தான். அப்போது, வழியில் பொற்கொல்லன் குறுக்கிட்டு, சிலம்பு திருடிய கள்வன் அகப்பட்டுக் கொண்

டான் எனக் கூற, அவனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வருக என்று கட்டளையிட்டான் - ஆராயாமல், அவை கூடிப் பேசித் தீர்ப்பு அளிக்காமல் பாண்டியன் இவ்வாறு செய்தான் - என்பதை, அன்றைக்கும் சரி - இன்றைக்கும் சரி - ஊழ்வினைமேல் பழிபோட்டு உலக அரங்கம் ஒத்துக் கொள்ளுமா - ஏற்றுக் கொள்ளுமா? தமிழகத்தில் இவ்வளவு தாழ்ந்த மன்னன் ஒருவன் இருந்தானா என உலகம் எள்ளி நகையாடாதா? ஊடல் – கூடாமை காரணமாகத்தான் இது நிகழ்ந்ததனால்தான், 'காமத்திற்குக் கண் இல்லை' என்னும் பட்டறிவு மொழி எழுந்தது போலும்!

பாண்டியன் அளவு மீறிய பழிக்கு உரியவன் என்பதற்கு அவன் உயிர் துறந்தமையே போதிய சான்றாகும். கோப் பெருந்தேவி கூடாது ஏகியதால், காமம் தொடர்பான ஊடலை நாம் தீர்க்கப் போன வழியில் பொற்கொல்லன் சொன்னதை நம்பி இப்பெரும் பழியைச் செய்து விட்டோமே எனப் பாண்டியன் ஆழமாக எண்ணி வருந்தியதால்தான் அவனது இதயத்துடிப்பு நின்றிருக்கிறது. இதை இந்தக் காலத்தில் 'ஃகி ஆர்ட் அட்டாக்' (Heart Attack) என்பர்.

மன்பதை (உலகச் சமுதாயம்) பாண்டியனது பழியை எவ்வாறு பொறுத்துக் கொள்ளலாம் (மன்னிக்கலாம்) எனில், அதற்கும் இடம் உண்டு. அவன் கொடுங்கோல னாயின், ஏதோ தவறு நடந்து விட்டது எனத் தனக்குத் தானே ஆறுதல் செய்து கொண்டு, பொற்கொல்லனுக்கு இறப்பு ஒறுப்பு (மரண தண்டனை) கொடுத்து, பின்னர்க் கண்ணகியிடம் பொறுத்தருளக் கேட்டு, அவளுக்குத் தக்க உதவி செய்து வழக்கையே முடித்துவிட்டிருப்பான். அங்ஙனம் செய்யாமல், மற்ற மன்னர்கள் – மன்பதை அறியும்படிச் செய்தி பரவுதற்கு முன்பே உயிர்விட்டிருக்கிறான். இந்தக் குறிப்பைச் செங்குட்டுவனே கூறியுள்ளதாக இளங்கோவின் எழுத்தாணி எழுதியுள்ளது:

**"மன்னர் கோமான் வருந்தினன் உரைப்போன்**
**எம்மோ ரன்ன வேந்தர்க்கு, உற்ற**
**செம்மையின் இகந்த சொல் செவிப்புலம் படாமுன்**
**உயிர்பதிப் பெயர்த்தமை உறுக ஈங்கென"** (25:94-97)

என்பது பாடல் பகுதி. பாண்டியன் செங்கோல் தவறி விட்டான் என்ற செய்தி மற்றவர் செவிகட்கு எட்டாத முன்பு, பாண்டியன் இறந்து விட்டான் என்ற செய்தி முதலில் எட்டும்படிச் செய்தானாம். எனவே, பாண்டியனது பழிச் செயலைப் பொறுத்துக் கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை.

**கோப்பெருந்தேவியின் குறைபாடு**

பாண்டியன் இறந்ததும் கோப்பெருந்தேவியும் உடன் உயிர் துறந்து கண்ணகி போலவே மறக்கற்பு உடையவள் என்பதை மெய்ப்பித்தாள். ஒருவரின் தாய் இறந்துபடின் மற்றவர் அவரை நோக்கி, நான் உங்கள் தாய்போல் இருந்து உதவுவேன் என்று ஆறுதல் கூறலாம். ஆனால், ஒருத்தியின் கணவன் இறந்துவிடின், நான் உன் கணவனாய் இருந்து உதவுவேன்-வருந்தாதே என்று கூறமுடியாது - என்பது நம் பண்பு. இதைத்தான்,

**"கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்"** (20:80)

என்னும் பாடல் பகுதி அறிவிக்கிறது.

அரசனைப் போலவே அரசியும் உயிர் துறந்தமைக்குக் காரணம், கணவன் இறந்து போனது மட்டுமன்று — அவனது பழியில் அரசிக்கும் பங்கு உண்டு. இதைப் பெரும்பாலார் கருதுவதில்லை. ஏதோ, கூடல் மகளிரின் ஆடல் பாடல்களைக் கணவன் கண்டு களித்தான் என அதனை எளிதாகக் கொள்ளாமல், அதற்கு ஒரு மறை பொருள் கற்பித்துக் கொண்டு, அவன் மேல் ஊடல் கொண்டு அவையில் அவனுடன் இல்லாமல் அந்தப்புரத்திற்குப்

போய் விட்டதனால்தான் அவன் ஊடல் தணிக்கும் விரைவு நோக்கத்துடன் அந்தப்புரம் நோக்கிச் சென்றான். வழியில் பொற்கொல்லன் தன் எண்ணத்தை ஈடேற்றிக் கொண்டான். இதை அரசியும் ஆழ உணர்ந்திருப்பாள் அல்லவா? அதன் விளைவு உயிர் இழப்பு.

பொற்கொல்லன் கூறியதும், அரசன் தேவியின் ஊடலைப் பின்பு தீர்த்துக் கொள்ளலாம்; முதலில் களவுக் குற்றத்தைக் கவனிப்போம் என்று எண்ணி அமைச்சருடன் சூழ்வு (ஆலோசனை) செய்து நீதி வழங்கியிருக்கலாம். அரசன் அவ்வாறு செய்யாமல் தேவியின் ஊடல் தீர்ப்புக்கு முதன்மை கொடுத்ததற்கு மற்றொரு காரணமும் இருக்கலாம். இதை இளங்கோ அடிகள் இயம்ப மறந்துவிட்டார் போலும்! அதாவது:- காணாது போன சிலம்பை அரசன் இன்னும் கண்டுபிடித்துத் தரவில்லையே என்ற குறையும் அரசியின் ஊடல் காரணங்களுள் ஒன்றாயிருக்கலாம். எனவே, களவுபோன சிலம்பை முதலில் கண்டுபிடிக்க வேண்டும் என அரசன் அதற்கு முதன்மை கொடுத்திருக்கக் கூடும். காகம் அமரவும் பனம் பழம் விழவும் சரியாயிருந்தது (காகதாலி நியாயம்) என்பதுபோல, அந்த நேரத்தில் பொற்கொல்லன் வந்து கள்வன் கிடைத்துவிட்டான் என்று கூற, அங்ஙன மாயின், அரச முறைப்படிக் கள்வனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வரும்படி அரசன் ஆட்களை ஏவியிருக்கலாம் அல்லவா?

கொலைக் குற்றத்திற்கு இறப்பு ஒறுப்பு தரப்படும். கோவலனைக் கொன்றவர்களாகிய - அதாவது கொல்லக் காரணமா யிருந்தவர்களாகிய அரசனும் அரசியும் தங்களுக்குத் தாங்களே இறப்பு ஒறுப்பு கொடுத்துக் கொண்டு பாண்டியர்களின் புகழுக்குப் புத்தொளி அளித்து உள்ளனர்.

# 28. வஞ்சி - சேரர் சிறப்புகள்

வஞ்சியில் இருந்து ஆண்ட சேரர்களின் சிறப்புகள் மிகுதி. கோதமன் என்னும் தமிழ் மறையவனுக்கு மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்னும் சேரன் வேள்வியின் வாயிலாக மேலுலக வாழ்வளித்தான்.

சோழநாட்டிலிருந்து வந்த பராசரன் என்னும் அந்தணனுக்குச் சேரன் நிறைந்த செல்வம் அளித்தான். அவன் பின் வருமாறு சேரனை வாழ்த்தினான்:

**''விளைந்து முதிர் கொற்றத்து விறலோன் வாழி**
**கடல் கடம்பு எறிந்த காவலன் வாழி**
**விடர்ச் சிலை பொறித்த வேந்தன் வாழி**
**பூந்தண் பொருநைப் பொறையன் வாழி**
**மாந்தரஞ் சேரல் மன்னவன் வாழ்க''** (23:80-84)

என்பது வாழ்த்து.

பாண்டியன் நெடுஞ்செழியன் செங்கோல் தவறியதன் காரணமாக இறந்து விட்டான் என்பதை யறிந்த சேரன் செங்குட்டுவன், அரசாளும் தொழில் கடினமானது என்றான். அதாவது - மழை பெய்யாவிடினும், தகாத முறையில் குடிமக்களின் உயிர் போயினும், அரசன் செங்கோல் தவறானது என்று உலகம் உரைக்கும் என்பதை எண்ணும் போது பெரிதும் அச்சம் தோன்றுகிறது. எனவே, கொடுங்கோலுக்கு அஞ்சிக் குடிமக்களை நன்முறையில் காக்கக் கடமைப்பட்டுள்ள அரசக்குடியில் பிறத்தல் துன்பம் தருவதல்லது போற்றத்தக்கதன்று என்று கூறினான்.

**"மழைவளம் கரப்பின் வான்பேர் அச்சம்**
**பிழைஉயிர் எய்தின் பெரும்பேர் அச்சம்**
**குடிபுர வுண்டும் கொடுங்கோ லஞ்சி**
**மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்**
**துன்பம் அல்லது தொழுதகவு இல்"** (25:100-104)

என்பது பாடல் பகுதி. ஈண்டு, புற நானூற்றில் உள்ள

**"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்**
**காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகல் ஞாலம்"** (35)

என்னும் பாடல் பகுதியும், பெரிய புராணத்தில் உள்ள

**"ஒரு மைந்தன் தன்குலத்துக்கு உள்ளான் என்பதும் உணரான்**
**தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்**
**மருமந்தன் தேராழி உறவூர்ந்தான் மனு வேந்தன்**
**அருமந்த அரசாட்சி அரிதோமற்று எளிதோதான்"**
(திருவாரூர் - 44)

என்னும் பாடலும், திருக்குறளில் உள்ள -

**"இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட**
**பெயலும் விளையுளும் தொக்கு"** (545)
**"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி**
**ஒல்லாது வானம் பெயல்"** (559)

என்னும் பாக்களும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கன.

சேரன் செங்குட்டுவன் எண்ணியதை முடிக்கும் மாமல்லன். வடபுல மன்னர்கள் தென்புல வேந்தர்களை இழித்துரைத்ததைப் பொறானாய்ச் சூள் உரைத்தான்: யான் வட புலம் சென்று வென்று கண்ணகிக்குச் சிலை எடுக்க இமயத்திலிருந்து கல் கொணரவில்லையெனில், போர்க்களத்தில் பகைவரை நடுங்கச் செய்யும் ஆற்றல் இல்லாதவனாகவும், குடிகளை நடுங்கச் செய்யும்

கொடுங்கோலன் என்னும் பெயர் எடுத்தவனாகவும் ஆவேனாக என்று கடுமையான சூள் உரைத்தான்:

**"வடதிசை மருங்கின் மன்னர் முடித்தலைக்**
**கடவுள் எழுதஓர் கற்கொண் டல்லது**
**வறிது மீளும் என் வாய்வா ளாகில்**
**செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்**
**பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பின்**
**குடிநடுக் குறூஉம் கோலேன் ஆக"** (26: 13-18)

வடபுல மன்னரின் முடிமேலே கல்லை ஏற்றி வருவேன் எனக் கடுமையாகச் சூள் உரைத்தான். கடவுள் சிலையைச் செய்தலைக் 'கடவுள் எழுத' என்னும் தொடரால் குறிப்பிட்டிருப்பது சுவையாயுள்ளது. நான் வறிதே மீளுவே னாகில் என்பதற்குப் பதிலாக, என் வாள் மீளுமாகில் என்று கூறியிருப்பது முன்னதினும் மிக்க சுவை பயக்கிறது.

நீர்ப்படைக் காதையில் மாடலன் பின்வருமாறு செங்குட்டுவன் புகழை எடுத்தியம்பினான்: நின் மைத்துனச் சோழனாகிய கிள்ளியோடு போர் புரிய வந்த பங்காளிச் சோழர்கள் ஒன்பதின்மரையும் நேரி வாயிலில் ஒரே பகலில் ஒழித்து வென்றவன் நீ - என்பது புகழுரை. சோழன் மணக்கிள்ளியின் மகள் நற்சோணை என்பவள் செங்குட்டுவன் தாய். எனவே, மணக்கிள்ளியின் மகனாகிய கிள்ளி செங்குட்டுவனுக்கு மைத்துனன் (அம்மான் மகன்) ஆகிறான். இந்த வென்றி சிலம்பில் வேறு இடத்திலும் குறிப்பிடப்பட் டுள்ளது:

**"ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை**
**நேரி வாயில் நிலைச்செரு வென்று"** (28:116-117)

என்பது பாடல் பகுதி. மற்றும் பதிற்றுப்பத்துப் பதிகத்திலும் இது குறிப்பிடப்பட் டுள்ளது.

**"ஆராச் செருவில் சோழர்குடிக் குரியோர்**
**ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து**
**நிலைச் செருவினால் தலையறுத்து"**
(பதிகம்-5: 18, 20)

என்பது பாடல் பகுதி. அடுத்து - மோகூரில் பழையன் என்னும் குறுநில மன்னனின் காவல் மரமாகிய வேம்பை வெட்டி அவனை வென்றானாம் சேரன்.

**"பழையன் காக்கும் குழைபயில் நெடுங்கோட்டு**
**வேம்பு முதல் தடிந்த ஏந்துவாள் வலத்து"**
(27: 124, 125)

என்பது பாடல் பகுதி. இது பதிற்றுப்பத்திலும் கூறப் பட்டுள்ளது:

**"பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்**
**முழாரை முழுமுதல் துமியப் பண்ணி"** (பதிகம்-5:13, 14)

இது பாடல் பகுதி. மற்றும், இடும்பில் வெற்றி, கடல் பிறக்கோட்டியது முதலியனவும் உரியன.

இன்னும் சில பெருமைகள் செங்குட்டுவனுக்கு உரியவை. அவை: தாய் விரும்பியபடி அவளைக் கங்கை நீராடச் செய்தது. பாண்டியனது நேர்மையான சாவைப் பாராட்டினமை.

வென்று சிறைபிடித்து வந்த கனக விசயர்க்கு மதிப் பளித்து, தனி மாளிகையில் தங்கச் செய்து வேண்டிய வசதிகளை அளித்தமை.

கனக விசயரைச் சிறைவீடு செய்தபோது, மற்ற குற்றவாளிகட்கும் விடுதலை தந்தமை. வரி நீக்கம் செய்தமை.

வடபுல மன்னர்கள் தென்புல மன்னர்களை இகழ்ந்ததைப் பொறுக்க முடியாத மானம் உடைமை.

கண்ணகிக்குச் சிலை எடுத்துக் கோயில் அமைத்துப் பரவியமை - இன்ன பிற சேரன் சிறப்புகளாம்.

புகாரிலும் மதுரையிலும் நடந்தது போன்ற நிகழ்ச்சி எதுவும் வஞ்சியில் நிகழாமையால் வஞ்சியின் சிறப்பு போதிய அளவில் இடம் பெறவில்லை.

### செங்குட்டுவன் பிறப்பு

செங்குட்டுவன் பிறப்பு பற்றிக் கருத்து வேறுபாடு உள்ளது. நெடுஞ்சேரலாதனுக்குச் சோழன் மணக் கிள்ளியின் மகள் நற்சோணை வயிற்றில் பிறந்தவன் என்பதற்கு, வாழ்த்துக் காதை - உரைப்பாட்டு மடை என்னும் தலைப்பில் உள்ள

**"குமரியொடு வட இமயத்து**
**ஒருமொழி வைத்து உலகாண்ட**
**சேரலாதற்குத் திக ழொளி**
**ஞாயிற்றுச் சோழன் மகள்**
**ஈன்ற மைந்தன் கொங்கர்**
**செங்களம் வேட்டுக் கங்கைப்**
**பேரியாற்றுக் கரை போகிய**
**செங்குட்டுவன்"**

என்னும் பகுதி சான்று பகரும். சோழன் = மணக்கிள்ளி. சோழன் மகள் = நற்சோணை. இது அவர்களின் இரண்டாம் மகனாகிய இளங்கோவே எழுதியது.

ஆனால், கழக இலக்கியமாகிய பதிற்றுப்பத்து நூலின் ஐந்தாம் பத்துப் பதிகத்தில்,

**"குடவர் கோமான் நெடுஞ்**
**சேரலாதற்குச் சோழன் மணக்**
**கிள்ளி ஈன்றமகன் கடவுள்**
**பத்தினிக் கற்கோள் வேண்டிக்**
**... கடல் பிறக்கோட்டிய**
**செங்குட்டுவன்"**

*என்றிருப்பது தவறு. இதில் கூறப்பட்டுள்ள உறவு முறை சரியில்லை. ஆணுக்கு ஆண் வயிற்றில் பிறந்த மகன் என்று பொருள் செய்யும்படி இப்பகுதி உள்ளது. 'சோழன் மணக் கிள்ளி ஈன்ற மகன்' என்று இல்லாமல், சோழன் மணக் கிள்ளி ஈன்ற மகள் வயிற்று மகன்... செங்குட்டுவன்' என்று எழுதி இருக்க வேண்டும். ஏடு பெயர்த்து எழுதியவர்கள், 'ஈன்ற–மகன்' என்னும் இரு சொற்கட்கு இடையே இருந்த 'மகள் வயிற்று' என்னும் இரு சொற்களையும் கை தவறி விட்டுவிட்டிருக்கக் கூடும்.*

**செங்குட்டுவன் சமயம்**

*சிலப்பதிகாரத்தில் உள்ள சில அகச்சான்றுகளால் செங்குட்டுவன் சைவ சமயத்தவன் என்பது பெறப்படலாம். சில அகச் சான்றுகள் வருமாறு:*

**''நிலவுக் கதிர்முடித்த நீளிருஞ் சென்னி
உலகுபொதி உருவத்து உயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து
இறைஞ்சாச் சென்னி இறைஞ்சி வலங்கொண்டு''**
(26: 54, 57)

**''செஞ்சடை வானவன் அருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய வானவ சேளாய்''** (26: 98-99)

**''ஆனேறு ஊர்ந்தோன் அருளினில் தோன்றி
மாநிலம் விளக்கிய மன்னவன்''** (30: 141, 142)

**''ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின்று ஏத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி அணிமணிப் புயத்துத்
தாங்கின னாகி.....''** (26: 62-67)

என்னும் பகுதிகளால் செங்குட்டுவன் சைவ சமயத்தவன் என்பது அறியப்பெறும். 'நிலவு முடித்த சென்னி உயர்ந் தோன் - செஞ்சடை வானவன் - ஆனேறு ஊர்ந்தோன் - செஞ்சடைக் கடவுள் -- என்பன சிவனைக் குறிக்கும். செங்குட்டுவன் சைவன் எனினும், பிற சமயங்களின் எதிரியல்லன். முதன்மை சைவத்திற்கேயாம்.

**மொழிப்பற்று**

செங்குட்டுவன் தாய்மொழியாகிய தமிழில் மிக்க பற்றுடையவனாக இருந்தான். தமிழர்களின் மறத்தை - ஆற்றலைச் செங்குட்டுவன் தமிழ் மொழிமேல் ஏற்றி

> **''காவா நாவின் கனகனும் விசயனும் .....**
> **அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர்''** (26: 159, 161)

என்று கூறியதாக இளங்கோ எழுதியுள்ளார். மேலும் இளங்கோ 'தென்தமிழ் ஆற்றல் காண்குதும்'' (26: 185), செறிகழல் வேந்தன் தென்தமிழ் ஆற்றல் (27:5) எனப் பாடியுள்ளார். தலைமையனுக்கு இருந்த தாய்மொழிப் பற்று தம்பிக்கும் இருந்திருக்கின்றது. அந்தோ தமிழே!

# 29. சிறப்பான சுவைச் செய்திகள்

*சிலம்பில் இடம் பெற்றுள்ள சிறப்பானவையும் சுவை மிக்கனவுமாகிய செய்திகளுள் சிலவற்றை இந்தத் தலைப்பில் காதை வாரியாகக் காண்பாம்:*

### மங்கல வாழ்த்துப் பாடல்

**திருமண அழைப்பு**

*அரை நூற்றாண்டுக்கு முன்பு பெரும்பாலான குடும்பங்களில் திருமணம் நடைபெறின் அழைப்பிதழ் அச்சிடுவதில்லை. யான் சிறுவனாயிருந்தபோது, வீட்டுக்கு வீடு சென்று வெற்றிலை பாக்கு வைத்து வாயால் அழைப்பு விடுத்ததையே பார்த்திருக்கிறேன். வெளியூர் உறவினர்க்கும் நேரில் சென்று வெற்றிலை பாக்கு வைத்து வாயால் அழைப்பு விடுப்பர்.*

*இப்போது, மிகப்பெருஞ் செலவில் (காசுக் கொழுப்பால்) அழைப்பிதழ் அச்சடிக்கப்படுகிறது. இருவீட்டார் அழைப்பு - மங்கையர் அழைப்பு – முதலியன அச்சடிக்கப்படும். சிலர் செய்தித் தாள்களில் திருமண விளம்பரம் செய்து இதையே அழைப்பாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுவதுமுண்டு. இப்போது பெரிய இடத்துத் திருமண அழைப்பிதழுக்கு ஆகும் பணச் செலவில் அன்று என் பாட்டனாரின் திருமணம் நடைபெற்றிருக்கும்.*

*புகாரில் அன்று கண்ணகியின் தந்தை குடும்பமும் கோவலனின் தந்தை குடும்பமும் மிகவும் பெரிய இடமாகும். எனவே, அவர்கள், கண்ணகி - கோவலன் திருமணத்தை யானையின் முதுகில் பெண்களை ஏற்றிப்*

புகாரில் தெருத்தெருவாய் வலம்வரச் செய்து ஊரார்க்கு அறிவிக்கச் செய்தனர். இது பெரிய இடத்து விவகாரம். யானையைக் கண்டு ஆண்களே இன்று அஞ்சுவதுண்டு; அன்று பெண்கள் யானை மீதேறி அறிவித்தது வியப்பு.

**"யானை எருத்தத்து அணியிழையார் மேலிரீஇ**
**மாநகர்க்கு ஈந்தார் மணம்"** (1: 43, 44)

என்பது பாடல் பகுதி. 'ஈந்தார் மணம்' என்னும் தொடர் மிகவும் அழகியது — சுவையளிப்பது.

இக்காலத்தில், அழைப்பிதழ் அச்சடிக்கும் பெண் வீட்டார் பெண்ணின் பெயரை முதலிலும் மாப்பிள்ளையின் பெயரை அடுத்ததாகவும் அமைக்கின்றனர்; மாப்பிள்ளை வீட்டார் மாப்பிள்ளையின் பெயரை முதலாவதாகவும் பெண்ணின் பெயரை இரண்டாவதாகவும் அமைப்பர்.

சிலப்பதிகாரத்தில் திருமண அழைப்பிதழ் அமைத்துள்ள இளங்கோவடிகள் கண்ணகியின் பெயரை முன்னும் கோவலன் பெயரைப் பின்னும் அமைத்துள்ளார். (இளங்கோ பெண் வீட்டாரா? இல்லையே).

நூலின் பெயராகிய சிலப்பதிகாரம் (சிலம்பு அதிகாரம்) கண்ணகியின் கால் சிலம்பு தொடர்பாக எழுந்தது. காப்பியத்தில் கதைத் தலைவனினும் கதைத் தலைவியே பெரிய அளவில் - இன்றியமையாத இடம் பெற்றுள்ளாள். எனவே, கண்ணகிக்கு முதலிடம் தரப்பட்டிருக்குமோ?

மற்றும், உமாபதி, உமா மகேசுவரன், அம்பிகாபதி, மீனாட்சி சுந்தரன், வள்ளி நாயகன், வள்ளி மணாளன், (சித்தி விநாயகர்), இலட்சுமி காந்தன், இலட்சுமி நாராயணன், இராதா கிருட்டிணன், சீதாராமன், சானகி ராமன் – என்பன போன்ற அடிப்படையில், கணவன் பெயரின் அறிமுகத்திற்கு முன் கண்ணகியின் பெயர் அறிமுகப் படுத்தப்பட்டிருக்குமோ? இளங்கோ இப்போது

நம் எதிரில் வரின் அவரைச் சரியான காரணம் கேட்கலாம்! ஒருவேளை அந்தக் கால மரபாயும் இருக்கலாம் இது! அதாவது:- பெண் மலையாளம் - மருமக்கள் தாயம் என்பன போன்ற அடிப்படையில் சேரராகிய இளங்கோ பெண்மைக்கு முதலிடம் தந்திருப்பாரோ?

**அந்தி மாலைச் சிறப்புச் செய்காதை**

**இல்(மனை) வளர் முல்லை**

மலர் பரப்பிய படுக்கை,

**"இல்வளர் முல்லையொடு மல்லிகை அவிழ்ந்த**
**பல்பூஞ் சேக்கைப் பள்ளி"** (4: 27, 28)

என்று கூறப்பட்டுள்ளது. புறஞ்சேரி இறுத்த காதையிலும், மாதவி (குருக்கத்தி), மல்லிகை, முல்லை ஆகிய மலர்களின் மாலை என்னும் பொருளில்,

**"மாதவி மல்லிகை மனைவளர் முல்லைப்**
**போதுவிரி தொடையல்"** (13: 120, 121)

என இந்தக் கருத்து இடம் பெற்றுள்ளது.

கற்புடைய மகளிர் இல்லத்தில் (மனையில்) முல்லை வளர்ப்பார்களாம். இல்வளர் முல்லை, மனைவளர் முல்லை என்பன இதைத்தான் அறிவிக்கின்றன. இந்தக் கருத்து, குறுந்தொகை நூலில்

**"மனை எல்லறு மௌவல் நாறும்**
**பல்லிருங் கூந்தல்"** (மௌவல் - முல்லை - 19:4,5)

எனவும், நற்றிணையில்

**"மனைநடு மௌவலொடு ஊழ் முகை யவிழ்"** (115:6)

எனவும், அகநானூற்றில்

**"மனைய மௌவல் மாச்சினை காட்டி"** (23:12)

எனவும், பெருங்கதையில்

> **"இல் லெழு முல்லையொடு மல்லிகை மயங்கிப்**
> **பெருமணம் கமழவும்"** (1:33:73, 74)

எனவும், மற்றும் பல இலக்கியங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த நூல்களின் அடிப்படையில், ஒட்டக் கூத்தர் தக்க யாகப் பரணி என்னும் நூலில் உமாதேவிகூட முல்லை வளர்த்ததாகப் பாடியுள்ளார். உமாதேவி வளர்க்கும் முல்லைக் கொடி நூறாயிரமாகக் கிளைத்து விண்ணில் சென்று திங்களைத் தடவுகின்றதாம். திங்களிலுள்ள கறை யாகிய மான், தேவி வளர்க்கும் முல்லை என அஞ்சி அதை மேயவில்லையாம்.

> **"நுதிக்கோடு கூர்கலை உகைப்பாள் விடாமுல்லை**
> **நூறாயிரம் கிளைகொடு ஏறா விசும்பிவர்**
> **மதிக்கோடு தைவர எழுந் தண் கொழுந்துகளை**
> **வாயாது எனக்கொண்டு மேயாது மான் மறியே"** (75)

என்பது பாடல். கற்புடைய பெண்டிர் வீட்டில் முல்லை வளர்ப்பதால், முல்லைக்குக் 'கற்பு' என்னும் பெயரும் உண்டென ஆசிரிய நிகண்டு (137) கூறுகிறது. மேலும் பல இலக்கியங்களில் முல்லையும் கற்பும் இணைக்கப்பட்டுள்ளன.

**புகழ் வெண்மை**

புகழின் நிறம் வெண்மை என்று கூறுவது இலக்கிய மரபு. சிலம்பில் உள்ள

> **"அந்தி வானத்து வெண்பிறை தோன்றி**
> **மீனர சாண்ட வெள்ளி விளக்கத்து"** (4:23 - 26)

என்னும் பகுதியில் உள்ள விளக்கம் என்பதற்குப் புகழ் என்னும் பொருளும் உரையாசிரியர்கள் கூறியுள்ளனர். புகழ் வெள்ளியாய் - வெள்ளை நிறத்ததாய்க் குறிப்பிடப் பட்டுள்ளது.

**"இகலென்னும் எவ்வநோய் நீங்கின் தவலில்லாத்**
**தாவில் விளக்கம் தரும்"** (853)

என்னும் குறளிலுள்ள 'விளக்கம்' என்னும் சொல்லுக்குப் பரிமேலழகர் முதலியோர் 'புகழ்' என்னும் பொருளே தந்துள்ளனர்.

வெள்ளைக் கொடிகள், புகழ் போலவும் வெண்மையான அலை போலவும் பரந்து பறந்தன எனக் கம்ப இராமாயணத்தில் கூறப்பட்டுள்ளது.

**"தானை மாக்கொடி.... புகழ்எனக் கால்பொரப் புரண்ட**
**வானயாற்று வெண்திரை என வரம்பில பரந்த"**
(5-9-7)

என்பது பாடல் பகுதி. மற்றும், நிலவின் வெள் ஒளி, இராமனது புகழ் புகுந்து உலவியது போல் இருந்ததாம்.

**"அன்னவன் புகழ் புகுந்து உலாயதோர்**
**பொலிவும் போன்றதே"** (5-1-65)

இது கம்பரின் பாடல் பகுதி. கம்பரே இன்னும் இதுபோல் வேறிடங்களிலும் கூறியுள்ளார். இன்னும் ஒன்று கூறி முடித்து விடலாம். சிவனது புகழ் திரண்டது போன்று வெள்ளைக் கைலை மலை இருந்தது எனப் பிரபுலிங்கலீலை என்னும் நூலில் சிவப்பிரகாசர் கூறியுள்ளார்:-

**"வள்ளல் வெண் புகழ் திரண்ட வளங்கெழு**
**கைலைக் குன்று"** (2-4)

என்பது பாடல் பகுதி.

**கோவலன் இழப்பு**

கோவலன் கண்ணகியைப் பிரிந்து விட்டதால், அவளுடைய கால்கள் சிலம்புகளையும், அல்குல் மேகலையையும், கொங்கை குங்குமச் சாந்து எழுதுதலையும், காது குழையையும் மங்கல நாணைத் (தாலியைத்) தவிர மற்ற

உறுப்புகள் மற்ற அணிகலன்களையும், முகம் சிறு வியர்வையையும், கண் மையையும், நெற்றி பொட்டையும், வெண்மையான ஒளி பொருந்திய பற்களிலிருந்து வெளிப் படும் சிரிப்பு கோவலனையும், கூந்தல் நெய்யணியையும் இழந்து விட்டனவாம்.

**"அஞ்செஞ் சீறடி அணி சிலம்பு ஒழிய**
**மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்**
**கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்**
**மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்**
**கொடுங்குழை துறந்து வடிந்து வீழ் காதினள்**
**திங்கள் வாள்முகம் சிறு வியர்ப்பு இரியச்**
**செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்**
**பவள வாள்நுதல் திலகம் இழப்பத்**
**தவள வாள் நகை கோவலன் இழப்ப**
**மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்**
**கையறு நெஞ்சத்துக் கண்ணகி"** (4:47-57)

என்னும் பகுதி சுவை மிக்கது. அதை அதை அணியவில்லை என்று கூறியதோடு, இது இது இன்னின்னதை இழந்து விட்டதாகவும் கூறியிருப்பது ஒரு புது முறை. ஒரே பொருளில் ஒழிய, நீங்க, இரிய, மறப்ப, இழப்ப என்னும் சொற்களை மாறி மாறிக் கையாண்டிருப்பதும் ஒரு சுவை. புணர்ச்சி இன்மையால் முகம் வியர்வையை இழந்ததாம்.

அடி முதலாய்த் தொடங்கி முடிவரை சொல்லிக் கொண்டு போவதைப் 'பாதாதி கேசம்' எனவும், முடி முதலாய்த் தொடங்கி அடிவரை சொல்லிக் கொண்டு போவதைக் 'கேசாதி (கேச + ஆதி) பாதம்' எனவும் வட மொழியில் கூறுவர். தமிழில், 'அடி முதல் முடி' எனவும், 'முடி முதல் அடி' எனவும் கூறலாம். இந்த இடத்தில் இளங்கோ 'அடி முதல் முடி' முறையைக் கையாண்டுள்ளார்.

'அஞ் செஞ் சீறடி அணி சிலம்பு ஒழிய' என்று தொடங்கி, 'மை யிருங் கூந்தல் நெய்யணி மறப்ப' என்று முடித்துள்ளார். இந்த முறை இந்நூலுச்கு மிகவும் பொருத்தமாகும். சிலம்பு தொடர்பான சிலப்பதிகாரத்தில 'சிலம்பு ஒழிய' எனச் சிலம்புக்கு முதலிடம் தந்திருப்பது மிக்க சுவை பயக்கிறது.

'தவள வாள் நகை கோவலன் இழப்ப' என்பதற்கு, சிரிப்பு கோவலனை இழந்ததாக யான் பொருள் கூறி யுள்ளேன். மற்ற அமைப்புகளை நோக்கின், அவை போல இவ்வாறு கூறுவதுதான் பொருத்தம் என்பது தெளிவாகும். ஆனால், கோவலன் கண்ணகியின் சிரிப்பை இழந்து விட்ட தாக உரையாசிரியர்கள் பொருள் செய்துள்ளனர். மற்ற அமைப்புகளை நோக்க இது பொருந்தாது - கருத்தின் நய மான சிறப்பும் கெட்டுப்போகும். சிரிப்பு கோவலன் முன்னால் மட்டுமே நிகழும் - இப்போது கோவலன் இல்லாததால் சிரிப்பே இல்லை - எனவே தான், சிரிப்பு கோவலனை இழந்தது - சிரிப்புக்கு வேலையே இல்லை - எனக் கூறுதலே பொருந்தும். மாதவியைப் பிரிந்து கோவலன் மீண்டும் கண்ணகியை அடைந்ததும், அவனைக் கண்டு கண்ணகி சிரித்ததாகக் கூறியுள்ள பகுதி ஈண்டு நினைவுக்கு வரவேண்டும்.

**"நலங்கேழ் முறுவல் நகைமுகம் காட்டி"** (9:72)

என்பது அந்தப் பகுதி.

இந்தப் பகுதியில், ஒரு சிக்கலுக்கு நல்ல தீர்வு கிடைத் துள்ளது. மங்கல வாழ்த்துப் பாடல் காதையில் உள்ள 'அகலுள் மங்கல அணி எழுந்தது' என்னும் பகுதிக்கு, 'மங்கல அணி எங்கும் எழுந்தது'' என அடியார்க்கு நல்லார் உரை எழுதியுள்ளார். அடியார்க்கு எல்லாம் நல்லவ ராயிற்றே - அவர் மீது குறை சொல்லக் கூடாதுதான்.

ஆனால் இந்த விளக்கம் தெளிவாய் இல்லையே. இதற்கு, ஊரில் மங்கல நாண் வலம் வந்தது என்பது சிலர் கூறும் பொருள். கோவலன் கண்ணகி கழுத்தில் தாலி கட்டினானா- இல்லையா என்பது ஓர் ஆராய்ச்சி. அடியார்க்கு நல்லாரின் உரையைக் கொண்டு, தாலி கட்டவில்லை என்பர் சிலர். மற்ற ஓர் உரையைக் கொண்டு தாலி கட்டினான் என்பர் சிலர். இவ்விரண்டனுள் பின்னதே பொருத்தமானது. இதற்கு அகச்சான்று, மேலே காட்டியுள்ள

**'மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்'** (4:50)

என்பது தான். தாலியைத் தவிர வேறு அணி அணிய வில்லையாம். தாலி எப்போதும் இருப்பதாயிற்றே!

மற்றும் ஓர் அகச்சான்று வருமாறு:- மனையறம் படுத்த காதையில் - கோவலன் கண்ணகியைப் பின்வருமாறு பாராட்டுகிறான். மணமலர் அணிந்த கண்ணகியே! உன்னை அணி செய்கின்ற (அலங்கரிக்கின்ற) தோழியர், உனக்கு மங்கல அணி (தாலி) இருக்கும்போது வேறு அணிகலன் களையும் அணிவது எதற்காகவாம்? பாடல்.

**''நறுமலர்க் கோதை நின்நலம் பாராட்டுநர்**
**மறுவில் மங்கல அணியே அன்றியும்**
**பிறிதணி அணியப் பெற்றதை எவன்கொல்''** (2:62-64)

என்பது பாடல் பகுதி. இதனாலும் தாலி கட்டிய உண்மை தெளிவாகும்.

இந்திர விழவூர் எடுத்த காதையில், இந்திரவிழாவின் போது தெருவில் திரியும் பொது மகளிரைப் பற்றி இளங்கோ அடிகள் செய்துள்ள கற்பனைப் புனைவு சுவை நயம் மிக்கது. பாடலைப் படித்துப் பார்க்கவேண்டும். ஈண்டு விரிப்பின் பெருகும்.

## நாடு காண் காதை

உழவர்கள் உழைத்து விளைவிப்பதால் தான் இரப்பவரின் சுற்றமும் புரக்கும் அரசரின் கொற்றமும் காக்கப்படுகின்றன. காவிரியின் வளத்தால் உழவு செய்ய முடிகிறதாதலின், உழவர்கள் 'காவிரிப் புதல்வர்' எனச் சிறப்பிக்கப்பெற் றுள்ளனர்,

**''பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர்**
**இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்**
**உழவிடை விளைப்போர்''** (10: 148 – 150)

என்பது பாடல் பகுதி. காவிரி மக்களாகிய தன் குழந்தைகளைத் தாய்போல் காக்கிறது என்னும் இந்தக் கருத்து வேறு தலைப்பில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது.

## காடு காண் காதை

### கண்ணின் கட்டளை

திருவரங்கத்தையும் திருவேங்கடமலையையும் காட்டுக என்று தன் கண் கட்டளையிட்டதால் மாங்காட்டு மறையவன் புறப்பட்டு வந்தானாம்.

**''திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்** (11:40)
**செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்**
**என்கண் காட்டென்று என்னுளங் கவற்ற**
**வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேன்''** (11:51-53)

என்பது பாடல் பகுதி. கண் காட்டும்படி வற்புறுத்தியதாகக் கூறுவது ஒரு சுவையாகும். இத்தகைய ஒரு கற்பனை 'தெய்விகத் திருமணம்' என்னும் புதினத்தில் (நாவலில்) உள்ளது. வருமாறு:

''ஆனால் அந்த இளைஞரால் கண்களுக்குப் பதில் சொல்ல முடியவில்லை. அவளைப் பார்க்கவேண்டும் என்று

அவர் கண்கள் அவருக்கு முதலில் நினைவுறுத்தின – அவர் பொருட் படுத்தவில்லை. அவளைப் பார்க்க வாய்ப்பளிக்க வேண்டும் எனத் தொடர்ந்து கெஞ்சின - அவர் புறக்கணித்து விட்டார். பின்னர், பார்க்கத்தான் வேண்டும் என அடம் பிடித்துப் பார்த்தே விட்டன''

இந்த உரைநடை இலக்கியத்திலும் இந்தக் கற்பனை உள்ளதைக் காணலாம்.

மாங்காட்டு மறையவன் திருவரங்கத்தையும் திருவேங்கடத்தையும் கண்ணுக்குக் காட்டச் செலவு மேற்கொண்டான். இது தொடர்பான சேக்சுபியரின் கருத்து ஒன்று நினைவுக்கு வருகிறது, கையை, ஏழையாக்கிக் கண்ணைப் பணக்கார னாக்கு' என்று ஓரிடத்தில் அவர் கூறியுள்ளார். கையை ஏழையாக்குதல் என்றால், கைப் பணத்தைச் செலவிடு என்று பொருளாம். கண்ணைப் பணக்காரனாக்கு என்றால், பல காட்சிகளையும் கண்ணால் கண்டு மகிழ்ச்சியுடன் பொது அறிவு பெறுக என்று பொருளாம். ஊர் சுற்றி உலக அறிவு பெறுக என்பதை மாங்காட்டு மறையவன் வாயிலாக இளங்கோ குறிப்பாகக் கூறியுள்ளார்.

**உலகுதொழு மண்டிலம்**

தாமரையை மலரச் செய்யும் ஞாயிறு தோன்றிச் செழியனது மதுரையைத் துயில் எழுப்பியதாம்.

> **''மலர்பொதி அவிழ்த்த உலகுதொழு மண்டிலம்**
> **ஓங்குயர் கூடல் ஊர்துயில் எழுப்ப''** (14:4,6)

ஞாயிறை உலகம் தொழுவதாலும் அதைச் சுற்றிப் பல கோள்கள் இருப்பதாலும் அது உலகுதொழுமண்டிலம் எனப்பட்டது. நீர்ப்படைக் காதையில்,

> **''காலைச் செங்கதிர்க் கடவுள்''** (27:137)

என ஞாயிறு கடவுளாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஞாயிறு வணக்கம் உலகில் பல்வேறிடங்களிலும் செய்யப்படுகிறது. இளங்கோவே 'ஞாயிறு போற்றுதும்' என்று கூறியுள்ளார். ஞாயிறுக்குக் கோயிலும் உண்டு. சூரியநாயனார் கோயில் என்னும் பெயரில் ஓர் ஊரும் உள்ளது. எகிப்திலும் கோயில் உண்டு. திருமுருகாற்றுப்படையை, நக்கீரர்,

**"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர் புகழ் ஞாயிறு"** (1,2)

என ஞாயிறு போற்றித் தொடங்கியுள்ளார். 'அதோ எரிந்து கொண்டு போகிறானே சூரிய நாராயணன் - அவன் கேட்பான்' என மக்கள் நீதி பெற ஞாயிறைத் துணைக்கு அழைக்கின்றனர். நம் மண்ணுலகைப் பெற்ற தாயும் ஆகும் ஞாயிறு.

## வழக்குரை காதை

### சொல்லின் செல்வி

அனுமன் இராம இலக்குமணரிடம் தன்னைப் பற்றிச் சுருக்க விளக்கமாக அறிமுகப்படுத்திக் கொண்ட சொல் வன்மையால் சொல்லின் செல்வன் எனப்பட்டான். 'யாரையோ நீ மடக் கொடியோய்' எனப் பாண்டியன் வினவியலும் கண்ணகி சொல்லின் செல்வியாய் மாறி விடுகிறாள்.

புறாவின் துயர் போக்கிய சோழன் சிபியும், ஆவின் கண்ணீர் தன் நெஞ்சைச் சுட்டதால் தன் பெறலரு மகனைத் தேர்க் காலில் இட்டுக் கொன்ற மனுநீதிச் சோழனும் ஆண்ட புகார் எனது ஊர். அவ்வூரின் பெருங்குடி மகனாகிய மாசாத்துவானின் மகனும் நின் மதுரைக்கு வந்து என் கால் சிலம்பை விற்க முயன்றபோது நின்னால் கொல்லப் பட்டவனும் ஆகிய கோவலனின் மனைவி நான்-எனது பெயர் கண்ணகி - என்று சுருக்கமாகத் தன் வரலாற்றைக்

கூறிய கண்ணகியைச் சொல்லின் செல்வி என்று குறிப்பிடலாம் அல்லவா?

வஞ்சின மாலைக் காதையில், கண்ணகி, கற்புடைய மங்கையர் எழுவரின் கற்பு வரலாற்றைக் கூறி, அவர்கள் பிறந்த புகாரிலே பிறந்தவள் யான் எனக் கூறியுள்ள பகுதி படித்துச் சுவைத்தற்குரியது.

## காட்சிக் காதை

### எமனது வியப்பு

சேரன் செங்குட்டுவன் ஆரிய மன்னர்கள் ஐந்நூற்று வரைத் தான் ஒருவனே எதிர்த்துச் செய்த போரை, எமன் வியந்து தன் கடுமையான கண்களை மூடாமல் விழித்த படியே பார்த்துக்கொண்டிருந்தானாம்:

**"கண் விழித்துக் கண்டது கடுங்கண் கூற்றம்"** (25:64)

இது ஓர் இலக்கியச் சுவை. பாண்டியன் மனைவி கோப் பெருந்தேவி, கணவன் பாண்டியன் உயிர் துறந்ததும், தனது உயிரால் அவனது உயிரைத் தேடுவதற்காக உயிர் விட்டவள் போல் உடனே இறந்து விட்டாளாம்:

**"தன்னுயிர் கொண்டு அவன் உயிர் தேடினள்போல்**
**பெருங் கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தாள்"**
(25:85)

இஃதும் ஓர் இலக்கியச் சுவை - தற்குறிப்பேற்ற அணி அமைந்தது.

### அரசியல் சூழ்ச்சி

வட நாட்டுக்குப் படையெடுக்கப் போவதாக முன்கூட்டி வடபுல அரசர்கட்குத் தூது விடும்படி வில்லவன் கோதை செங்குட்டுவனுக்குக் கூறினான். ஆனால், அழும்பில்வேள் என்பவன், தூது அனுப்ப வேண்டியதில்லை – உலக

மன்னர்களின் ஒற்றர்கள் யாவரும் நம் ஊரில் இருப்பர்; எனவே, நம் ஊரில் பறையறைந்து தெரிவிப்பின் போதும் - இதைக் கேட்கும் ஒற்றர்கள் அவர்கள் ஊருக்குச் செய்தி அனுப்பி விடுவர் - என்று கூறியது, ஓர் அரசியல் சூழ்ச்சிச் சுவையாகும்.

**தோள் துணை இழப்பு**

வஞ்சி மாநகரில் அரசன் ஆணையுடன் பின்வருமாறு பறையறைந்து அறிவிக்கப்பட்டது:

வடபுல மன்னர்களே! முன்னரே சேரன் இமயம் கொண்டதால் நீவிர் திறை கட்ட வேண்டியவர் ஆவீர். இப்போது செங்குட்டுவன் கண்ணகிக்குக் கல் கொணர வடபுலம் வருகிறான். வழியில் வரும்போது திறை கட்டி விடுங்கள். இல்லையேல், நீங்கள் தோள் துணையாகிய மனைவியரை இழந்து துறவு கொள்ளுங்கள் - என்பது பறையறிவிப்பு.

**''தோள் துணை துறக்கும் துறவொடு வாழுமின்''**
(25:190)

என்னும் பகுதி சுவைக்கத்தக்கது.

**''இடுதிறை கொடுவந்து எதிரீ ராயின்**
**கடல் கடம் பெறிந்த கடும்போர் வார்த்தையும்**
**விடர்ச்சிலை பொறித்த வியன்பெரு வார்த்தையும்**
**கேட்டு வாழுமின் கேளீ ராயின்**
**தோள்துணை துறக்கும் துறவொடு வாழுமின்''**
(25:186-195)

இது பாடல் பகுதி. சேரர்கள் கடலில் இருந்த கடம்பு எறிந்து வென்றவர்கள் - இமய மலையில் வில் பொறித்து வென்றவர்கள். எனவே, நீங்கள் சேரர்க்கு அஞ்சவில்லை எனில், கடலைக் கடந்து அக்கரையிலுள்ள இடத்திற்குச் சென்றும், இமயத்தைத் தாண்டி அதற்கு வடக்கே உள்ள

இடத்தை அடைந்தும் வாழ்வீராக என்ற நயம் இந்த பகுதியில் அமைந்து சுவை பயக்கிறது.

தோள் துணை என்பது மனைவியின் துணையைக் குறிக்கிறது. ஈண்டு, மனைவிக்கு 'வாழ்க்கைத் துணை' என்னும் பட்டத்தை வள்ளுவர் நல்கியிருப்பது ஒப்பு நோக்குதற்கு உரியது.

## கால் கோள் காதை

### மலை முதுகு நெளிதல்

செங்குட்டுவன் பெரும்படையுடன் நீலமலை (நீலகிரி) வழியாகச் சென்றான். படைகளின் மிகுதியால் மலையின் முதுகு நெளிந்ததாம். 'மலைமுது குநெளிய'' (26:82) என்பது பாடல் பகுதி. இஃதோர் இலக்கியச் சுவை. உயிருள்ள பொருள்களின் - முதுகு உள்ள உயிரிகளின் முதுகுதான் நெளியும். இந்த நெளிவு அஃறிணைப் பொருளாகிய மலைக்கும் கூறப்பட்டுள்ளது.

**''உரிய பொருளின்றி ஒப்புடைப் பொருள்மேல்**
**தரும்வினை புணர்ப்பது சமாதி யாகும்''** (25)

என்னும் தண்டியலங்கார நூற்பாவின்படி இது சமாதி அணி எனப்படும். சமாதி அணியை, 'ஒப்புவினை புணர்ப் பணி' என்று தமிழில் குறிப்பிடலாம்.

### பகைவரின் மாறு கோலம்

செங்குட்டுவனின் வடநாட்டுப் போரில் சிறைப்பட்ட கனக விசயர் முதலியோரைத் தவிர, மற்ற பகைவர்கள் பலவித மாறுகோலம் கொண்டு தப்பி ஓடினராம். அதாவது: சடைமுடி தாங்கியும், காவி உடுத்தும், திருநீறு பூசியும், மணையும் மயில் தோகையும் (சமணத் துறவியர்போல்) ஏந்தியும், பாடும் பாணர் போலவும், பல இயங்களைக் கூத்தர் போலத் தோளில் சுமந்தும், வாளை விட்டுத்

தத்தமக்குத் தெரிந்த கலைவல்லவர்போல் தாம் விரும்பிய பல்வேறிடங்களுக்கு ஓடி மறைந்து விட்டனராம். அதாவது வெற்றிகரமாகப் பின் வாங்கினர் போலும்! பாடல்:

**“சடையினர் உடையிடனர் சாம்பல் பூச்சினர்**
**பீடிகைப் பீலிப் பெருநோன் பாளர்**
**பாடு பாணியர் பல்லியத் தோளினர்**
**ஆடு கூத்த ராகி எங்கணும்**
**ஏந்துவாள் ஒழியத் தாம் துறை போகிய**
**விச்சைக் கோலத்து வேண்டுவயின் படர்தர”**

(26:225–230)

இது சுவையான - நகைச் சுவை பொருந்திய பாடல் பகுதி. இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் முறையில், இளங்கோ விற்குக் காலத்தால் பிற்பட்ட கம்பர் இராமாயணத்திலும் ~~ஒட்டக் கூத்தர் தக்க யாகப்~~ பரணியிலும் அறிவித்துள்ள இத்தகைய சுவையான பகுதிகளைக் காண்பாம்.

கம்ப ராமாயணம் - சுந்தர காண்டம் - அக்ககுமாரன் வதைப் படலம்:

அனுமனுக்கு அஞ்சிய அரக்கர் பலர், தாம் உயிர் பிழைக்கப் பல மாறுகோலங்கள் பூண்டு தப்பித்துக் கொண்டதைக் கம்பர் நகைச்சுவையுறப் படைத்துக் காண்பித்துள்ளார்:

சிலர் மீனாகிக் கடலில் புக்கனராம். சிலர் ஆவின் உருக்கொண்டு வழியில் புல்பூண்டுகளை மேயத் தொடங் கினராம். சிலர் ஊன் (மாமிசம்) தின்னும் பறவை வடிவெடுத்து ஆங்குக் கிடந்த உடல்களைக் கொத்தினராம். சிலர் பார்ப்பன உருவெடுத்தனராம். சிலர் பெண் வடிவங் கொண்டு கூந்தலை வகிர்ந்துகொண் டிருந்தனராம். சிலர், ஐயா, அனுமனே! யாங்கள் உம் அடைக்கலம் - எங்களை விட்டுவிடுங்கள் என்று கெஞ்சினராம். சிலர் அசையாமல்

நின்று திருமாலின் திருப்பெயர்களைச் சொல்லிக் கொண்டு திருமாலின் அடியவர்போல் நடித்தனராம்.

தம் மனைவியரும் உறவினரும் வந்து தம்மைக் கட்டிக் கொண்டு அழுதபோது, ஐயையோ - யாங்கள் உம் உறவினர்கள் அல்லர் - போர் காண வந்த தேவர்கள் என்று சொல்லி அவர்களை உதறித் தள்ளி அப்பால் சென்றனராம் சிலர். நாங்கள் அரக்கர் அல்லர் - மனிதர்கள் என்றனராம் சிலர். வண்டு வடிவம் எடுத்துப் பொழில்களில் தங்கினராம் சிலர். மயக்கம் கொண்டவர்போல் படுத்துக் கொண்டனராம் சிலர். தம் அரக்கக் கோரப் பற்களை ஒடித்து மக்கள் பற்கள்போல் ஆக்கிக் கொண்டனராம் சிலர். அரக்கராகிய தம் செம்பட்டை மயிரைக் கருமையாக்கிக் கொண்டு மக்கள் போல் நடித்தனராம் சிலர். பாடல்கள்:

**"மீனாய் வேலையை உற்றார்சிலர், சிலர்**
**பகவாய் வழிதொறும் மேய்வுற்றார்**
**ஊனார் பறவையின் வடிவானார் சிலர்**
**சிலர் நான்மறையவர் உருவானார்**
**மானார் கண்ணிள மடவார் ஆயினர்**
**முன்னே தம்குழல் வகிர்வுற்றார்**
**ஆனார்சிலர், சிலர் ஐயா நின்சரண்**
**என்றார், நின்றவர் அரி என்றார்"** (40)

**"தம்தாரமும் உறுகிளையும் தமை யெதிர்**
**தழுவுந்தொறும் நுமதம ரல்லேம்**
**வந்தேம் வானவர் என்றேகினர் சிலர்**
**சிலர் மானுடர்என வாய்விட்டார்**
**மந்தாரம் கிளர் பொழில்வாய் வண்டுகள்**
**ஆனார்சிலர், சிலர் மருள்கொண்டார்**
**இந்தார் எயிறுகள் இறுவித்தார் சிலர்**
**எரிபோல் குஞ்சியை இருள்வித்தார்"** (41)

என்பன கம்பரின் கைவரிசை. இனி, கலிங்கத்துப்பரணி - போர் பாடியது - என்னும் பகுதியில் உள்ளனவற்றைக் காண்பாம்:

சோழன் படைக்கு அஞ்சிக் கலிங்க மறவர்கள் புதர் வழியாக ஓடினர். புதரில் இருந்த முட்கள் அவர்களின் உடைகளையும் தலைமயிரையும் பிய்த்து இழுத்துக் கொண்டன. இதனால் அவர்கள், சமணத் துறவியர்போல் முடியும் உடையும் இல்லாமையால், நாங்கள் படைஞர் அல்லர் - சமணத் துறவிகள் என்று தப்பி ஓடினராம். (63)

சிலர், வில்லின் நாண் கயிற்றைப் பூணூலாகச் செய்து பூண்டு, நாங்கள் கங்கையாடச் செல்லும் பார்ப்பனர்கள் என்று கூறித் தப்பினராம் (64).

சிலர், குருதியில் நனைந்த கொடிகளைக் காவி உடை போல் உடுத்து, முடியையும் வழித்துக் கொண்டு, நாங்கள் புத்தத் துறவியர் என்று கூறித் தப்பினராம். (65)

சிலர், யானையின் மணிகளைத் தாளமாகத் தட்டிக் கொண்டு, யாங்கள் கலிங்கர் அல்லேம் - தெலுங்குப் பாணர் கள் என்று கூறித் தப்பித்து ஓடினராம். (66)

பாடல்கள்:

**"வரைக்கலிங்கர் தமைச்சேர மாசை ஏற்றி**
**வன்தூறு பறித்தமயிர்க் குறையும் வாங்கி**
**அரைக்கலிங்கம் உரிப்புண்ட கலிங்க ரெல்லாம்**
**அமணரெனப் பிழைத்தாரும் அநேகர் ஆங்கே"** (63)

**"வேடத்தால் குறையாது முந்நூ லாக**
**வெஞ்சிலைநாண் மடித்திட்டு விதியால் கங்கை**
**ஆடப்போந் தகப்பட்டேம் கரந்தோம் என்றே**
**அரிதனைவிட் டுயிர்பிழைத்தார் அநேகர் ஆங்கே"**
(64)

"குறியாகக் குருதிகொடி ஆடை யாகக்
கொண்டுடுத்துப் போர்த்துத்தம் குஞ்சி முண்டித்து
அறியீரோ சாக்கியரை உடைகண்டால் என்.
அப்புறம்என் றியம்பிடுவர் அநேகர் ஆங்கே" (65)

"சேனைமடி களங்கண்டேம் திகைத்து நின்றேம்
தெலுங்கரேம் என்று சிலகலிங்கர் தங்கள்
ஆனைமணி யினைத்தாளம் பிடித்துக் கும்பிட்டு
அடிப்பாணர் எனப்பிழைத்தார் அநேகர் ஆங்கே"
(66)

சோழன் பகைவரும் சேரன் பகைவரும் மக்கள் இனத்தவர் ஆதலின் கற்பனை கட்டுக்குள் இருந்தது. அனுமனுடன் பொருதவர்கள் அரக்கர் ஆதலின் பல வகையான மாற்றுருவங்கள் எடுத்ததாகக் கம்பர் கட்டு மீறிய கற்பனை செய்துள்ளார்.

இலக்கிய ஒப்புமை காண்டல் என்ற அடிப்படையில் சிலப்பதிகாரம், கம்பராமாயணம், கலிங்கத்துப்பரணி ஆகியவற்றில் உள்ள பகுதிகளை எடுத்துக் காட்டியதிலிருந்து ஒரு கருத்தை உறிஞ்சி எடுத்துக்கொள்ள முடியும். அதாவது: காலத்தால் முற்பட்ட சிலப்பதிகாரத்திலுள்ள கற்பனையைப் பின் வந்த கம்பரும், ~~ஒட்டக்கூத்தரும்~~ தம் நூலில் பெய்து கொண்டிருக்கலாம் என்பதுதான் அது. அல்லது, அவரவர் நூலில் இயற்கையாகவும் அமைந்திருக்கலாம்; ஆயினும், பின்னவை இரண்டும் சிலம்பின் பிழிவே என்பது ஏற்கத் தக்கதே.

## நீர்ப்படைக் காதை

### போர்க்காலம் பதினெட்டு

தேவருக்கும் அசுரருக்கும் பதினெட்டாண்டு போர் நடந்ததாம். இராமனுக்கும் இராவணனுக்கும் பதினெட்டுத் திங்கள் போர் நிகழ்ந்ததாம். பாரதப் போர் பதினெட்டு

நாள் தொடர்ந்ததாம். செங்குட்டுவன் கனகவிசயரை வென்ற போர் பதினெட்டு நாழிகையே எடுத்துக் கொண்டதாம்:

> **"உயிர்த்தொகை யுண்ட ஒன்பதிற் றிரட்டிஎன்று**
> **யாண்டும் மதியும் நாளும் கடிகையும்**
> **ஈண்டுநீர் ஞாலம் கூட்டி எண்கொள்"** (27:8-10)

ஒன்பது X இரட்டி (9×2=18) பதினெட்டு. தேவ அரக்கர் போர் 18 ஆண்டு - இராமாயணப் போர் 18 மதி - பாரதப் போர் 18 நாள் - சேரன் வென்ற போர் 18 கடிகை (நாழிகை) எனப் பொருள் கொள்ளல் வேண்டும். இரண்டரை (2½) நாழிகை ஒரு மணியாகும். இந்தக் கணக்கின்படிப் பார்க்கின், ஒரு (சுமார்) ஏழேகால் (7-12) மணி நேரத்தில் சேரன் பொருது வென்றான் என உய்த்துணரலாம்.

## முடி ஏறுதல்

சேரன் செங்குட்டுவனுக்குக் கண்ணகியின் வரலாற்றைக் கூறிய மாடலன், இறுதியாக, வடபுல மன்னரின் முடிமேல் கண்ணகி ஏறினாள் - என்று கூறினான்:

> **"குடவர் கோவே ... ... ... ... ... ... ...**
> **வடதிசை மன்னர் மணிமுடி ஏறினள்"** (27:64, 65)

கண்ணகியின் சிலை செய்யும் கல்லை வடபுல மன்னர்களாகிய கனகவிசயர் சுமந்ததை, கண்ணகி அவர்களின் முடியில் ஏறினாள் என நயம்படக் கூறியுள்ளார். சிலை செய்வதற்கு முன்பே, உறுதி கருதிக் கல் கண்ணகியாக ஆக்கப்பட்டதாகச் சிறப்பித்து மொழியப்பட்டுள்ளது.

கல் என்று நினைத்தால் கண்ணகி மறக்கப்படுவாள் — கண்ணகி என்று எண்ணின் கல் மறைந்துவிடும். இப்போது கோயில்களில் உள்ள சிலைகள் எல்லாம், கல் என்பது மறக்கப்பட்டுக் கடவுளாகக் காட்சி தருகின்றன.

இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் முறையில் திருமூலரின் திருமந்திரப் பாடல் கருத்து ஒன்றை இவண் காண்பாம்: மரத்தால் செய்யப்பெற்ற யானைப் பொம்மை ஒன்று உள்ளது என வைத்துக் கொள்வோம். அதை யானை என்று எண்ணினால் மரம் என்ற உணர்வு மறைந்துவிடும்; அதை மரம் என்று கருதினால் யானை என்ற உணர்வு மறைந்துவிடும் - என்பது அந்தக் கருத்து. பாடல்:

**"மரத்தை மறைத்தது மாமத யானை**
**மரத்தில் மறைந்தது மாமத யானை"** (2290)

என்பது பாடல் பகுதி. நாயைக் கண்டால் கல்லைக் காணோம் - கல்லைக் கண்டால் நாயைக் காணோம் - என்னும் வழக்காறும் இன்னதே. சிலர் வீடுகளில், திருடர் களை ஏமாற்றக் கல்லால் ஆன நாய் உருவை முற்றத்தில் வைத்திருப்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

**ஒரு சிலம்பும் கையும்**

வாயிலோன் பாண்டியனிடம் கண்ணகியின் வரவை அறிவித்தபோது, 'பொன்தொழில் சிலம்பு ஒன்று ஏந்திய கையள்' என்று கூறினான். இதிலுள்ள நயமாவது: காலில் அணிய வேண்டிய சிலம்பைக் கையில் வைத்திருக்கிறாள் - இரட்டைச் சிலம்புகளுள் ஒன்று மட்டுமே வைத்துள்ளாள் - என எதிர்மாறாக உள்ள நிலைமையைக் கூறியது உள்ளத் தைத் தொடுவது. (20:42)

சிலப்பதிகாரத்தில், அடிக்கு அடி ஆய்ந்து நோக்கின், சிறப்பான – எண்ணற்ற செய்திகளை இவ்வாறு காணலாம்.

**கண்ணீர்ப் படை**

சிலர் தம் தேவைகளை முடித்துக்கொள்ளக் கண்ணீரைப் படைக்கலமாகப் பயன்படுத்துவர். குழந்தைகட்கு இது இயற்கை அளித்த படைக்கலம். குடும்பப் பெண்கள் சிலரும்

சில வேளைகளில் இந்தப் படைக்கலத்தை எய்வதுண்டு. இன்னும், ஏழையர், இரவலர் முதலியோருள்ளும் இத்தகையோர் உளர்.

இவ்வாறு தேவை நிறைவேற்றத்திற்குப் பயன் படுவதல்லாமல், கொடியவரின் கொடுமையை ஒழிக்கும் படையாகவும், இது செயல்படுவதுண்டு. இதனைத் திருவள்ளுவர் கொடுங் கோன்மை என்னும் தலைப்பில் கூறியுள்ள

**"அல்லல்பட்டு ஆற்றாது அழுத கண்ணீரன்றே**
**செல்வத்தைத் தேய்க்கும் படை** (555)

என்னும் குறட்பா அறிவிக்கும். இஃதன்றி, கொடியவரைக் கொல்லும் படையாகவும் கண்ணீர் மாறுவது உண்டு. கண்ணகியின் கண்ணீர்தானே பாண்டியன் நெடுஞ் செழியனைக் கொன்றது. இதனைச் சிலம்பு - வாழ்த்துக் காதையில் உள்ள —

**"தொல்லை வினையால் துயருழந்தாள் கண்ணின்நீர்**
**கொல்ல உயிர்கொடுத்த கோவேந்தன் வாழியரோ"**
(13 - 1,2)

என்னும் பாடல் பகுதி பறை சாற்றும். 'உயிர் விட்ட' எனக் கூறாமல் 'உயிர் கொடுத்த' என்று கூறியிருக்கும் தொடர், பாண்டியனைக் 'கோவேந்தன்' ஆக ஆக்கிய நயச் சிறப்பு ஈண்டு மிகவும் நுகரத்தக்கது. கண்ணீர் கொல்லும் வாள் படையாக உள்ளமையை நறுந்தொகையில் உள்ள.

**"மனுமுறை நெறியின் வழக்கிழந் தவர்தாம்**
**மன்முற மறுகிநின்று அழுத கண்ணீர்**
**முறையுறத் தேவர் மூவர் காக்கினும்**
**வழிவழி ஈர்வதோர் வாளா கும்மே"** (75)

என்னும் பாடல் பகுதி வலியுறுத்தும். வழி வழியாக வரும்

பின்தோன்றல்கட்கும் பெரும் பழி இதனால் ஏற்படுமாம். கண்ணீருக்கு அவ்வளவு ஆற்றல் உண்டு.

**"ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளொடு ஒக்கும்"**

இவ்வாறு சுவையான சிறப்புச் செய்திகள் பல சிலம்பில் உள. இன்னும் ஒன்று:—

## இரு பெருங் குரவைகள்

சிலப்பதிகாரத்தில் ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை என்னும் இரு பெருங் குரவைக் கூத்துப் பகுதிகள் உள்ளன. ஆய்ச்சியர் குரவையைத் திருமாலைப் பற்றிய ஒரு சுருக்கமான காப்பியம் எனவும், குன்றக் குரவையை முருகனைப் பற்றிய ஒரு சுருக்கமான காப்பியம் எனவும் கூறும் அளவுக்கு, இரண்டும் சுருங்கக் கூறி விளங்க வைத்தல் என்னும் முறையில் சிறந்து திகழ்கின்றன. சுவையான இந்தப் பகுதிகளை எழுத ஆசிரியர் இளங்கோ அடிகள் எங்கே யாரிடம் கற்றாரோ என வியக்கத் தோன்றுகிறது. இனி முறையே அவை வருமாறு:-

### 1. ஆய்ச்சியர் குரவை

**ஏழுகள்**

தாம் வாழும் பகுதியில் தீய நிமித்தங்கள் பல தோன்றியதால், மாதரி, தன் மகள் ஐயையிடம், குரவைக் கூத்து ஆடினால் தீமைகள் வாரா எனக் கூறிக் குரவைக் கூத்தாட ஏற்பாடு செய்தாள். மேலும் சில கூறுவாள்:

கன்னியர் எழுவர் தலைக்கு ஒரு காளையாக ஏழு காளைகளைத் தொழுவத்தில் கட்டி வளர்த்து வந்தனர். இந்த இந்தக் காளையை அடக்குபவனுக்கு இந்த இந்தக் கன்னி உரியவள் என மாதரி கூறலானாள்:

1. தேனார்ந்த மலர் மாலை அணிந்த இந்தக் கன்னி, இதோ இருக்கும் கரிய காளையின் சீற்றத்திற்கு அஞ்சாமல் பாய்ந்து அதை அடக்குபவனை விரும்புகிறாள்.

2. இதோ உள்ள பொன் வளையல் அணிந்த பெண்ணின் தோள்கள், இதோ உள்ள 'நெற்றிச் சுட்டி பொருந்திய காளையின் மேலேறி அடக்குபவனுக்கு உரியவையாகும்.

3. இதோ உள்ள முல்லை மலர் சூடிய கூந்தலை யுடைய கன்னி, வலிமை மிக்க இந்த இளங்காளையை அடக்குபவனுக்கு உரியவள்.

4. கொடியனைய இந்தப் பெண்ணின் தோள்கள், சிறு சிறு நுண்ணிய புள்ளிகளை உடைய இந்த வெள்ளைக் காளையை அடக்குபவனுக்கு உரியனவாம்.

5. இந்தப் பொன் புள்ளிகளை உடைய வெள்ளைக் காளையை அடக்குபவனுக்கே, இந்தக் கொடி போன்ற நங்கையின் முலைகள் உரியனவாம்.

6. இந்தக் கொன்றைக் கூந்தலாள், இந்த வெற்றி வாய்ந்த இளங்காளை மேல் ஏறி அடக்குபவனுக்கு உரிய வளாவாள்.

7. இந்தப் பூவைப் புதுமலர் சூடியிருப்பவள், இதோ உள்ள இந்தத் தூய வெள்ளை நிறக் காளையைத் தழுவி அடக்குபவனுக்கு உரியவள் - என்றெல்லாம் மாதரி கூறி னாள். இவற்றிற்கு உரிய பாடல் பகுதிகள் வருமாறு:-

1. **“காரி கதனஞ்சான் பாய்ந்தானைக் காமுறும் இவ்**
**வேரி மலர்க் கோதையாள்; சுட்டு**

2. **நெற்றிச் செகிலை அடர்த்தாற்கு உரிய இப்**
**பொற்றொடி மாதராள் தோள்**

3. **மல்லல் மழவிடை ஊர்ந்தாற்கு உரியள் இம்**
**முல்லையம் பூங்குழ லாள்**

4. **நுண் பொறி வெள்ளை அடர்த்தாற்கே யாகும் இப்**
**பெண் கொடி மாதர்தன் தோள்**

5. பொற்பொறி வெள்ளை அடர்த்தாற்கே ஆகும் இந்
நற்கொடி மென் முலைதான்

6. வென்றி மழவிடை ஊர்ந்தாற்கு உரியள் இக்
கொன்றையம் பூங்குழ லாள்

7. தூநிற வெள்ளை அடர்த்தாற்கு உரியள் இப்
பூவைப் புதுமல ராள்''

என்பன பாடல் பகுதிகள். இவ்வாறு மாதரி தன் மகளிடம் கூறிப் பின் கன்னியர் எழுவர்க்கும், பழைய பெயர்கள் இருப்பதல்லாமல், தானாக ஒவ்வொரு புதுப் பெயர்கள் சூட்டினாள். அப் பெயர்கள்: குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. பாடல் பகுதி:-

''ஆங்கு,

தொழு விடை ஏறு குறித்து வளர்த்தார்
எழுவர் இளங் கோதையார்
என்றுதன் மகளை நோக்கித்
தொன்று படு முறையால் நிறுத்தி
இடை முது மகள் இவர்க்குப்
படைத்துக் கோட் பெயரிடுவாள்
குடமுதல் இடை முறையாக் குரல், துத்தம்,
கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என
விரிதரு பூங்குழல் வேண்டிய பெயரே''

இது பாடல் பகுதி. படைத்துக் கோள் பெயரிடுதல் - தானாகப் புதிதாகப் படைத்துக் கொண்டு பெயர் வைத்தல்.

இக்காலத்தில் கூறும் ச, ரி, க, ம, ப, த, நி எனச் சுருக்கமாக வழங்கப்பெறும் சட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்னும் ஏழுக்குப் பதிலாக, அக்காலத்தில் தமிழில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு பெயர்களும் கூறப்பட்டன என்பது ஆராய்ச்சியாளர் சிலரின் கருத்து.

ஆனால், அவற்றிற்கு நேராக இவற்றையோ - இவற்றிற்கு நேராக அவற்றையோ கூற முடியாது என விபுலாநந்த அடிகள் தம் யாழ் நூலில் கூறியுள்ளார். இது ஆராய்ச்சிக்கு உரியது.

**கேளாமோ தோழி**

அடுத்து, ஆய்ச்சியர் குரவையில் உள்ள மூன்று பாடல் பகுதிகளை விளக்கம் இன்றித் தந்து சுவைத்து மகிழச் செய்ய வேண்டுமென என் அவா உந்துகிறது. இதோ அவை:

1. **'கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்**
   **இன்று நம் ஆனுள் வருமேல் அவன் வாயில்**
   **கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ'**
2. **'பாம்பு கயிறாக் கடல் கடைந்த மாயவன்**
   **ஈங்குநம் ஆனுள் வருமேல் அவன் வாயில்**
   **ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ'**
3. **'கொல்லையஞ் சாரல் குருந்தொசித்த மாயவன்**
   **எல்லை நம் ஆனுள் வருமேல் அவன் வாயில்**
   **முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ'**

என்பன அவை. திரும்பத் திரும்பப் பாடிச் சுவைக்க வேண்டிய பகுதிகள் இவை. இவ்வாறு பாடிக் கொண்டே ஆய்ச்சியர்கள் குரவைக் கூத்து ஆடினமை, சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி பொழிந்தது போன்றதாகும்.

அடுத்து ஒன்று: படர்க்கைப் பரவல் என்னும் தலைப்பின் கீழ் உள்ள —

1. **'சேவகன் சீர் கேளாத செவிஎன்ன செவியே**
   **திருமால் சீர் கேளாத செவிஎன்ன செவியே**
2. **'கரியவனைக் காணாத கண் என்ன கண்ணே**
   **கண்ணிமைத்துக் காண்பார்தம் கண் என்ன கண்ணே'**

3. 'பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நா என்ன நாவே
நாராயணா என்னா நா என்ன நாவே'

என்பன குறிப்பிடத்தக்கன. செவி, கண், நாக்கு ஆகியவை, அன்புப் பெருக்கால், திருமாலின் பெருமையைக் கேட்க வேண்டுமாம் - கோலத்தைக் காண வேண்டுமாம் - அவரை ஏத்தவேண்டுமாம்.

திருமாலின் கோலத்தைக் காணாத கண்ணைத் தாக்குவ தோடு நிறுத்தவில்லை - அவரது கோலத்தை (கண்களை) இமைத்து இமைத்துக் காணும் கண்களும் தாக்கப் பட்டுள்ளன. அதாவது, கண்களை மூடி மூடித் திறக்காமல் தொடர்ந்து பார்த்துக் கொண்டே இருக்க வேண்டுமாம். இது ஒரு நயமான பகுதி.

ஆயர்கள் திருமாலை வழிபடும் வைணவர்க ளாதலின், ஆய்ச்சியர் குரவையில் இச்செய்திகள் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத் தக்கது. அந்த அந்த இடங்களில் அந்த அந்த நடிகராக இளங்கோ அடிகள் நடித்துள்ள அருமை பெருமை மகிழத் தக்கது.

இலக்கிய ஒப்புமை காண்டல் என்ற முறையில் திருநாவுக்கரசர் தம் உறுப்புகட்கு விடுத்துள்ள கட்டளை களைக் காண்பாம்:

'தலையே நீ வணங்காய்' (1)
'கண்காள் காண்மின்களோ' (2)
'செவிகாள் கேண்மின்களோ' (3)
'மூக்கே நீ முரலாய்' (4)
'வாயே வாழ்த்து கண்டாய்' (5)
'நெஞ்சே நீ நினையாய்' (6)
'கைகாள் கூப்பித் தொழீர்' (7)
'ஆக்கையால் பயனென்' (8)
'கால்களால் பயனென்' (9)

அறிவுப் பொறிகள் (ஞானேந்திரியங்கள்), செயல் பொறிகள் (கன்மேந்திரியங்கள்), உள்ளுறுப்பு (அந்தக் கரணம்) ஆகியவற்றுள் ஒன்பது உறுப்புகளின் கடமையைத் திருநாவுக்கரசர் தேவாரப் பாடலில் கூறியுள்ளார்.

இளங்கோ அடிகள் செவி, கண், நாக்கு என்னும் மூன்றின் கடமைகளை மட்டும் கூறியுள்ளா ரெனில், இது அவராகக் (ஆசிரியர் கூற்றாகக்) கூறவில்லை. கதை மாந்தராகிய ஆய்ச்சியரின் சூழ்நிலைக்கு ஏற்ப, ஆய்ச்சியர் கூறியிருப்பதாக அளந்து கூறியுள்ளார். நாவுக்கரசர் தம் சொந்த உறுப்புகட்குக் கூறுவதால், கஞ்சத்தனம் இன்றி - தாராளமாகப் பல உறுப்புகட்கும் கட்டளை பிறப்பித்து உள்ளார்.

ஆய்ச்சியர் குரவைப் பகுதியைப் பாடிப் பாடிச் சுவைத்து இன்புறல்வேண்டும்.

**2. குன்றக் குரவை**

**சிறுகுடியீரே சிறுகுடியீரே!**

தம் குன்றுப் பகுதியில் வேங்கை மரத்தின் கீழ் நின்று பின்பு வானுலகம் சென்ற கண்ணகியைக் கண்ட குன்றவர், இவள் போன்ற தெய்வம் நமக்கு வேறு இல்லையாதலின் இவளைப் பாடுவோம் என்று பாடிய பகுதி சுவையான தாதலின், விளக்கம் வேண்டாது அதனைக் காண்பாம்.

**"சிறுகுடி யீரே சிறுகுடி யீரே**
**தெய்வம் கொள்ளுமின் சிறுகுடி யீரே**
**நிறங்கிளர் அருவிப் பறம்பின் தாழ்வரை**
**நறுஞ்சினை வேங்கை நன்னிழல் கீழ்ஓர்**
**தெய்வம் கொள்ளுமின் சிறுகுடி யீரே**
**தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின்**
**கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின்**

**குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின்**
**பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை நிறுமின்**
**பரவலும் பரவுமின் விரவுமலர் தூவுமின்**
**ஒருமுலை இழந்த நங்கைக்குப்**
**பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே"**

குன்றவரின் இயங்களும் பூசனை முறைகளும், இப் பகுதியில், அடிமேல் அடித்தாற்போல் தொடர்ந்து இடம் பெற்றுப் படிப்பவரை மகிழ்விக்கின்றன.

**இது நகையாகின்றே**

தலைமகன் ஒருவனோடு காதல் கொண்ட தலைமகள் ஒருத்தி, விரைவில் மணம் கூடாமையால் மிகவும் வாடி வதங்கி மெலிந்து காணப்படுகிறாள். இந்தக் காதல் திருவிளையாடலை அறியாத தலைவியின் தாய், தன் பெண்ணை ஏதோ தெய்வம் தீண்டி அச்சுறுத்தி விட்டது என்று எண்ணி, வேலன் வெறியாடல் செய்யத் தொடங்குகிறாள்; அத்தெய்வம் முருகன் என எண்ணு கிறாள். தாய் முருகனுக்குப் பூசனை போடுவாள்; முருகன் ஏறிய வேலன் என்னும் சாமியாடியை அழைத்து, மகளின் நோய்க் காரணத்தை அறிந்து சொல்லச்செய்து அது தீர்க்கும் வழியையும் அறிவிக்கச் செய்வாளாம். வேலன் என்பவன் மேல் முருகன் ஏறி எல்லாம் கூறுவானாம். இதற்குத் தமிழ் அகப்பொருள் துறையில் 'வேலன் வெறியாட்டு' என்பது பெயராகும்.

தலைவி தோழிக்குச் சொல்லுகிறாள். தோழியே! என் காதலனால் உண்டான நோயை முருகனால் உண்டான நோயாக அன்னை எண்ணி, வெறியாடும் வேலனை வரச் சொல்லியுள்ளாள். இது நகைப்புக்கு உரியது தோழியே! (இது நகையாகின்றே தோழீ).

ஆய்வளையல் அணிந்த தோழியே! மலைநாடனாகிய என் காதலனால் உண்டான நோயைத் தீர்க்க வேலன் வருமாயின், உண்மை நோயை அறியாததால் அவனால் தீர்க்க முடியா தாதலின் அவ்வேலன் அறிவிலி யாவான். மற்றும், அவ்வேலன் மேல் ஏறியாடச் செய்யும் குருகுபெயர்க் குன்றம் தொலைத்த முருகனும் மடவோனே யாவான். இது நகையாகின்றே!

செறிவளைக் கை நல்லாய்! வெறிகமழ் வெற்பனாகிய என் காதலனால் உண்டான நோயைத் தீர்க்க வரும் வேலன் மடையன். ஆலமர் செல்வனாகிய சிவனின் மகனாகிய முருகன் அவன்மேல்வரின் அவ்வேலனைவிடப் பெரிய மடையனாவான். இது நகையாகின்றே!

நேரிழை நல்லாய்! மலை நாடனாகிய என் தலைவனது மார்பு தந்த கொடிய நோயைத் தீர்க்க வரும் வேலன் மடவோ னாவான். கடப்ப மாலை யணிந்த முருகன் வேலன்மேல் ஏறிவரின், அவனினும் இவன் கடைந்தெடுத்த மடவோனாவான். இது நகையாகின்றே! என்று தலைவி தோழிக்குக் கூறினாள். இனிப் பாடல் பகுதிகள் வருமாறு:

1. **'இறைவளை நல்லாய்! இது நகை யாகின்றே**
   **கறிவளர் தண்சிலம்பன் செய்த நோய் தீர்க்க**
   **அறியாள்மற்று அன்னை அலர் கடம்பன் என்றே**
   **வெறியாடல் தான்விரும்பி வேலன் வருகென்றாள்.'**

2. **'ஆய்வளை நல்லாய்! இது நகை யாகின்றே**
   **மாமலை வெற்பன்நோய் தீர்க்கவரும் வேலன்;**
   **வருமாயின் வேலன் மடவன்; அவனின்**
   **குருகுபெயர்க் குன்றம் கொன்றான் மடவன்.'**

3. **'செறிவளைக் கை நல்லாய்! இது நகையாகின்றே**
   **வெறிகமழ் வெற்பன்நோய் தீர்க்கவரும் வேலன்;**
   **வேலன் மடவன்; அவனினும் தான்மடவன்**
   **ஆலமர் செல்வன் புதல்வன் வருமாயின்.'**

4. **'நேரிழை நல்லாய்! நகையாம் மலைநாடன்**
**மார்புதரு வெந்நோய் தீர்க்க வரும்வேலன்;**
**தீர்க்க வரும்வேலன் தன்னினும் தான் மடவன்**
**கார்க் கடப்பந்தார் எம் கடவுள் வருமாயின்.'**

இவை பாடல் பகுதிகள். தமிழ் அகப்பொருள் இலக்கணத்தை முற்றும் கரைத்துக் குடித்துக் கற்றவராகக் காணப்படுகிறார் ஆசிரியர் இளங்கோ.

மேலும் தலைவி கூறுகிறாள்:

1. நீலமயில் மேல் வள்ளியோடும் முருகன்வரின்; மலை நாடராகிய என் காதலரோடு என்னை மணம் முடிக்க அருள்புரிக என்று வேண்டுவோம்.

2. மலைமகள் மகனாகிய முருகன் வரின், அவனையும் அவன் துணைவி குறமகள் வள்ளியையும் தொழுது, அயலாருக்கு என்னை மணமுடிக்கச் செய்யாமல், என் காதலருக்கே என்னை மணம் முடிக்க அருளும்படி வேண்டுவோம்.

3. மலைமகள் உமையின் மகனாகிய முருகன் வரின், அவனையும், அவன் மனைவியாகிய எம் குறக்குலத்து வள்ளியையும் தொழுது, பலரும் அறியும்படியாக என் காதலருடன் என்னை மணம் முடிக்க அருளும்படி வேண்டுவோம்.

4. குறமகளும் எம் குலத்து மகளும் ஆகிய வள்ளியையும் முருகனையும் தொழுது, பிழைபட வேறொருவர்க்கு என்னை மணம் முடிக்காமல், என் காதலருடனேயே என்னை மணம் முடிக்க அருளும்படி வேண்டுவோம் - என்று தலைவி கூறினாளாம்.. பாடல் பகுதிகள் வருமாறு:

1. **'வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து**
**நீலப் பறவைமேல் நேரிழை தன்னோடும்**
**ஆலமர் செல்வன் புதல்வன் வரும்; வந்தால்**
**மால்வரை வெற்பன் மணஅணி வேண்டுதுமே.'**

2. 'கயிலைநன் மலையிறை மகனை நின்மதிநுதல்
மயிலியல் மடவரல் மலையர்தம் மகளார்
செயலைய மலர்புரை திருவடி தொழுதேம்
அயல் மணம் ஒழி; அருள் அவர் மணம் எனவே.'

3. 'மலைமகள் மகனை நின் மதிநுதல் மடவரல்
குலமலை உறைதரு குறவர்தம் மகளார்
நிலையுயர் கடவுள்நின் இணையடி தொழுதேம்
பலர்அறி மணம் அவர் படுகுவர் எனவே.'

4. 'குலமகள் அவள் எம குலமகள் அவளொடும்
அறுமுக ஒருவநின் அடியிணை தொழுதேம்
துறைமிசை நினதுஇரு திருவடி தொடுநர்
பெறுக நன் மணம்; விடு பிழை மணம் எனவே.'

என்பன பாடல் பகுதிகள்.

முருகனை ஈர்த்துக் கவர, அவன் மனைவி வள்ளி தங்கள் குறக்குலத்தவள் என்று கூறியிருக்கும் நயமான பகுதி சுவைக்கத் தக்கது. இவ்வாறாகக் குன்றக் குரவையில் பல சுவைகளை நுகர்ந்து மகிழலாம்.

ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை, ஆகிய இரண்டிலும், பல பாடல்களில், இரண்டாம் அடி திரும்பவும் மூன்றாம் அடியாக மடங்கி வரும் செய்யுள் அமைப்பைக் காணலாம். ஒவ்வொன்றிலுமிருந்து ஒவ்வோர் எடுத்துக் காட்டு வருமாறு:

**ஆய்ச்சியர் குரவை**

'முந்நீ ரினுள்புக்கு மூவாக் கடம் பெறிந்தான்
மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
கன்னவில் தோளோச்சிக்கடல் கடைந்தான் என்பரால்.'

**குன்றக் குரவை**

**'என்றொன்றும் காணேம் புலத்தல் அவர்மலைக்**
**கற்றீண்டி வந்த புதுப்புனல்**
**கற்றீண்டி வந்த புதுப்புனல் மற்றையார்**
**உற்றாடி னோம்தோழி நெஞ்சன்றே.'**

வந்த சொல்லே - சொற்றொடரே மீண்டும் அடுத்து அடுத்து வருதல் நாடகத்தில் சுவை கூட்டும் ஓர் அமைப் பாகும் என்று The Art of Play Writing என்னும் நூலில் படித்தது இங்கே இப்போது நினைவிற்கு வந்து உவகை ஊட்டுகின்றது.

இவ்வாறாக, சுவையான சிறப்புச் செய்திகள் சிலம்பில் உள.

# 30. கண்ணகி பாண்டியன் மகளா?

**வாழ்த்துக் காதை**

*வஞ்சி நகர மகளிர் கண்ணகியைப் பாண்டியன் மகள் என்று கூறிப் பாடினர். பாடல்:*

**"வஞ்சியீர் வஞ்சி இடையீர் மறவேலான்**
**பஞ்சடி ஆயத்தீர் எல்லீரும் வம்மெல்லாம்;**
**கொங்கையால் கூடல் பதிசிதைத்துக் கோவேந்தைச்**
**செஞ்சிலம்பால் வென்றாளைப் பாடுதும் வம்மெல்லாம்;**
**தென்னவன் தன் மகளைப் பாடுதும் வம்மெல்லாம்;**
**செங்கோல் வளைய உயிர் வாழார் பாண்டியர் என்று**
**எங்கோ முறைநா இயம்ப இந்நாடடைந்த**
**பைந்தொடிப் பாவையைப் பாடுதும் வம்மெல்லாம்;**
**பாண்டியன் தன்மகளைப் பாடுதும் வம்மெல்லாம்"**

(29:11)

*கொங்கையால் மதுரையை எரித்தவளும் பாண்டியன் மகளும், செங்கோல் தவறின் பாண்டியர் உயிர் வாழார் என்று எம்சேரமன்னன் புகழ இச்சேர நாடு அடைந்தவளும் ஆகிய கண்ணகியை நாம் எல்லேமும் பாடுவோம் வருக என்று வஞ்சி மகளிர் பாடினர் - என்பது கருத்து. மேலும் வஞ்சி மகளிர் பாடுவர்:*

*சேரன் கண்ணகிக்குக் கோயில் எடுத்துப் புத்துயிர் தந்து புதிய தெய்வப் பிறவியாக ஆக்கியதால், கண்ணகி சேரன் மகள் என்று வஞ்சி மகளிராகிய நாம் சொன்னோம். ஆனால், தெய்வமாகி விட்ட கண்ணகி ஒலி வடிவுடன் யான் பாண்டியன் மகள்' என்றாள். நாம் சேரனை*

வாழ்த்துவோமாக! தெய்வ மகளாகிய கண்ணகி பாண்டியனை வாழ்த்துவாளாக! இதன் பாடல்:

> **"வானவன் எங்கோ மகள் என்றாம்; வையயார்**
> **கோனவன்தான் பெற்ற கொடியென்றாள் - வானவனை**
> **வாழ்த்துவோம் நாமாக; வையயார் கோமானை**
> **வாழ்த்துவாள் தேவ மகள்"** (29:12)

இது பாடல். புகாரிலே இருந்த மாநாய்கன் என்னும் வணிகனின் மகளாகிய கண்ணகியைப் பாண்டியன் மகள் என்று கூறியிருப்பதில் உள்ள சிக்கலை அவிழ்க்க வேண்டுமே! இது என்ன வம்பாய் (புதிதாய்) இருக்கிறது! இதற்குப் பழைய கதையின் துணை தேவைப்படுகிறது.

**கண்ணகி காளியா?**

காளிதான் கண்ணகியாக வந்தாள் என்பது ஒரு பழங்கதை. இது குறித்து இளமையிலேயே யான் எண்ணிப் பார்த்ததுண்டு. 1949 மே திங்கள் 11-ஆம் நாள் திருச்சிராப்பள்ளித் திருவள்ளுவர் கழகத்தின் சார்பில் பழக்கடைத் தெருவிலுள்ள சத்திரத்தில் சிலப்பதிகாரம் தொடர்பாக "எது கற்பு?" என்னும் தலைப்பில் இரண்டே முக்கால் மணிநேரம் யான் சொற்பொழிவாற்றினேன். அதே ஆண்டு அதே திங்கள் 14-ஆம் நாள், கடலூர் வண்டிப் பாளையம் முருகன் கோயிலில் 'கண்ணகி காளியா?' என்னும் தலைப்பில் இரண்டே கால் மணிநேரம் சொற்பொழி வாற்றினேன். சிலம்பு பற்றி ஒரூரில் தெரிவித்த கருத்துகளே பெரும்பாலும் வேறு ஊரிலும் இடம் பெற்றன.

கண்ணகி காளியா? என்னும் தலைப்பில் பேசிய யான், கண்ணகி காளியல்லள் - எல்லாரையும் போன்ற மக்களினப் பெண்ணே - காளி வந்து கண்ணகியாகப் பிறக்கவில்லை - என்று பேசி முடித்தேன். கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய பெரியார் ஒருவர் அவரது தலைமை முடிப்புரையில்,

எனது முடிவை மறுத்து, காளியே கண்ணகியாக வந்தாள் என்று வலியுறுத்திக் கூறினார். யான் விடவில்லை. என் கருத்தையே யான் மீண்டும் எழுந்து வலியுறுத்தினேன். அவரும் விடவில்லை - பிறகு நானும் விடவில்லை. கூட்டம் ஒருவாறு முடிந்தது. ஆனால் திருச்சியில் மறுப்பு இல்லை.

யான் இளமையில் கோவலனைப் பற்றிப் பார்த்தறிந்த - கேட்டறிந்த காட்சிச் செய்தியாவது:- மாதவி கோவலன் கழுத்தில் மாலையை மாட்டி விட்டாள். அதை அவனால் கழற்ற முடியவில்லை - இது தொடர்பாகப் பாடப்பட்ட பாடலின் ஓரடி நினைவிற்கு வருகிறது:-

**"கழுத்தில் விழுந்த மாலை கழற்ற முடியவில்லை –**
**காரிகையே இது யார் சூதோ?"**

என்பது. இதனை, விளையாட்டாக, பெரியவர்கள் போல் சிறுவர்களும்,

**"கலுத்தில் விலுந்த மாலா கலட்ட முடியவில்லா**
**காரிகையே இது யார் சூதா"**

எனப் பாடுவதுண்டு. இதை யானும் பாடியிருக்கிறேன். கண்ணகி பாண்டியனிடம் வழக்குரைத்தபோது கூறியதாகச் சொல்லப்படுகிற–

**"பழிக்குப் பழி கொடடா பழிகாரப் பாண்டியனே"**

என்பதையும் சிறுவயதினராகிய நாங்கள் பாடிய துண்டு. நிமித்தம் என்னும் தலைப்பிலும் இது பற்றிய பாடல் அடிகள் சில இடம் பெற்றுள்ளன.

**பழங்கதையின் சுருக்கம்**

மேலே கூறியிருப்பது பழங்கதையின் தொடர்புள்ளதே. முழுச் சுருக்கத்தையும் மேலும் சுருக்கமாகக் காண்பாம்: பாண்டிய மன்னன் ஒருவன் பிள்ளையில்லாமையால், தன் மனைவி வயிற்றில் பிள்ளை உண்டாக அருள் புரியும்படிக்

காளியை வேண்டினார். வேண்டுதல் கடுமையா யிருந்தது. காளி தானே குழந்தையாய் மார்பில் மாலையுடனும் கால்களில் சிலம்புகளுடனும் பாண்டியனின் மனைவி வயிற்றிலிருந்து பிறந்தாள்.

பாண்டியன் கணியரை (சோதிடரை) அழைத்து வருங்காலப் பயன் பற்றி வினவினான். இக் குழந்தையால் உனக்கும் மதுரைக்கும் அழிவு உண்டு என்று கூறிக் குழந்தையை அப்புறப்படுத்துமாறு கணியர் அறிவித்தார். உடனே பாண்டியன் ஒரு பெட்டியில் குழந்தையை வைத்து, தொலைவில் உள்ள காவிரியாற்றில் கொண்டுபோய்ப் பெட்டியை விடச்செய்தான். காவிரிக் கரையிலுள்ள புகார் நகர வணிகன் ஒருவன் அப்பெட்டியைக் கண்டெடுத்து உள்ளே யிருந்த குழந்தையைக் கண்டு மகிழ்ந்து கண்ணகி என்ற பெயர் இட்டு வளர்த்து வந்தான். பிள்ளை இல்லாதவன் அவன்.

கண்ணகி பருவம் எய்தியதும் அவ்வூரில் இருந்த கோவலன் என்பானுக்குக் கண்ணகியை மணமுடித்துக் கொடுத்தான் வளர்த்த தந்தை. திருக்கடையூரில் இருந்த மாதவி என்னும் வேசி கோவலன் கழுத்தில் மாலையிட்டாள் அம்மாலையைக் கழற்ற முடியவில்லை. பின்பு கோவலன் மாதவியிடமே தங்கிவிட்டான். மாதவி புறக்கணித்த காலம் வந்ததும் மீண்டும் கோவலன் கண்ணகியை அடைந்தான். இருவரும் மதுரை சென்றனர். அங்கே கோவலன் கொலையுண்டான். காளியாகிய கண்ணகி பாண்டியனையும் மதுரையையும் அழித்தாள்.

இது மிகவும் சுருக்கமான பழங்கதை. இதிலிருந்து நாம் எடுத்துக்கொள்ள வேண்டியது, கண்ணகி பாண்டியன் மகள் என்பதற்குச் சான்று உள்ளது என்பதுதான். காளிதான் கண்ணகியாக வந்தாள் என்பது தேவையில்லை. அது உண்மையும் அன்று.

கண்ணகி பாண்டியன் மகள் என்று வஞ்சி மகளிர் கூறியதாகவும் கண்ணகியே கூடக் கூறியதாகவும் பாடியுள்ள இளங்கோ எந்தச் சான்றைக் கொண்டு இவ்வாறு பாடியிருக்க முடியும்? பழங்கதையை அவர் அறிந்தவராதலின் இவ்வாறு பாடினாரெனில், புகாரில் இருந்த மாநாய்கனின் மகள் கண்ணகி என்று மங்கல வாழ்த்துப் பாடல் காதையில் கூறியிருப்பது ஏனோ? இந்தப் பழங்கதைப்படி நடந்தது உண்மையாயின், வளர்ப்பு மகள் என்று கூறாமல், வாளா மகள் எனக் கொள்ளும்படிக் கூறினாள் எனக் கொண்டு அமைதி அடைவதைவிட வேறு வழியில்லை. இளங்கோ சிலப்பதிகாரம் எழுதுவதற்கு முன்பே இந்தக் கதை நாட்டில் நடிக்கப்பட்டிருந்ததை அறிந்திருப்பாராதலால், கண்ணகி பாண்டியன் மகள் என்ற குறிப்பைத் தக்க இடத்தில் புகுத்தியுள்ளார் என்றும் கொள்ளலாம். தன் சிலம்பு காரணமாகப் பாண்டியன் இறந்து விட்டதால், அவன் மீது பரிவுற்றுத் தான் அவன் மகள் என்றும் கூறியிருக்கலாம் கண்ணகி.

இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள நெடுங்கதைகள், பெரும்பாலும், நாட்டில் நடிக்கப்பட்ட பின்பே ஏட்டில் இடம் பெற்றிருக்க வேண்டும். இந்த நாடகங்கள், அரசர் முதலிய மேட்டுக் குடியினர் முன்னே நடிக்கப்பெற்ற வேத்தியல் மேடைக் கூத்தாகவும் இருக்கலாம்; மற்றும், பொதுமக்கள் முன்னே நடிக்கப்பெற்ற பொதுவியல் தெருக் கூத்தாகவும் இருக்கலாம்.

இலக்கிய ஒப்புமை காண்டல் என்னும் அடிப்படையில், கிரேக்கப் பெரும்புலவராகிய ஃஓமர் எழுதிய 'இலியடு' என்னும் காப்பியத்திற்குச் செல்வோம்: இந்தக் காப்பியத்தில் இடம் பெற்றுள்ள பல பகுதிகள், யுகோசுலோவகியா நாட்டிலுள்ள சிற்றூர்களில் எளிய மக்களாலும் பாடப்பட்டவை என்பதாக ஒரு கருத்து

சொல்லப் படுகின்றது. சிலப்பதிகார காப்பியத்தின் அமைப்பும் இது போன்றதாக இருக்கலாம் அல்லவா?

**ஒற்றை முலைச்சி**

நற்றிணையில், தலைவன் - தலைவி - பரத்தை ஆகியோர் தொடர்பான ஒரு பாடலில், உவமையாக, ஒரு முலை அறுத்த பெண்ணொருத்தி குறிப்பிடப்பட் டுள்ளாள்:

**"ஏதி லாளன் கவலை கவற்ற**
**ஒருமுலை அறுத்த திருமா வுண்ணி"** (216:8,9)

என்பது பாடல் பகுதி. ஒருவனால் ஏற்பட்ட கவலை வருத்தியதால், ஒரு முலையை அறுத்துச் செயலாற்றிய திருமாவுண்ணி என்பவள் கண்ணகியாக இருக்கலாம் என ஒரு கருத்து உய்த்துணரப் படுகிறது.

மற்றும், கொடுங்கோளூரில் கோயில் கொண்டுள்ள பகவதி அம்மனுக்கு 'ஒரு முலைச்சி' என்ற பெயர் இன்றும் வழங்கப் பெறுகிறது.

எனவே, நாட்டில் நடமாடும் கதைகளின் அடிப்படையில் காப்பியங்கள் எழுவது இயற்கையாகும்.

**பேகன் – கண்ணகி**

மயிலுக்குப் போர்வை போர்த்திய பேகன் என்னும் வள்ளல் தன் மனைவியை நீக்கியதாகவும், அவள் அரண்மனை வாயிலில் நின்று மார்பகம் நனையும் அளவிற்குக் கண்ணீர் சொரிந்த தாகவும் கபிலர் பாடிய பாடல் ஒன்று (143) புறநானூற்றில் உள்ளது.

**"கைவள் ளீகைக் கடுமான் பேக** (6)
**யார்கொல் அளியள் தானே......** (7)
**உகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்** (13)
**முலையகம் நனைப்ப விம்மிக்......** (4)
**குழல் இனைவதுபோல் அழுதனள் பெரிதே"** (15)

என்பது பாடல் பகுதி. அவள் யார்? அவளுக்கு அருள் செய்க - என்று பரிந்துரைப்பது போல் இப்பாடல் உள்ளது. அவள் பெயரும் கண்ணகி என்பதுதானாம். இந்தக் கதையை அடிப்படையாகக் கொண்டு கோவலன் - கண்ணகி வரலாறு எழுந்ததாகச் சிலர் கூறுவது பொருந்தாது. அதுவேறு - இதுவேறு.

# 31. சில சிக்கல் தீர்வுகள்

ஒரு வரலாற்றைக் காப்பியமாக எழுதும் போது, ஆண்டு, திங்கள், நாள், நேரம் (மணி) ஆகியவை வாரியாக நிகழ்ச்சிகள் நடைபெற்றதாக வரலாற்றில் காண்பதுபோல் காப்பியத்தில் - அதிலும் பழைய காப்பியத்தில் எதிர்பார்க்க வியலாது. காப்பியத்தில், ஞாயிறு திங்கள்களின் தோற்றம் மறைவு, வேனில் - கார் - பனிப்பெரும் பருவங்கள், எங்கோ இரண்டொரு திங்கள் (மாதம்), வைகறை - காலை - நண்பகல் - மாலை - இரவு - நள்ளிரவு என்னும் சிறு பருவப் பொழுதுகள் ஆகியவற்றுள் சிலவே, நிகழ்ச்சிகள் நடைபெற்ற நேரமாகக் குறிப்பிடப்பட்டிருக்கும். ஒரு நாள் குறிப்பு (டைரி) போல் காப்பியத்தைக் கருதலாகாது. இந்த அடிப்படையுடன் சிலப்பதிகாரக் காப்பியத்திற்கு வருவோம்- சில சிக்கல்களைத் தீர்ப்போம்:

**1. கால முரண்**

சிலம்பில் 'கால முரண்' இருப்பதாக அறிஞர்கள் சிலர் கூறியுள்ளனர். இது ஒரு சிக்கல். இதன் விவரமாவது:- கவுந்தியடிகள், கோவலன், கண்ணகி ஆகிய மூவரும் மதுரையின் புறஞ்சேரியில் வந்து தங்கினர். ஒரு நாள் காலையில் கோவலன் மதுரையைச் சுற்றிப்பார்த்து விட்டுப் புறஞ்சேரி வந்து சேர்ந்தான். இது கிட்டத்தட்ட நண்பகல் நேரத்திற்குச் சிறிது முன்னதாக இருக்கலாம். அப்போது அவ்வழியாக வந்த ஆய்ச்சியாம் மாதரியிடம் கவுந்தி கண்ணகியைக் கோவலனுடன் அடைக்கலமாகத் தந்தார்.

மாதரி இருவரையும் அழைத்துக்கொண்டு தன் இருப்பிடம் சேர்ந்தாள். கண்ணகியை நீராட்டி மங்கலப்

படுத்தினாள். கோவலன் பொழுதோடு உண்ணும் சாவக நோன்பிச் சமயத்தைச் (சமணத்தைச்) சேர்ந்தவனாதலின் உணவு ஆக்குவதற்கு வேண்டியவற்றைக் கண்ணகியிடம் விரைந்து கொடுக்குமாறு தம்மவர்க்குப் பணித்தாள். அவ்வாறு கொடுக்கப்பட்டதும் கண்ணகி விரைந்து உணவாக்கிக் கோவலனை உண்பித்தாள் - வெற்றிலை பாக்கும் தந்தாள்.

உணவு உட்கொண்ட கோவலன் கண்ணகியை நோக்கித் தன் பழைய தவறுகளைக் கூறி வருந்தி, அவளைத் தழுவி, கண்ணீரை மறைத்துக் கொண்டு ஒரு சிலம்பைப் பெற்று விற்றுவர மதுரைக் கடைத்தெருவிற்குச் சென்றான். அங்கே பொய்க் குற்றம் சாட்டப்பட்டுக் கொலையுண்டான். இது நடந்தது மாலை நேரம் அல்லது முன்னிரவு 7 மணியாய் இருக்கலாம் என்பது சிலரது கருத்து. இந்தச் செய்தி கொலைக்களக் காதையில் கூறப்பட்டுள்ளது. ஆனால் இளங்கோ நேரம் எதையும் இந்தக் காதையில் குறிப்பிடவில்லை. அவன் சாவக நோன்பியாதலின் பொழுதோடு உண்டு உடனே கடைத்தெருவுக்குச் சென்றான், என்பதைக் கொண்டு, இது நடந்த நேரம் மாலையாய் இருக்கலாம் எனச் சிலர் கருதுகின்றனர் போலும்!

பின்னர் ஊர்சூழ்வரி என்னும் காதையில் இளங்கோ தெளிவாக நேரம் குறிப்பிட்டு ஒரு நிகழ்ச்சியை அறிவித்துள்ளார். அதாவது, இருளை ஊட்டி ஞாயிறு மறைய ஒளி மயக்க நேரமாகிய மாலை வந்தது. அம்மாலை நேரத்தில் சிலர் காட்டக் கோவலனின் உயிரற்ற உடலைக் கண்ணகி கண்டாள். கோவலனது தலை முடியில் இருந்த மாலையைப் பெற்றுத் தன் கூந்தலில் காலையில் சூடிக்கொண்ட கண்ணகி, அன்று மாலையில், கோவலனது உடலைக் குருதிக் கறை படியத் தழுவிப் புலம்பினாள் - என இளங்கோ அடிகள் பாடியுள்ளார். பாடல் பகுதி வருமாறு:-

"மல்லல் மாஞாலம் இருளூட்டி மாமலைமேல்
செவ்வென் கதிர்சுருங்கிச் செங்கதிரோன் சென்றொளிப்பப்
புல்லென் மருள்மாலைப் பூங்கொடியாள் பூசலிட
ஒல்லென் ஒலிபடைத்த தூர்.
வண்டார் இருங்குஞ்சி மாலைதன் வார்குழல்மேல்
கொண்டாள் தழீஇக் கொழுநன்பால் காலைவாய்ப்,
புண்தாழ் குருதி புறஞ்சோர மாலைவாய்க்
கண்டாள் அவன்றன்னைக் காணாக் கடுந்துயரம்"
(19:31 - 38)

என்பது பாடல் பகுதி. கொலைக் களக் காதையில், கோவலன் மாலையில் கொலையுண்டதாகக் கருத்து கொள்ளும்படிப் பாடியுள்ள இளங்கோவடிகள், ஊர் சூழ் வரிக் காதையில், காலையில் கோவலனிடம் மலர் பெற்றுத் தழுவி வந்த கண்ணகி, மாலையில் அவனது பிணத்தைக் கண்டு அரற்றினாள் என்று கூறியிருப்பது கால முரண் - வழுவாகும்; இந்த வகையில், சிலப்பதிகாரம் பிழையுடையது எனச் சீராமுலு ரெட்டியாரும் மு. கு. சகந்நாத ராசாவும் கூறியுள்ளனர்.

**சிலம்பில் பிழையா?**

இந்தச் செய்தியை, திருவனந்தபுரம் - கேரளப் பல்கலைக் கழகக் கல்லூரியின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியராகிய திரு ஆர். வீரபத்திரன் என்னும் அறிஞர், தமது 'பிழையிலாச் சிலம்பு' என்ற நூலில் தெரிவித்துள்ளார். சகந்நாத ராசா எழுதியுள்ள 'சிலம்பில் சிறு பிழை' என்னும் நூலுக்கு மறுப்பு நூலாகும் இது.

மற்றும், வீரபத்திரன் தமது நூலில், டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களும், தெ. பொ. மீனாட்சி சுந்தரம் அவர்களும், ம. பொ. சிவஞானம் அவர்களும் காலமுரண்

என்பதை ஒத்துக்கொண்டதாக எழுதியுள்ளார்; மேலும், கோவலன் கொலையும் குரவைக் கூத்தும் ஒரேநாளில் நடைபெற்றதாக மொ. துரை அரங்கனார் அவர்கள் கூறி யிருப்பது தவறு என்றும் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். காலையில் கணவனைத் தழுவி வந்தவள் அன்று மாலையே அவனது பிணத்தைக் கண்டதாக ஊர்சூழ்வரிக் காதையில் அடிகள் எழுதியிருப்பதே பொருத்தமானது என்பதே அடியேனது (சு.ச.) கருத்துமாகும். கால முரண் உள்ளதாக சீராமுலு ரெட்டியாரும் சகந்நாத ராசாவும் கூறியிருப்பதை வ.சுப.மா., தெ. பொ. மீ., ம. பொ. சி. ஆகியோரும் ஏற்றுக் கொண்டு பின்னர் அதற்கு அமைதி கூற முயன்றிருப்பது வியப்பாயுள்ளது.

**தவறான நாள் குறிப்பு**

வீரபத்திரன் இது பற்றி ஒரு நாள் குறிப்பைக் கற்பனை யாகப் பின்வருமாறு தந்துள்ளார்:

கோவலன் மதுரையைச் சுற்றிப் பார்த்துப் புறஞ் சேரிக்கு மீண்டது முதல் நாள் நண்பகல் 15 நாழிகை - (ஒரு 12 மணி). மாதரி அடைக்கலமாய் அழைத்துச் சென்றது பகல் 22½ நாழிகை (பிற்பகல் 3 மணி). கோவலன் உணவு உண்டு சிலம்பு விற்கப் புறப்பட்டது 27½ நாழிகை (பிற்பகல் 5 மணி). கோவலன் கொலையுண்டது சுமார் 32½ நாழிகை (முன்னிரவு 7 மணி சமயம்). குரவைக் கூத்து நிகழ்ந்தது மறுநாள் (இரண்டாம் நாள்) காலை 7½ நாழிகை முதல் 12½ நாழிகை வரை (மணி 9 முதல் 11 வரை). மாதரி வைகையில் நீராடி வழியில் கேள்விப்பட்ட கோவலன் கொலையைக் கண்ணகிக்கு உரைத்தது அந்த இரண்டாம் நாள்நண்பகல் 15 நாழிகை (12 மணி) வேளை. கண்ணகி கோவலனது உடலைக் கண்டது அந்த இரண்டாம் நாள் 30 நாழிகை (பிற்பகல் 6 மணி) வேளை. (அதாவது மாலை).

**செல்சுடர் அமையம்**

மாதரி அடைக்கலமாய் அழைத்துச் சென்றது பகல் 22½ நாழிகை (பிற்பகல் 3 மணி) - என வீரபத்திரன் எழுதியுள்ளார். ஆனால், ஞாயிறு மறைந்து கொண்டிருக்கும் மாலையில் அழைத்துச் சென்றதாக இளங்கோ கூறியுள்ளார். பாடல் பகுதி வருமாறு: (அடைக்கலக் காதை)

> **"முளையிள வெண்பல் முதுக்குறை நங்கையொடு**
> **சென்ற ஞாயிற்றுச் செல்சுடர் அமையத்துக்**
> **கன்றுதேர் ஆவின் கனைகுரல் இயம்ப...** (215:202-204)
> **வாயில் கழிந்துதன் மனை புக்கனளால்"** (218)

என்பது பாடல் பகுதி. முதுக்குறை நங்கை = கண்ணகி. சென்ற ஞாயிறு, செல்சுடர் அமையம், கன்றுதேர்ஆ - என்பன ஞாயிறு மறையும் மாலையைக் குறிக்கின்றன அல்லவா? இது பிற்பகல் 3 மணி ஆகாதன்றோ? வீரபத்திரன் ஒரு குத்துமதிப்பாக நாள்குறிப்பு எழுதியுள்ளதாகத் தெரிகிறது.

ஆக, கோவலன் கொலையுண்டது முதல் நாள் மாலை என்றும், அவனது உடலைக் கண்ணகி கண்டது மறுநாள் மாலை என்றும் வீரபத்திரன் கூறியுள்ளார். இதற்கு அவர் கூறும் காரணங்களும் அவற்றிற்கு என் மறுப்புகளும் தடை விடைகளாக வருமாறு:

**தடை விடைகள்**

**காரணம்:** கோவலன் சிலம்பு விற்கப் புறப்பட்டபோது காளை மாடு தீநிமித்தமாய்க் குறுக்கிட்டது. மாடுகள் மாலையில்தான் மந்தையிலிருந்து வீடு திரும்பும். எனவே, கோவலன் முதல் நாள் மாலையே புறப்பட்டான்.

**மறுப்பு:** காலையில் மாடுகள் மந்தைக்குப் புறப்பட்டிருக்கலாமே. மற்றும், மாதரி வீடு 'பல்லான் கோவலர்

இல்லம்' என - பல மாடுகள் இருக்கும் வீடு எனக் கூறப் பட்டிருப்பதால், ஒரு மாடாவது வீட்டுக்கும் தெருவுக்கு மாகப் போய்வந்து கொண்டிருக்கலாமல்லவா? புதுச்சேரியில் நான் இருக்கும் வீட்டின் அருகில் காலை முதல் மாலை வரை சிலருடைய மாடுகளின் காட்சியைக் காணலாம்.

**காரணம்**: பொற்கொல்லன் தன்னைச் சேர்ந்தவர் பலர் சூழ வந்தான் எனக் கூறப்பட்டுள்ளது. மாலை நேரத்திலே தான் அரண்மனை வேலை முடித்துப் பலரும் வீட்டுக்குத் திரும்பி யிருக்கலாம்.

**மறுப்பு**: ஏன், இவர்கள் காலையில் வேலைக்குப் புறப்பட்டுப் போவதாய் இருந்திருக்கக் கூடாதா?

**காரணம்**: மாலையில்தான் வேலை முடித்து ஒரே நேரத்தில் கும்பலாய் வர முடியும். காலையில் ஒவ் வொருவராகப் போயிருப்பார்கள்.

**மறுப்பு**: மாலையிலும் எல்லாரும் கும்பலாக வர வேண்டுமா? வேலை முடிந்ததும், அவரவரும் தனித் தனியாகத் தத்தம் வீடு நோக்கிச் செல்ல மாட்டார்களா? எல்லாரும் ஒரே இடத்திலா குடியிருந்தார்கள்?

**காரணம்**: இருட்டிய பிறகு யாருக்கும் தெரியாமல் கொலை செய்வதே எளிது.

**மறுப்பு**: அரச ஒறுப்பு (இராசத் தண்டனை) இரவிலே தான் நடக்குமா - நடக்க வேண்டுமா? பகலில் நடந்திருக்கக் கூடாதா?

**காரணம்**: பணம் ஈட்டக் கால இடைவெளி கூடாது; அதனால் முதல்நாள் மாலை உணவு கொண்டதுமே புறப்பட்டு விட்டான்.

**மறுப்பு**: ஓர் இரவு பொறுக்க முடியாதா? மறுநாள் காலையில் விற்கக் கூடாதா? புது ஊரில் இரவில் நகை விற்பதனினும் பகலில் விற்பதே காப்புடையதாகும்.

**காரணம்:** முதல் நாள் கொலை நடந்ததால்தான் மறுநாள் ஆயர்பாடியில் தீய நிமித்தங்கள் தோன்றின.

**மறுப்பு:** தீய நிமித்தங்கள் தீமை நிகழ்வதற்கு முன்பே காணப்பட்டதாகவே பெரும்பாலான வரலாறுகள் கூறுகின்றன.

எனவே, முதல்நாள் மாலையே கோவலன் சென்று கொலையுண்டான் என்று வீரபத்திரன் கூறுவது பொருந்தாது.

அரும்பத உரைகாரரும் அடியார்க்கு நல்லார் என்னும் உரையாசிரியரும் மறுநாளே கொலை நடந்ததாகக் கூறியுள்ளனர். கொலைக்களக் காதையை இரண்டு நாள் செய்தியாக அடியார்க்கு நல்லார் பிரித்துக் கொள்கிறார். "நெடியாது அளிமின் நீரெனக் கூற" என்னும் 21-ஆம் அடிவரையும் முதல்நாள் பற்றியதாகவும், 22-ஆம் அடியிலிருந்து உள்ளவை இரண்டாம் நாள் பற்றியதாகவும் பிரித்துக் கொள்கிறார். 21 ஆம் அடியின் உரை முடிந்ததும் "இனி மற்றை நாளைச் செய்தி கூறுகின்றார்" என எழுதியுள்ளார்.

உணவு ஆக்குவதற்கு வேண்டிய பண்டங்களைக் கொடுங்கள் என்று ஆய்ச்சிப் பெண்களிடம் மாதரி கூறிவிட்டு, நெய்யளந்து தர அரண்மனைக்குச் சென்றுவிட்டாள். ஆனால், ஆயப் பெண்கள் உடனடியாகத் தரவில்லை. மறுநாளே தந்தனர் என அடியார்க்கு நல்லார் கூறியுள்ளார்.

**காலைவாய் — மாலைவாய்**

உணவுப் பொருள்கள் இரண்டாம் நாள்தான் தரப்பட்டன என்னும் கருத்தை ஏற்றுக் கொள்ளாத வீரபத்திரன், அப்படியெனில் முதல் நாள் இரவு கோவலனும் கண்ணகியும் பட்டினி கிடந்தார்களா? இம் மாதிரி மாதரி விட்டிருப்பாளா? என வினவுகிறார். இவர் கூறும் இந்தக்கருத்து சரியே.

உணவுப் பொருள்கள் முதல் நாள் பிற்பகல் கொடுக்கப் பட்டன - மாலையே - உணவு கொண்டனர் என்பதுதான் சரி. முதல் நாள் மாலை கொலை-மறுநாள் மாலை கண்ணகி கணவன் உடலைக் கண்டாள்-என்று கூறும் வீரபத்திரன்,

> **"வண்டார் இருங்குஞ்சி மாலைதன் வார் குழல்மேல்**
> **கொண்டாள் தழீஇக் கொழுநன்பால் காலைவாய்ப்,**
> **புண்தாழ் குருதி புறஞ்சோர மாலைவாய்க்**
> **கண்டாள் அவன் தன்னைக் காணாக் கடுந்துயரம்"**
>
> (19: 31-38)

என்னும் பகுதியில் உள்ள முதல் இரண்டு அடிகட்குத் தம் கொள்கைக்கு ஏற்பப் பொருள் கூறுகிறார். அதாவது:- காலை என்பதற்கு, காலை நேரம் (Morning), காலம், பகல் என்னும் பொருள்கள் உண்டு. இங்கே, காலை என்பது பகல் என்னும் பொருளில் உள்ளது; எனவே, முதல் நாள் பகல் கோவலன் கொலையுண்டான் என்று கூறுகிறார். காலை என்பதற்குப் பகல் என்ற பொருள் உள்ளதாயின், அது முதல் நாள் பகலை மட்டுமே குறிக்குமோ? இரண்டாம் நாள் பகலைக் குறிக்காதா? எனவே, அவரது கூற்று பொருந்தாது.

**பகலில் புணர்ச்சியா?**

மேலும் வீரபத்திரன் ஒரு கேலிக் கூத்தான கருத்து கூறி யுள்ளார். அதாவது முதல் நாள் மாலை உணவு கொண்டு 5 மணிக்குச் சிலம்பு விற்கப் புறப்பட்ட கோவலன், தான் புறப்படுவதற்கு முன் கண்ணகியோடு உடலுறவு கொண்டான் என்று கூறி நம்மை வியப்பில் ஆழ்த்துகிறார். கோவலனும் கண்ணகியும் புணர்ந்த மயக்கத்தில் கோவலனது தலையில் இருந்த மாலை கண்ணகியின் கூந்தலில் நழுவி விழுந்து விட்டது போல் கூறுகிறார். அங்ஙன மெனில், இவர்களின் புணர்ச்சி பிற்பகல் 4 மணிக்கு மேல் 5 மணிக்குள் நடந் திருக்க வேண்டும்.

இது என்ன வேடிக்கை! பகலிலே புணர வேண்டுமா? கோவலன் கடைத் தெருவிற்குச் சென்று திரும்பிய பின் இரவில் புணரலாம் என்று எண்ணியிருக்க மாட்டார்களா? கிணற்றுத் தண்ணீரை வெள்ளமா கொண்டு போய் விடும்? "காய்ந்த மாடு கம்பில் பாய்ந்தாற்போல்" என்ற பழமொழி ஒன்றுண்டு. கோவலன் காய்ந்த மாடா? அவன் காமக் கடலில் முழுகி எழுந்து அலுத்துப் போனவனாயிற்றே. மற்றும், கோவலனும் கண்ணகியும் இந்தக் காலத்துத் தங்கும் விடுதியிலா (ஒரு லாட்ஜிலா) தங்கி இருந்தனர்? இந்தக் காலத்தில் ஒருவன் அயல் பெண்ணைப் புணர்ச்சிக் காகவே பகலில் அழைத்துக் கொண்டு வந்து ஒரு தங்கும் விடுதியில் (லாட்ஜில்) அறை யெடுத்துத் தங்கி விவகாரத்தை முடித்துக் கொள்வதுண்டு. கோவலன்-கண்ணகி நிலை இன்ன தன்றே? மற்றும், வந்த வழியில் ஒருத்தி வயந்தமாலை வடிவத்தில் வந்து தன்னை மயக்கிய ஒரு வாய்ப்பைக் (ஒரு கிராக்கியைக்) கோவலன் உதறித் தள்ளியவனாயிற்றே! அவன் பகலிலா புணர வேண்டும்? துயருற்றுக் கிடக்கும் கண்ணகிக்கும் கோவலனுக்கும் பகலிலேயே புணர்ச்சி ஒரு கேடா? ஒருவரது தாடி பற்றி எரியும்போது மற்றொருவன் பீடிக்கு நெருப்பு கேட்டானாம். அதுபோல், வருந்திய நிலையில் உள்ள அவர்கட்குப் பகலிலேயே படுக்கை விரித்துப் போடலாமா? இரவில் போடலாமே!

**உணவு - கொலை நேரங்கள்**

கோவலன் கொலையுண்டது முதல் நாள் மாலை நேரத்தை அடுத்த முன்னிரவு 7 மணி என வீரபத்திரன் கூறுகிறார். இளங்கோ பாடியுள்ளபடி நோக்கின், முதல் நாள் மாலை நேரத்தை அடுத்த 7 மணி அவன் உணவுண்ட நேரமாகும். மாதரி கண்ணகியையும் கோவலனையும் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்ற நேரம்,

**"சென்ற ஞாயிற்றுச் செல் சுடர் அமையம்"** (15 - 203) என்று அடிகள் பாடியுள்ளார். இந்த நேரத்தை மாலை 6 மணி என்றே வைத்துக் கொள்வோம். விரைந்து உணவுப் பண்டங்கள் தரப்பட, கண்ணகி உணவு ஆக்கிக் கோவலனை உண்ணச் செய்தது முன்னிரவு 7 மணியாகத் தானே இருக்க முடியும். உணவுண்ட நேரத்தைக் கொலையுண்ட நேரம் எனல் எவ்வாறு பொருந்தும்?

**செங்கண்**

மற்றும், - இந்திர விழவூ ரெடுத்த காதையில் "கண்ணகி கருங்கணும்" (237) என்று பாடிய இளங்கோ, துன்ப மாலைக் காதையில் 'செங்கண் சிவப்ப அழுதாள்' (33) என்று கூறியுள்ளார்; உடலுறவு கொண்டதால் சிவந்த கண் என்ற பொருளில் செங்கண் என்றார்; கோவலனை இழந்ததால் அந்தச் செங்கண் மேலும் சிவந்தது - என்று வீரபத்திரன் கூறுகிறார். அவர் கூறியுள்ளபடி, முதல் நாள் பிற்பகல் 4-30 மணியளவில் புணர்ந்ததால் சிவந்த கண், மறுநாள் மாலை வரை சிவப்பாகவே இருந்திருக்குமோ? ஒரு முறை புணரின் 24 மணி நேரம் கண் சிவப்பாயிருப்பது உலகியலில் யாருக்கோ - தெரியவில்லை. காடு காண் காதையில் பெண்ணின் கண்ணை, 'செவ்வரி ஒழுகிய செழுங்கடை மழைக் கண்' (184) என்று இளங்கோ குறிப்பிட்டுள்ளார். எனவே, கண்ணகியின் 'செங்கண்' என்பதற்குச் 'சிவந்த அரி பரந்த கண்' என்று பொருள் கொள்ளலாகாதா?

எனவே, வீரபத்திரன் கூற்று சிறிதும் பொருந்தாது. அங்ஙனமெனில், காலை - மாலை என்பதற்கு உரிய பொருத்தமான தீர்வு யாது? தீர்வு உள்ளது; வருமாறு:-

**உரிய தீர்வு**

புணர்ச்சி மயக்கத்தால் கோவலன் பூமாலை கண்ணகியின் கூந்தலில் குறி பார்த்து விழுந்து விடவில்லை.

கோவலனிடமிருந்து வாங்கிக் கண்ணகி சூடிக் கொண்டதாகவே, அடியார்க்கு நல்லாரும் வேங்கடசாமி நாட்டாரும் உரையெழுதியுள்ளனர். கோவலன் மாலை தந்தானோ - இல்லையோ! அந்தக் காலை நேரத்தில் மாலை இருந்ததோ இல்லையோ! மங்கலமான சூழ்நிலையில் காலையில் புறப் பட்ட கோவலனைக் கண்ணகி மாலையில் பிணமாகக் கண்டாள் என்று கூறிப் படிப்பவர்க்கு அழுகைச் (அவலச்) சுவையுணர்வை ஊட்டுவதற்காக இளங்கோ அடிகள் கையாண்ட ஒருவகைக் காப்பிய உத்தியாக இது இருக்கக் கூடாதா?

மற்றும், காலையில் கணவனைத் தழுவிய கண்ணகி மாலையில் அவனது பிணத்தைக் கண்டாள் என்றால், காலைக்கும் மாலைக்கும் இடையில் - நண்பகல் அளவில் கொலை நடந்திருக்கலாமே. உண்மை இவ்வாறிருக்க, நேற்று மாலை இறந்தவனை இன்று மாலை தழுவினாள் என்பது எவ்வாறு பொருந்தும்? இருபத்து நான்கு மணி நேரம் பிணம் அங்கேயே கிடந்ததா? இது அரசியல் ஒறுப்பு (தண்டனை) ஆயிற்றே. அவ்வளவு நேரம் பிணம் கிடக்க அரசு விட்டிருக்காதே. காலையில் மங்கலமான சூழ்நிலையை அடிகள் படைத்திருப்பது ஒருவகைக் காப்பிய முன்னோட்டச் சுவையாகும்.

மற்றும் நேற்று மாலை இறந்தான் - இன்று (மறுநாள்) மாலை கண்டாள் என்றால், 'காலைவாய் - மாலைவாய்' என்னும் சொற்களைப் போடாமல், நேற்று - இன்று என்னும் சொற்களை இளங்கோ அடிகள் பெய்திருக்க வேண்டுமே! வள்ளுவனார்,

> **''நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
> **பெருமை உடைத்திவ் வுலகு''** (336)

என்னும் குறளில் நெருதல் (நேற்று) - இன்று என்னும் சொற்களைப் பயன்படுத்தியிருப்பதை இங்கே எண்ணிப் பார்க்கவேண்டும்.

**குறைப் பட்டியல்**

முதல் நாள் மாலை உணவு கொண்டபின் கண்ணகியிடம் தன் பழைய குறைபாடுகட்குப் பட்டியல் போட்டுக் காட்டும் கோவலன்,

**"இரு முது குரவர் ஏவலும் பிழைத்தேன்"** (16:67)

என்பதைப் பட்டியலில் புகுத்தியுள்ளான். அதாவது, புகாரில் இருந்தபோது, தன் பெற்றோர்கள் தன் குறைபாடுகளைக் கண்டித்து எவ்வளவோ அறிவுரை கூறியும் தான் பொருட்படுத்தித் திருந்தவில்லை என்பது கருத்து. ஆனால், இருமுது குரவரும் கோவலனைக் கண்டித்துத் திருத்தியதாக இளங்கோவடிகள் முன்னர்க் கூறவில்லை. இங்கே கூறியிருப்பதைக் கொண்டு, முன்பு பெற்றோர்கள் கண்டித்து அறிவுரை கூறியுள்ளார்கள் என்பதை நாமே புரிந்து கொள்ளலாம். அதேபோல், காலைவாய்ப் போனவன் மாலை வாய்ப் பிணமானான் என்பதைக் கொண்டு, கொலை முதல் நாள் மாலை நடக்கவில்லை - மறுநாள் மதியம் அளவில் நடந்திருக்கலாம் என நாமாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

**காப்பியச் சுவை**

முதல் நாள் மாலை உணவுண்ட பின், கண்ணகியும் கோவலனும் துயரத்தைப் பரிமாறிக் கொண்டதையடுத்துக் கோவலன் சிலம்பு விற்கச் சென்று கொலை யுண்டான் எனத் தொடர்ச்சியாக இளங்கோவின் எழுதுகோல் எழுதியது ஏன்? "சீறடிச் சிலம்பின் ஒன்று கொண்டு யான் போய் மாறி வருவன்" என்று சொல்லிப் போனவன் பின்னர் வரவேயில்லையே - என்ற அழுகைச் (அவலச்)

சுவையுணர்வைப் படிப்பவர்க்கு ஊட்டுவதற்காக இளங்கோ தொடர்ந்து எழுதிக் காட்டினார். இவ்வாறு எழுதாமல் "மாலையில் உணவு கொண்டு, இரவில் படுத்து உறங்கினர். மறு நாள் காலையில் கோவலன் சிலம்பு விற்கப் புறப் பட்டான் என்று எழுதின் காப்பியச் சுவை கெட்டுவிடும்; அவலச் சுவையின் விருவிருப்பு மழுங்கி விடும். எனவேதான் அடிகள் இவ்வாறு எழுதினார்.

**நாடகக் கூறு**

மற்றும், இவ்வாறு எழுதுவது ஒருவகை நாடகக் கூறு என்பதும் நினைவிருக்க வேண்டும். அதாவது:- திரை ஓவியத்தில் (சினிமாப் படத்தில்) இதைக் காணலாம். காட்சியின் நடுவில், முன்பு தொடக்கத்தில் நிகழ்ந்ததைக் கொண்டு வந்து காண்பிப்பர். இடையில் புகுத்தப்படும் இந்தத் தொடக்க நிகழ்ச்சி, நினைவுக் காட்சியாகவோ அல்லது முன்பு நடந்ததைப் பிறர்க்கு அறிவிக்கும் காட்சி யாகவோ காண்பிக்கப்படும். மற்றும், பின்னால் நடக்கப் போவதைக் கனவுக் காட்சியாக முன்னாலேயே காண்பிப்பதும் உண்டு. இந்த மரபின் அடிப்படையில், நாடகக் காப்பியமாகிய சிலப்பதிகாரத்திற்கு வருவோம்:- காலைக்கும் மாலைக்கும் இடையில் கொலை நடந்ததாகப் பத்தொன்பதாவது காதையாகிய ஊர்சூழ் வரியில் குறிப் பிட்டதை, முன்னாலேயே - பதினாறாவது காதையாகிய கொலைக்களக் காதையிலேயே குறிப்பிட்டு விட்டார். கனவுக் காட்சியில் பின்னால் நடக்க இருப்பதை முன்னா லேயே காண்பிப்பது போல, மறுநாள் நடக்கப்போகும் நிகழ்ச்சியை, முதல் நாள் மாலை நிகழ்ச்சியோடு தொடர்ந்து சொல்லி விட்டார். எனவே, இந்த அமைப்பை, ஆண்டு - திங்கள் - நாள் (கிழமை) - மணி நேரம் குறிப்பிட்டு எழுதும் வரலாறு போல் (நாட் குறிப்புப்போல்) கருதாமல், நாடகக் காப்பியம் என்ற நினைவோடு அமையவேண்டும்.

**தள்ளும் கருத்து**

சிலர் இந்த நிகழ்ச்சியை இன்னும் வேறு விதமாகக் கூறுகின்றனர். அதாவது:- பாண்டியன் மனைவியின் ஊடல் தீர்க்கச் சென்றது மாலை நேரம் - அல்லது முன்னிரவு. அப்போது பொற்கொல்லன் கோள்மூட்டிக் கோவலனைக் கொலை செய்வித்தான். அப்போது பாண்டியன் தன் மனைவி அரசியுடன் படுக்கைக் கட்டிலில் அமர்ந்திருந்தான். அங்கே வந்து கண்ணகி முறையிட்டாள். அப்போதே - அங்கேயே அரசனும் அரசியும் மயங்கி ஒருவர் பின் ஒருவராக உயிர் நீத்தனர் - என்பது சிலரது கருத்து. இவர்கள் தம் கொள்கைக்கு அரணாக, (அரசன்)

**"அரிமான் ஏந்திய அமளிமிசை இருந்தனன்"** (20:22)

என்னும் அடியிலுள்ள 'அமளி' என்னும் சொல்லைக் காட்டுகின்றனர். அமளி என்றால் படுக்கைக் கட்டிலாம் - அதனால்தான் இவ்வாறு கூறுகிறார்களாம். ஆனால், இவர்கள் "அரிமான் ஏந்திய" என்ற தொடரையும் கவனிக்க வேண்டும். சிங்கம் சுமந்த கட்டில் என்றால், அது அரியணை (சிம்மாசனம்) தானே! எனவே, இது கொள்ளும் கருத்தன்று - தள்ளும் கருத்தாகும்.

இதுகாறும் கூறியவற்றால் அறியவேண்டுவன:- சிலம்பில் காலமுரண் என்னும் வழு இருப்பதாகச் சீராமுலு ரெட்டியார் கூறியிருப்பது தவறு — இதை ஒட்டி, சகந்நாத ராசா "சிலம்பில் சிறு பிழை" என்றநூல் எழுதியிருப்பது தேவையற்றது – காலமுரண்வழு இல்லை என்று வாதிடும் வீரபத்திரன், அதை நிறுவக் கையாண்டுள்ள முறை - செய்துள்ள ஆய்வு - பொருத்தமானதன்று - என்பனவாம்.

இருப்பினும், 'பிழையிலாச் சிலம்பு' என்னும் நூலை எழுதியதின் வாயிலாகச் சிலப்பதிகாரத்தின் சிறப்பையும்

இளங்கோவடிகளின் புகழையும் நிலைநிறுத்த அறிஞர் வீர பத்திரன் மேற்கொண்டுள்ள முயற்சி பாராட்டத்தக்கது. அவருக்கு நன்றி-வணக்கம்.

## 2. கோவலனது மதுரைச் செலவு

அடுத்த சிக்கல் கோவலன் மதுரைக்குச் சென்றது ஏன்? என்பது பற்றியது. மாதவி எப்படியும் தன்னை மயக்கி மீண்டும் வரவழைத்துக் கொள்வாள் - நாம் இங்கிருந்தால் மீண்டும் மாதவியிடம் போய்விட்டாலும் போய்விடக் கூடும் - எனவே இங்கிருந்து உடனடியாக மதுரைக்குப் போய்விடவேண்டும் - என்று கருதிக் கோவலன் மதுரைக்குச் சென்றதாகச் சிலர் கூறுகின்றனர். இது பொருந்தாது.

இந்தக் காலத்தில் திரைப்பட நடிகையர் சிலர் திருமணம் ஆனதும் நடிப்பதை நிறுத்திக் கொள்கின்றனர். சிலர் திருமணமாகியும் கணவருடன் இருந்து கொண்டே நடிப்பைத் தொடர்கின்றனர். சிலர் திருமணம் ஆகிச் சில்லாண்டுகள் ஆனதும் கணவனை மாற்றுகின்றனர். இந்த மூவகைத் தரத்தினருள் மாதவி எத்தரத்தைச் சேர்ந்தவள் போன்றவள்?

மாதவி, இம்மூவருள் இரண்டாம் தரத்தைச் சேர்ந்தவள் போல ஒரு நேரம் நடந்து கொண்டாள். கோவலனோடு குடும்பம் நடத்திக்கொண்டிருந்த போதே, புகாரில் நடை பெற்ற இந்திரவிழாவில் ஆடல் பாடல் நிகழ்த்தி அனை வரையும் அகமகிழச் செய்துள்ளாள். இது கோவலனுக்குப் பிடிக்கவில்லை. இதனால் ஏற்பட்ட அவனது மனப்புண்ணை எரியும் நெருப்பில் எண்ணெய் வார்த்தாற்போல், வேறொருவனை உள்ளத்தில் கொண்டு பாடும் குறிப்புப் பொருந்திய மாதவியின் கானல் வரிப் பாட்டு மிகுதியாக்கியது. இதனால் கோவலன் மிகவும் நொந்து மாதவியைப் பிரிந்து கண்ணகியிடம் சென்றான் என்பதே உண்மை.

**கரை நீரும் கானலும்**

இங்கே யான் இளமையில் பார்த்த ஒரு திரைப்படப் பாடல் பகுதி நினைவுக்கு வருகிறது. பி. யு. சின்னப்பா என்பவர் கோவலனாக நடித்த திரைப்படப் பாடல்தான் அது. அந்தப் படத்தில், மாதவியைப் பிரிந்து கண்ணகியிடம் சென்று கொண்டிருக்கும் கோவலன், ஒரு பாடல் பாடிக் கொண்டே செல்கிறான். அதில் ஓர் அடி நினைவில் உள்ளது. அது,

**"கரை அடுத்த நீர் இருக்கக்**
**கானலை நாடிடும் மான்போல்"**

என்ற அடியாகும். கரை அடுத்த நீர் கண்ணகி. கானல் மாதவி. இதே நிலைதான், சிலப்பதிகாரக் கோவலனது நிலையுமாகும். கோவலன் தன்னைவிட்டுச் சென்றதும், மாதவி வயந்தமாலை வாயிலாகக் கோவலனுக்கு வருமாறு எழுதி மடல் அனுப்பினாள். கோவலன் ஏற்றுக்கொள்ள வில்லை. பின்பு மதுரைக்குச் சென்ற வழியில், தெய்வப் பெண் வயந்தமாலை வடிவில் வந்து மயக்கியும் கோவலன் ஏமாறவில்லை. மாதவி கௌசிகன் வாயிலாக மடல் எழுதி அனுப்பியும் கோவலன் ஏமாந்து திரும்பவில்லை. எனவே, மாதவி மயக்கி விடுவாள் - நாம் ஏமாந்து விடுவோம் - என்ற ஐயத்துடன் - அச்சத்துடன் மதுரைக்குப் புறப்படவில்லை. உறுதியான உள்ளத்துடனேயே கண்ணகியிடம் சென்றான். அவள் "சிலம்பு உள கொள்மின்" என்று கூறினாள். மற்ற அணிகலன்களை எல்லாம் முன்னமேயே கொடுத்துவிட்டாள் என்பது இதனால் புரிகிறது. ஆனால் கோவலன் சிலம்பைப் பெற்றுக் கொண்டு முன்போல் மாதவியிடம் செல்லவில்லை. பொருள் தொலைந்ததால் பெற்றோர் முகத்தில் விழிக்கக் கூசினான் - ஊராரின் ஏளனத்துக்கு ஆளாகவேண்டும் எனவும் எண்ணினான். எனவே, மதுரை சென்று பொருளீட்டி வரவேண்டும் என எண்ணினான், அதன்படி, எவரும்

அறியாதவாறு கண்ணகியை இருட்டு நேரத்தில் அழைத்துக் கொண்டு மதுரைக்குப் புறப்பட்டு விட்டான்.

கோவலன் மதுரைக்குச் சென்றதற்கு உரிய உண்மைக் காரணம் இதுவே, எதற்கெடுத்தாலும் ஊழ்வினையின் மேல் பழிபோடுவது, எல்லார்க்கும் போல் இளங்கோ அடிகட்கும் வழக்கமாகி விட்டது. கோவலன் மதுரையில் கொலையுண்டது, எதிர்பாராத தற்செயலான நிகழ்ச்சியே.

**3. கங்கையும் கன்னியும் வயந்த மாலையா?**

மற்றொரு சிக்கல், கோவலன்—வயந்தமாலை ஆகியோர் தொடர்பானது. இந்தச் சிக்கல் என்ன என்று கண்டு, இதையும் அவிழ்க்க வேண்டும்.

**தனி ஒரு நூல்**

பாவலர் மணி திரு. ஆ. பழநி என்னும் அறிஞர் 'கானல் வரியா? கண்ணீர் வரியா?' என்னும் பெயரில் ஒரு நூல் எழுதியுள்ளார். கோவலனுக்கும் மாதவியின் தோழி யாகிய வயந்தமாலைக்கும் உடலுறவுத் தொடர்பு உண்டு என்பதையே இந்நூல் முழுதும் வலியுறுத்துகின்றது. இதைக் கூற ஒரு நூல் வேண்டுமா? என்பதை எண்ணும்போது வியப்பு தோன்றுகிறது.

கானல் வரியின் தொடக்கப் பாடல்கள் இரண்டும் படாத பாடு படுத்தப் படுத்துகின்றன. அப்பாடல்கள் வருமாறு:

**"திங்கள் மாலை வெண்குடையான்**
**சென்னிசெங்கோல் அது ஓச்சிக்**
**கங்கை தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாய் வாழி காவேரி**
**கங்கை தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவா தொழிதல் கயல் கண்ணாய்**
**மங்கைமாதர் பெருங்கற் பென்று**
**அறிந்தேன் வாழி காவேரி"**

**''மன்னும்மாலை வெண்குடையாள்**
**வளையாச் செங்கோல் அது ஓச்சிக்**
**கன்னி தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாய் வாழி காவேரி**
**கன்னி தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவா தொழிதல் கயல் கண்ணாய்**
**மன்னும் மாதர் பெருங் கற்பென்று**
**அறிந்தேன் வாழி காவேரி''**

என்பன அவை. சோழ மன்னன் வடக்கில் உள்ள கங்கையையும் (கங்கை ஆற்றையும்) தென் முனையில் உள்ள கன்னியையும் (குமரி ஆற்றையும்) புணர்ந்தாலும் காவேரி (காவேரி ஆறு) வருந்தாள் — ஊடல் கொள்ள மாட்டாள் — என்பது, இப்பாடல்களில் அறிவிக்கப் பட்டுள்ளது.

கானல் வரிக் காதையில் உள்ள மற்ற பாடல்கள் அகப் பொருள்துறைக் கருத்துகள் கொண்டவையாகும். இச் செய்திகள் இந்த (எனது) நூலில், 'காப்பியத்தில் கானல் வரியின் இடம்' என்னும் தலைப்பில் விளக்கப்பட்டுள்ளன.

முதல் இரண்டு பாடல்களும், கோவலன் கண்ணகியை உள்ளத்தில் நினைத்துக்கொண்டு பாடியதாக தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் கூறியுள்ளார். அதாவது, கோவலன் மாதவியையோ — மற்ற பெண்களையோ புணர்ந்தாலும் கண்ணகி அவன்பால் ஊடல் கொள்ள மாட்டாள் என்பது தெ. பொ. மீ.யின் கருத்தாக இருக்கலாம். கண்ணகியின் உயரிய பண்பை மாதவிக்கு உணர்த்துவதற்காக இவ்வாறு பாடியதாகவும் சொல்லப்படுகிறது.

பிற பெண்களைப் புணரினும் கண்ணகி வருந்தாள் எனக் கண்ணகியை காவேரியாக உருவகித்துப் பாடுவ தென்றால், இதைக் கண்ணகியின் முன் பாடவேண்டும்.

இதை மாதவியின் முன் பாடுவதால் என்ன பயன்? இச் செய்தி கண்ணகியை எட்டுமா—என்ன? நான் யாருடன் வேண்டுமானாலும் புணரலாம் என்னும் பொருள்படக் கூறுவதன் வாயிலாகத்தான் கண்ணகியின் சிறப்பை மாதவிக்கு அறிவிக்க வேண்டுமா என்ன?

**புதுக் கண்டுபிடிப்பு**

இங்கே, இதன் தொடர்பாகக் 'கானல் வரியா? கண்ணீர் வரியா?' என்னும் தனியொரு நூல் எழுதிய பாவலர் மணி ஆ. பழநி, காவேரி கங்கை-கன்னி என்பனவற்றிற்குப் புதுப் பொருள் கண்டுபிடித்துள்ளார். அதாவது, - கோவலன் மாதவியின் தோழியாகிய வயந்தமாலையுடனும் உடலுறவு கொண்டு வருகின்றானாம்; இது மாதவிக்குப் பிடிக்க வில்லையாம்; எனவே, சோழன் கங்கையையும் கன்னியையும் புணர்ந்தாலும் காவேரி புலவாதது போல், நான் வயந்த மாலையுடன் புணர்ந்தாலும் நீ (மாதவி) புலத்தலாகாது - என மாதவிக்கு உணர்த்துவதற்காகத்தான் இவ்வாறு கோவலன் பாடினான் - என்பது ஆ. பழநி அவர்களின் புதுக் கண்டுபிடிப்பு. இன்னும் சிலர், கோவலன் வயந்த மாலை இணை (ஜோடி) பற்றிக் கூறியுள்ளன வருமாறு:

"கோவலன் வரம்பின்றி மாதவிக்குத் தோழியாம் வயந்தமாலை போன்றோரிடமும் தொடர்பு கொண்டு வாழ்ந்திருக்கின்றான். அதனால் தான் மயக்குந் தெய்வம் அந்த வயந்தமாலை வடிவுகொண்டு தோன்றித் தான் கோவலனிடம் வந்ததற்குரிய காரணத்தைத் தெளிவாக அவன் நம்புமாறு கூறுகின்றது" என்று திரு கு. திருமேனி அவர்கள் தமது 'கோவலன்' என்ற நூலில் எழுதியுள்ளார்.

"கோவலன் வயந்தமாலை தொடர்பு பற்றிக் கூறும் பொழுது வயந்த மாலையிடமே கோவலனுக்குக் காமவழிப்பட்ட தொடர்பு உண்டு என்பதையும்

உய்த்துணரச் செய்வார் அடிகள்'' (அடிகள் = இளங்கோ) என்று திரு எஸ். இராமகிருட்டிணன் அவர்கள் தமது 'இளங்கோவின் பாத்திரப் படைப்பு' என்னும் நூலில் எழுதியுள்ளார்.

### தடை விடைகள்

இன்னோரின் கருத்துகளையும் துணைக்கொண்டு, ஆ. பழநி, கோவலன் வயந்த மாலையையே சுங்கையாகவும் கன்னியாகவும் உருவகித்துப் பாடினான் என்று கூறும் தமது கருத்துக்கு அரணாக அவர் கூறும் காரணங்களும் அவற்றிற்கு உரிய என் மறுப்புகளும் வருமாறு:

காரணம் 1: கோவலன் காமம் மிகுந்தவன்; இளமையிலேயே ஒழுக்கம் தவறியவன்; பரத்தையரோடு பொழுது போக்கியவன்; மாதவியின் பணிப்பெண்களையும் விட்டு வைக்காதவன்; மதுரை ஊரைச் சுற்றிப்பார்க்கச் சென்றபோது வேசியர் தெருக்களில் நீண்ட நேரம் சுற்றியவன் சிலம்புப் பாடல் சான்றுகள்:-

> **''குரல்வாய் பாணரொடு நகரப் பரத்தரொடு**
> **திரிதரு மரபிற் கோவலன்''** (5:200,201)

> **''சலம்புணர் கொள்கைச் சலதியோ டாடிக்**
> **குலம்தரும் வான்பொருள் குன்றம் தொலைந்த**
> **இலம்பாடு நாணுத்தரும் எனக்கு''** (9:69-71)

எனவே, இத்தகைய பழக்கம் உள்ள கோவலன் வயந்த மாலை போன்றோருடன் தொடர்பு கொண்டது நடக்காத தன்று.

### மறுப்பு

காமத் திருவிளையாடல் புரியும் கோவலன் வயந்த மாலையை மட்டும் உள்ளத்தில் கொண்டு பாடினான் என்று எவ்வாறு கூறமுடியும்? மற்ற பெண்களை எண்ணிக்

கூறியிருக்கக் கூடாதா? அல்லது, யாரையும் குறிப்பிடாமல் பொதுவாகப் பாடியிருக்கக் கூடாதா? வேசியர் தெருக்களில் நீண்டநேரம் சுற்றியதாகக் கற்பனை செய்து கொள்வதனால் தான் இவன் காம விருப்பினன் என்பது தெரியுமா? இதற்கு முன்பே இவனது கணிப்பு (சாதகம்) தெரிந்தது தானே?

காரணம் - 2: மதுரைக்குச் சென்ற வழியில் (வனசாரினி யாகிய) தெய்வப் பெண்ணொருத்தி கோவலனைப் புணர விரும்பி வயந்த மாலை வடிவில் வந்தாள். கோவலனுக்கும் வயந்த மாலைக்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததனால்தான், வயந்த மாலை வடிவில் சென்றால் கோவலன் மறுக்கமாட்டான் என நம்பி அவள் வயந்த மாலை வடிவில் வந்தாள்.

**மறுப்பு**

ஒரு பெரியவருடன் தொடர்பு கொள்ள வந்த புதியவர் ஒருவர், பெரியவரின் உறவினர் - நண்பர் - பெரியவருடன் தொடர்புடையவர் ஆகியோருள் ஒருவரது பெயரைச் சொல்லி அவரோடு தமக்கு உள்ள தொடர்பைக் கூறிக்கொண்டு தம்மை அறிமுகப்படுத்திக் கொள்வது ஒரு வகை உலகியல். அல்லது, அவ்வேண்டியவரையே பரிந்துரைக்கு உடன் அழைத்துக் கொண்டு செல்வதும் உண்டு. இங்கே தெய்வப்பெண், கோவலனுக்கு அறிமுகமான வயந்த மாலை வடிவில் வந்து தொடர்புகொள்ள முயன்றது, மேற்சொன்ன உலகியல் போன்றதே. கோவலன் பல பெண்களுடன் தொடர்பு கொண்டிருப்பினும், காப்பி யத்தைப் படிக்கும் நமக்கு அறிமுகமான வயந்த மாலை என்னும் பெயருடையவளின் வடிவில் வந்தாள் என்று கூறினால் தான் காப்பியக் கதைச் செலவு சுவைக்கும் என்று, இளங்கோவடிகள், வயந்த மாலை வடிவில்

வந்ததாகக் கூறியிருக்கலாம் அல்லவா? (முற்றும் துறந்த) மாதவி வடிவில் வந்தால் கோவலன் ஏற்றுக் கொள்ளான் என்பது அப்பெண்ணுக்குத் தெரிந்திருக்கும். முன்பின் அறியாத ஒரு பெண் வடிவில்வரின், கோவலன் துணிந்து புணரான் என்பதும் அவளுக்குத் தெரிந்திருக்கும்.

காரணம்-3: தெய்வப்பெண்ணின் வருகையைப் பற்றி அறிவிக்கும் பாடல் பகுதி:

> **''கானுறை தெய்வம் காதலின் சென்று**
> **நயந்த காதலின் நல்குவன் இவனென**
> **வயந்த மாலை வடிவில் தோன்றி''** (11:171-173)

என்பதாகும். இங்கே, 'நயந்த காதலின்' என்னும் தொடரில் உள்ள 'நயந்த' என்பது இறந்த காலப் பெயரெச்சம். இது, கோவலன் முன்னமேயே வயந்த மாலையை நயந்து (விரும்பிக்) காதல் கொண்டுள்ளான் என்பதை அறிவிக்கும். எனவே, கானல் வரியில் சுட்டப்படுபவள் வயந்த மாலையே.

**மறுப்பு**

'நயந்த காதலின்' என்பதற்கு, 'நயந்த காதல் உடையனாதலால்' எனப் பொதுவாக அரும்பத உரைகாரரும், 'மாதவி மேல் நயந்த காதலால்' என அடியார்க்கு நல்லாரும், 'மாதவி யிடத்து விரும்பிய காதலினால்' என வேங்கடசாமி நாட்டாரும் உரை வரைந்துள்ளனர். இந்த மூன்று உரைகளுமே இங்கே வேண்டா. கோவலன் நம்மைக் காதலோடு (காதலின்) ஏற்றுக் கொள்வான் - அதிலும் - மிகவும் விரும்பிய (நயந்த) காதலோடு ஏற்றுக் கொள்வான் எனத் தெய்வ மங்கை எண்ணியதாகக் கருத்து கொள்ளலாகாதா? காதலின் அழுத்தத்தை - உறுதியை 'நயந்த' என்பது அறிவிப்பதாகக் கொள்ளலாமே. எனவே, வயந்தமாலையை முன்பு விரும்பியிருந்த காதலினால் ஏற்றுக் கொள்வான் - எனப் பொருள் கொள்ள வேண்டியதில்லையே.

மற்றும், புராணக் கதைகளைப் போன்ற எத்தனையோ காப்பியக் கற்பனைகளுள் இதுவும் ஒன்றாக இருக்கலாமே. தெய்வம் தொடர்பான இதை நம்ப வேண்டுமே! எனவே, வயந்த மாலையை உள்ளத்தில் கொண்டே கோவலன் கானல் வரி பாடினான் எனக் கூறல் பொருந்தாது. அங்ஙன மெனில் இதற்குத் தீர்வு யாது? காண்போம்:-

**உரிய தீர்வு**

வயந்த மாலை மாதவியின் தோழி எனப்படுகின்றாள். 'மணி மேகலை' காப்பியத்தில் கூட, மாதவியின் தாயாகிய சித்திராபதி வயந்தமாலையை மாதவியிடம் அனுப்பியதாகச் சாத்தனார் பாடியுள்ளார். பணிப்பெண் நிலையிலும் வயந்த மாலை இருந்திருக்கிறாள். மாதவி வயந்த மாலை வாயிலாகக் கோவலனுக்கு மடல் அனுப்பிய செய்தி அறிந்ததே. எனவே, கோவலன் வயந்த மாலையுடன் தொடர்பு கொள்வது மாதவிக்குப் பிடிக்கவில்லையெனில், வயந்த மாலையை அப்புறப் படுத்தி விடலாமே - அதாவது துரத்தி விட்டிருக்கலாமே. சோழன் கங்கையையும் கன்னி யையும் புணரினும் காவேரி புலவாததுபோல், நான் வயந்த மாலையைப் புணரினும் மாதவியே நீ புலவாதே என்று குறிப்புப் பொருள் அமைத்துக் கோவலன் கானல் வரி பாடும் அளவிற்கு இடம் கொடுத்திருக்க வேண்டியதில்லையே. வயந்த மாலையை விரட்டுவது கோடரி கொண்டு பிளக்க வேண்டிய அளவுக்குக் கடினமானதன்றே - நகத்தால் கிள்ளியெறியக் கூடிய எளிய செயலே. ஆதலின் கானல் வரிப் பாடலில் வயந்த மாலைக்குச் சிறிதும் இடமே இல்லை என்பது புலனாகலாம்.

**ஆடவரின் ஓரியல்பு**

அங்ங மெனில், யாரை அகத்தில் எண்ணிக் கோவலன் பாடியிருக்கலாம்? யாரையும் எண்ணிக்கோவலன் பாட

வில்லை. வாளா மாதவியை மிரட்டுவதற்காகவும் - குத்தலாகவும் - குறும்பாகவும் - விளையாட்டாகவுமே கோவலன் பாடினான். ஆடவர்க்கு இப்படியொரு வழக்கம் உண்டு. எடுத்துக்காட்டு ஒன்று தருவேன்:-

என் நண்பர் ஒருவர் தம் மனைவியிடம் கூறியதாகப் பின் வருமாறு சொன்னாராம். "நான் ஸ்கூட்டரில் செல்லும் போது அழகிய பெண்களைக் கண்டால் என் ஸ்கூட்டர் மெதுவாகப் போகிறது" - என்று சொன்னாராம். இது,மனைவியை விடைப்பதற்காகக் குறும்பாக - விளையாட்டாகக் கூறியதே யாகும். அதற்குப் பதில் - ஏட்டிக்குப்போட்டியாக அவருடைய மனைவி, "நான் தெருவில் நடந்து செல்லும் போது அழகிய ஆடவரைக் காணின் என் கால்கள் மெதுவாக நடக்கின்றன" - என்று கூறினாரா? இல்லை - இல்லவே யில்லை. இவ்வாறு பல எடுத்துக் காட்டுகள் தரலாம். குடும்பக் குலப் பெண்கள் யாரும் இந்நாள் வரை இதுபோல் கூறுவது கிடையாது. இனி எப்படியோ? ஆனால், மாதவி, பதிலுக்கு. ஏட்டிக்குப் போட்டியாக, தான் மற்றோர் ஆடவனை உள் நிறுத்திக் கூறுவதுபோல் கானல்வரி பாடி அவளது குலப்பிறப்பின் தன்மையைக் (சாதிப் புத்தியைக்) காட்டிவிட்டாள்.

மாதவி பாடியதும் உண்மையன்று. கோவலன் இறந்ததும் துறவியானதிலிருந்து மாதவியின் தூய உள்ளம் புலனாகலாம். எனவே, கானல் வரிப்பாடல் காப்பியச் சுவையை மிகுத்ததோடு, கனகவிசயர் முடித்தலையில் கல்லேற்றியதுக்கு இயற்கையான - தற்செயலான ஒரு காரணமாய் அமைந்தது என்ற அளவில் நாம் அமைதி கொள்ளல்வேண்டும்.

இவ்வாறு சிலப்பதிகாரத்தை ஆராய ஆராயக் காப்பியச் சுவை நயம் தித்திப்பதைக் காணலாம்.

நெஞ்சை அள்ளும் சிலம்போ சிலம்பு!

# இந்நூலுக்குக் கருத்து வழங்கிய கருவூல நூல்கள்

குறிப்பு:- கீழே முதலில் இந்நூலின் பக்க எண்ணும், அடுத்து மேற்கோள் நூலின் பெயரும் உட்பிரிவும், மூன்றாவதாக மேற்கோள் நூலின் ஆசிரியர் பெயரும் அமைந்திருக்கும்.

இந்நூலின்
பக்கஎண்

6 பிங்கல நிகண்டு - பிங்கலர்.

9 உலக வரலாறுகள்.

15 திருவாசகம் - திருப்பொற் சுண்ணம் - மாணிக்கவாசகர்.

20 தொல்காப்பியம் - தொன்மை - செய்யுளியல் - 237 - தொல்காப்பியர் & நச்சினார்க்கினியர் உரை.

22 The Art of play writing

22 சேக்சுபியரின் நாடகங்கள்.

32 சீவக சிந்தாமணி - பதுமையார் இலம்பகம் - 126 - திருத்தக்க தேவர்.

33 தொல்காப்பியம் - பொருள் - அகம் - 5 - தொல்காப்பியர்

36 நன்னூல் - எழுத்து - சொல் - கடவுள் வணக்கம் - பவணந்தி முனிவர்.

36 திருக்குறள் - கடவுள் வாழ்த்து - 3 - திருவள்ளுவர்.

39 மணிமேகலை - 5:109, 119, 120, 121 - மதுரைக் கூல வாணிகன் சாத்தனார்.

39 பரிபாடல் - 13:7, 8, 9 - நல்லெழுநியார்.

43 கம்பராமாயணம் - 1 - பரசுராமப்படலம் - 28 - கம்பர்.

43 திவ்வியப் பிரபந்தம் - இயற்பா - மூன்றாம் திருவந்தாதி 5 - 98 - பூதத்தாழ்வார்.

48 தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியல் - 4.

51 திருக்குறள் - 380, 620.
53 திருக்குறள் 169.
53 கொன்றைவேந்தன் - 74 - ஔவையார்.
57 திருக்குறள் - 319, 376.
57 நாலடியார் - 104 - சமண முனிவர்.
61 புறநானூறு - 192:9, 11 - கணியன் பூங்குன்றனார்.
64 சீவக சிந்தாமணி - 219 - திருத்தக்க தேவர்.
64 கனாநூல் - கணபரத்தேவன் & பொன்னவன்.
65 பிளாட்டோ, அரிஸ்டாட்டில் கருத்துகள்.
73 கம்பராமாயணம் - 5: காட்சிப் படலம் - 40 - 53.
73 சீவக சிந்தாமணி - நாமகள் இலம்பகம் - 189, 199. திருத்தக்க தேவர்.
74 Julies caesar - Act II - scene II - shakespeare.
74 ஆபிரகாம் லிங்கன் டைரி - ஆபிரகாம் லிங்கன்.
75 புறநானூறு - 41 - கோவூர் கிழார்.
76 புறப்பொருள் வெண்பாமாலை - 264, 310 ஐயனாரிதனார்.
76 தொல்காப்பியம் - பொருள் - புறம் - 5: 8.
76 பதிற்றுப் பத்து - 40: 16, 17 - காப்பி யாற்றுக் காப்பியனார்.
77 பதிற்றுப் பத்து - 61: 5, 6 - கபிலர்.
77 புறப்பொருள் வெண்பா மாலை - உன்ன நிலை - 243. புறப்பொருள் வெண்பா மாலை - 3: 3, 4 - ஐயனாரிதனார்.
78 தொல்காப்பியம் - பொருள் - புறம் - 58.
78 புறப்பொருள் வெண்பா மாலை - விரிச்சி - வாய்ப்புள்.
84, 86 அடியார்க்கு நல்லார் தந்துள்ள இரு பாடல்கள்.
88 தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியல் - 5.
106 நெடுநல்வாடை - 56, 51, 52 - நக்கீரனார்.
107 திருக்குறள் - 800.
116 தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியல் - 25 - உரை - பேராசிரியர்.

116 தொல்காப்பியம் - களவியல் - 2 - உரை - இளம்பூரணர்.
120 கனாநூல் - 3 - கணபரத் தேவன் & பொன்னவன்.
125 பள்ளிப்பாட்டு - பாட நூல்.
125, 126 மணிமேகலை - 2 - 4, 5, 8, 9 - சாத்தனார்.
127, 128 பெண் தெய்வ வழிபாடுகள்.
130 நாலடியார் - 14 - சமண முனிவர்.
130 திருக்குறள் - 550.
131 நெடுநல் வாடை - 43, 44 - நக்கீரனார்.
138 புறநானூறு - 189 - 1, 2 - நக்கீரனார்.
139 சம்பந்தர் தேவாரம் - திருவையாற்றுப் பதிகம் - 3: 1 - ஞான சம்பந்தர்.
140 பட்டினப் பாலை - 6 - கடியலூர் உருத்திரங் கண்ணனார்.
140 நெடுநல்வாடை - 30 - நக்கீரனார்.
140 மதுரைக் காஞ்சி - 359 - மாங்குடி மருதனார்.
142 நாலடியார் - பழவினை 4 - சமண முனிவர்.
142 பரிபாடல் - 13: 7 - 9 - நல்லெழுநியார்.
143 மணிமேகலை - 5: 109 - 121 - சாத்தனார்.
143 The Lotos Eaters - 5: 1, 2 - Lord Tennyson.
147 புறநானூறு - 94 - ஔவையார்.
151 கம்ப ராமாயணம் - ஆரணியம் - பஞ்சவடி - 1.
152 திருக்குறள் - 1091.
153 குண நாற்பது - ஆசிரியர் பெயர் தெரியவில்லை.
165 தொல் - பொருள் - அகம் - 57.
168 புறநானூறு - 68: 8 - 10 - கோவூர் கிழார்.
168 அம்பிகாபதி காதல் காப்பியம் - நாடு நகர் நலங்கூறு காதை - 98, 99 - சுந்தர சண்முகனார்.
169 கம்ப ராமாயணம் - மந்தரை சூழ்ச்சிப் படலம் கம்பர்.
176 King Richard II - Act V - Scene II - Shakespeare
186 புறநானூறு - 189 - நக்கீரனார்.

186, 187 திருக்குறள் - 1040, 231, 232
189 பௌத்த ராமாயணம் - பௌத்தர்.
189 புறநானூறு - 183: 3, 4 - பாண்டியன் ஆரியப் படை கடந்த நெடுஞ் செழியன்.
189 மூதுரை - 20 - ஔவையார்.
193 திருக்குறள் - 655.
197 நீதி வெண்பா - 65 - ஆசிரியர் பெயர் தெரியவில்லை.
199 புறநானூறு - 159 - பெருஞ் சித்திரனார்.
199 தனிப்பாடல் - காளமேகம்.
200 தொல் - பொருள் - மெய்ப் பாட்டியல் - 9.
200 திருக்குறள் - 76
200 மணிமேகலை - 14 : 30, 31 - கூலவாணிகன் சாத்தனார்.
202 திருக்குறள் – 235.
207 ஐந்திணை ஐம்பது - 38 - (மான்) - மாறன் பொறையனார்.
207 கலித்தொகைப் பாடல்கள் - (யானை) 40, 41, 53, கபிலர்.
208 கம்பராமாயணம் - அயோமுகிப் படலம்.
214 நன்னூல் - 56, 258.
222 புறநானூறு - 165 : 1, 2 - பெருந்தலைச் சாத்தனார்.
226 இரங்கல் பாடல் - பாரதி தாசனார்.
228 திருக்குறள் - 1089, 1101.
232 கம்பராமாயணம் - 5 - உருக்காட்டுப் படலம் - 61.
236 திருக்குறள் - 55.
236 சீவக சிந்தாமணி - கனக மாலையார் இலம்பகம் - 32 - திருத்தக்கதேவர்.
237 திருக்குறள் - 1040, 1023.
241 திருக்குறள் 56, 51.
243 திருநாவுக்கரசர் தேவாரம் - திருவானைக்காப் பதிகம் - 1.
246 கம்பராமாயணம் - பிலம்புக்கு நீங்கு படலம் - 56.
246 பெரிய புராணம் - 1807 - சேக்கிழார்.

249 பெரிய புராணம் – அப்பூதியடிகள் - 23, 25.
251 திருக்குறள் - 706.
252 திருக்குறள் 621.
254 புறநானூறு - 314 - ஐயூர் முடவனார்.
254 நான்மணிக்கடிகை - 105 - விளம்பி நாகனார்.
257 மணிமேகலை - 5: 123-126.
259 வெற்றிவேற்கை - 78 - அதிவீர ராம பாண்டியன்.
262 திருக்குறள் - 29, 648.
267 திருக்குறள் - 67, 70.
279 பட்டினத்தார் பாடல் - திருவேகம்ப மாலை - 3 - பட்டினத்தார்.
283 மணிமேகலை - 2: 55, 57 - சாத்தனார்.
284 மணிமேகலை - 24: 19, 20, 75, 76.
285 மணிமேகலை - 16: 3, 10.
288 மணிமேகலை - 24: 77, 81.
294 தொல்காப்பியம் - எழுத்து - குற்றியலுகரப் புணரியல் - நச்சினார்க்கினியர் உரை - 77: 4, 5.
295 பெரிய புராணம் - அப்பூதியடிகள் - சேக்கிழார்.
295 தொல் - பொருள் - கற்பியல் - 36.
296 தொல் - பொருள் - கற்பியல் 52.
296 பெரிய புராணம் - சுந்தரர் வரலாறு - சேக்கிழார்.
296 நம்பி அகப்பொருள் - அகத்திணையியல் - பொருள் - 100 — நாற்கவி ராச நம்பி.
303 திருவருட்பா - வாடிய பயிரை - வடலூர் இராமலிங்க வள்ளலார்.
307 As you like it - Shakespeare.
312 திருக்குறள் - 400.
312 Pecunia - இலத்தீன் சொல்.
310 நல்லாற்றூார் - ஊர்ப் பழக்கம்.
312 சிறுபஞ்ச மூலம் - 22 - காரியாசான்.

313 திவாகர நிகண்டு - 4-80 - திவாகரர்.
313 பெரும்பாணாற்றுப்படை - 407, 408 - கடியலூர் உருத்திரங் கண்ணனார்.
315 பெரிய புராணம் - 290 - சேக்கிழார்.
316 பெரிய புராணம் திருமூலர் புராணப் பகுதி - சேக்கிழார்.
317 இடைச் சிறுவன் கதை.
317 காளிதாசன் வரலாறு.
318 கண்ணனின் ஆயர் குலம்.
319 தொல்காப்பியம் - அகத்திணையியல் - 5.
323 களவு நூல் கல்வி.
332 மெய்யப்பன் நண்பர் சொல்லியது.
335 கலிங்கத்துப் பரணி - 111 - சயங்கொண்டார்.
336 பெரிய புராணம் - இளையான்குடி மாறர் வரலாறு.
336 பட்டினத்தார் பாடல் - திருக்காளத்தி - 3 - பட்டினத்தார்.
337 மணிமேகலை - 23 - 208, 209.
343 வில்லி பாரதம் - உத்தியோக பருவம் - 2 - 6 - வில்லி புத்தூரார்.
344 கம்பராமாயணம் - பால காண்டம் - மிதிலைக் காட்சிப் படலம் - 1.
346 புறநானூறு - 58:6 - 8 - காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.
347 புறநானூறு - 77 - இடைக் குன்றூர் கிழார்.
347 உடுபதி - புராணச் செய்தி.
348 புறநானூறு - 9:10 - நெட்டிமையார்.
348 மதுரைக் காஞ்சி - 60, 61, 62, 63 - மாங்குடி மருதனார்.
355 புறநானூறு - 35: 27, 29 - வெள்ளைக்குடி நாகனார்.
355 பெரிய புராணம் - திருவாரூர் - 44 - சேக்கிழார்.
355 திருக்குறள் - 545, 559.
357, 358 பதிற்றுப்பத்து - 5 - பதிகம்: 18-20; 13, 14 பரணர்

363 குறுந்தொகை - 19:4,5 - பரணர்
363 நற்றிணை - 115:6 - ஆசிரியர் பெயர் தெரியவில்லை.
363 அகநானூறு - 23:12 - ஒரோடோகத்துக் கந்தரத்தனார்
364 பெருங்கதை - 1:33:73, 74 - கொங்குவேளிர்
364 தக்க யாகப் பரணி - 75 - ஒட்டக் கூத்தர்
364 ஆசிரிய நிகண்டு - 137 - ஆண்டிப் புலவர்
365 திருக்குறள் - 853
365 கம்ப ராமாயணம் - 5 - 9, 7; 5-1-65
365 பிரபு லிங்க லீலை - 2:4 - சிவப்பிரகாச அடிகளார்
370 தெய்விகத் திருமணம் - பக்கம் 9 - சுந்தர சண்முகனார்.
371 திருமுருகாற்றுப்படை - 1, 2 - நக்கீரனார்
371 கம்ப ராமாயணம் - கிட்கிந்தா காண்டம் - அனுமப் படலம் - 18
374 திருக்குறள் - 51.
374 தண்டியலங்காரம் - 25 - தண்டியாசிரியர்.
375 கம்பராமாயணம் - 5 - அக்க குமாரன் வதைப் படலம் - 40, 41.
377 கலிங்கத்துப் பரணி - போர் பாடியது - 63, 64, 65, 66.
380 திருமந்திரம் - 2290 - திருமூலர்.
381 நறுந்தொகை - அதிவீர ராம பாண்டியன்.
381 திருக்குறள் - 555.
385 யாழ் நூல் - விபுலாநந்த அடிகள்.
386 திருநாவுக்கரசர் தேவாரம் - 'தலையே நீ வணங்காய்'
395, 396 - தெருக் கூத்துக் கதையும் பாடல் பகுதிகளும்.
397 'இலியடு' - ஃ ஓமர் (கிரேக்கக் காப்பியம்).
398 நற்றிணை - 216: 8, 9 - மதுரை மருதனிள நாகனார்.
398 கொளுங்கோளூர்ப் பகவதி அம்மன் பெயர்.
399 பேகன் - கண்ணகி-புறநானூறு - 143 - கபிலர்.
402, 403 'சிலம்பில் சிறு பிழை' - சகந்நாத ராசா.

402, 403 'பிழை யிலாச் சிலம்பு' - ஆர். வீரபத்திரன்.

406 அரும்பத உரை, அடியார்க்கு நல்லார் உரை.

410 திருக்குறள் - 336.

410 வேங்கட சாமி நாட்டார் உரை.

412 திரைப்படப் பாடல்.

416 'கானல் வரியா - கண்ணீர் வரியா?' - ஆ. பழநி.

417 தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் கருத்து.

418 'கோவலன்' என்ற நூல் - கு. திருமேனி.

419 'இளங்கோவின் பாத்திரப் படைப்பு' - எஸ். இராம கிருட்டிணன்.

420 உலகியல் எடுத்துக் காட்டு.



